# சித்தர் இலக்கியம்

ஆய்வு நூல்

மீ.ப.சோமு



அண்ணாமலைப் பல்கலைக்கழக வெளியீடு

# சித்தர் இலக்கியம்

இரண்டாம் பகுதி




ஆசிரியர் :

மீ.ப. சோமசுந்தரம்

சோமு




வெளியீடு :

அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

2004

# அணிந்துரை

(டாக்டர் எம்.ஏ.எம். இராமசாமி அவர்கள்
இணைவேந்தர் அண்ணாமலைப் பல்கலைக்கழகம்)

சித்தர் இலக்கியம் - ஆய்வு நூல் திட்டமிட்டபடி நிறைவேறுவதில் மிக்க மகிழ்ச்சியடைகிறேன்.

என் அருமைத் தந்தையார் அவர்கள் தமது மறைவுக்குச் சில வாரங்கள் முன்பு, இந்த ஆய்வுப் பணியைத் திரு.மீ. ப. சோமசுந்தரம் அவர்கள் செய்ய வேண்டும் என்று விரும்பி, இந்நூல் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் வாயிலாக உருவாவதற்குரிய திட்டத்தைக் கலந்து பேசினார்கள். இந்நிலையில் அவர்களுடைய மறைவுக்குப் பிறகு தந்தையார் உருவாக்கிய திட்டத்தை நிறைவேற்றுகிற வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. விரிந்து பரந்த இந்த அரிய ஆய்வு நூலைப் பகுதி பகுதியாக வெளியிட்டு வழங்குகிற பணியானது, எங்கள் அண்ணாமலைப் பல்கலைக்கழகம் தமிழுக்குச் செய்கிற ஒரு நிலையான தொண்டு என்று நான் கருதுகிறேன்.

திரு.மீ.ப சோமு அவர்கள் ஆழ்ந்த மொழிப் புலமையோடு, தத்துவ நுண்ண றிவும், மேனாடுகளில் நடந்து வருகிற நவீன விஞ்ஞான ஆராய்ச்சிகளை ஒப்பு நோக்கும் ஆற்றலும் நன்கு இணைந்த ஒரு நல்லறிஞர். சில மகான்களின் நேர்முகத் தொடர்பும் அவருக்கு உண்டு. எந்தப் பணியை யாரிடம் எவ்வாறு ஒப்படைக்க வேண்டும் என்று தேர்ந்தெடுப்பதிலே வல்லமை பெற்று விளங்கிய என் தந்தையாரின் எண்ணம் நூல் வடிவில் இப்போது மலர்கிறது! இந்த சிறந்த நூலைத் தமிழ் மக்களுக்கு அறிமுகம் செய்வதில் பேருவகை அடைகிறேன்.

**எம்.ஏ.எம். இராமசாமி**

# அணிந்துரை

பேராசிரியர் இராம. சேதுநாராயணன் அவர்கள்
துணைவேந்தர், அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.

சித்தர் இலக்கியம் பற்றிய இந்தத் தத்துவ ஆய்வு நூலைப் படித்ததும், என் உள்ளத்தில் ஒரு மனநிறைவு ஏற்பட்டது. நிலைத்து நிற்கக்கூடிய ஒரு மதிப்புமிக்க ஆராய்ச்சி நூலை நமது பல்கலைக்கழகம் வெளியிடுகிறது என்பதில் மிக்க மகிழ்ச்சி அடைகிறேன். இத்தருணத்தில் இந்த ஆய்வு பணிக்கு வித்திட்ட வள்ளல் டாக்டர் ராஜா சர் முத்தைய செட்டியார் அவர்களை நன்றியுடன் நினைவு கூர்கிறேன்.

இந்நூலின் ஆசிரியர் மீ.ப. சோமசுந்தரம் (சோமு) அவர்கள், தமிழ் கூறும் நல்லுலகம் முழுதும் நன்கறிந்த நல்லறிஞர். புதுமைப் படைப்புகளையும், பழைமை ஆய்வுகளையும் இரண்டையுமே இயற்றி, தம்முடைய நூல்கள் பலவற்றுக்கு மதிப்புயர்ந்த விருதுகள் பெற்றவர். சாகித்திய அகாதமிப் பரிசு, தமிழக அரசின் மூன்று இலக்கியப் பரிசுகள், பாரதி தங்கப் பதக்கம், டாக்டர் ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார் இலக்கியப் பரிசு இவற்றோடு இன்னும் பல பத்திரிக்கைப் பரிசுகளும் பெற்றவர். தருமை ஆதீனத்தின் "பல்கலைவித்தகர்", தமிழ் இசைச் சங்கத்தின் "இசைப் பேரறிஞர்" போன்ற பல பட்டங்கள் பெற்றவர். மூதறிஞர் ராஜாஜி தமது தத்துவ நூல்களுக்கு இவரைத் தமது இணைப்பாசிரியராகக் கொண்டு வெளியிட்டிருக்கிறார் என்றால், எந்த அளவுக்கு நமது நாட்டின் மாபெரும் அறிஞர் பெருமக்களின் நன்மதிப்பைப் பெற்றவர் இவர் என்பது கண்கூடு.

இந்த நூலில் இவருடைய விஞ்ஞான நோக்கும், எதையும் அறிவியலோடு, ஆராய்கிற திறமும், இவருடைய ஆழ்ந்த இலக்கிய இலக்கணப் புலமையும், பன்மொழி அறிவும், விரிந்து பரந்த ஆங்கில ஆராய்ச்சியும் தத்துவ பயிற்சியும், மகான்களுடன் இவருக்குள்ள நேர்முகத் தொடர்பும், இவருடைய குடும்பத்து முன்னோர்கள் சிலர் சித்தர்களாக விளங்கிச் சுவடிகளிலே வழங்கியுள்ள ஞான உண்மைகளும் - அனைத்தும் தெளிவோடு துலங்குகின்றன. அதோடு இவருடைய தமிழ் நடையானது புலமையும் புதுமையும் அழகாக இணைந்து இலக்கணத் திருத்தத்தோடு சரளமாக ஓடுகிற நல்ல நடையாகும். படிப்பதற்குச் சுவையும் படிக்கப் படிக்க ஆழ்ந்த கருத்துக்களை உள்ளடக்கிய பொருண்மையும் ஒளி வீசுகின்றன. இந்த அழகான நூலை எங்கள் பல்கலைக் கழகத்தின் வெளியீடாகக் கொணர்வதில் களிப்படைகிறேன்.

இராம. சேதுநாராயணன்

# முன்னுரை

சித்தர் இலக்கியம் இரண்டாம் பகுதி நிறைவெய்தியதும் என் கண்முன் டாக்டர் ராஜா சர். முத்தைய செட்டியார் அவர்களின் திருவுருவமே தோன்றி நிற்கிறது.

முதலாவது பகுதியின் முன்னுரையில் நான் குறிப்பிட்டவாறு, இந்த ஆய்வுப் பணியில் நான் ஈடுபடுவதற்கு ஆதி காரணம் இந்தப் பெருந்தகையாளரான செட்டிநாட்டு அரசர் அவர்களே. அவர்களுடைய ஆன்மாவுக்கு என் அஞ்சலியைச் செலுத்துகிறேன்.

அருமைத் தந்தையாரின் மறைவுக்குப் பின்னர் அன்னாருடைய திட்டத்தைச் செயற்படுத்துவதில் ஆர்வத்தோடு முனைந்து என்னை இந்தப் பணியில் ஈடுபடுத்திய அண்ணாமலைப் பல்கலைக்கழக இணைவேந்தர் டாக்டர் எம்.ஏம். இராமசாமி அவர்களுக்கு என் நன்றி பெரிதும் உரியதாகும்.

★ ★ ★

சித்தர் இலக்கியத்தின் வழிபாட்டுத் தத்துவத்தில் உருவங்களுக்குரிய இடம் என்ன என்பதை இந்த இரண்டாம் பகுதி ஆராய்ந்துள்ளது. இந்த நோக்கிலே சித்தர்களின் பயிற்சி முறையில் ஈடுபடுகிற மாணவர்கள் ஆர்வத்தோடு கற்கிற விநாயகர் அகவல், திருவாசகம் ஆகிய இரண்டு நூல்களையும் சித்தர்களின் தத்துவக் கண்கொண்டு நோக்கி விளக்குகிற உரைப்பகுதிகள் இப்பகுதியில் இடம் பெறுகின்றன. இந்த உரைகளுக்கு மேலும் துணை செய்யும் வகையிலே சித்தர்களின் ஆன்ம வழிபாட்டுக் குறியீடுகளும், சங்க காலத்திற்கு முன்பிருந்து இன்றுவரை சித்தர் வழிகளிலே பயின்று வருகிற தத்துவ நுட்பங்களும் தொகுத்து ஆய்வு செய்யப் பெற்றுள்ளன. விநாயகர், முருகன் ஆகிய இறைவடிவங்களின் வகையும் தொகையும் விரிவாக விளக்கம் பெற்றுள்ளன.

ஆறறிவில் ஒவ்வொன்றும் தொழிற்படுகிற களம் மனமே என்பது அடிப்படை உண்மை. எனினும் பிற உயிர்களிலிருந்து மனிதன் ஆறாவது அறிவான உள்ளறிவின் செயல்முறையிலும், அதன் களமாகிய மனித மனத்தின் அமைப்பிலும் எவ்வாறு வேறுபடுகிறான், எவ்வாறு அவன்

உயர்கிறான். என்பதை சித்தர்களின் விளக்கத்தோடு தமிழ் இலக்கிய இலக்கண நூல்களின் மரபுகளை ஒப்பிட்டு இப்பகுதி ஆராய்கிறது.

உருவ வேறுபாடுகளை விளக்கும் வரைபடங்களிலே இப்பகுதியில் சேர்ப்பதற்கு உரிய சான்றுகளைத் தேர்ந்தெடுக்கும் பணியில் என் ஞானாசிரியர்களின் குறிப்புகளோடு திருவாவடுதுறை ஆதீன வெளியீடுகள் பெரிதும் பயன்பட்டன. இந்த ஆதீனத்தின் குரு பரம்பரைக்கு நன்றி செலுத்துகிறேன்.

இந்த ஆய்வுப் பணியில் என மன உலகில் நீங்காது நின்று என்னை வழி நடத்திச் செல்கிற என் ஞானாசிரியர் கண்ணப்ப சுவாமிகளுக்கும் சிவயோகியாருக்கும் என் உள்ளார்ந்த அஞ்சலி உரியது.

ஏ ஐ / 122, 8 வது நேர் சாலை,
அண்ணாநகர்,
சென்னை - 600 040
14.11.1988

மீ. ப. சோமசுந்தரம்

**Dr.L.B.Venkatrangan**
M.Sc.,M.A.,M.Phil.,Ph.D.
Vice-Chancellor




Phone : Offiice 04144.238283
Res : 04144-238214
Fax : 04144-238925
04144-238080
E-mail : vc_lbv@ hotmail.com
ANNAMALAI UNIVERSITY
ANNAMALAI NAGAR - 608 002
INDIA

# அணிந்துரை

சித்தர்களின் தத்துவத்தை, அவர்களுடைய வழிபாட்டு முறையை, அவர்களுடைய துதிப்பாடல்களை, அவர்களுடைய ஞானத்தின் பெருமையை, அவர்கள் வழிவழியாக வழங்கி வருகின்ற பல மெய்ஞ்ஞான நுட்ப ரகசியங்களை, சித்தர் நெறியைப் பின்பற்றும் மாணவர்களின் பயிற்சி முறைகளை ஆய்வுசெய்து எல்லோரும் எளிதில் புரிந்து கொள்ளும் வகையில் சித்தர் இலக்கியம் என்ற அரிய நூலை உயர்திரு மீ.ப. சோமசுந்தரம் அவர்கள் அரிதின் முயன்று எழுதி, இருக்கிறார்கள். மேலை நாடுகளுக்குச் சென்று அந்த மொழியிலே உள்ள சித்தர் இலக்கியத்தையும் ஆய்ந்தவர் இவர். ஆதலால் மேலை நாட்டு சித்தர் இலக்கியத்தை நுணுகிப்படித்து அந்த இலக்கியத்தின் குரல், திருமூலரின் குரல், கருவூராரின் குரல், சிவவாக்கியரின் குரல், பட்டினத்து அடிகளின் குரல் என்றே சொல்லத் தோன்றுகிறது என்று கூறி எந்த மொழியிலும் சித்தர்களின் மிஸ்டிஸிஸம் (Mysticism) என்னும் இறையனுபவம் ஒன்றாகவே இருக்கின்றது. அதன் வெளியீட்டு முறையும் அகில உலகப்பாங்கிலே இருக்கிறது; என்று சான்றுகளுடன் ஆசிரியர் கூறியிருப்பது படித்து மகிழ்தற்குரியது.

சித்தர் தத்துவம் என்பது அறிவு கொண்டு ஒப்புக்கொள்ள வேண்டிய உய்த்துணரும் பார்வையோடு காணவேண்டிய விஞ்ஞான மெய்ஞ்ஞான பேரறிவுக் களஞ்சியமாகும்.

உயர்திரு மீ.ப.சோமசுந்தரம் அவர்களின் தந்தையாருக்குப் பல சித்தர்களின் நேர்முகத் தொடர்பு இருந்ததாலும், இவர்களுக்கும் பல சித்தர்களுடன் தொடர்பு இருந்ததாலும், இந்நூலை மிகவும் நல்ல முறையில் நுண்மாண் நுழைபுலத்தோடு எழுதியிருக்கிறார்கள்.

டாக்டர் இராஜா சர்.முத்தையா செட்டியார் அவர்கள் அண்ணாமலைப்பல்கலைக்கழகத்தின் வாயிலாகச் சித்தர் இலக்கியம் வரவேண்டும் என்று திட்டம் வகுத்தார்கள். தந்தையார் உருவாக்கிய திட்டத்தை நம் மாண்பமை இணைவேந்தர் டாக்டர் எம்.ஏ.எம்.இராமசாமி அவர்கள் நிறைவேற்றியிருக்கிறார்கள்.

அவர்களுக்கு என் உளம் நிறைந்த நன்றியையும் வணக்கத்தையும் உரித்தாக்குகின்றேன். சித்தர் இலக்கியம் இரண்டாம் பகுதியை மறுபதிப்புக்காக அண்ணாமலைப்பல்கலைக்கழகம் பவளவிழா ஆண்டில் வெளியிடுவது மிகவும் பொருத்தமுடையது. இந்நூலைத் தமிழ் உலகம் படித்து நல்ல பயன் பெற வேண்டுகிறேன்.

*(எல்.பி.வெங்கட்ரங்கன்)*





# ANNAMALAI UNIVERSITY

CENTRE OF ADVANCED STUDY IN LINGUISTICS
UGC - SPECIAL ASSISTANCE PROGRAMME

Dr. S. NATANASABAPATHY, Ph.D.,
Director, CAS in Linguistics &
Dean, Faculty of Indian Languages
Annamalai University
Annamalai Nagar - 608 002 .

Annamalai Nagar - 608 002
Tamil Nadu, India
Phone : 04144 - 222603 (R)
04144 - 237331 (O)
Fax : 04144 - 238080
E-mail : natsyo24@yahoo.co.in

## மதிப்புரை

சித்தர் இலக்கியம் என்ற ஆய்வு நூல் உயர்திரு மீ.ப.சோமசுந்தரம் அவர்களால் எழுதப் பெற்றிருக்கிறது. இந்த ஆய்வு நூல் சித்தர் தமிழை ஆராய்கிறது. அந்தத் தமிழின் கவிமாண்பை, அந்தத் தமிழின் இலக்கிய மாண்புகளை, அதனுடைய ஆழ அகல நீளங்களை முந்தையோர் காட்டிய பாதையில் சென்று காண்கிற ஓர் இலக்கிய ஆய்வு நூல் இதுவாகும்.

சங்க காலத்துக்கு முன்பு தொடங்கி இரண்டாயிரம் ஆண்டுகளாக நமது தமிழகத்தில் உலவி வருகின்ற சித்தர்களின் தமிழிலே ஒரே பண்பாடு கூடிய தனித்தன்மை, ஒருமைப்பாடு, மாறுபடாத கோட்பாடு நிலவி வருகிறது. சித்தர் இலக்கியத்தின் குரல் ஒன்றே; அது உரைநடையோ, கவிமொழியோ எதுவாக இருந்தாலும் அந்த ஒலியின் குரல், அதனுடைய சுருதி ஒன்றே. தமிழகத்தில் மட்டுமல்லாமல் பாரதநாட்டில் மட்டுமல்லாமல் உலகெங்கிலும் சித்தர்கள் பேசுகிற குரல் ஒரே குரலா இருக்கிறது.

ஒன்றே குலமும்
ஒருவனே தேவனும்

என்ற சித்தரின் குரல் உலகத்தின் ஞானக்குரல்.

இந்த ஆய்வு நூலின் பார்வையிலே மேலைநாட்டு அறிஞர்களின் கண்டுபிடிப்புக்களும் அங்கங்கே ஒப்பு நோக்கப் பெற்றிருக்கின்றன. அத்துடன் சித்தர்களின் மெய்ஞ்ஞானப் பேருண்மைகள் அனைத்தும் விஞ்ஞான அறிவியற் பேருண்மையோடு ஒத்து இயைந்து நிற்பதைச் சுட்டிக்காட்டுகிறது இந்நூல். இவ்வாறு ஒப்பிட்டிருப்பது சித்தர்களின் இலக்கியத்திலுள்ள கோட்பாடுகள் மூட நம்பிக்கைகள் அல்ல, உண்மைகளே என்று நம்புவதற்குத் துணை செய்கிறது.

உயர்திரு மீ.ப.சோமசுந்தரம் அவர்கள் தவத்திரு கண்ணப்ப சுவாமிகளிடம் சித்தர்களின் பயிற்சிகளிலே தீட்சை பெற்றவர். இயற்றமிழிலும் சித்தர் தமிழிலும் தேர்ச்சியுடையவர். ஆதலால் இந்த

அரியநூலை எழுதித் தமிழுக்கு அணிவித்திருக்கிறார்கள். சித்தர் இலக்கியம் இரண்டாம் பகுதியைமறுபதிப்பாகப் பவளவிழா ஆண்டில் அண்ணாமலைப் பல்கலைக்கழகம் வெளியிடுவதில் மிக்க மகிழ்ச்சியும் பூரிப்பும் அடைகிறேன்.

டாக்டர் இராஜா.சர்.முத்தையா செட்டியார் அவர்கள் விரும்பியதற்கேற்ப மாண்பமை இணைவேந்தர் டாக்டர் எம்.ஏ.எம். இராமசாமி அவர்கள் சித்தர் இலக்கியம் வெளிவர உதவியிருக்கிறார்கள். அவர்களுக்கு என் நன்றியையும் வணக்கத்தையும் தெரிவித்துக் கொள்கிறேன். இந்நூல் மறுபதிப்பாக வெளிவர உதவிய அண்ணாமலைப் பல்கலைக்கழக மாண்பமை துணைவேந்தர் பேராசிரியர் டாக்டர் எல்.பி.வெங்கட்ரங்கன் அவர்களுக்கு என்னுடைய உளம் நிறைந்த நன்றியைப் புலப்படுத்துகிறேன். இந்நூலைத் தமிழ் ஆர்வலர்களும் அறிஞர்களும் கற்றுப் பயன் பெறுவார்கள் என்று நம்புகிறேன்.

(சு.நடனசபாபதி)

டாக்டர் ப.தங்கராசு,
பேராசிரியர் & தலைவர்,
தமிழியல் துறை,
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.

# பதிப்புரை

சித்தர் இலக்கியம் என்ற அரிய நூலை உயர்திரு மீ.ப.சோமசுந்தரம் அவர்கள் தம்முடைய பெரும் முயற்சியால் எழுதியிருக்கிறார்கள். இந்நூலை அண்ணாமலைப் பல்கலைக்கழகம் பகுதி பகுதியாக வெளியிட்டு வருகிறது. இது தமிழுக்குச் செய்யும் மிக உயர்ந்த தொண்டாகும்.

சித்தர் இலக்கியம் இரண்டாம் பகுதியை மறுபதிப்பாகப் பவள விழா ஆண்டில் அண்ணாமலைப்பல்கலைக்கழகம் வெளியிடுகிறது. இந்த நூல் மிகவும் போற்றுதற்குரிய நூலாகும். விநாயகர் அகவல், விநாயகர் வடிவங்கள், சித்தர் கொள்கை, முருகன் வழிபாடு, சித்தர் இலக்கியம் உணர்த்தும் ஞானக்கல்வி, சிவபுராணம், சித்தர் இலக்கியத்தின் ஆதாரமான அறிவியல் இரகசியங்கள் என்று பல அரிய தலைப்புக்களைக் கொண்டு விளங்குகிறது இந்நூல். விநாயகர் அகவலுக்கும், சிவபுராணத்திற்கும் இயற்றமிழ் முறையிலும் சித்தர் இலக்கிய முறையிலும் இரண்டு விளக்கம் நூல் முழுமைக்கும் கூறப்பெற்றிருப்பது ஆசிரியரின் அறிவு நுட்பத்தையும், சித்தர் இலக்கியத்தில் தோய்வையும் காட்டுகிறது.

சித்தர் இலக்கியத்தின் நுட்பத்தை விளக்க சிவானந்த போதம், நிஜானந்த போதம் நெஞ்சறி விளக்கம் என்ற அரிய நூல்களை எடுத்துக் கூறியிருப்பது இவர்களுடைய பல்நூற் பயிற்சியைப் புலப்படுத்துகிறது. விநாயகரின் முப்பத்திரண்டு படங்களையும், எந்திரங்களையும் இணைப்பாகச் சேர்த்திருப்பது மிகவும் பாராட்டுக்குரியது.

உலக நாடுகளில் உள்ள ஞானிகளின் கருத்துக்களைத் தேவையான இடங்களில் பொருத்தமுறக் கூறியிருப்பதும். பாராயணம் செய்வதால் ஏற்படும் பயனை விளக்கியிருப்பதும் நன்று. விநாயகர் அகவலின் மந்திர ஆற்றல் அனைவரையும் வளைத்து அணைக்கிறது. எல்லாருக்கும் பரவசம் என்ற பேரின்ப அனுபவத்தை ஒரு சேரத்தருகிறது. மந்திரமும் தோத்திரமும் புரிகிற ஆன்மவினை என்பது இதுவே. சொல்லும், அதன் பொருளும் அவற்றின் மந்திர ஆற்றலும் உள்ளங்களை எல்லாம்

பிணைத்துப் பேரின்பம் என்கிற மின்சார ஆற்றலைப் பாய்ச்சுகிற வல்லமை இதுவேயாகும். அந்த வல்லமை அனைத்தையும் தன்னுள் அடக்கிக்கொண்டு மின்கலமாகத் திகழ்கிற ஓர் அரியநூலே ஔவையார் அருளிய விநாயகர் அகவல் என்று சித்தர் இலக்கித்தின் நுட்பத்தை விளக்கியுள்ளார் ஆசிரியர்.

உலக ஞானிகள், கவிஞர்கள் விதி எழுதின எழுத்தை அழிக்கவே முடியாது என்று கூறியவற்றை எடுத்துக் காட்டித் தமிழ்நாட்டு ஞானி அருணகிரியார் அவன் கால்பட்டழிந்ததிங்கு என் தலைமேல் அயன் கையேழுத்தே, என்று கூறியிருப்பதையும் எடுத்துக்காட்டி இறைவனை உளமார வணங்கினால் விதியின் எழுத்தை மாற்றலாம் என்ற தமிழ்நாட்டு ஞானியின் இறை நம்பிக்கையை விளக்கியிருப்பது மகிழ்ச்சி அளிக்கிறது.

சித்தர் இலக்கியத்தை அண்ணாமலைப்பல்கலைக்கழகம் வெளியிட வேண்டும் என்ற இராஜா சர் முத்தையா வேளின் வேணவாவை நம் மாண்பமை இணைவேந்தர் டாக்டர் எம்.ஏ.எம். இராமசாமி அவர்கள் நிறைவேற்றியிருக்கிறார்கள். அவர்களுக்கு என்னுடைய நெஞ்சார்ந்த நன்றியையும் வணக்கத்தையும் தெரிவித்துக்கொள்கிறேன். இந்நூல் மறுபதிப்பாக வெளிவர உதவிய எங்கள் மாண்பமை துணைவேந்தர் பேராசிரியர் டாக்டர்.எல்.பி.வெங்கட்ரங்கன் அவர்களுக்கு என்னுடைய உளம் நிறைந்த நன்றியையும் வணக்கத்தையும் உரித்தாக்குகிறேன். இந்நூலை எல்லோரும் படித்துப் பயன்பெற வெண்டுகிறேன்.

(ப.தங்கராசு)

# பொருளடக்கம்

# விநாயகர் அகவல்

## 1.அறிமுகம்

சித்தர்களின் இலக்கியத்தில் அவ்வையின் குறள் நூல் தனியானதோர் பெருமை பெற்று விளங்குவது போலவே, அவ்வை இயற்றிய விநாயகர் அகவலும் பெருமை பெற்று விளங்குகிறது. ஆனால் இந்த இரண்டு நூல்களுக்கும் உரிய அணுகுமுறைகள் வெவ்வேறாம்.

அவ்வையின் குறளானது, அமைப்பிலும் போக்கிலும் கட்டுக் கோப்பிலும் ஓர் இலக்கண நூலைப் போன்றது. அவ்வையின் விநாயகர் அகவலோ ஒரு காப்பியத்தைப் போன்றது. குறளை ஓர் இலக்கணநூல் என்று சொன்னால் , அகவலை ஒரு பக்தி நூல் என்று கூறவேண்டும்.

அவ்வையின் குறளானது சித்தர்களின் சாத்திர நூலாகத் திகழ்கிறது. அகவலோ தோத்திர நூலாகத் திகழ்கிறது.

சாத்திர நூலாகத் திகழ்வதால் அவ்வையின் குறளானது குறட்பாவின் யாப்பிலே அமைந்துள்ளது. கருத்தின் செறிவு இந்த யாப்புக்கு இயைபு கொண்டதாய் அமைந்துள்ளது.

அகவலோ தோத்திரமாக இருப்பதால் அகவுகின்ற பாங்கிலே நூலின் தொடக்கத்திலிருந்து முடிவுரை பாடி ஓதுகின்ற பான்மையிலே செல்கின்றது.

இந்த இரண்டு நூல்களும் கவி அமைப்பிலே இவ்வளவு மாறுபட்டு இருப்பதால், அவ்வையின் குறளைத் தொல்காப்பியம் அல்லது நன்னூலைப் போன்று கற்றுத் தெளிந்து உணர வேண்டியுள்ளது. ஆனால் அகவல் அப்படி இல்லை. அது வழிப்பாட்டின்போது பாராயணம் செய்வதற்கு உரிய முறையிலே செம்பாகமாக ஓடுகிறது.

குறட்பாவும் அகவற்பாவும் வெண்டளைகளால் ஆன செய்யுள் வடிவங்களே ஆயினும், அவற்றின் கட்டுக்கோப்பிலே இத்தனை பெரிய வேறுபாடு காணக்கிடக்கிறது. இக்காரணத்தினாலேதான் குறட்பாவை ஆசான் என்று அழைப்பதும், அகவலை அன்னை என்று அழைப்பதும் ஒரு சித்தர் மரபாகும்.

இரண்டு நூல்களுமே சித்தர்களின் ஞானத்தை உள்ளடக்கிய கவிக்களஞ்சியங்களாக இருப்பினும், முன்னதை உபதேசிக்கிற குரு என்றும், பின்னதைப் பக்தி அமுதம் ஊட்டும் அன்னை என்றும் சித்தர்கள் போற்றி வந்திருக்கின்றார்கள்.

அவ்வையாரின் குறள் நூல் மக்களிடையே விரிவாக பரவாமல் இருப்பதற்கும், விநாயகர் அகவல் மக்களிடையே நன்கு பரவி இருப்பதற்கும் ஒரு முக்கிய காரணம், அவற்றின் அமைப்பில் உள்ள இந்த வேறுபாடுதான்.

அதனோடு குறள் நூலானது உபதேச நூல் என்ற முறையிலே மூன்று பாலாக பிரிவுபட்டு ஒவ்வொரு பாலும் ஞானப் பயிற்சியின் ஒவ்வொரு துறையைப் படிப்படியாக எடுத்துக் கூறும் பாடநூலாக யாக்கப் பெற்றுள்ளது.

அகவலோ என்றால் ஒரே பாடலாக யாக்கப்பட்டு, தொடக்கத்திலிருந்து முடிவுவரை, துதிப்பாடலுக்குள்ளே ஞானத்தைக் குழைத்துத் தருகிறது. எனவே தோத்திர வழிபாடு செய்யும் பக்தர்களில் பலரும், தங்கள் பாராயணத்தில், விநாயகர் அகவலுக்கு ஒரு முக்கிய இடம் தந்து ஓதி வருகிறார்கள்.

இந்த இரண்டு நூல்களும் யாப்பு முறையில் வேறுபடுவதோடு கூடக் கருத்தின் ஆட்சிமுறையிலும் வேறுபடுகின்றன.

குறளானது ஆராய்ச்சியின் பாற்பட்டது. அகவல் தொகுப்பின் பாற்பட்டது. முந்தையது பிரித்துப் பிரித்து, நுணுகி நுணுகி, அலசிப் பார்க்கிற முறையில் அமைந்தது: பிந்தையது தொகுத்துத் தொகுத்து, அடுக்கி அடுக்கி, தொடுத்துத் தொடுத்துச் செல்கிற பாங்கில் அமைகிறது.

இந்த இரண்டு நூல்களும் அமைப்பிலே வேறுபட்ட போதிலும் ஒரே தரமான ஆர்வத்தோடு சித்தர் உலகத்தில் பன்னூறு ஆண்டுகளாகப் பயின்று வருகின்றன. இதற்கு காரணம் இந்த இரண்டு நூல்களுமே சித்தர் ஞானத்தின் செம்பொருளைக் கூறும் உயர்தனி இலக்கியங்களாக ஒளிவீசுவதே ஆகும்.

சித்தர்களின் ஞான ரகசியங்களை ஆராய்ந்து கற்கும் மாணவன் அவனுடைய பயிற்சியின் முன்னேற்றத்திற்கு ஒரு பாராயண நூலைக் கையாள விரும்புவது இயல்பேயாகும். அப்படிப்பட்ட மாணவனுக்கு அவ்வையின் அகவல் கைகொடுத்து உதவுகிறது.

சித்தர்கள் தமிழகத்திலே நமக்கு வழங்கியுள்ள ஞானச் செல்வங்கள் விரிந்து பரந்து கிடப்பனவற்றை ஒன்று திரட்டி அவ்வையார் குறட்பாவாகச் செய்து தந்தார். அந்த ஞானத்தின் அனுபவத்தை மெய்யுறுகித் துய்க்கும் வண்ணம் அவரே அகவலும் செய்து தந்தார். அந்த அகவலிலும் குறளின் ஞான மணம் அத்தனையும் அப்படியே கமழ்கிறது.

அப்படியானால் மிக எளிய முறையிலே வழிபாட்டில் ஓதப்படுகிற அகவலுக்குள்ளும் மாபெரும் ஞான இரகசியங்கள் பொதிந்துள்ளனவா என்று கேட்கலாம்; ஆம். பொதிந்து, செறிந்து புதையலாகவே கிடக்கின்றன. வருகிற பக்கங்களில் அவற்றை விரிவாக நாம் காணப் புகும் முன்பு இரண்டே இரண்டு சான்றுகளை மட்டும் இங்கே எடுத்துக் காட்டலாம்.

விநாயகர் அகவலில் பலரும் பாராயணம் செய்கிற ஒரு வரி,

நெஞ்சிற் குடிகொண்ட நீல மேனியும்

என்பதாகும். இதுபோலவே பலருக்கும் மனப்பாடம் ஆகியுள்ள இன்னொரு வரி,

கூடுமெய்த் தொண்டர் குழாத்துடன் கூட்டி

என்பதாகும்.

பலருக்கும் நன்கு தெரிந்த இந்த இரண்டு வரிகளில் நிகண்டு பார்த்துப் பொருள்கொள்ள வேண்டிய எந்தச் சொல்லும் இல்லை என்றாலும் சித்தர் நெறியைப் பயில்கின்ற யோகிகள் எல்லாரும் 'நீலமேனி' என்பதற்கும், 'மெய்த்தொண்டர் குழாம்' என்பதற்கும் நீண்ட பெரும் விரிவுரைகள் தந்துள்ளார்கள். அந்த இரண்டு சொற்றொடர்களையும் சித்தர்களின் ஞானக் கருவூலங்கள் என்றே சொல்ல வேண்டும்.

இந்த உலகில் உள்ள நடப்பனவும் நிற்பனவும் ஆகிய சராசரங்களை ஆராய்ந்து பார்த்துள்ள விஞ்ஞான மேதைகள். அண்மைக் காலத்தில் ஒரு மிகப்பெரிய அறிவியல் நுட்பத்தை ஆராய்ந்து கண்டு பிடித்து சொல்லியிருக்கிறார்கள். அதுதான் 'Etheric body' அல்லது நுண்ணுடல் ஆகிய ஒலி உடம்பு ஆகும். இதை முதலாவது ஆய்வு நூல் பகுதியில் மேல் நோக்கிலே பார்த்தோம். இதன்படி, உயிர்கள் அனைத்திற்கும் அவை தாங்கியுள்ள பரு உடலை சுற்றி நுட்பமான வான்துகளால் ஆகிய நுண்உடல் இருக்கிறது. என்பதை இன்றைய அறிவியல் வல்லுநர்கள் மெய்ப்பித்து காட்டியிருக்கிறார்கள். இதை **'Etheric double'** என்றும் இன்றைய விஞ்ஞானம் அழைக்கிறது.

'நீலமேனி' என்ற சொல்லுக்குச் சிவயோகி இரத்தின சபாபதியார் இந்த பொருளையே தமது ஞான பேருரையில் எடுத்துகூறுகிறார். இதையே விநாயகரின் வேழ முகமாகவும் தும்பிக்கையாகவும் பொருள் கூறுகிறார் சிவயோகியார்.

மனித உடம்பிலே நமது பின் மூளையில் உள்ள **'pineal gland'** என்னும் சுரப்பியின் ஆற்றலும், முன் மூளையில் உள்ள **'pituitary gland'** என்னும் சுரப்பியின் ஆற்றலும் பொருந்தும்பொழுது நீல ஒளி தோன்றுகிறது என்றும், இந்த நீல ஒளியின் பரிணாமத்தோடு ஒளி உடம்பாகிய **'Etheric Double'** இயைகிறது என்றும் பொருள் சொல்லி, இவற்றின் நுட்பங்களை மிக விரிவாக ஞானிகள் நமக்கு எடுத்துக் கூறுகிறார்கள்.

'நீலமேனி' என்பதைப் போலவே, 'மெய்த்தொண்டர் குழாம்' என்பதற்குப் பொருள் சொல்லுகிற யோகிகள், நம்மோடு வாழ்கின்ற மெய்யடியார்களாகிய தொண்டர் குழாத்தை இச்சொற்றொடர் குறிக்கவில்லை என்று கூறி, மிக நுட்பமான உட்பொருள் தருகிறார்கள்.

இந்த உலகத்தில் ஞானப் பயிற்சி செய்யப் புகும் ஒரு மாணவனை ஞான குரு ஆட்கொள்ளும் பொழுது, அவனைத் தம்மோடு கூடவே மெய்த்தொண்டர் குழாத்தையும் சேர்த்து இணைத்துக் கொள்கிறார். இந்த இணைப்புத்தான் அவனுடைய ஆன்ம

வளர்ச்சிக்கு இரவும் பகலும் உறுதுணையாக அமைகிறது. குருநாதன் இவ்வாறு மாணவனை இணைக்கின்ற மெய்த்தொண்டர் குழாமானது, ஆதி குருவான பரம குருவிலிருந்து தொடங்கி, நேர்நின்று உணர்த்துகின்ற குருநாதன் வரை வழிவழியாக விளங்கி வருகின்ற ஞானியர் குழுவாகும்.

இந்தக் குருஞானக் குழுவானது அன்றிலிருந்து இன்றுவரை மாறுதலோ மறைதலோ இல்லாது என்றென்றும் நிலைபெற்று நின்று வருகின்றது. இந்த மெய்த்தொண்டர் குழாமானது ஞானப் பயிற்சியில் ஈடுபடுகிற மாணவனுக்கு அவனுடைய உள் உடம்பில் புகுந்து துணை செய்கின்ற மாபெரும் ஞானத் திருக்கூட்டமாகும்.

உலக நாடுகள் அனைத்திலும் உள்ள மகான்களும் ஞானிகளும் இந்தத் திருக்கூட்டத்தை **'Unseen Masters'** என்றும், **'Invisible Helpers'** என்றும் அழைக்கிறார்கள். இந்த மெய்த்தொண்டர் குழாத்து ஞானிகள், உருவத்தில் அல்லது அருவத்தில் நின்று மாணவனுக்கு உதவி செய்கிறார்கள். எல்லா வகையிலும் உறுதுணையாக நிற்கிறார்கள்.

ஞானம் பயில்கின்ற ஒரு மாணவனை இத்தகைய மெய்த் தொண்டர் குழாத்திலேதான் ஒப்படைக்கிறார்கள், குருமார்கள்! நேருக்கு நேராக தாங்கள் உதவி செய்வதோடு, அருவ நிலையிலும் ஞான உதவி அந்த மாணவனுக்கு எய்துகின்ற முறையில் , அந்த மெய்த்தொண்டர் குழாத்திலே கூட்டுகிறார்கள் ஞானாசிரியர்கள். இந்த உண்மை சித்தர் உலகத்தில் வழிவழியாக வழங்கி வருகின்ற ஒரு பெரிய இரகசியமாகும். இந்த இரகசியத்தைத்தான் 'மெய்த்தொண்டர் குழாம்' என்ற சொற்றொடர் உணர்த்துகின்றது என்பது சித்தர் கருத்தாகும்.

எனவே, விநாயகர் அகவல் என்ற நூலானது மேலாகப் பார்க்கும் பொழுது ஒரு தோத்திர நூலைப் போன்று காட்சி தரினும், அதன்கண் பயின்று வந்துள்ள சொற்றொடர்களிலே குறட்பாவில் கூறப்பட்டுள்ள சித்தர் ஞானத்தின் உட்பொருள் அனைத்தும் பொதிந்துள்ளது என்பதை நாம் நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும்.

அதே சமயம் ஞானத்தை உபதேச முறையில் அல்லாமல், உணர்ச்சியின் நெகிழ்வோடு குழைத்துச் சொல்கிற கவியமைப்புக் கொண்டதாக அகவல் அமைந்துள்ளதால் ஞானம் அறிவிலிருந்து உணர்வுக்குள் பாய்ந்து விடுகிறது.

அதோடுகூட, ஞானமோனத்திலிருந்து பிறந்த பேருணர்வின் படைப்பாக இந்த நூல் அமைந்துள்ளதால், அந்தச் சொற்களை ஓதும் பொழுதே அவற்றில் ஓர் மந்திர ஆற்றல் மெய்யூடு புகுந்து செல்லக் காணலாம். 'நிறைமொழி மாந்தர்ஆணையிற் கிளந்த மறை மொழி' யாக இந்த அகவல் அமைந்திருப்பதால், பாராயணம் செய்யும் பொழுதே அவ்வாறு செய்பவருடைய உடம்பில் மந்திர ஆற்றல் பாய்ந்து விம்முகிறது. இது காரணமாக, அருளாற்றல் என்ற ஆன்மசக்தி நாள்தோறும் வளர்ந்து, படிப்படியாகப் பரிப்பக்குவம் ஏற்படுகின்றது.

வழிபடும் அடியார்களுக்கு நாளடைவில் இந்த ஆற்றல் மேலும் மேலும் வளர்ந்து அவர்களுடைய நீல மேனியும் ஒளியுடம்பும் வளர்கின்றன; உயர்கின்றன. பரம்பொருளின் பேராண்ம அனுபவம் தலைப்படுகிறது. இந்த அனுபவம் விநாயகர் அகவலுக்கே உரிய ஒரு சிறப்புப் பயனாகும்.

ஆம்; அவ்வையின் குறளைக் கற்றுணரும் மாணவன், சித்தர் ஞானத்தின் வகை தொகைகளைத் தெரிந்து பயிலத் தொடங்குகிறான். அகவலை ஓதுகின்ற பாராயணயத்திலே அவன்தான் பெற்ற அறிவுக்கு உரிய அனுபவத்தைத் துய்க்கத் தொடங்குகிறான். முந்தையது கல்வியாக அமைகிறது; பிந்தையது அதன் பயனாக அமைகிறது. ஆகையினால்தான், அவ்வையின் குறளுக்கு எத்தனை சிறப்பை யோகிகள் தருகிறார்களோ, அத்தனை சிறப்பையும் அவ்வையின் அகவலுக்கும் தருகிறார்கள்.

இனி, அவ்வையின் அகவலில் உள்ள ஒரு சமுதாயப் பலனை இங்கே குறிப்பிட வேண்டும். அதுதான் பாராயணம் என்ற சாதனத்தில் உள்ள ஒரு பெரிய மாண்பாகும்.

குறளை ஒருவன் கற்கலாம் பலருக்குக் கற்பிக்கலாம், அறிவுக்கு ஈடற்ற பயன் உண்டு, ஐயமில்லை. ஆனால், அகவலின் செயல் வேறுவிதமானது. ஒருவன் அதைப் பாடலாம். பலர் அதைக் கேட்கலாம்; அல்லது சேர்ந்து பாடலாம். பயனோ என்றால் அனைவருக்குமே ஒரே சமயத்தில் கிட்டுகிறது.

பாடுபவன், சேர்ந்து பாடுபவன், அல்லது உள்ளம் சேர்ந்து கேட்பவன் ஆகிய அனைவரையும் விநாயகர் அகவலின் மந்திர ஆற்றல் வளைத்து அணைக்கிறது. எல்லாருக்கும் பரவசம் என்ற பேரின்ப அனுபவத்தை ஒரு சேரத் தருகிறது. மந்திரமும் தோத்திரமும் புரிகிற ஆன்ம வினை என்பது இதுவே.

சொல்லும், அதன் பொருளும், அவற்றின் மந்திர ஆற்றலும் உள்ளங்களை எல்லாம் பிணைத்துப் பேரின்பம் என்கிற மின்சார ஆற்றலைப் பாய்ச்சுகிற வல்லமை இதுவேயாகும். அந்த வல்லமை அனைத்தையும் தன்னுள் அடக்கிக்கொண்டு மின்கலமாகத் திகழ்கிற ஓர் அரிய நூலே அவ்வையார் அருளிய விநாயகர் அகவலாகும்.

## 2. குறிக்கோள்

விதி என்றும், வினை என்றும், ஊழ் என்றும் பல சொற்களிலே பிறவியின் சட்டத்தையும் அமைப்பையும் அழைக்கிறோம். இந்த விதியை மாற்றவே முடியாது என்றும், பிறக்கும் பொழுதே நாம் கொண்டுவருகிற வாழ்க்கையின் அமைப்பு முறை அது என்றும், இந்து சமயத்தின் எல்லாப் பிரிவினர்களும் சொல்கிறோம். அவ்வாறே சாக்கியரும் சமணரும் கூறுகிறார்கள். சமண காப்பியமாகிய சிலப்பதிகாரம் 'ஊழ்வினை உருத்து வந்து ஊட்டும்' என்றே பாடுகின்றது. சாக்கிய காப்பியமாகிய மணிமேகலையும் இங்ஙனமே வற்புறுத்துகிறது. முற்பிறவியில் கோவலன் செய்த வினையே அவன்கொலையுண்டதற்குக்காரணமாக அமைந்தது என்பதைப் பலமுறைகளிலே

இளங்கோவடிகள் எடுத்துக் கூறுகிறார். சாத்தனார் சித்தரிக்கிற மணிமேகலையின் துறவும் ஊழ்வினையின் ஓவியமே. இந்த முறையிலேயே இராமாயணக் காப்பியமும் மற்றைப்பழம் பெரும் காப்பியங்களும் ஊழ்வினையை வற்புறுத்துகின்றன.

நமது நாட்டில் மட்டுமல்லாமல் எகிப்து, பாரசீகம் போன்ற நாடுகளிலும் ஊழ்வினையின் விளைவைப் பற்பல காப்பியங்களாக உலகப் பெருங்கவிஞர்கள் வடித்துத் தந்திருக்கிறார்கள்.

பாரசீகக் கவிஞன் உமர்க்ய்யாம் விதியின் வல்லமையை மிக அழகாகப் பாடுகிறான்.

**The Moving Finger writes**

விதியின் கையானது மனித மண்டையிலே எழுதுகிறது; எழுதிக்கொண்டே செல்கிறது. நாமும் இதையே தலையெழுத்து என்கிறோம். அயன் எழுதிய 'லலாட லிபி', நெற்றி எழுத்து, என்று நம் பெரியோர்கள் இதையே அழைத்தார்கள் .

பாரசீகக் கவிஞன் பாடுகிறான் :-

விதியின் கை எழுதுகிறது; எழுதிக்கொண்டே செல்கிறது. அது **'Moving Finger'**. ஒரு தலையில் எழுதி முடித்துவிட்டு, அடுத்த தலையில் எழுதத் தொடங்குகிறது.

**The Moving Finger writes; and, having writ, Moves on**

ஒரு தலையை முடித்துவிட்டு அடுத்த தலையெழுத்தைத் தொடங்குகிறது. ஒரே வேகம்; ஒரே உறுதி.

**.... Nor all thy Piety nor wit**
**Shall lure it back to cancel half a Line**

உன்னுடைய தூய்மை, புனிதம் , அல்லது உனது சாமர்த்தியம், கெட்டிக்காரத்தனம் - அது ஒன்றும் விதி எழுதின அந்த எழுத்தின் பாதி வரியைக்கூட அடிக்கும்படி, அழிக்கும்படி, வேண்டவோ, இசைவிக்கவோ இயலாது. அந்த வரியின் பாதியைக்கூட உன்னுடைய தூய்மையாலும் திறமையாலும் அழித்துவிட முடியாது. உன் பருப்பு அங்கே வேகாது. அது மட்டுமா?

**Nor all thy tears wash out a word of it.**

நீ ஆறாகக் கண்ணீர் வடித்தாலும் அந்தக் கண்ணீர் வெள்ளம் விதியின் எழுத்திலே ஒரு சொல்லைக் கூடக் கழுவி அலம்பிவிட முடியாது.

**The moving Finger writes; and, having writ**
**Moves on; nor all thy piety nor wit**
**Shall lure it back to cancel half a line,**
**Nor all thy tears wash out a word of it.**

'அயன் நம்முடைய தலையிலே உலக்கையினால் எழுதிவிட்டான். அன்று எழுதிய எழுத்தை அழித்து எழுத முடியாது' என்று ஓங்கி அடித்துவிட்டான் உமர் கய்யாம்.

ஆனால் நமது தமிழ்நாட்டு ஞானிகள் அப்படிச் சொல்லவில்லை. அருணகிரியார் பாடுகிறார்:

சேல்பட் டழிந்தது செந்தூர் வயற்பொழில் தேங்கடம்பின்
மால்பட் டழிந்தது பூங்கொடி யார்மனம் மாமயிலோன்
வேல்பட் டழிந்தது வேலையும் சூரும் வெற்பும் அவன்
கால்பட் டழிந் ததிங் கென்தலை மேல் அயன் கையெழுத்தே

முருகப் பெருமானுடைய திருவடியிலே என் தலையைக் கொண்டு வைத்தேன். என்ன ஆயிற்று?

அவன் கால்பட் டழிந்ததிங்கு என் தலைமேல் அயன்
கையெழுத்தே

பாட்டின் கடைசி வரியில் வருகிற தேற்றேகாரம் கட்டளைக் கலித்துறையின் வலிமை அனைத்தையும் தன்னுள் அடக்கிக்கொண்டு, உறுதியோடு கையில் அடித்துச் சத்தியம் செய்கிறது. 'அவன் கால்பட்டு அழிந்தது அயன் எழுதிய என் தலையெழுத்து' என்று ஒரே உறுதிப் பாட்டோடு பாடுகிறார் அருணகிரியார்.

கரும்பலகையிலே ஆசிரியர் வெண்கட்டியினால் எழுதிய எழுத்தைத் துணி கொண்டு அழிப்பதுபோல், விதியின் எழுத்தை முருகன் அழித்துவிட்டான். கையினால்கூட அழிக்கவில்லை; காலினாலேயே செய்துவிட்டான் அந்த செயலை. அப்படிக்கூட இல்லை; அவன் அழிக்கவில்லை. 'கால்பட்டு அழிந்தது' என்று தன்வினையாக ஊழ்வினையைப் பாடுகிறார் அருணகிரியார். அவன்கால்என் தலைமேல் பட்டது; அவ்வளவுதான். ஊழ்வினை தானாகவே அழிந்து விட்டது. வினைச்சுழல் கழன்றோடிவிட்டது என்பது கவிவாக்கு.

ஆகவே, அன்று எழுதிய எழுத்தை அழிப்பதற்குரிய உபாயம் ஒன்று இருக்கிறது. அதுவே திருவடிப்பேறு என்று ஆகிறது அல்லவா!

இந்த திருவடிப்பேறு நமக்கு எப்படிக் கிடைக்கும்? எல்லாருடைய தலையிலும் எல்லா எழுத்தும் அழிந்து விடுமா? அந்தத் தலையை அந்தத் திருவடியிலே எப்படி வைப்பது? அதன் அணுகுமுறை என்ன?

இந்தக் கேள்விகளுக்கு விடைசொல்வது போல் அமைந்துள்ள நூல்களே அவ்வையின் குறளும், அவ்வையின் அகவலுமாம். ஏனென்றால் இந்தவிதியை வெல்லும் வழிதான் சித்தர்களுடைய ஞானம். இதற்குரிய பயிற்சி நூல்களே இவை இரண்டுமாம். இந்தச் சாதனையை இவை எப்படிச் செய்கின்றன?

ஏற்கனவே வரையறை செய்துவிட்ட வாழ்க்கையின் விதி அமைப்பை, ஞானம், பக்தி ஆகிய இரண்டு விதத்திலும் மாற்றலாம் என்று சித்தர் இலக்கியங்கள் கூறுகின்றன. இந்த முறைகளை ஆராய்வதற்கு உறுதுணையாக விதியைப்பற்றிய கொள்கையைப் பார்த்தது போலவே, காலம் என்ற தத்துவத்தையும் விஞ்ஞானக் கண்கொண்டு பார்க்கவேண்டியது அவசியமாகும்.

காலம் என்ற கணக்கின் தத்துவத்தை நுணுகி ஆராய்ந்துள்ள இன்றைய மேனாட்டு அறிவியற் தத்துவ ஞானிகள், காலத்தை மூன்று கொள்கைகளிலே பேசியிருக்கிறார்கள்.

காலம் என்ற அடிப்படையை மனித வாழ்வோடு இணைத்து ஆராய்ந்துள்ள இன்றைய விஞ்ஞானிகள் **'cosmo-biology'** என்ற 'வான்புணர் உடற்கூற்று அறிவியல்' ஆகிய நவீன ஆராய்ச்சியின் பாங்கிலே மூன்று வகையில் பிரித்தார்கள்.

மனித வாழ்வின் நிகழ்ச்சிகள் **'cause and effect'** என்ற காரணமும் விளைவும் என்னும் சட்டப்படி, காலம் செல்கிறது என்பது முதலாவது கோட்பாடு. அதாவது 'விரை ஒன்று போடச் சுரை ஒன்று முளைக்காது' என்றும், 'வினை விதைத்தவன் வினை அறுப்பான்! தினை விதைத்தவன் தினை அறுப்பான்' என்றும், நாம் சொல்கிற ஊழ்வினையும் அதன் பயனும் இந்தக் கோட்பாட்டின் பாற்பட்டவை. இறந்த காலத்தின் வினை நிகழ்காலத்தையும் வருங்காலத்தையும் பிணைக்கின்ற விளைவாக முளைக்கிறது. என்பதுவே காலம் பற்றிய இந்த முதலாவது கொள்கையின் விளக்கம். இந்து சமயம், சமணம், சாக்கியம் முதலிய மத நூல்களான காப்பியங்கள் வற்புறுத்துவதும் இதுவேயாகும்.

காலம் பற்றிய இரண்டாவது கோட்பாடு, **'The dimensional theory'** என்கின்ற காலப்பாதை என்னும் சித்தாந்தமாகும். இதுவே நான்காவது பரிமாணம் என்று அழைக்கப்படுகின்ற **'Fourth Dimension'** என்னும் காலப் பாதை என்பது. அதாவது நீளம், அகலம், ஆழம் அல்லது உயரம் என்னும் மூன்று அளவைகளோடு காலம் என்பது நான்காவது அளவையாகும். இதுவே காலப்பாதை என்பது.

கருத்து என்னவென்றால், காலம் என்ற பாதையிலே நாம் நடந்து செல்கிறோம். நம்முடைய வாழ்வின் நிகழ்ச்சிகள் அவ்வப்போது புதிதாக உண்டாவதில்லை. ஏற்கனவே காலப் பாதையிலே அங்கங்கே இந்த நிகழ்ச்சிகள் ஒத்திகை செய்யப்பட்டு நம் வரவுக்காகக் காத்து நிற்கின்றன. அவை நடப்பதில்லை; நாம் நடந்து சென்று அவற்றைச் சந்திக்கிறோம்! இதுவே காலத்தைப் பற்றிய இரண்டாவது கோட்பாடு. திருமூலரும் இதனையே,

**போகின்ற காலங்கள் போவ தில்லையாம்**

என்கிறார்.

இனி, காலத்தைப் பற்றிய மூன்றாவது கோட்பாடு; இதற்கு **'The Circular Theory'** என்று பெயர். அதாவது காலம் என்பது ஒரு சக்கரம்; ஆழி அல்லது சுழல்வட்டம். அது நில்லாது, சோராது, ஓயாது, சுழன்று கொண்டே இருக்கிறது! நிகழ்ச்சிகள் எல்லாம் அந்தச் சுழற்சியிலே மாறி மாறி வட்டமிட்டு வருகின்றன. பிள்ளைப் பெருமாள் அய்யங்கார் தமது அஷ்டப் பிரபந்தத்தில் 'காலத் திகிரி' என்றே அழைக்கிறார்.

**காலத்திகிரி தலைநாளில் இட்ட கோலங்களே**

என்றே பாடுகிறார். திருமூலரும் 'காலச்சக்கரம்' என்றழைக்கிறார்.

இன்றைய அறிவியல் ஞானிகள் . இந்தக் கால வட்டக் கோட்பாட்டிலே என்ன சொல்கிறார்கள் என்றால், ஒரே நிகழ்ச்சியானது பல்லாயிரம் ஆண்டு இடைவெளிக்குப் பிறகு மீண்டும் திரும்ப முன்

போலவே அப்படியே நடக்கிறது. பிறகு இதே இடைவெளிக்குப் பின் மறுபடியும் நடக்கிறது. மீண்டும் மீண்டும் நடைபெறுகிறது.

**'History repeats Itself '** வரலாறு மீண்டும் மீண்டும் திரும்புகிறது. அதாவது, இன்று நாம் இருவர்இந்த இடத்தில் இப்போது சந்திக்கிறோம் என்றால், இதேபோன்று நாம் இருவரும் இதற்கு முன்பு இதே இடத்தில் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் சந்தித்தோம். மறுபடியும் நாம்இருவரும் இதேபோன்று பல்லாயிரம் ஆண்டுகளுக்குப் பின்னர் இதே இடத்தில் இவ்வாறே சந்திப்போம். இது ஒரு தொடர் நாடகம். இடைவெளி விட்டு மீண்டும் மீண்டும் நடைபெறுகிற ஒரு சங்கிலித் தொடர் நிகழ்ச்சி இது. இதுவே காலவட்டம் என்ற சுழற் தத்துவம்!

இந்தக் கோட்பாடுகளை ஆராய்ந்த ஒரு ஜெர்மன் தத்துவஞானி இன்னொரு கொள்கையைக் கண்டுபிடித்தார். அதற்கு **'Theory of Interference'** என்று பெயர். தலையீட்டுத் தத்துவம் என்ற இந்தக் கொள்கையின் படி, ஒரே நிகழ்ச்சி பல்லாயிரம் ஆண்டுகள் கழித்துக் காலச் சக்கரத்தின் சுழற்சியிலே மீண்டும் சுழலும் போது, வேறொரு ஆற்றல் உட்புகுந்து, தலையிட்டு அந்தச் சுழற்சியின் போக்கைச் சிறிதே மாற்றலாம்.

ஜெர்மன் ஞானி சொல்வதன் உட்கிடை என்னவென்றால், ஒரே நிகழ்ச்சி பல்லாயிரம் ஆண்டுகள் கழித்து, மறுபடியும் சுற்றத் தொடங்கும்போது யாரோ ஒருவர் அல்லது ஒரு சக்தி தலையிட்டு, அதன் சுழற்சிக் கோட்டிலிருந்து அதைச் சற்றே நகர்த்திவிட முடியும். அப்படிச் செய்வதால் அந்த நிகழ்ச்சி வேறுவிதமாக மாறிச் சுழலத் தொடங்கிவிடும். இதுவே 'தலையீடு' அல்லது **'Interference'** என்பது. ஒருவன் ஒன்று செய்வது இந்தத் தலையீட்டினால் மாறி ஒன்று பிறிதாகலாம்; அல்லது ஒன்று நடவாமலே போய்விடலாம்.

ஜெர்மன் தத்துவஞானி சொல்கிற தலையீட்டு ஆற்றல் செய்கிற செயலினால் அந்த மாறுதல் நல்லதாகலாம்; அல்லது பிறிதொரு தீங்காகலாம். ஆனால் நம்முடைய நாட்டுச் சித்தர்கள் இதையே வேறுவிதமாகச் சொன்னார்கள். மாறுதல் என்பது இறைவனுடைய தலையீட்டினால் நல்லதாகவே நடைபெறும் என்றார்கள் நம் ஞானிகள்.

மனித ஆற்றலின் தலையீட்டினால்அல்ல, இறைவனுடைய திருவருளின் தலையீட்டினால், ஏற்படுகிற மாறுதல் பேரின்பப் பெரு மாறுதலாகவே அமையும். அவன் கால்பட்டு நம் தலைமேல் தீய எழுத்து நல்ல எழுத்தாக மாறிவிடும் என்றார்கள் ஞானிகள். இதையே அவர்கள் தலையீடு என்று சாமானிய வார்த்தையில் சொல்லாமல் 'திருவருள்' என்றார்கள். 'திருவடிப்பேறு' என்றார்கள். இதைத்தான் சித்தர் இலக்கியம் வலியுறுத்துகின்றது!

விதியையும் அதன் கொடுமையையும், காலத்தையும் அதன் கோலத்தையும், வெல்லுவதற்கு உரிய ஒரே ஆயுதம் சரணாகதி அல்லது அடைக்கலம் என்றார்கள்.

இறைவனிடம் தஞ்சம் புகும்போது ஒரு பக்தனுக்கு விதி மாறுகிறது. காலத்தை அவன் வெல்கிறான். மார்க்கண்டேயன் சிவனிடம் தஞ்சம் புகுந்தான்; சூலாயுதம் எமனை நோக்கிப் பாய்ந்தது, என்பது புராணம் கூறுகிற ஒர் உருவகக் கதை. இதையே அருணகிரியார் தமது பக்தியின் மேலீட்டால் முருகனுடைய கால்பட்டு அயன் கையெழுத்து அழிந்தது என்று பாடினார். இது பக்தி மார்க்கம்.

சித்தர்கள் கூறுகிற தாச மார்க்கமாகிய தொண்டு நெறியும், சற்புத்திர மார்க்கமாகிய நன்மகவு நெறியும், இந்தத் திருவடி ஆற்றலையே போற்றித் துதிக்கின்றன.

இந்த விதியை மாற்றும் வேலையை யோகிகளும் ஞானிகளும் எவ்வாறு செய்கிறார்கள்? திருமூலர் பாடுகிறார்:

தன்னை அறிந்திடும் தத்துவ ஞானிகள்
முன்னை வினையின் முடிச்சை அவிழ்ப்பர்கள்
பின்னை வினையைப் பிடித்துப் பிசைவர்கள்
சென்னியில் வைத்த சிவனரு ளாலே

'அவன் கால்பட்டு' என்று அருணகிரிநாதர் பாடியதையே 'சென்னியில் வைத்த சிவனருள்' என்கிறார் சித்தர். அதைக்கொண்டு முன்னை வினையின் முடிச்சை அவிழ்ப்பதும், பின்னை வினையைப் பிடித்துப் பிசைவதும் சித்தரின் ஞானச் செயல்களாகத் திகழ்கின்றன.

பக்தனுக்கு எல்லாவற்றையும் இறைவனிடம் ஒப்புக் கொடுத்து விட்ட நிலையில் ஊழ்வினை தன்வினையாக அழிகிறது. சித்தனோ தன்னுடைய ஞானவினையினால் அந்த ஊழ்வினையை அழிக்கிறான். அது ஞானத்தின் செயல். இரண்டுமே சென்னியில் இயங்குகின்ற திருவருளின் செயல் விளைவேயாம்.

இந்த இரண்டு விதமான வெற்றிச் செயல்களின் வகைகளையும் எடுத்துக் கூறுவதே சித்தர்களின் ஞானச் செம்பொருள். இந்தச் செம் பொருளை உட்கொண்டு இயன்றனவே அவ்வையாரின் குறளும் அகவலும்.

வினையின் முடிச்சை அவிழ்க்கும் முறையையும், பின்னை வினையைப் பிடித்துப் பிசையும் முறையையும் பாடநூல் போல எடுத்து விளக்குவது அவ்வையின் குறள். விநாயகரின் திருவடியிலே நமது தலையை இட்டுச் சென்று, அந்தத் திருவடியிலே தோயும் நிலையில் வினைகள் சுழலுமாறு செய்வதே விநாயகர் அகவல்.

சித்தர்கள் கூறுகின்ற நான்கு நெறிகளிலே சகமார்க்கமாகிய யோக நெறியையும், சன்மார்க்கமாகிய ஞான நெறியையும் அறிவியல் முறையிலே பயிற்சிகளாக எடுத்துச் சொல்லி, நமக்கு ஞானக் கல்வியைப் புகட்ட எழுந்ததே அவ்வையின் குறள். நமது இதயத்தில் ஞானத்தையெல்லாம் பக்தியாகக் குழைத்து ஊட்டி, சொல்லும் மனமும் மெய்யும் உருகி ஓடுகிற முறையில் விநாயகனுடைய திருவடியிலே நம்மைக் கூட்டுவிக்கிற துதி நூலே விநாயகர் அகவல். இரண்டும் ஒரே குறிக்கோளில் எழுந்த இரண்டு வழிகளால் ஆன இரு வேறு நூல்கள்.

சாத்திரம், தோத்திரம் ஆகிய இந்த இரண்டும் இணைந்து நம் உள்ளத்தில் செல்லும் போது பக்தியே ஞானமாகவும், ஞானமே பக்தியாகவும் பரிணமித்து இயங்கக் காண்கிறோம்! அந்த இயக்கத்தில் விதியும் காலமும் சுழன்றோடுவதும், விதியின் எழுத்து அழிவதும், காலம் என்ற தத்துவம் தனது சுழற்சியை நமக்கு நன்மை பயக்கும் விதத்தில் மாற்றிக்கொண்டு சுழல்வதும் நிகழ்கின்றன. அப்போது 'ஊழை உப்பக்கம்' காணுகின்ற உஞற்றுதல் என்ற செயல் ஒரு தவச் செயலாகத்திகழ்கிறது.

'தாழாது உஞற்றுதல்' என்னும் இந்தத் தவத்திற்கு நம்மை அழைத்துச் செல்வதே அவ்வையின் நூல்கள் எழுந்ததன் குறிக்கோள் ஆகும்.

## 3. அகவலின் ஆற்றல்

விநாயகர் அகவல் ஒரு புகழ் நூல். அதாவது விநாயகரின் பெருமைகளைச் சொல்லிப் புகழ்ந்து துதிக்கின்ற முறையில் அமைந்த நூலாகும்.

பாமாலை நூல்களின் ஒரு மரபானது, போற்றுகிற தெய்வத்தின் வல்லமைகளை வரிசையோடு கூறி வணங்குவதாகும். 'போற்றி போற்றி' என்று முடியும் வரிகள் அமைந்த நூல்களும் இந்த வகையில் அடங்கும்.

அகவல் என்ற பாவினம் போற்றித் துதிக்கும் இந்த மரபுக்கு இசைந்த யாப்பு முறை கொண்டதாகும். மாணிக்கவாசகர் போன்ற ஞானப் புலவர்களும், சித்தர் என்ற பெயரில் வழங்கி வருகிற பல கவிஞர்களும் இவ்வகையான புகழ் மாலைக்கு அகவல் யாப்பைக் கையாண்டு இருக்கிறார்கள்.

அகவல் எனினும், அகவுதல் எனினும் மனம் ஒடுங்கிய நிலையில் ஓதுதல் என்று பொருள் படும். சொல்லுதல் அல்லது மொழிதல் என்பதைவிட அகவுதல் என்ற சொல்லுக்கு இப்படி ஒரு சிறப்பான பொருள் உண்டு. வழிபடுகின்ற கடவுளிடம் மனம் திறந்து ஓதுகின்ற செயலுக்கு, இந்த அகவலின் யாப்பு மிகவும் பொருந்தியது என்பதைப் புலவர் உலகம் பலநூறு ஆண்டுகளாகக் கண்டு கடைப்பிடித்து வந்திருக்கிறது. அவ்வையாரும் தமது விநாயகர் புகழ் மாலைக்கு இநத மரபை ஒட்டியே அகவல் முறையைப் பயன்படுத்தியுள்ளார்.

விநாயகருடைய பெருமைகளை எடுத்துச் சொல்வதோடு, யோகிகள் வழிபடுகின்ற ஞானச் சின்னங்களை வரையறை செய்து வகுத்துக் கூறுவதும், விநாயகர் அகவலின் தனிப்பெரும் சிறப்பாகும். திருமுருகாற்றுப்படை என்னும் நக்கீரர் படைப்பிலும் இந்த நுட்பங்கள் நன்கு பயின்று வருவதைப் புலவர் உலகம் நன்கு அறியும்.

சித்தர்களின் ஞான நுட்பங்களைத் தன்னுள் அடக்கியுள்ள நூல் என்பதோடு கூட, அவ்வையாரின் விநாயகர் அகவல் வேறு சில தனிப் பெருமைகளையும் தன்னுள் பொதிந்து திகழ்கிறது.

இறைவனிடம் தஞ்சம் புகும்போது ஒரு பக்தனுக்கு விதி மாறுகிறது. காலத்தை அவன் வெல்கிறான். மார்க்கண்டேயன் சிவனிடம் தஞ்சம் புகுந்தான்; சூலாயுதம் எமனை நோக்கிப் பாய்ந்தது, என்பது புராணம் கூறுகிற ஓர் உருவகக் கதை. இதையே அருணகிரியார் தமது பக்தியின் மேலீட்டால் முருகனுடைய கால்பட்டு அயன் கையெழுத்து அழிந்தது என்று பாடினார். இது பக்தி மார்க்கம்.

சித்தர்கள் கூறுகிற தாச மார்க்கமாகிய தொண்டு நெறியும், சற்புத்திர மார்க்கமாகிய நன்மகவு நெறியும், இந்தத் திருவடி ஆற்றலையே போற்றித் துதிக்கின்றன.

இந்த விதியை மாற்றும் வேலையை யோகிகளும் ஞானிகளும் எவ்வாறு செய்கிறார்கள்? திருமூலர் பாடுகிறார்:

தன்னை அறிந்திடும் தத்துவ ஞானிகள்
முன்னை வினையின் முடிச்சை அவிழ்ப்பர்கள்
பின்னை வினையைப் பிடித்துப் பிசைவர்கள்
சென்னியில் வைத்த சிவனரு ளாலே

'அவன் கால்பட்டு' என்று அருணகிரிநாதர் பாடியதையே 'சென்னியில் வைத்த சிவனருள்' என்கிறார் சித்தர். அதைக்கொண்டு முன்னை வினையின் முடிச்சை அவிழ்ப்பதும், பின்னை வினையைப் பிடித்துப் பிசைவதும் சித்தரின் ஞானச் செயல்களாகத் திகழ்கின்றன.

பக்தனுக்கு எல்லாவற்றையும் இறைவனிடம் ஒப்புக் கொடுத்து விட்ட நிலையில் ஊழ்வினை தன்வினையாக அழிகிறது. சித்தனோ தன்னுடைய ஞானவினையினால் அந்த ஊழ்வினையை அழிக்கிறான். அது ஞானத்தின் செயல். இரண்டுமே சென்னியில் இயங்குகின்ற திருவருளின் செயல் விளைவேயாம்.

இந்த இரண்டு விதமான வெற்றிச் செயல்களின் வகைகளையும் எடுத்துக் கூறுவதே சித்தர்களின் ஞானச் செம்பொருள். இந்தச் செம் பொருளை உட்கொண்டு இயன்றனவே அவ்வையாரின் குறளும் அகவலும்.

வினையின் முடிச்சை அவிழ்க்கும் முறையையும், பின்னை வினையைப் பிடித்துப் பிசையும் முறையையும் பாடநூல் போல எடுத்து விளக்குவது அவ்வையின் குறள். விநாயகரின் திருவடியிலே நமது தலையை இட்டுச் சென்று, அந்தத் திருவடியிலே தோயும் நிலையில் வினைகள் சுழலுமாறு செய்வதே விநாயகர் அகவல்.

சித்தர்கள் கூறுகின்ற நான்கு நெறிகளிலே சகமார்க்கமாகிய யோக நெறியையும், சன்மார்க்கமாகிய ஞான நெறியையும் அறிவியல் முறையிலே பயிற்சிகளாக எடுத்துச் சொல்லி, நமக்கு ஞானக் கல்வியைப் புகட்ட எழுந்ததே அவ்வையின் குறள். நமது இதயத்தில் ஞானத்தையெல்லாம் பக்தியாகக் குழைத்து ஊட்டி, சொல்லும் மனமும் மெய்யும் உருகி ஓடுகிற முறையில் விநாயகனுடைய திருவடியிலே நம்மைக் கூட்டுவிக்கிற துதி நூலே விநாயகர் அகவல். இரண்டும் ஒரே குறிக்கோளில் எழுந்த இரண்டு வழிகளால் ஆன இரு வேறு நூல்கள்.

சாத்திரம், தோத்திரம் ஆகிய இந்த இரண்டும் இணைந்து நம் உள்ளத்தில் செல்லும் போது பக்தியே ஞானமாகவும், ஞானமே பக்தி யாகவும் பரிணமித்து இயங்கக் காண்கிறோம்! அந்த இயக்கத்தில் விதியும் காலமும் சுழன்றோடுவதும், விதியின் எழுத்து அழிவதும், காலம் என்ற தத்துவம் தனது சுழற்சியை நமக்கு நன்மை பயக்கும் விதத்தில் மாற்றிக்கொண்டு சுழல்வதும் நிகழ்கின்றன. அப்போது 'ஊழை உப்பக்கம்' காணுகின்ற உஞற்றுதல் என்ற செயல் ஒரு தவச் செயலாகத்திகழ்கிறது.

'தாழாது உஞற்றுதல்' என்னும் இந்தத் தவத்திற்கு நம்மை அழைத்துச் செல்வதே அவ்வையின் நூல்கள் எழுந்ததன் குறிக்கோள் ஆகும்.

### 3. அகவலின் ஆற்றல்

விநாயகர் அகவல் ஒரு புகழ் நூல். அதாவது விநாயகரின் பெருமைகளைச் சொல்லிப் புகழ்ந்து துதிக்கின்ற முறையில் அமைந்த நூலாகும்.

பாமாலை நூல்களின் ஒரு மரபானது, போற்றுகிற தெய்வத்தின் வல்லமைகளை வரிசையோடு கூறி வணங்குவதாகும். 'போற்றி போற்றி' என்று முடியும் வரிகள் அமைந்த நூல்களும் இந்த வகையில் அடங்கும்.

அகவல் என்ற பாவினம் போற்றித் துதிக்கும் இந்த மரபுக்கு இசைந்த யாப்பு முறை கொண்டதாகும். மாணிக்கவாசகர் போன்ற ஞானப் புலவர்களும், சித்தர் என்ற பெயரில் வழங்கி வருகிற பல கவிஞர்களும் இவ்வகையான புகழ் மாலைக்கு அகவல் யாப்பைக் கையாண்டு இருக்கிறார்கள்.

அகவல் எனினும், அகவுதல் எனினும் மனம் ஒடுங்கிய நிலையில் ஓதுதல் என்று பொருள் படும். சொல்லுதல் அல்லது மொழிதல் என்பதைவிட அகவுதல் என்ற சொல்லுக்கு இப்படி ஒரு சிறப்பான பொருள் உண்டு. வழிபடுகின்ற கடவுளிடம் மனம் திறந்து ஓதுகின்ற செயலுக்கு, இந்த அகவலின் யாப்பு மிகவும் பொருந்தியது என்பதைப் புலவர் உலகம் பலநூறு ஆண்டுகளாகக் கண்டு கடைப்பிடித்து வந்திருக்கிறது. அவ்வையாரும் தமது விநாயகர் புகழ் மாலைக்கு இநத மரபை ஒட்டியே அகவல் முறையைப் பயன்படுத்தியுள்ளார்.

விநாயகருடைய பெருமைகளை எடுத்துச் சொல்வதோடு, யோகிகள் வழிபடுகின்ற ஞானச் சின்னங்களை வரையறை செய்து வகுத்துக் கூறுவதும், விநாயகர் அகவலின் தனிப்பெரும் சிறப்பாகும். திருமுருகாற்றுப்படை என்னும் நக்கீரர் படைப்பிலும் இந்த நுட்பங்கள் நன்கு பயின்று வருவதைப் புலவர் உலகம் நன்கு அறியும்.

சித்தர்களின் ஞான நுட்பங்களைத் தன்னுள் அடக்கியுள்ள நூல் என்பதோடு கூட, அவ்வையாரின் விநாயகர் அகவல் வேறு சில தனிப் பெருமைகளையும் தன்னுள் பொதிந்து திகழ்கிறது.

இறைவனிடம் தஞ்சம் புகும்போது ஒரு பக்தனுக்கு விதி மாறுகிறது. காலத்தை அவன் வெல்கிறான். மார்க்கண்டேயன் சிவனிடம் தஞ்சம் புகுந்தான்; சூலாயுதம் எமனை நோக்கிப் பாய்ந்தது, என்பது புராணம் கூறுகிற ஓர் உருவகக் கதை. இதையே அருணகிரியார் தமது பக்தியின் மேலீட்டால் முருகனுடைய கால்பட்டு அயன் கையெழுத்து அழிந்தது என்று பாடினார். இது பக்தி மார்க்கம்.

சித்தர்கள் கூறுகிற தாச மார்க்கமாகிய தொண்டு நெறியும், சற்புத்திர மார்க்கமாகிய நன்மகவு நெறியும், இந்தத் திருவடி ஆற்றலையே போற்றித் துதிக்கின்றன.

இந்த விதியை மாற்றும் வேலையை யோகிகளும் ஞானிகளும் எவ்வாறு செய்கிறார்கள்? திருமூலர் பாடுகிறார்:

தன்னை அறிந்திடும் தத்துவ ஞானிகள்
முன்னை வினையின் முடிச்சை அவிழ்ப்பர்கள்
பின்னை வினையைப் பிடித்துப் பிசைவர்கள்
சென்னியில் வைத்த சிவனரு ளாலே

'அவன் கால்பட்டு' என்று அருணகிரிநாதர் பாடியதையே 'சென்னியில் வைத்த சிவனருள்' என்கிறார் சித்தர். அதைக்கொண்டு முன்னை வினையின் முடிச்சை அவிழ்ப்பதும், பின்னை வினையைப் பிடித்துப் பிசைவதும் சித்தரின் ஞானச் செயல்களாகத் திகழ்கின்றன.

பக்தனுக்கு எல்லாவற்றையும் இறைவனிடம் ஒப்புக் கொடுத்து விட்ட நிலையில் ஊழ்வினை தன்வினையாக அழிகிறது. சித்தனோ தன்னுடைய ஞானவினையினால் அந்த ஊழ்வினையை அழிக்கிறான். அது ஞானத்தின் செயல். இரண்டுமே சென்னியில் இயங்குகின்ற திருவருளின் செயல் விளைவேயாம்.

இந்த இரண்டு விதமான வெற்றிச் செயல்களின் வகைகளையும் எடுத்துக் கூறுவதே சித்தர்களின் ஞானச் செம்பொருள். இந்தச் செம் பொருளை உட்கொண்டு இயன்றனவே அவ்வையாரின் குறளும் அகவலும்.

வினையின் முடிச்சை அவிழ்க்கும் முறையையும், பின்னை வினையைப் பிடித்துப் பிசையும் முறையையும் பாடநூல் போல எடுத்து விளக்குவது அவ்வையின் குறள். விநாயகரின் திருவடியிலே நமது தலையை இட்டுச் சென்று, அந்தத் திருவடியிலே தோயும் நிலையில் வினைகள் சுழலுமாறு செய்வதே விநாயகர் அகவல்.

சித்தர்கள் கூறுகின்ற நான்கு நெறிகளிலே சகமார்க்கமாகிய யோக நெறியையும், சன்மார்க்கமாகிய ஞான நெறியையும் அறிவியல் முறையிலே பயிற்சிகளாக எடுத்துச் சொல்லி, நமக்கு ஞானக் கல்வியைப் புகட்ட எழுந்ததே அவ்வையின் குறள். நமது இதயத்தில் ஞானத்தையெல்லாம் பக்தியாகக் குழைத்து ஊட்டி, சொல்லும் மனமும் மெய்யும் உருகி ஓடுகிற முறையில் விநாயகனுடைய திருவடியிலே நம்மைக் கூட்டுவிக்கிற துதி நூலே விநாயகர் அகவல். இரண்டும் ஒரே குறிக்கோளில் எழுந்த இரண்டு வழிகளால் ஆன இரு வேறு நூல்கள்.

சாத்திரம், தோத்திரம் ஆகிய இந்த இரண்டும் இணைந்து நம் உள்ளத்தில் செல்லும் போது பக்தியே ஞானமாகவும், ஞானமே பக்தியாகவும் பரிணமித்து இயங்கக் காண்கிறோம்! அந்த இயக்கத்தில் விதியும் காலமும் சுழன்றோடுவதும், விதியின் எழுத்து அழிவதும், காலம் என்ற தத்துவம் தனது சுழற்சியை நமக்கு நன்மை பயக்கும் விதத்தில் மாற்றிக்கொண்டு சுழல்வதும் நிகழ்கின்றன. அப்போது 'ஊழை உப்பக்கம்' காணுகின்ற உஞற்றுதல் என்ற செயல் ஒரு தவச் செயலாகத்திகழ்கிறது.

'தாழாது உஞற்றுதல்' என்னும் இந்தத் தவத்திற்கு நம்மை அழைத்துச் செல்வதே அவ்வையின் நூல்கள் எழுந்ததன் குறிக்கோள் ஆகும்.

### 3. அகவலின் ஆற்றல்

விநாயகர் அகவல் ஒரு புகழ் நூல். அதாவது விநாயகரின் பெருமைகளைச் சொல்லிப் புகழ்ந்து துதிக்கின்ற முறையில் அமைந்த நூலாகும்.

பாமாலை நூல்களின் ஒரு மரபானது, போற்றுகிற தெய்வத்தின் வல்லமைகளை வரிசையோடு கூறி வணங்குவதாகும். 'போற்றி போற்றி' என்று முடியும் வரிகள் அமைந்த நூல்களும் இந்த வகையில் அடங்கும்.

அகவல் என்ற பாவினம் போற்றித் துதிக்கும் இந்த மரபுக்கு இசைந்த யாப்பு முறை கொண்டதாகும். மாணிக்கவாசகர் போன்ற ஞானப் புலவர்களும், சித்தர் என்ற பெயரில் வழங்கி வருகிற பல கவிஞர்களும் இவ்வகையான புகழ் மாலைக்கு அகவல் யாப்பைக் கையாண்டு இருக்கிறார்கள்.

அகவல் எனினும், அகவுதல் எனினும் மனம் ஒடுங்கிய நிலையில் ஓதுதல் என்று பொருள் படும். சொல்லுதல் அல்லது மொழிதல் என்பதைவிட அகவுதல் என்ற சொல்லுக்கு இப்படி ஒரு சிறப்பான பொருள் உண்டு. வழிபடுகின்ற கடவுளிடம் மனம் திறந்து ஓதுகின்ற செயலுக்கு, இந்த அகவலின் யாப்பு மிகவும் பொருந்தியது என்பதைப் புலவர் உலகம் பலநூறு ஆண்டுகளாகக் கண்டு கடைப்பிடித்து வந்திருக்கிறது. அவ்வையாரும் தமது விநாயகர் புகழ் மாலைக்கு இநத மரபை ஒட்டியே அகவல் முறையைப் பயன்படுத்தியுள்ளார்.

விநாயகருடைய பெருமைகளை எடுத்துச் சொல்வதோடு, யோகிகள் வழிபடுகின்ற ஞானச் சின்னங்களை வரையறை செய்து வகுத்துக் கூறுவதும், விநாயகர் அகவலின் தனிப்பெரும் சிறப்பாகும். திருமுருகாற்றுப்படை என்னும் நக்கீரர் படைப்பிலும் இந்த நுட்பங்கள் நன்கு பயின்று வருவதைப் புலவர் உலகம் நன்கு அறியும்.

சித்தர்களின் ஞான நுட்பங்களைத் தன்னுள் அடக்கியுள்ள நூல் என்பதோடு கூட, அவ்வையாரின் விநாயகர் அகவல் வேறு சில தனிப் பெருமைகளையும் தன்னுள் பொதிந்து திகழ்கிறது.

முதலாவது சிறப்பு, விநாயகர் அகவலின் மொழி எளிமையாகும். இரண்டாவது சிறப்பு, அதனுடைய இசைப்பண்பாகும். மூன்றாவது சிறப்பு, அதனுடைய மந்திர ஆற்றலாகும்.

மொழிச்சிறப்பு என்பது அதன் எளிமையில் எப்படித் துலங்குகின்றது என்றால், அதனுள் பயின்று வருகிற சொற்கள் மக்கள் சமுதாயத்தின் எல்லா நிலைகளிலுமுள்ள மாந்தரின் வழக்கிலுள்ள உயிர்ச் சொற்களாம்.

எந்த மொழியிலும் எந்தக் காலத்திலும் இறவாத சொற்கள் என்று சில அடிப்படையான சொற்கிளவிகள் உண்டு. இந்தச் சொற்கள் மக்களுடைய நாவிலே ஆண்டாண்டுகளாகப் பழகு தமிழாக வழங்கி வழங்கி, அவற்றின் எளிமைக்குள்ளே ஓர் உயிர்ப்பு வேகம் அல்லது உயிரொளி தோன்றுகிறது. எவ்வாறு நெருப்பிலே கங்கு கனலுகிறதோ அவ்வாறு இந்தச் சொல் ஒவ்வொன்றும் ஒரு சொற்கங்காக என்றென்றும் அணையாது அவியாது நின்று கனல்கிறது. எனவே அது ஓதுகின்றவனுடைய சொல் மூச்சுக் காற்றிலே அதனுடைய கனல் வேகத்தை அதிகரித்துக் கொள்கின்றது. விசிறி வைத்து வீசும்போது எப்படி ஒரு கங்கானது பொறி தெறித்து அனலை உமிழ்கிறதோ, அவ்வாறே, இந்தச் சொற் கங்கும் மொழியாற்றலைத் தீப்பொறி போன்று ஓதுகிறவனுடைய சொற்காற்றினால் கக்குகிறது. இது அந்தப் பாடலின் சொல்லிலே உள்ள எளிமையின் சிறப்பாற்றலாகும்.

இனி, இந்த எளிமைக்கு இன்னொரு வேகமும் இருக்கிறது. ஓதுகின்ற மனிதன் எந்த மூர்த்தியை நினைத்து இந்த பாடலை ஓதுகின்றானோ அந்த மூர்த்தியின் முழுவடிவமும் அவனுடைய மனக்கண்ணிலே தோன்றும் வண்ணம் சொற்களின் வருணணை கைகொடுத்து உதவுகிறது. ஓதுகின்ற மொழி அவனுடைய தாய்மொழியாக இருப்பதாலும், ஓதுகின்ற சொற்கள் எளிதிலே பொருள் கொள்ளக் கூடியனவாக இருப்பதாலும், பாடலின் ஒவ்வொரு வரியை ஓதும் போதும் அந்த வரி சித்திரிக்கிற உருவமானது மனக்கண்ணின் முன்னால் படம் போன்று விரிகிறது. விரிகின்ற இந்தப் படத்திலே மனம் கவிவதால், ஓதுகின்ற உள்ளத்தின் ஈடுபாடு மேம்பட்டு உணர்ச்சியிலே முனைந்து கூடுகிறது. அப்படிக் கூடும்பொழுது அந்தத் தோத்திரம் வலிமை பெறுகிறது. இது அந்த எளிமையினால், ஏற்படுகின்ற இன்னொரு பெரிய ஆற்றலாகும்.

பதஞ்சலி முனிவர் தமது யோக சூத்திரத்தில் இறைவழி பாட்டில் மொழியின் முக்கியத்தை வற்புறுத்துகிறார். வழிபடுகிறவன் தான் ஓதுகிற மொழியின் பொருளை நன்கு உணர்ந்து கொள்ளும் பொழுது, அவனுடைய ஓதுதலில் 'மூர்த்திகரம்' என்னும் இறைமை, வன்மை அடைகிறது. இதனை யோக சூத்திரத்தின் விளக்கத்திலே, தேசிய மகாகவி சுப்பிரமணிய பாரதியார் விரிவாக எடுத்துச் சொல்லியிருப்பதை, வேறொரு கட்டத்தில் முதற் பகுதியிலே நாம் பார்த்திருக்கிறோம். எனவே, விநாயகர் அகவலின் மொழியும் அதனுடைய எளிமைப் பொருள்கோளும் இணைந்து, இந்த இறைமைக்கு ஊட்டம் தருகின்றன என்பது மேலும் ஒரு சிறப்பாகும்.

விநாயகர் அகவலை ஓதுகிற ஒரு பக்தனுக்கு இந்தப் பாடலின் தாய்மொழிப் பண்பும் எளிமைப் பாங்கும் இன்னொரு பெரிய நற்பலனைத் தருகின்றன. தான் வணங்குகின்ற தெய்வத்தின் சிறப்புக்களும் அணிகளும் காட்சியின் கோலங்களும் கண்முன் வந்து நிற்பதால், அவனுடைய ஈடுபாடு அதிகமாவதோடு கூட, உள்ளத்திலே வழி பாட்டுக்கு வேண்டிய உருக்கம் தானாகவே இழையத் தொடங்குகிறது. இதன் காரணமாக வழிபாட்டின் பயன் , வேகமும் விரைவும் கொள்கிறது.

மேலே கண்டவாறு வேகமும் விரைவும் ஏற்படும் பொழுது பக்தனுடைய எண்ணங்களிலே தெளிவு பிறக்கிறது. யாரிடம் எதை எவ்வாறு சொல்லுகிறோம் என்னும் முழு நினைவோடும், முழு உணர்ச்சியோடும், பாடலை ஓதுகிறான் பக்தன்.

இத்தனை பயன்களும் ஒன்று சேர்வதால், வழிபடுகின்ற பக்தனுடைய உள்ளத்திலிருந்து சொற்களோடு சேர்ந்து, தெளிவான எண்ணங்கள் அக உடலின் ஆழத்திலிருந்து எழுந்து வருகின்றன. அப்படி எழுந்து வரும்பொழுது, வழிபாட்டுக்கு இன்றியமையாத 'உள்ளுதல்' என்ற உணர்வு நிலையின் ஆட்சி முழுமை பெறுகிறது. எனவே, அவன் தனது வழிபாட்டின்பொழுது மனத்தை ஒருமைப் பாட்டுடன் குவியச் செய்வது நன்கு கைகூடுகிறது. உள்ளத்தின் ஆழத்திலிருந்து புகழ்மாலையின் சொற்களும் வேண்டுதலின் எண்ணங்களும் இரண்டறக் கலந்து நிற்கும் நிலையிலே, விநாயகரின் திருவடிகளிலே மலர்கள் போன்று தூவப் பெறுகின்றன. எண்ணங்கள் வேறிடத்தில் சிதறுவதில்லை.

இவையனைத்தும் தாய்மொழியின் அமைப்பும் அதன் எளிமையும் தருகின்ற பேராற்றல்களும் நற்பயன்களுமாம்.

இனி, மொழியின் இசைப்பண்பு எப்படி அமைந்துள்ளது என்பதைப் பார்த்தால் அவ்வையாரின் கவியாற்றலானது வழிபாட்டுக்கு எங்ஙனம் துடுப்பு வீசுகிறது என்பதை உணரலாம்.

அகவலினுடைய யாப்புமுறை, அதில் பயின்று வந்துள்ள சொற்களைப் போன்றே மிகவும் எளிமையானதாகும். அதனுடைய தாள அமைப்பு எளிய கட்டுக்கோப்பு கொண்டது. அகவுதல் என்ற சொல்லுக்கு ஏற்பப் பின்னுதல், புரட்டுதல், பாய்தல் போன்ற சிக்கல்கள் ஏதுமின்றி, ஓதிக்கொண்டே போகக்கூடிய தாள அமைப்புக் கொண்டதே அகவல் என்னும் பாவினம்! இதனால் விநாயகருடைய பெருமைகளை மேலே மேலே அடுக்கிச் செல்லும் போது ஓதுகிறவனுடைய உள்ளம் அந்த யாப்பின் அமைதியிலே இரண்டறக் கலந்து விடுகிறது. நிஷ்டை என்றும், ஒருமைப்பாடு என்றும், ஒன்றுகூடல் என்றும் சொல்லுகிற மனஒடுக்கம் இந்த இசைப்பண்பினால் சிக்கலின்றிக் கைவந்துவிடுகிறது. இது அந்தப் பாடலின் தாள அமைப்பும் தளைகளின் இசைப்பண்பும் சேர்ந்து கூட்டுவிக்கின்ற ஞான சாதனை.

இந்த இசைப் பண்பினால் விளைகிற இன்னொரு பயன் அதனுடைய ஒலி அதிர்வாகும்.

மொழிக்கு முதற்காரணம் இலக்கண ஆசிரியர்கள் கூறியவாறு ஒலியின் அணுத்திரளே ஆகும். அந்த நிலையிலே ஆராய்ந்து பார்தோமானால் அகவற்பாவின் இசைப்பண்பு எளிமையோடு பொலிவையும் உள்ளடக்கிய ஒலி அதிர்வாகும். ஆற்றொழுக்காகச் செல்கிற ஒலி அலைகளை எழுப்புகிற தாள அமைப்பு வெண்தளைக்கு இருப்பதால் , இந்தப் பாடலை ஓதும்பொழுது உணர்ச்சியின் செறிவானது அலை அலையாக எழுந்து பெருகுகிறது. அப்படிப்பெருகும் பொழுது உள்ளத்தின் உணர்ச்சி அலைகள் நமது உடம்பைச் சுற்றி நிற்கின்ற வான அணு உடலின் அலைகளை அசைக்கத் தொடங்குகின்றன. அப்போது அகமும் புறமும் இணைந்து ஒலிக்கத் தொடங்குகின்றன.

ஒரே சுதியில் சேர்க்கப் பெற்ற இரண்டு இசைக் கருவிகளில் ஒன்று ஒலிக்கத் தொடங்கியதும் எவ்வாறு அடுத்ததும் தானாகவே ஒலிக்கத் தொடங்குகிறதோ, அவ்வாறே, இணை ஒலி என்ற இயற்பியல் விதியின் படி அகமும் புறமும் விநாயகர் வழிபாட்டிலே இணைந்து ஓதத் தொடங்குகின்றன. இப்படி இணைவதுதான் சித்தர்கள் கூறுகிற ஒடுக்கநிலை என்பது.

யோகத்தில் அமரும்போது சமாதி என்னும் ஒடுக்கநிலை எப்படி ஒரு சித்தனுக்கு கூடுகிறதோ அவ்வாறே ஒரு பக்தனுக்கு அவனுடைய வழிபாட்டின்போது மன மண்டலத்திலே ஒடுக்க நிலை கூட வேண்டும் அப்படிக் கூடினால் தான் அவனுடைய வழிபாடு முழுமை பெறுகிறது இந்த முழுமை பெறும் நெறிக்கு விநாயகர் அகவலின் இசைப்பண்: பக்தனை ஆற்றுப்படுத்தி விநாயகரின் திருவடிகளிலே மனத்தை ஒடுங்கும் படி செய்கிறது.

மொழியும் இசைப்பண்பும் இத்தனை சிறப்பு இயல்புகள் கொண்டு திகழ்வதோடு கூட, அவ்வையின் விநாயகர் அகவலிலே இன்னொரு மாபெரும் சிறப்பு வியக்கத்தக்க விதத்தில் அமைந்து பொலிகிறது! அதுதான் அதனுடைய மந்திர ஆற்றல் என்பது.

மொழியும் இசையும் மன உலகத்தின் பாற்பட்டவை. மந்திர ஆற்றல் என்பதோ ஆன்ம உலகின் பாற் பட்டது.

உள்ளத்தின் அதிர்வுகள் அகமும் புறமும் இணைந்து ஒடுங்கச் செய்வது போலவே, தனி உயிரையும் பரம் பொருளாகிய பேருயிரையும் இணைக்கவல்ல ஆற்றல் செயற்படுகிற களம், ஆன்ம உலகமே ஆகும்.

மொழியும் இசையும் உள்ளத்தில் அதிர்வை உண்டாக்கி உணர்ச்சி அலைகளை எழுப்புகின்றன. அவ்வாறே ஒரு சொற்றொடரின் மந்திர ஆற்றலானது, ஆன்ம உலகிலே நுண் அதிர்வுகளை விளைத்துத் தனி ஆன்மாவையும் பேரான்மாவையும் ஒருமைப்பாடு என்னும் ஒடுக்க நிலைக்கு உய்க்கிறது. இது பிற ஆற்றல்களைப்போல்அல்லாது, மிகவும் நுண்ணிய முறையிலே இயங்குகின்ற நுட்பமான ஒலி ஆற்றலாகும்.

எல்லா மொழிகளும் ஒலி அலைகளை எழுப்புகின்றன. ஆனால் அவையெல்லாம் மந்திர ஒலிகள் ஆகா. நிறைமொழியும் மறைமொழி

யும் தருகின்ற ஆணையிற் கிளக்கும் அதிர்வுகள் ஒப்பற்ற தனியாற்றல் கொண்டவை. அந்த் ஆற்றலுக்குத்தான் மந்திர ஆற்றல் என்று பெயர்.

ஒரு சாதாரணச் செய்யுளில் விளைகின்ற ஒலி அலைகளுக்கும் ஒரு மந்திரத்தில் விளைகின்ற ஒலிஅலைகளுக்கும் ஓர் அடிப்படையான வேறுபாடு என்னவென்றால், முந்தைய ஆற்றல்கள் அறிவும் உணர்ச்சியும் சேர்ந்து தொழிற்படுபவை. மந்திர ஆற்றலோ அறிவினாலும் உணர்ச்சியினாலும் அளக்க முடியாததும் ஆராய்ந்து பார்த்துப் புரிந்து கொள்ள முடியாததுமான ஓர் இணையற்ற இறையாற்றலாகும். உள்ளத்தையும் உணர்வையும் கடந்த ஆற்றலாக இருப்பதால் சித்தர்கள் இதை இறையாற்றல் என் று அழைத்தார்கள்.

இந்த இறையாற்றலானது புரிந்துகொள்ளக் கூடியதும் அளவை செய்யக் கூடியதுமான மொழிக்குள்ளே தான் உறைகிறது. ஆனால், இந்த இரண்டையும் கடந்து நிற்கிறது அது. கட்டுபாட்டுக்குள் அடங்கிய உடம்பிலும் உள்ளத்திலும் இருக்கும் இறைவன், எப்படி இந்தக் கட்டுபாடுகளைக் கடந்தவனாக இருக்கிறானோ அவ்வாறே, இந்த மந்திர ஆற்றலும் மொழிக்குள்ளே பதிந்த போதிலும் மொழியின் எல்லையைக் கடந்து இயங்குகிறது. இதுவே தனி உயிரைப் பேருயிரோடு பிணைக்க வல்ல மாபெரும் உயிராற்றலாகும்.

அவ்வையின் விநாயகர் அகவலிலே இந்த மந்திர ஆற்றலானது கம்பியில் ஓடுகின்ற மின்சாரம் போன்று அகவலின் ஒவ்வொரு வரியிலும் ஓடுகிறது. இந்த ஆற்றலினால், இதை ஓதுகின்ற மனிதனின் உள்ளம் மின்குமிழ் **(Bulb)** போன்று ஒளிர்கிறது. அவனுடைய உடலைச் சுற்றியுள்ள ஒளி உடம்புக்குள்ளே ஓடி கலக்கிறது. இந்த இரண்டும் இணைந்து விநாயகராகிய பேரொளிப் பிழம்பிலே ஒடுங்கக் கூடிய நெறியிலே அகவல் செல்கிறது. இந்த மின் ஆற்றலே விநாயகர் அகவலின் மாபெரும் வழிபாட்டு மாண்பாகும்.

ஆன்ம ஒலி அதிர்வு என்றும், ஆன்ம ஒளிவீச்சு என்றும் செவிப்புலனோடும், கட்புலனோடும் இணைந்த முறையிலே சித்தர்கள் ஞான ஆற்றலை விளக்குவது உண்டு. தொண்டு நெறியின் வாயிலாகவும், நன்மகவு நெறியின் வாயிலாகவும், நட்பு நெறியின் வாயிலாகவும், செந்நெறியின் வாயிலாகவும் இந்த ஞான ஆற்றலை வளர்த்துக்கொள்வதற்குச் சித்தர் இலக்கியங்கள் எத்தனையோ பல பயிற்சிகளை எடுத்துச் சொல்கின்றன. இந்தப் பயிற்சிகளில் கடினமானவை, மிகவும் கடினமானவை என்றும், எளியவை மிகவும் எளியவை என்றும் அழைக்கப் பெறுகிற பல பயிற்சிகளை நாம் காணலாம். இவை அனைத்திலும் மிகவும் எளிமையான முறைகளிலே ஒன்றுதான் தோத்திர நூல்களை ஓதுவதாகும்.

அப்படி எளிய முறையிலே ஞான ஆற்றலைப் பெருக்குவதற்கு என்று தோன்றிய நூல்களிலே விநாயகர் அகவலானது மிக எளிமையிலும் எளிமையான ஒரு மாண்பார்ந்த நூலாகும். ஏனென்றால் ஞானப் பேருண்மைகளைத் தன்னுள் அடக்கியுள்ளதோடு, மொழி எளிமையும் இசை எளிமையும் கொண்டு திகழ்கிறது இந்த அரிய நூல்.

அதனோடு கூட, மின்கலத்தில் நிறைந்துள்ள மின் ஆற்றலைப் போன்று இந்த நூலின் கண் மந்திர ஆற்றல் கரந்து நிற்பதால், எளிமையான வழிபாட்டின் மூலம் மிகவும் கடினமான ஞானப் பயிற்சிகளிலே விளைகின்ற நற்பலன் நமக்குக் கிட்டிவிடுகின்றது.

மந்திர ஆற்றல் என்ற மாபெரும் வல்லமையானது எளிமையான சொற்களின் வழியாக எளிமையான இசையின் வாயிலாக நம்மை விநாயகரின் பால் ஈர்த்துப் பிணைக்கின்ற மின்தொடர்பாக இயங்குகிறது. இக்காரணம் பற்றியே பெரிய பெரிய பயிற்சிகளிலே ஈடுபட்டுள்ள ஞானயோக சித்தர்களும் அவ்வையாருடைய விநாயகர் அகவலை மிகுந்த ஆர்வத்துடன் போற்றிப் பேணி வந்துள்ளதோடு, மாணவர்களுக்கும் அவர்களுடைய தோத்திரப் பயிற்சிக்கு உறுதுணை என்று சொல்லி வழங்கி வந்துள்ளார்கள்.

அவ்வையின் குறளைப் போலச் சித்தர் உலகத்தின் ஆர்வத்திற்க்கும் பயிற்சிக்கும் நிலைக்களனாக நிலவி வந்துள்ள இந்த அரும்பெரும் நூலின் வழிபாட்டுச் சிறப்பு இங்ஙனம் திகழ்கிறது. இனி, இந்த நூலின் உட்கிடையான ஞான உட்பொருளை , விநாயக தத்துவத்தை ஆராய்ந்து பார்ப்போம்.

## 4. விநாயகர் வழிபாடு

விநாயகர் அகவலின் உட்பொருளை ஆராய்வதற்குத் துணையாக, நம் தமிழகத்தில் நிலவும் விநாயகர் வழிபாடு எவ்வாறு வழங்கி வந்துள்ளது என்னும் பக்தி மரபையும், இந்த வழிபாட்டின் விதிமுறைகளை நம் பெரியோர்கள் எவ்வாறு கடைப்பிடித்திருக்கிறார்கள் என்ற வரலாற்றையும் ஆராய்வது அவசியமாகும். இந்த மரபையும் விதிமுறைகளையும் ஒட்டி அவ்வையார் தமது அகவலை யாத்திருக்கிறார் என்ற மாண்பைக் காணுவதற்கும், பாடலின் மொழிகளுக்குள்ளே எத்தகைய புகழ்மரபு பொதிந்திருக்கிறது என்பதைக் காணுவதற்கும், இந்த ஆய்வு நமக்குத் துணை செய்யும்.

விநாயகன் என்னும் வடசொல்லுக்கு, தனக்கு மேல் ஒரு தலைவன் இல்லாதவன் என்பது பொருளாகும். அதாவது, தானே தனிப்பெரும் தலைவன், தானே முழுமுதற்கடவுள் என்பது பொருள்.

தமிழகத்தில் வழங்கி வருகின்ற எல்லாப் பூசனை முறைகளிலும் எந்த ஒரு வழிபாட்டின் தொடக்கத்திலும் விநாயகனைத் துதிப்பது ஒரு மரபாக நிலவி வருகிறது. தமிழ் மந்திரங்களைக் கடைப்பிடிப்பவர்களும் வடமொழி மந்திரங்களை கடைப்பிடிப்பவர்களும் இரு சாராருமே இந்த மரபைத் தவறாமல் ஆண்டு வந்திருக்கிறார்கள்.

இன்றைக்கும் நமது வீடுகளில் வழங்கிவருகின்ற பூசை முறை களிலும், இந்த மரபையே நாம் கண்ணும் கருத்துமாகப் போற்றி வருகிறோம்.

புதுமனை புகும் விழாவிலும், திருமண விழாக்களிலும் மற்றும் பல பண்டிகைகளிலும் வேள்வித்தீ வளர்க்கும் போது, தொடக்கத்திலேயே விநாயகரை வணங்கித்தான் பூசையைத் தொடங்குகிறோம்.

சுக்லாம் பரதரம் விஷ்ணும் சசிவர்ணம் சதுர்புஜம்

என்று தொடங்குகிற விநாயகர் வழிபாட்டுச் செய்யுள் நமது நாட்டில் மிகவும் புகழ் பெற்றதாகும். சுக்லம் என்ற வட சொல்லுக்கு வெண்மை என்று பொருள். அம்பரம் என்றால் ஆடை; வெண்ணிற ஆடை அணிந்தவரும், சந்திரனைப்போன்று வெண்ணிறம் கொண்டவரும் (சசிவர்ணம் - சந்திரனுடைய நிறம். சசி- சந்திரன்), நான்கு கைகள் கொண்டவரும் என்பதாக இந்த வணக்கச் செய்யுள் தொடங்குகிறது.

வடமொழி மந்திரங்களை ஓதுகின்ற உபாசகர்கள் 'கஜானனம் பூத கணாதி சேவிதம்' என்று தொடங்குகின்ற பாடலை ஆரம்பத்தில் சொல்லித்தான் தங்கள் மந்திரங்களைத் தொடங்குகிறார்கள்.

தமிழ்மொழியிலும் விநாயகருக்கு உரிய பாடல்களைப் பாடியேச் சடங்குகளை ஆரம்பிப்பது வழக்கமாக உள்ளது.

தன்தோள் நான்கின் ஒன்று கை மிகூஉம்
களிறு வளர் பெருங் காடாயினும்
ஒளிபெரிது சிறந்தன்று அளியவென் நெஞ்சே

என்னும் பாடல் மிகப் பழைய தமிழ்ப் பாடல்களுள் ஒன்று. தொல்காப்பியம் செய்யுளியல் ஐம்பத்திரண்டாவது சூத்திரத்தின் இளம்பூரணத்திலே இந்த பாடலை பார்க்கலாம். மிகப் பழமையான ஒரு மேற்கொள் இது என்பதிலிருந்து, இப்பாடலின் தொன்மை புலனாவதோடு கூட, விநாயகர் வழிபாட்டின் தொன்மையும் புலனாகிறது அல்லவா!

காப்பிய ஆசிரியர்கள் தவிர, இலக்கண ஆசிரியர்களுமே தங்கள் நூல்களைத் தொடங்குவதற்கு ஆரம்பமாக, முகப்பிலேயே விநாயகரை வணங்குகின்ற முறை, எத்தனை நூற்றாண்டுகளாக நமது தமிழகத்தில் பயின்று வந்துள்ளது என்பதற்கு இது ஒரு சான்றாகும். இதே பாடலை முத்தொள்ளாயிர நூலின் காப்புச் செய்யுள் என்றும்கூட அறிஞர் உலகம் கூறுகிறது. புறத்திரட்டு என்னும் பழமையான தொகை நூலில் இவ்வாறே காணப்பெறுகிறது.

நான்கு தோள்களும் தாழ்ந்து நீண்ட ஒரு கையும் கொண்ட ஒரு பெரிய யானை உலவுகின்ற காடு என்கிறார் தனது நெஞ்சை. இந்த மனக்காடு அந்த யானை உலவுவதால் ஒளிப்பெற்றுத் திகழ்கிறது என்பதே கருத்து.

இதே போன்று தொல்காப்பியத்திலும், தமிழ்நாவலர் சரிதையிலும், உரிச்சொல் நிகண்டு போன்ற நூல்களின் தொடக்கத்திலும் காணப்பெறுகின்ற இரண்டு பாடல்கள் தமிழ்ப் புலவர்களால் போற்றப்பெற்று வந்துள்ளன. அவை பின்வருமாறு:

எண்ணிய எண்ணியாங் கெய்துப கண்ணுதற்
பவள மால்வரை பயந்த
கவள யானையின் கழல்பணி வோரே

இந்தப் பாடலின் முதலாவது அடி திருவள்ளுவரின் திருக்குறளில் அப்படியே பயின்று வருவதைப் பார்க்கிறோம். திருக்குறளுக்கு முந்தியதா, பிந்தியதா என்பது அல்ல கேள்வி. இந்த மரபு தொன்மையானது என்பதே நமக்கு இவ்விடத்தில் முக்கியமான செய்தியாகும்.

நெற்றிக் கண்ணையுடைய பவள மலையாகிய சிவபெருமானுடைய பிள்ளை விநாயகன். தந்தையைப் பவளமால்வரை என்கிற பாடல் பிள்ளையைக் கவள யானை என்கிறது.

அடுத்த பாடல் ஒரு நேரிசை வெண்பாவாகும்.

மதிபாய் சடைமுடித்து மாசுணப்பைம் பூட்டுச்
சதிபாய் குறுந்தாட்டுத் த்ன - நதிபாய்
இருகவுட்டு முக்கட்டு நால்வாய்த்தென் உள்ளம்
உருகவிட்டு நின்ற ஒளி

இந்த பாடலின் சொற்களும், அவற்றின் ஆட்சியும், அவற்றின் தலைப்பூட்டுக்களும் பாடலின் தொன்மைக்குச் சான்றுகளாம். மிகப்பழமையான பாடல் என்பதற்கு இவையே தக்க அகச்சான்றுகளாக விளங்குவதோடு, விநாயக வழிபாட்டின் பழமைக்கும் சான்றாம். இந்தப் பாடலும் விநாயகரை மதியும் சடைமுடியும் பாம்புமாகக் கோலம் தருகிற முக்கட்பெருமானின் சேயே விநாயகன் என்பதைச் சித்திரிக்கிறது. அதனோடு எப்போதும் மதநீர் பாய்கின்ற கன்னங்களை உடைய யானை என்று இந்தப்பாடல் விநாயகரை ஏத்துகிறது.

இனி, தண்டியலங்கார உரையில் மேற்கோளாக வருகிற இன்னொரு பழைய பாடலும் விநாயகரைப் பற்றியதே.

மானமருங் கண்ணாள் மணிவயிற்றில் வந்துதித்தான்
தானவரை யென்றுந் தலையழித்தான் - யானைமுகன்

ஒட்டினான் வெங்கலியை உள்ளத் தினிதமர்ந்து
வீட்டினான் நம்மேல் வினை.

உமை அம்மையின் மைந்தனாய் வந்துதித்த விநாயகன் அசுரர்களைத் தலையழித்ததோடு வெம்மையான கலியை ஓட்டினான். அதனோடு உள்ளத்தில் இனிதாக அமர்ந்துகொண்டு, நம் மீது சார்கின்ற வினையை வெருட்டினான் என்று விநாயகரை வழிபடுகிறது இந்தப் பழம்பாடல். இந்தப் படாலில் உமை அம்மையின் கண்ணை மான் அமர்ந்துள்ள கண் என்று மொழிகின்ற கவி எழில், உணர்ந்து இன்புறற்பாலது.

இனி, இன்னொரு பழைய வெண்பாவைப் பார்ப்போம். இது, வீரசோழியம் உரையிலும் தண்டியலங்கார உரையிலும் காணப்பெறுகிற விநாயகர் புகழ்ப்பாவாகும். இந்தப் பாடல் புழை உடைய நீண்ட கை கொண்ட மலை (தடக்கைப் பொருப்பு) என்று தும்பிக்கை விநாயகனை அழைக்கிறது.

மலை என்று சொல்லியதால் மலைமீது தோன்றுகிற பிற காட்சிகளையும் இந்தப்பாடல் ஓவியமாக வரைகிறது. தேன் பிலிற்றுகின்ற கொன்றையைப் பொன்னாகவும் ( மலைபடுபொன் என்பது சங்கநூற்

கோட்பாடு), செஞ்சடையைப் பவளக்கொடியாகவும், மதநீரை மழையாகவும், கொம்பினைப் பிறைச்சந்திரனாகவும் கொண்டு, இந்தக் கவிஞரின் கண்முன் விநாயகராகிய களிறு காட்சி தருகிறது:

தேனக் கலர்கொன்றை பொன்னாகச் செஞ்சடையே
கூனற் பவளக் கொடியாகத் - தானம்
மழையாகக் கோடு மதியாகத் தோன்றும்
புழையார் தடக்கைப் பொருப்பு

இனி, தொல்காப்பியம் செய்யுளியலில் வருகின்ற மேலும் ஒரு பாடல் வருமாறு:

தடந்தாட்கு ஒத்த தமனியச் சிலம்பு
படந்தாழ் கச்சைப் பாம்பொடு மிளிர
வென்றாடு திருத்தாதை வியந்துகை துடிகொட்ட
நின்றாடு மழகளிற்றை நினைவாரே வினையிலரே

பெருமை பொருந்திய நீண்ட கால்களை உடைய சிவபெருமான் அந்தப் பெருமைக்கு ஏற்பக் காலிலே பொற்சிலம்பு அணிந்திருக்கிறான். பாம்புதன் படமே அவனுக்குக் கச்சையாக அமைந்திருக்கிறது (கச்சை - இக்காலத்து இலங்கோடு). அவன் மன்றிலே நின்று குதித்தாடுகிறான். நடராச மூர்த்தியின் தாண்டவம் வெற்றிக் கூத்தல்லவோ! அந்தத் தெய்வக் கூத்தனின் வியப்புக்கு உள்ளாகிறது மகனுடைய நடனம். வென்றாடும் கூத்தனாகிய தந்தை, நின்றாடும் மகனின் நடனத்தை வியந்து, விநாயகனாகிய அந்த மகனுடைய நடனத்துக்கு ஏற்றவாறு கையிலுள்ள உடுக்கையை முழக்குகிறான். அந்த நின்றாடும் மழகளிற்றை நினைப்பவர்களுக்கு வினை இல்லை. ஏனென்றால் அவன் வினைதீர்த்த விநாயகன்.

இனி, பல நூற்றாண்டுகளாகத் தமிழகத்திலே வழங்கி வருகின்ற மிகத் தொன்மையான ஒரு பாடல், வெண்பா, வருமாறு:

திருவாக்கும் செய்கருமம் கைகூட்டும் செஞ்சொற்
பெருவாக்கும் வீடும் பெருக்கும் - உருவாக்கும்
ஆதலால் வானோரும் ஆனை முகத்தானைக்
காதலாற் கூப்புவர் தம் கை.

இந்தப் பாடல் நம் தமிழகத்திலே நீண்ட நெடுங்காலமாக எல்லாச் சார்பினராலும் இலக்கியத்திலும் வழிபாட்டிலும் ஒருசேரப் பயின்று வந்துள்ளதற்கு அடிப்படையான காரணம் என்னவென்றால், விநாயகனை வழிபடுவதனால் எத்தகைய நற்பலன்கள் விளைகின்றன என்பதை எடுத்துச்சொல்லி, ஓதுபவருடைய உள்ளத்திலே ஊக்கத்தையும் எழுச்சியையும் இந்தப் பாடல் உண்டாக்குகிறது. அதனோடு உலக வழக்கிலே இது ஒரு பழம்பாடல் என்று பொதுவாக வழங்கினாலும், இது பதினோராம் திருமுறையில் வருகிற ஓர் அழகிய பாடலாகும்.

விநாயகரை வழிபடுவதனால் செல்வம் உண்டாகும். செய்கின்ற செயலில் வெற்றி கிடைக்கும்.நாவிலே செஞ்சொல் வாக்கு உதிக்கும்.

பெருமை வளரும். இவை மட்டுந்தானா? நம்மைப் பார்ப்பவருக்கு நம்மிடத்திலே மதிப்பும் மரியாதையும் ஏற்படக் கூடிய வகையில் நம்மிடத்தில் உட்கு எனப்படுகிற உரு ( உரு உட்காகுமே என்பது தொல்காப்பியம் ) உண்டாகிறது.

இந்த உரு அல்லது உட்கு அன்போடு சேரும் பொழுது அதுவே பயபக்தியாக மிளிர்கிறது. ஆதலால் வானவர்களும் ஆனைமுகத்துக் கடவுளைக் காதலோடு கைகூப்பித் தொழுகிறார்கள், என்கிறது பதினொராம் திருமுறை.

தண்டியலங்காரம் என்னும் இலக்கண நூலிலே விநாயகருக்கும் மலைக்கும் சிலேடையாக இயற்றப் பெற்றுள்ள ஒரு வெண்பா காணப்பெறுகிறது. அந்தப் பாடல்:

அம்பொற் பனைமுகத்துத் திண்கோட் டணிநாகம்
வம்புற்ற வோடை மலர்ந்திலங்க - உம்பர்
நவம்புரியும் வானதியு நான்மதியு நண்ணத்
தவம்புரிவார்க் கின்பந் தரும்.

இலக்கண நூல்களிலும் இலக்கிய நூல்களிலும் தொடக்கத்தில் விநாயகரை வணங்குகிற இந்த மரபு, இரண்டாயிரம் ஆண்டுகளாக நமது தமிழகத்திலே பேணிப் பாதுகாக்கப்பட்டு வந்துள்ளது. பல்லவர் காலத்துக்குப் பின்னர் இந்த விநாயகர் வழிபாடானது வளர்ந்தோங்கிப் பல்கிற்று என்பதை வரலாற்றிலே காண்கிறோம்.

நான்கு தெருக்கள் கூடுகின்ற சந்திகளிலும் , ஆற்றங்கரை அரச மரங்களின் அடியிலும் விநாயகரை வழிபடுகின்ற வழக்கம் இன்றளவும் நம் தமிழகத்திலே மேலோங்கி நிற்கிறது.

இன்னும் உய்த்து ஆராய்ந்து பார்த்தோமானால் உழவர்களுடைய நாகரிகத்திலே, எலியின் மீது இவர்கிற விநாயகமூர்த்திக்கு ஒரு தனி இடம் இருந்து வருகிறது. பயிர்களை எலித்தொல்லைகளிலிருந்து பாதுகாத்துக் காப்பாற்றுபவனும், விளைச்சலைப் பெருக்குபவனும் விநாயகமூர்த்தி என்கிற நம்பிக்கை, தும்பிக்கையோடு இணைந்து இன்றளவும் நின்று நிலவக் காண்கிறோம். உழவர் உலகின் பல நாட்டுப்புற நாடோடிப் பாடல்களிலே இத்தகைய பிள்ளையார் பாடல்கள் ஏராளமாக உள்ளன.

புராணக் கதைகள் ஒருபுறம் இருக்க, விலங்குகளிலே மிகப்பெரியதும், மிகுந்த வல்லமை கொண்டதும், புலால் உணவு உண்ணாததும், உழவனுடைய விளைச்சலையே உண்டு வலிமை பெற்றுள்ளதுமான விலங்கு ஆனை என்பதால், உழவுப் பெருங்குடி மக்களுக்கு யானை முகத்தில் ஒரு தனியான ஈடுபாடு ஏற்பட்டிருப்பது இயல்பே ஆகும். காடும் காடு சார்ந்த நிலமுமான முல்லையும், வயலும் வயல் சார்ந்த நிலமுமான மருதமும் விநாயகரை மரநிழலிலும் தெரு முனையிலும் வைத்து வணங்கி வந்திருக்கின்றன.

திருச்சி மலைக்கோட்டையிலும், வேறு சில குறிஞ்சி நிலக் கோயில்களிலும் விநாயகர் மலைமீது கோயில் கொண்டிருப்பதையும் காணு

கிறோம். பொருநை நதி சங்கமிக்கிற சங்குமுகம் போன்ற நெய்தல் நிலங்களிலும் ஒரோவழி விநாயகர் கோயில் கொண்டிருப்பதையும் பார்க்கிறோம்.

இலக்கியப் புலவர்கள் முழுமுதற் கடவுளாக வணங்கியது போலவே, பொதுமக்களும் முழுமுதலாக அவனை வணங்கி வருகிறார்கள். எனவே நூல் செய்யும் புலவர்கள் தொடக்க வணக்கமாக அவனை வணங்குவது போலவே, சமுதாய வாழ்விலும் விநாயகன் முதல் இடத்தைப் பெற்று வந்திருக்கிறான். வினைகளை நீக்குபவனும், விக்கினங்களைப் போக்குபவனும் ஆன இம்மூர்த்தியை வினைத்தீர்க்கும் விநாயகன் என்றும், விக்னேசுவரன் என்றும் புலவர் உலகம் அழைக்கிறது. விக்கினத்தைக் கொடுப்பவனும் கெடுப்பவனும் இவனே.

நூல்களின் வணக்கப் பாடல்களாக வருகின்ற தொடக்கப் பாடல்களைத் தவிர, பதினோராம் திருமுறையில் காணப்படுகின்ற கபிலதேவ நாயனார் பாடல்களும், அதிரா அடிகளின் பாடல்களும் தனித்தனி நூல்களாகவே எழுந்துள்ளன. அவை அன்று தொட்டு இன்று வரை வழிபாட்டில் ஓதப்பெற்றும் வருகின்றன.

தமிழகத்தின் வரலாற்றில் விநாயகருடைய வழிபாடு உழவர்களின் வாழ்வோடு இணைந்த நிலையிலே தொடங்கிச் சமுதாய நடைமுறையிலே பின்னியிருந்த தருணத்தில், பரஞ்சோதியார் வாதாபி சென்று வெற்றியுடன் வாதாபி கணபதியைத் தமிழ்நாட்டுக்கு கொண்டுவந்து இந்த மண்ணிலே நிறுவியபோது, இந்தத் தொன்மையான வழிபாட்டுக்கு மேலும் ஒரு மறுமலர்ச்சியை உண்டாக்கினார் என்று சொல்ல வேண்டும். இதன் காரணமாக விநாயகர் வழிபாட்டிலே வகைகளும் முறைகளும் பலவாறாக விரிந்தன. விநாயகரின் உருவங்களிலும் பற்பல வேறுபாடுகளும், வழிபாட்டுச் சடங்குகளிலே பற்பல விதிமுறைகளும் பல்கிப் பெருகின. ஆறு பிரிவுகளைக்கொண்ட இந்து சமயத்தில் 'காணாபத்யம்' என்று ஒரு தனிச் சமயமே உருவாயிற்று.

ஒவ்வொரு நிலைக்கு ஏற்ப ஒவ்வொரு மூர்த்தியை வழிபடுவது என்ற விதியை மேற்கொள்ளாமல் எல்லா நிலைகளுக்கும் எல்லாக் கோரிக்கைகளுக்கும் கணபதியின் வழிபாட்டிலேயே பல உருவ மாறுதல்களையும், கோல வேறுபாடுகளையும், அணிபணிகளையும் இணைத்து வழிபாட்டு விதிமுறைகளையும் அவற்றிற்கு ஏற்ற முறையில் விரிவுபடுத்தி, இத்தனையையும் உள்ளடக்கி 'காணாபத்யம்' என்ற கோட்பாடு, முழுமையும் விநாயகர் வழிபாடாக நிலைபெற்றது.

இந்த மாறுபாடுகளில் முப்பத்திரண்டு உருவ வேறுபாடுகள் தோன்றி வளர்ந்தன. அவை வருமாறு:

1. பால கணபதி
2. தருண கணபதி
3. பக்தி கணபதி
4. வீர கணபதி
5. சக்தி கணபதி
6. துவிஜ கணபதி
7. சித்தி கணபதி
8. உச்சிஷ்ட கணபதி
9. விக்கின கணபதி
10. க்ஷிப்ர கணபதி
11. ஏரம்ப கணபதி
12. லஷ்மி கணபதி

13. மகா கணபதி
14. விஜய கணபதி
15. நிருத்த கணபதி
16. ஊர்த்துவ கணபதி
17. ஏகாக்ஷர கணபதி
18. வர கணபதி
19. திரயாக்ஷர கணபதி
20. க்ஷிப்ர ப்ரசாத கணபதி
21. ஹரித்ரா கணபதி
22. ஏகதந்த கணபதி
23. சிருஷ்டி கணபதி
24. உத்தண்ட கணபதி
25. ரண மோசன கணபதி
26. துண்டி கணபதி
27. துவிமுக கணபதி
28. திரிமுக கணபதி
29. சிங்கமுக கணபதி
30. யோக கணபதி
31. துர்க்கா கணபதி
32. சங்கட ஹர கணபதி

வடமொழி மரபும் தமிழ்மரபும் இணைந்து பல வழிபாடுகள் தோன்றிய காலம் தொடங்கி, காணாபத்ய மதத்திலும் இந்த வேறுபாடுகள் உண்டாயின. விநாயகரை வழிபடுகிற வடமொழி மந்திரங்களிலும் பதினாறு மந்திரங்கள் முக்கிய இடம் பெற்றன. இவ்வாறு பதினாறு பிரிவுகள் தோன்றிய போதிலும், விநாயகரின் வடிவம், ஓம் என்ற, மொழிபேதம் கடந்த அடிப்படை ஒலியின் அதிர்வு வடிவமே என்பதைச் சித்தர்கள் நமக்கு வலியுறுத்திக் கூறுகிறார்கள்.

எல்லா மந்திரங்களினுடைய குறிக்கோளும் ஒலியின் அதிர்வு என்பதே சித்தர் மெய்ஞ்ஞானமாகும்! எனவே, உலக மொழிகள் அனைத்திற்கும் அடிப்படையான ஒலிகளாகிய அ,உ, ம் என்ற மூன்று ஒலிகளாலும் ஒன்றி நிற்கின்ற ஓம் என்ற ஆதார ஒலியே விநாயகர் என்பதை அடிக்கோடிட்டு வரைகிற சித்தர் இலக்கியம், விநாயகர் என்ற மூர்த்தியை உலகப்பொதுக் கடவுளாகவே சொல்லாமல் சொல்லி நிலைநிறுத்துகிறது.

உலக மக்கள் அனைவருக்கும், உலக நாடுகள் அனைத்திற்கும், உலக மொழிகள் அனைத்திற்கும், பொதுவான அகரமும் உகரமும் மகரமும் இணைந்து, இந்த ஓம் என்ற ஒலி அதிர்விலே தோன்றுகின்ற ஒலியாகிய விநாயகரே ஆன்ம நிலையிலே உதிக்கின்ற பேரின்பப் பரம்பொருள் என்னும் மாபெரும் இரகசியத்தைச் சித்தர் இலக்கியம் மெய்ப்பித்துக் கூறுகிறது. இதையே அவ்வையார் தம்முடைய குறளில் விளக்கியிருப்பதோடு, அகவலை மொழிச் சான்றாக இயற்றித் தந்திருக்கிறார் .

இதுவே நாதம் என்ற ஒலியாகவும் , விந்து என்ற ஒளியாகவும், வான மண்டலத்திலே நுண்துகள் அதிர்வாகவும், நுண்ணொளிப் பிழம்பாகவும் யோகிகளின் தியானத்தில் கூடுகிறது. இதற்கு விளக்கம் கூறுகிற பல பெரியோர்கள் அகரம் என்ற ஒலி யோகியினுடைய உள்ளத்தின் எண்ணம் என்றும், உகரம் அவனுடைய யோகச் செயல் என்றும், மகரம் உயிர் ஆற்றல் என்றும் எடுத்து விளக்கியுள்ளார்கள்.

சிவஞானிகள் அதற்கு மேலும் ஒரு விளக்கமாக அகரமாகிய எண்ணத்தைச் சிவன் என்றும், உகரமாகிய செயலைச் சக்தி என்றும், மகரமாகிய பாசத்தை உயிர் என்றும் கூறினார்கள். இக்கருத்தையே ஓங்காரமாகிய ஓம் என்ற ஒலியின் விளக்கமாக,

இறை சத்தி பாசம் எழில்மாயை
ஆவியுற நிற்கும் ஓங்காரத்துள்

என்று 'திருவருட்பயன்' பாடுகிறது.

இதனையே பதஞ்சலி முனிவரும் 'ஓம் என்ற ஒலி உலகின் வித்தே கணபதி' என்று விளக்குகிறார். இந்த ஓங்கார ஒலியையே இந்து சமயத்தினர் 'பிரணவம்' என்று அழைத்து, அந்தப் பிரணவத்தைச் சைவர்கள் சிவம் என்றும், சக்தி என்றும் இணைத்தார்கள்.

வைணவர்கள் பிரணவத்தை விஷ்ணு என்றார்கள். கௌமாரர்களாகிய குமரபக்தர்கள் பிரணவத்தை 'ஸ்கந்தன்' என்றார்கள். சூரிய வழிபாட்டினர் பிரணவத்தைச் சூரியன் என்றார்கள். புற மதத்தினரும் ஓம் என்ற ஒலியே முதல் நிலை என்று கொண்டு, பிரணவத்தைப் பற்பல கடவுட் பெயர்களிலே அழைக்கிறார்கள். கிறித்தவர்கள் ஓதுகிற 'ஆமென்' என்பதுவும் இதுவே என்பதும் அறிஞர் வாக்கு.

ஆகவே, உலகப் பொதுக் கடவுள் பிரணவத்தின் வடிவம் என்பதும், உலகெங்கிலும் முதல் ஒலியாக நிற்பது இதுவே என்பதும், உலகப் பெரியோர்கள் அனைவரும் ஒருமித்துக் கூறுகிற மொழியாகும்.

விநாயகரின் வழிபாடும் பூசனை முறையும் விரிவும் தொகையும் கொண்டதாய் இத்தனை பரந்து காணப்படினும் விநாயக மூர்த்தியானவர் தமிழகத்தில் எளிமைக்கும் எளிமையாக, பெண்டுகளும் பிள்ளைகளும் ஆடம்பரச் சடங்குகள் ஏதுமின்றி விரைவோடும் முனைப்போடும் வணங்குகிற தெய்வமாக விளங்குகிறார். ஒரு பிடி சாணத்தை உள்ளங்கையால் உருட்டி அதன் தலையிலே அறுகம் புல்லைச் செருகிவிட்டால், வழிபடுவதற்குரிய விநாயகர் நம்முன் கோயில் கொண்டுவிடுகிறார். பெண்கள் மஞ்சட்பொடியை எடுத்து மூன்று விரல்களினால் பிடித்து வைத்துவிட்டாலும் அங்கே விநாயகர் வந்து அமர்ந்துவிடுகிறார்.

கடவுள் ஒரு புல்லில் இருக்கிறான் **(He is a blade of grass)** என்று ஓர் ஆங்கில ஞானி கூறுகிறான். அவ்வாறு நம்முடைய வீடுகளுக்குள்ளே வந்து அமர்ந்து கொள்கிறார் விநாயகர் .

இத்தனை எளிமையான, உலகெங்கும் விரிந்து பரந்த ஆனைமுகக் கடவுளைச் சித்தர்கள் தமது உலகளாவிய நோக்கிலே, ஒலி வடிவிலே கண்டு துதித்துள்ள மரபை ஒட்டி, சித்தர்களுக்கெல்லாம் சித்தராகிய திருமூலரும் தமது திருமந்திரத்தின் தொடக்கத்தில் ஆனை முகனை அறிவு வடிவிலே கண்டு வணங்கி வழிபடுகிறார்.

ஐந்து கரத்தனை ஆனை முகத்தனை
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை
நந்தி மகன்றனை ஞானக் கொழுந்தினைப்
புந்தியில் வைத்தடி போற்றுகின் றேனே

என்பது திருமந்திர நூலின் முதலாவது வணக்கப்பாடல்.

ஆனையின் நான்கு கால்களே விநாயகருக்கு நான்கு கைகள் ஆகின்றன. துதிக்கை ஐந்தாவது கையாகிறது. இளம்பிறைச்

சந்திரனைப்போன்று ( இந்தின் இளம்பிறை. இந்து - சந்திரன் ) தந்தம், எயிறு, ஆனைமுகத்திலே காட்சி தருகிறது. இந்த விநாயகன் நந்தி ஆகிய சிவபெருமானுடைய (நந்தி- சிவன் என்பது சித்தர் மரபு) மைந்தன்; நந்தி மகன். அவன் ஞானயோகிகளுக்கு ஞானக் கொழுந்தாகிய ஒளிப்பிழம்பாகக் காட்சி தருபவன். அந்த ஒளிப்பிழம்பை அறிவுக்கு அறிவான ஆன்ம வடிவிலே வைத்து வணங்குவதே சித்தர்களின் ஞான நன்னெறியின் பூசனை முறையாகும். இதைத்தான்,

புந்தியில் வைத்தடி போற்றுகின் றேனே

என்றார் திருமூலர். ( புந்தி - புத்தி, அறிவு ).

சித்தர் இவ்வாறு ஞான பூசையிலே வழிபடுகிற பிரணவ வடிவமாகிய விநாயகக் கடவுளாகிய ஒளிப்பிழம்பை, சன்மார்க்கம் என்ற நெறிக்கு இசைய அறிவிலே வைத்து, அறிவின் வடிவமாக நிறுத்தி, இதை வணங்கிப் பாடினார் திருமூலர்.

இதையே தோத்திர முறையிலிருந்து பாடுகிற அவ்வையார் பிறிதோர் இடத்திலே, பெண்டுகளும் குழந்தைகளும் மனித சமுதாயமும், இணைந்து ஒருமித்து வழிபடுகிற பொதுமக்களின் குடிமுறை வழிபாட்டு நெறிக்கு இசையக் கீழ்கண்டவாறு பாடுகிறார்; எல்லாருக்கும் நன்கு தெரிந்த ஓர் எளிய வெண்பா.

பாலும் தெளிதேனும் பாகும் பருப்புமிவை
நாலும் கலந்துனக்கு நான் தருவேன் - கோலஞ்செய்
துங்கக் கரிமுகத்துத் தூமணியே நீயெனக்குச்
சங்கத் தமிழ் மூன்றும் தா.

இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழையும் தரவல்ல மூர்த்தியே விநாயகர். முத்தமிழும் ஒலி வடிவானது. அந்த ஒலிவடிவின் ஆதாரமே அகர உகர மகரங்களாகிய ஒலிச்சேர்க்கையான ஓம் என்ற அடிப்படை ஒலியாகும். அந்த ஒலியின் வடிவே விநாயகர். எனவே, ஒலியின் விரிவுகளாகிய முத்தமிழையும் தரவல்லவன் அவனே ஆகிறான். ஆகையால் ஒளி பெறுவதற்கு ஒலியை வணங்குகிறது அவ்வையின் தமிழ்.

பூசனை முறையிலே வணங்குவதால் நிவேதனமாகிய படையலை முன்வைக்க வேண்டும் அல்லவா! அந்த முறையிலே நான்கைக் கொடுத்துவிட்டு மூன்றைக் கேட்கிறார் அவ்வையார். பாலும், தேனும், வெல்லப் பாகும், பருப்பும் ஆகிய நான்கை உனக்கு நான் தருகிறேன். எனக்கு நீ மூன்று தமிழைக்கொடு என்று மிக எளிய முறை யிலே வருகிறது அவ்வையாரின் வரம் வேண்டல்.

அவ்வையினுடைய பண்பாட்டின் அடிப்படையே மூன்று தமிழையும் வரமாக வேண்டுகிற கோரிக்கைதான். இந்தப் பொதுமக்களின் புலவராகிய அவ்வையாருக்கு இலக்கிய வரங்களை விநாயகன் ஈந்தான் என்ற அடிப்படையை மனத்தில் நாம் நன்கு பதிய வைத்துக்கொண்டு, விநாயகர்அகவலை அணுகவேண்டும். பாலும் தேனும் பாகும் பருப்பும் தந்து, எந்த மூர்த்தியிடம் அவ்வையார் வரம் கேட்

டாரோ, அதே மூர்த்திக்கு, ஒரு தனி நூல் செய்து, தமது குறட்பாவிலே பாடம் நடத்திய அத்தனை ஞான உண்மைகளையும் சேர்த்துப் பொதிந்து வைத்து, ஒரு தோத்திர நூலாக அவர் வடித்துத் தந்து, எல்லாப் பொதுமக்களும் எல்லாக் காலத்திலும் எளிய வழிமுறையிலே வணங்கி ஓதக்கூடிய யாப்பிலே, இரகசியங்களையும் கோரிக்கைகளையும் அவர் தமது கவிப் பின்னலாக நெய்து கொடுத்தார். இந்த மொழி நெசவே தோத்திர நூலாக விளங்குகிற விநாயகர் அகவல்.

கவிதைக்குக் கவிதையாகவும், இசைப் பாடலுக்கு இசைப் பாடலாகவும், மந்திரத்திற்கு மந்திரமாகவும் விளங்குவதோடு மக்கள் சமுதாயத்தை உய்விக்கத் தோன்றிய ஓர் அரிய தோத்திர நூலாக இது ஒளிவீசுவதால், சித்தர்களும் பக்தர்களும், ஞானிகளும் மோனிகளும், யோகிகளும் போகிகளும், புரவலரும் இரவலரும், மேதைகளும் பேதைகளும் அனைவரும் ஆராதிக்கின்ற ஒரு பெருமை, இந்த நூலுக்கு இருப்பதால் சித்தர்கள் தமது இலக்கியத்திலே அவ்வையின் அகவலை மனித மனத்தின் மேம்பாட்டுக்குரிய ஒரு வழிப்பாட்டு நூலாக எடுத்தாண்டார்கள்.

## 5. விநாயகர் உருவின் தத்துவம்

விநாயகர் அகவலைப் புரிந்துகொள்வதற்கு முன், விநாயகர் உருவததில் பொதிந்துள்ள தத்துவங்களை ஆராய்ந்து பார்த்துக் கொள்வது பயனுடையதாகும். ஏனென்றால் அவ்வையார் தமது அகவலிலே ஞானப் பேருண்மைகளை எடுத்துக் கூறும்பொழுது, விநாயகர் உருவத்தை உறுப்பு உறுப்பாக அலகு பிரித்து அந்த நுட்பங்களை உருவக மொழிகளிலே கூறுகிறார். எனவே விநாயகரின் அங்கங்களிலே முக்கியமானவற்றின் ஞான உட்பொருளை உணர்ந்து கொள்வது அவசியமாகும்.

இறைவனுடைய உருவங்களிலே எல்லா வடிவங்களுக்கும் பொதுவாக உள்ளது திருவடியின் தத்துவமாகும். திருவடிஞானம் என்றே இதனைப் பாடுகிறார் திருமூலர். நாடுகின்ற அடியார்களின் அல்லல்களை நீக்குவதற்குத் தக்க புகலிடமாக விளங்குவது இறைவனுடைய திருவடியே ஆகும். இதனால்தான் திருவடியை நாடுதல் என்றும், திருவடியில் நம்மை ஒப்புவித்தல் என்றும் பக்தி நூல்கள் ஒரு மரபை நமக்கு உணர்த்துகின்றன. **'Grace'** என்று ஆங்கில ஞான நூல்கள் உணர்த்துகின்ற திருவருளுக்கு நிலையமாக விளங்குவது இறைவனுடைய திருவடியே ஆகும்.

விநாயகர் உருவத்தில் இந்தத் திருவடிக்கு வேறொரு சிறப்பைச் சித்தர்கள் கூறுகிறார்கள். குமரகுருபர சுவாமிகள் ஞானத்தின் உருவமாக இறைவனைக் கண்டு பாடும்பொழுது 'ஞானம் திருவடியா' என்றே பாடுகிறார். ஞானத்தின் உருவமாக அமைந்த விநாயகருக்கு ஞானமே திருவடியாகிறது. ஞான முறையிலே பூசனை செய்கின்ற சித்தர்கள் மரபிலே, ஞானமே திருவருளாகவும், திருவருளே ஞானமாகவும் கூடு விட்டு கூடு பாய்வதால் விநாயகரின் திருவுருவிற்கு ஞானத்தின் சின்னமாக விளங்குவது திருவடியாகும்.

விநாயகரின் முக்கிய உறுப்புகளிலே நம் கண்முன் முதன்மையாகத் தோன்றுவது அவருடைய பெருவயிறாகும். எல்லாவற்றையும் தன்னுள் அடக்குவதும், தன்னுள் எல்லாம் அடங்குவதுமாக விளங்குகின்ற பரம்பொருள் நிலையை, அந்த மாபெரும் விசுவரூப நிலையைப் பெருவயிறு உருவகிக்கிறது.

விநாயகருக்கு ஐந்து கரங்கள். கரங்கள் என்பன செயலின் உருவகம். அவருடைய கரத்திலே இருக்கும் பாசம் மனிதர்களின் பிறவிக்குக் காரணமாகிய பற்றுள்ளத்தைக் குறிக்கிறது. அதாவது பிறவிக்குக் காரணமாகி அதனைப் பிணித்து நிற்கிறது. இந்தப் பிணிப்பே பிறவிக்குத் தோற்றுவாய். ஆகவே அவருடைய பாசம் விளங்கும் கரமானது படைப்புத் தொழிலை குறிக்கிறது.

இன்னொரு கரத்திலே அங்குசத்தைக் காண்கிறோம். அங்குசமானது அழிக்கும் கருவி. ஆகையால் அங்குசம் ஏந்திய விநாயகரின் கரம் இறைவனுடைய அழிக்கும் தொழிலை உருவகிக்கிறது.

இன்னொரு கரம் 'அபயகரம்' என்னும் அமைந்த கரமாகும். இது தன்னை நாடி வருகின்ற தொண்டனை 'அஞ்சேல்' என்ற புகல் தருகிறது. பிறவியின் வினைச்சுழலிலே சிக்குண்டு தவிக்கும் பிறவிக்கு இந்தக் கரம் அஞ்சாமையை உணர்த்துகின்றது. ஆதலால் இதுவே 'திதி' ஆகி வல்லமையை உணர்த்துகிறது.

வரதமும் மோதகம் ஏந்தியதுமாகிய இன்னொரு கரம், கீழ்நோக்கி இருப்பது சிறந்த ஞானக் குறியாகும். வினைத் துயருக்கு அஞ்சித்தஞ்சம் புகுந்த உயிரின் குறிக்கோள் திருவடியாகிய முக்திப்பேறு என்பதை இது குறிக்கிறது. பிறவித் துயருக்கு அஞ்சி வந்த உயிர் அதன் பக்குவத்திற்கு ஏற்ப அடைகின்ற திருவருளை வரதகரம் உணர்த்துகிறது. மோதகத்தை ஏந்திய கரம், வரத கரத்தையும் அடுத்து, சுட்டாமல் சுட்டிக் காட்டுவதன் குறிப்பு, திரோதானமாகிய மறைப்புத் தொழிலை உணர்த்துவதாகப் பெரியோர்கள் கூறியுள்ளார்கள்.

ஐந்து கரங்களில் மிகவும் முக்கியமானது தும்பிக்கை என்பது வெளிப்படையாகும். யானையின் உருவத்திலேயே உயர்தனிச்சிறப்பு அதன் தும்பிக்கையே ஆகும். வேறு எந்த விலங்குக்கும் அல்லது மனிதப் பிறவிக்கும் இல்லாத ஓர் இயல்பு தும்பிக்கைக்கு உள்ளது. அது என்னவென்றால் கையே மூக்காக அமைந்த பண்பாகும். அதனோடு கூட இந்தத் துதிக்கையானது நிலம் வரை தொடுகின்ற அளவு நீளமுடையதாகவும், வெளி மண்டலத்தில் சென்று நீட்டும் அளவுக்கு உயரக்கூடியதாகவும் அமைந்திருக்கிறது. அதனோடு எப்பொழுதும் காற்று இழைந்துகொண்டு இருப்பதாகவும் இது அமைந்திருக்கிறது. இக்காரணம் பற்றியே யோகிகள் தங்களுடைய காற்றுப் பயிற்சியை உள்ளடக்கி, வானமும் பூமியும் தொடுகின்ற சரஞானத்திற்குத் தும்பிக்கையை உருவகமாக எடுத்துப் பேசுகிறார்கள். ஆகையினால் விநாயகருடைய திருவுருவத்தில் யோகிகளுக்குத் தும்பிக்கை மிகமிக முக்கியமான ஞான உறுப்பாக அமைந்துவிளங்குகிறது. பல சரநூல்கள் இவ்வுண்மையை வலியுறுத்துகின்றன.

விநாயகருடைய கொம்புகளிலே ஒடிந்த கொம்பு அபர ஞானமாகிய விந்துவையும், மற்ற ஒற்றைக் கொம்பு நிலையான பரம்பொருளை உணர்வதற்கு உரிய சாதனமாகிய பரஞானத்தையும் உருவகப்படுத்துகின்றன. சில பெரியோர்கள் இந்த இரண்டு கொம்புகளையும் பதிஞானம், பாசஞானம் என்றும் கூறுகின்றார்கள். பாசஞானம் வலது கொம்பாகிய ஒடிந்த கொம்பு.

விநாயகருடைய அகன்ற செவிகள் இரண்டும் பிறவியின் வினை வெம்மையை அணுகவிடாமல் காக்கின்ற அருட்காற்றை வீசுகிற விசிறிகளாம். இந்த அகன்ற செவிகள் எல்லாவற்றையும் அறியும் பேரறிவை உணர்த்தி, வினை வெம்மையைத் தணிக்கின்ற ஞானப் பெருஞ்சாதனங்கள் என்று சித்தர் இலக்கியம் பேசுகின்றது.

விநாயகருடைய மூன்று கண்கள் சூரியன், சந்திரன், அக்கினி ஆகிய மூன்றுமாம்.

யானையின் உருவம் பெரிதாக இருப்பினும் அதன் கண்கள் மிகச் சிறியனவாக அமைந்திருப்பதன் நுட்பம் சிந்தித்தற்கு உரியது. பெரிய உறுப்புகள் பருப் பொருளையும், சிறிய உறுப்புக்கள் நுண் பொருளையும் குறிப்பது சித்தர் ஞானத்தின் அடிப்படையான உருவக உத்தியாகும். இந்த முறையிலே சிறிய கண்கள் நுட்பமான ஞான ஆற்றலை உணர்த்துகின்றன என்பதைத் தேர்ந்துகொள்ளவேண்டும்.

விநாயகருடைய உருவத்திலே, உந்தியிலும், மார்பிலும், கழுத்திலும், நெற்றியிலும், உச்சியிலும் பாம்பு படம் விரித்து நிற்பது, குண்டலினி அந்தந்த நிலைகளிலே இயங்குகின்ற உண்மையை நுட்பமாக உணர்த்துகிறது.

இனி, விநாயகர் எலிவகையில் ஒன்றான மூஞ்சூறு என்னும் நொய்ம்மையான பிறவியின் மேல் அமர்ந்திருப்பதன் நுட்பம் மிகவும் சிறப்பானதாகும். இவ்வளவு பெரிய உருவம் இவ்வளவு சிறிய உருவத்தின் மேல் எப்படி அமர்வது, எப்படி நகர்வது என்பவற்றைச் சிந்திக்கவேண்டும். சித்தர்கள் விநாயகரை ஞான ஆற்றலின் உருவமாக வழிபடுவதன் மரபுக்கு இதுவே ஆதாரமாகும். ஞான ஆற்றல் என்பது பருப்பொருளைப் போன்று எடையுள்ள பொருள் அன்று. எண்ணங்களும் கருத்துக்களும், சிறிய கம்பியிலே இவர்ந்து செல்கிற மின்சார ஆற்றலைப் போன்றவை யாகும். இன்னும் நுட்பமாகச் சொல்வதென்றால் மின்சாரத்தைப்போன்று சிறிய கம்பி கூட அதற்குத தேவையில்லை. ஒலி,ஒளி ஆகிய இரண்டு ஆற்றல்களுக்குமே கம்பி இருந்தும் இல்லாமலுங்கூட இயங்குகின்ற தன்மை இருப்பதைக் காண்கிறோம்.

வானொலி என்ற ஒலிப்பெட்டி, பிடித்து வாங்கிக் கொள்கிற ஒலி அலைகள் கம்பியிலிருந்து புறப்பட்டு, பின்னர் கம்பியில்லாத வான்துகளிலே பரவுகின்றன. தொலைக்காட்சி என்னும் ஒளி ஆற்றலும் இவ்வாறே நொய்ம்மையான முறையில் இவர்வதை இன்று காண்கிறோம். கனம் அல்லது எடை என்பதே இல்லாத மிகவும் நொய்ம்மையான ஒலி ஆற்றல், ஒளி ஆற்றல் ஆகிய இரண்டையும் விட மேலும்

நொய்ம்மையானது எண்ணத்தின் ஆற்றல். அதையும்விட நொய்ம்மையும் நுட்பமும் வாய்ந்தது ஆன்ம ஆற்றல். இந்த ஆற்றலின் வடிவமான விநாயகர் மூஞ்சூற்றையே தமது வாகனமாகக் கொண்டு காட்சி தருகிறார்.

சித்தர்கள் ஒலிமுறை, ஒளிமுறை என்று இரண்டு ஞான முறைகளிலே தமது ஞான வழிபாட்டை இயற்றுகிறவர்கள் என்பது முதலாவது பகுதியிலே விரிவாகவே விளக்கப்பெற்றது. இந்த இரண்டு வழிபாடுகளையும் விநாயகருடைய திருமுகம் நன்கு உணர்த்துகிறது.

ஒலி, ஒளி ஆகிய இரண்டுக்கும் கருவிகளாக அமைவன கண்ணும் நாசியுமாம். இந்த இரண்டையும் உணர்த்துகின்ற யானையின் முகமானது, நுட்பமான சிறிய கண்களையும் நீண்டு தொங்குகின்ற நாசியையும் தாங்கி நிற்கிறது. இதனால்தான் திருமூலர் விநாயகரை விரும்பி வணங்கும்பொழுது, அவரை ஞானக்கொழுந்து என்று அழைத்துப் பாடுகிறார். அந்த ஞானக்கொழுந்தை ஞானத்திற்கு இருப்பிடமாகிய அறிவிலே வைத்து வணங்குவதாகத் திருமூலர் தமது நூலைத் தொடங்குவதும் இது பற்றியே!

இத்தனை நுட்பங்களையும் தன்னுள் அடக்கி, அந்த நுட்பங்களின் தத்துவங்கள் அனைத்தையும் தாங்கிய விநாயகராகிய ஞான வடிவுக்கு அகவலாகிய செய்யுள் வடிவைத் தருகிறார் அவ்வையார்.

ஆம்; விநாயகர் என்ற மூர்த்தியின் வடிவம் சித்தர்களின் ஒளி முறையில் அமைந்த வழிபாட்டுக்குரிய காட்சிப் பொருளாகும். இந்தக் காட்சிப் பொருளுக்கு ஒலியினாலாகிய வடிவம் தந்து அமைத்திருப்பதே விநாயகர் அகவல் என்ற நூலாகும். ஒளி ஒலியைத் தருவதும், ஒலி ஒளியைத் தருவதும் சித்தர்களுடைய ஒளி வழிபாடு, ஒலி வழிபாடு இரண்டுக்கும் உள்ள நுட்பமான ஒருமைப்பாடாகும். எனவே, அவ்வையார் அருளிய விநாயகர் அகவல் ஒலி வடிவிலே ஒளியைத் தருவதும், ஒளிவடிவை மனக்கண் முன் நிறுத்தி ஒலியைத் தருவதுமாகிய ஞான சாதனமாகும்.

அவ்வையின் அகவல் தோன்றியது விநாயகராகிய ஒளிவடிவை நோக்கி. அந்த அகவல் வெளிவந்துள்ள அமைப்பு, மொழி ஆகிய ஒலி வடிவு. இந்த ஒலிவடிவானது ஒளிவஃடிவை நோக்கித் தோன்றி, அதனை ஓதுவாருக்கு ஒலியின் அதிர்வினால் ஒளிவடிவின் அனுபவத்தையும் ஒலி ஆற்றலின் அனுபவத்தையும் ஒருங்கே தருகிறது. தொலைக்காட்சியிலே ஒளியும் ஒலியும் இணைந்து இயங்குவது போல், அவ்வையாரின் விநாயகர் அகவலும் ஒளிக்கும் ஒலிக்கும் நிலையமாக அமைந்துள்ளது. அதனால்தான் விநாயகர் அகவல் எல்லா நிலையிலுள்ள மக்களுக்கும் ஒருங்கே பயன்தரக்கூடிய வழிபாட்டு நூலாக விளங்கி வருகிறது. அதை ஒரு பக்தி நூல் என்றும் அழைக்கலாம், ஒரு ஞான நூல் என்றும் அழைக்கலாம்; பயன்தருகின்ற முறையிலே அதை நோக்கினால் அதை ஓர்அரிய சித்தர் இலக்கியம் என்றே அழைக்க வேண்டும் . தொண்டுநெறி, நன்மகவு நெறி, தோழமை நெறி, செந்நெறி ஆகிய நான்கு துறைகளிலும் வீசிப் படர்கின்ற பேராற்ற

லுடன் இந்த நூல் அமைந்துள்ளதே இந்த நுட்பத்திற்குச் சான்றாகவும் பயனாகவும் விளங்குகின்றது.

இத்தகைய நூலின் விளக்கத்தை இனி விரிவான உரையுடன் ஆராய்வோம்.

## நூல் விளக்கம்

சீதக் களபச் செந்தா மரைப்பூம்
பாதச் சிலம்பு பலஇசை பாட

திருவடியைச் செந்தாமரை என்று அழைப்பது ஓர் உயர்ந்த தமிழ் மரபாகும்.

மலர் என்னும் தமிழ்ச் சொல்லுக்கே தாமரை என்பது சிறப்புப் பொருளாகும். 'மலராவது தாமரையே' என்பது பெரியோர் வாக்கு. எனவே இறைவனுடைய திருவடியைத் திருவடித் தாமரை என்றும், தாமரைத் திருவடி என்றும் தமிழர் வணங்கினார்கள். வடமொழியிலும் 'பாத பங்கஜம்', 'பாத கமலம்' என்பது மரபாகும்.

தாமரை சேற்றிலே மலர்வது. சேற்றில் மலர்ந்தாலும் செம்மலராகப் பூப்பது. இம்மலரின் செம்மைசால் சிறப்பாகும். இதுவே வெண்டாமரையாகும்போது தூய்மையின் சின்னமான வெண்மையாக மலர்கிறது.

அழுக்கிலிருந்து அழகும், அள்ளலிருந்து தூய்மையும் பிறக்கின்றன என்பது தத்துவம். கருத்து என்னவென்றால் எல்லா அழகும் அழகின்மையிலிருந்து உதித்து, மேலெழுந்து நிற்கிற ஒரு தத்துவம் ஆகும்.

உயிர் உதிப்பதுமே இவ்வாறுதான். ஒரு குழந்தை அழகான வடிவம் கொண்டு எங்கிருந்து உருவாகி வெளிவருகிறது என்பதை ஆழ்ந்து சிந்தித்துப் பார்த்தோமானால் இந்தத் தத்துவம் நமக்குப் புரியும். அதனோடுகூடச் சேற்றுத் தண்ணீரில் முளைத்தெழுகின்ற தாமரையானது, சேற்றுத் தண்ணீரின் மயமாகிவிடுவில்லை. சகதி தண்ணீரிலே கரையும். அதைத் தண்ணீரிலிருந்து மீண்டும் கழுவ முடியாது. ஆனால் ஒரு தாமரையின் இதழிலே சேறானது இரண்டறக்கலக்க முடியாது. இன்னும் சொல்லப்போனால் தாமரை இதழானது தண்ணீரிலே கரைகின்ற உப்பைப் போன்றது இல்லை. அது தண்ணீரிலே முளைத்தெழுந்தாலும் தண்ணீரோடு ஒட்டியும், ஒட்டாமலே நிற்கிறது. பரம் பொருளின் தன்மையும் இதுவேயாம்.

பாரிலே முளைத்து நிற்கிற பரம்பொருளானது பாரினோடு ஒட்டியும் ஒட்டாமலும் நிற்கிற இந்தத் தன்மையை, தாமரை மலரோடு ஒப்பிட்டே சிவவாக்கியர் போன்ற சித்தர்கள் பாடியுள்ளார்கள். இவ்வாறுதான் தாமரை இலையும் கூட நிற்கிறது. தண்ணீர்த்துளி அதன்மீது உருளுமே தவிர உட்கலக்காது. ஒட்டாமலே உருண்டு பிறழ்கிறது. இதுவே அதனுடைய தூய்மையின் இலக்கணம்.

அழுக்கில் பிறந்து, அழுக்கில் வளர்ந்தாலும், அழுக்கு அதைத் தொடுவதில்லை. பாரிலே கலந்து நிற்கும் பரம்பொருளும் இவ்வாறு தாமரை இலைத் தண்ணீராகவே நிற்கிறது.

இனி, இந்த மலரின் அழகு எத்தன்மையது? சேற்றிலே மலர்ந்த இத்தாமரையைச் சுற்றிப் பாசி படர்ந்திருக்கிறது. பாசிக்கு நடுவிலே நின்ற போதிலும் இம்மலர் ஒப்பற்ற எழிலோடு பூத்து நிற்கிறது. இதனை வடமொழிக் கவிஞன் காளிதாசன், 'சரசிஜம் சைவலேனாபி ரம்யம்' என்று பாடுகிறான். பாசி சூழ்ந்திருப்பினும் தாமரை அழகோடு மிளிர்கிறது. இவ்வாறே வினைச் சுழல்களுக்கு நடுவிலே இறைவனுடைய கருணை மலர்ந்து நிற்கிறது. அழகு என்பது அதனுடைய மாண்பு. தூய்மை என்பது அதனுடைய சிறப்பு. இந்த மாண்பையும் சிறப்பையும் நாடுவது அடியார்களின் புகல் நாட்டமாகும்.

இத்தனை காரணங்களாலும் கருணைமிக்க தெய்த்திருவடியைச் செந்தாமரை என்று அழைக்கும் மரபு தோன்றி வளர்ந்தது. இதனையே 'செந்தாமரைப் பூம்பாதம்' என்கிறார் அவ்வையார்.

சீதம் என்பது குளிர்ச்சி அல்லது தன்மை. இதுவே வடமொழியில் தயை என அழைக்கப் பெறுகிறது. இறைவன் உயிர்கள்மாட்டுச் செலுத்தும் பெருங்கருணையை வியந்து பாடுகின்ற சித்தர்கள், இறைவன் திருவடியைக் குளிர்தாமரை என்றும் என்றும், சீதத் திருவடி என்றும் சொல்வது இதுகாரணம் பற்றியே ஆகும்.

வினை வெம்மைக்குத் தண்மை ஊட்டுகிற இந்தத் திருவடியை, திருவடி நீழல் என்று அழைப்பதும் இதனாலேயேதான். வெயிலுக்கு நிழலைப் போன்று பிறவி வினைக்கு திருவடி தண்மை தருகிறது. அவ்வையாரும்தமது தனிப்பாடல் ஒன்றிலே,

> நிழலருமை வெய்யிலிலே நின்றறிமின் ஈசன்
> கழலருமை வெவ்வினையிற் காண்மின்

என்று பாடுகிறார். திருநாவுக்கரசரும் வீணைக்கும் நிலவுக்கும் தென்றலுக்கும், இளவேனிலுக்கும், பொய்கைக்கும் உவமை கூறி, 'ஈசன் எந்தை இணையடி நீழ' லைப் பாடுகிறார்.

இறைவனுடைய திருவடி பிறவிதோறும் நம்மைத் தொடர்ந்து வருகின்ற தெய்வ ஆற்றலாகும். பிறவிதோறும் நம்மைத் தொடர்கின்ற இந்த நுட்பத்தை வாசனை என்று அழைப்பது சித்தர் மரபு.

> பூவினில் கந்தம் பொருந்திய வாறுபோல்
> சீவனுக் குள்ளே சிவமணம் பூத்தது

என்பது திருமந்திரம்.

இந்தக் கருத்துக்களையெல்லாம் உள் அடக்கியே வாசனை பொருந்திய செந்தாமரைப் பாதம் என்று விநாயகரின் திருவடியை

அழைக்கிறார் அவ்வையார். களபம் என்ற சொல் சந்தனத்துக்கு ஆகி, அது தருகிற நறுமணத்திற்கு ஆகிறது.

'சீதக் களபச் செந்தாமரைப் பூம்பாதம்' என்று சொல்லும் போது, ஆன்மாக்களின் மலங்களுக்குள்ளே, அம் மலங்களை ஒட்டுவதற்குரிய கருணையோடும், தூய்மையோடும், ஆன்மாவைக் கவர்ந்திழுக்கும் எழிலோடும் விளங்குவதும், தண்மையும் வாசனையும் பொருந்தியதும் ஆகிய திருவடிப் பண்புகளைப் பாதத்தாமரைக்கு ஏற்றித் தமது அகவலைத் தொடங்குகிறார் அவ்வையார்.

இறைவன் மேடு பள்ளங்களில் விழுந்து தத்தளிக்கும் உயிர்களைக் காக்கும் பொருட்டு, தனது கருணையின் அழைப்பே இடையீடின்றி ஒலித்துக்கொண்டே இருக்கிறான். அந்த அழைப்பிலிருந்து நாம் காதுகளைப் பொத்திக் கொள்கிறோம். இதுவே வெவ்வினையின் தீச்செயல் என்றாலும் கருணாமூர்த்தியின் ஒலி நில்லாது ஒலித்துக் கொண்டே உள்ளது.

'என் பாதத்தில் உன்னை ஒப்படைத்துவிடு' என்று கீதையிலே பகவான் எத்தனையோ முறைகளில் மீண்டும் மீண்டும் உறுதி சொல்கிறான் அல்லவா! இதைத்தான் இறைவனுடைய கருணை ஒலி என்கிறோம். இந்தக் கருணையானது வெள்ளம் போன்று ஓடுகிறது. அதைத் துய்ப்பதற்குச் 'சேரவாரும் செகத்தீரே' என்று தாயுமானவர் அழைக்கிறார்.

ஓயாமல் ஒழியாமல் ,திருவடிக்கு அழைத்துக்கொண்டே இருக்கிற இந்தக் கருணையின் ஒலியையே பாதச் சிலம்பின் ஒலி என்று ஞானிகள் உருவகித்தார்கள். கருணைத் திருவடியை வந்தடையுங்கள் என்று அந்தத் திருவடியின் சிலம்பே பற்பல முறைகளிலே நம்மை அழைக்கிறது. இதனைத்தான் பாதச்சிலம்பின் பற்பல இசை ஒலிகள் என்று ஞான மரபு நமக்கு உணர்த்துகிறது. அவ்வையாரும் இதனையே 'பாதச் சிலம்பு பல இசைப் பாட' என்கிறார்.

பொன்னரை ஞாணும் பூந்துகி லாடையும்
வன்ன மருங்கில் வளர்ந்தழ கெறிப்ப

இந்த இரண்டு வரிகள் ஞானயோகப் பயிற்சியில் உள்ள மிகவும் முக்கியமான குண்டலினிப் பயிற்சியை நுட்பமாக விளக்கக்கூடிய விதத்தில் அமைந்துள்ளன.

விநாயக மூர்த்திக்கு அணி பணிகள் பல புனைந்து மகிழ்கின்ற தொண்டர் உலகம், இடுப்பிலே அரைஞாணைச் சுற்றி அமைத்தது ஒரு பெரிய யோக நுட்பமாகும்.

மனிதர்கள் தங்களுடைய குறிக்கோளை இறை வடிவத்திலே ஏற்றி வணங்குவது, வழிபாட்டு முறையின் வரலாற்றிலே பரந்து காணப்படுகிற ஓர் உண்மையாகும். இந்த வரலாற்றின் கண்கொண்டு அரை ஞாணை நாம் நோக்கவேண்டும்.

விநாயகரை மூலாதார கணபதி என்று யோக நூல்கள் அனைத்தும் வழிபடுகின்றன. மூலாதாரம் என்பதே குண்டலினி ஆகிய மூலக்கனலின் தோற்றுவாயாகும்.

நிலத்தின் அடியிலிருந்து தண்ணீர் சுரந்து மேலே வருவதுபோலே மனித உடம்புக்குள்ளிருந்து குண்டலினி என்ற ஆற்றல், மூலாதார நிலையத்திலிருந்து மேலே கிளம்புகிறது. ஞானயோக நூல்கள் அனைத்தும் இந்தக் குண்டலினியின் தோற்றத் தேற்றத்தைப் பல்லாற்றானும் நமக்கு உணர்த்துகின்றன. மூலாதாரத்திலிருந்து எழுகிற கனல், ஆன்ம ஆற்றல்கள் அனைத்திற்கும் வித்தாக அமைந்துள்ளது. குண்டலினி யோகம் என்பதே இந்த மூலாதாரக் கனலை மேல்நோக்கி எழுப்பித் தலையையும், அதன் மேல் உள்ள மண்டலத்தையும் எட்டும்படி செய்து, பிறகு இதை ஏற்றி இறக்கும் உத்திமுறைதான். இந்த ஏற்றி இறக்கும் உத்திக்குக் கருவிக் களனாக உதவுவது மனித உடம்பில் இடுப்பேயாகும்.

குண்டலினி என்னும் ஞானக்கனல் எழுந்து இயங்குவதை நெறிப்படுத்துகிற ஆற்றல் இடுப்பிலும், அதைச் சுற்றிலும் உள்ள தசை இயக்கத்திலும் அடங்கியுள்ளது. அரைஞாண் என்பது இடுப்பைச் சுற்றி இயங்குகின்ற மின்னாற்றலாகிய கொடி வளையமாகும். குண்டலினி ஆற்றல் மேலே எழுவதற்கு, அதை இயக்கும் சக்தியாக இடுப்பின் ஆற்றல் வளையம் அமைகிறது என்பதையே இது குறிக்கிறது.

சிவபெருமானுடைய வடிவக் கோலங்களில், அவனுடைய இடுப்பைச் சுற்றி ஒரு பெரிய பாம்பு படம் எடுத்து வளைந்து நிற்பதைக் காண்கிறோம். இடுப்பே குண்டலினிப் பாம்பு சுற்றியுள்ள இடம் என்பதை இவ்வாறு உருவகித்துக் காட்டினார்கள் நம் முன்னோர்கள்.

விநாயகருடைய வடிவிலே இடுப்பில் அரைஞாணை இறுக்கிக் கொண்டு இருப்பதாகக் காட்டுவதன் நோக்கம், குண்டலினி ஆற்றலினுடைய நிலையை மாற்றுவதற்கு இடுப்பிலே ஓர் ஆற்றல் வளைந்து சென்று இயக்க வேண்டும் என்பதை உணர்த்தவே.

குண்டலினி ஆற்றலின் நிலை மாற்றம் அடைந்தால்தான், 'பிராண மயகோசம்' என்று அழைக்கப்படுகிற 'புரியட்டகம்' என்னும் நுண்ணுடலின் நிலை மாண்புபெறுகிறது. எனவே இந்த நிலை மாற்றத்தை அழுத்தமாக உணர்த்தவே ஞான வடிவமாகிற விநாயகரின் இடுப்பிலே அரைஞாணை இறுக்கிக் காட்டினார்கள்.

இப்படி இறுக்கி இயக்குகிற ஆற்றலுக்கு 'ஆகுஞ்சனம்' என்று சித்தர்கள் இலக்கியம் பெயர் சூட்டியிருக்கிறது. மூலாதார மையத்தில் தசை இறுக்கும் என்னும் உத்தியைக் கையாண்டு, இடுப்பைச் சுற்றித் தசை ஈர்ப்பை ஒரு குறிப்பிட்ட முறையிலே வளைத்து இயக்கினால், குண்டலினி என்ற மூலக்கனல் மேலே கிளம்பத் தொடங்கும். இந்த உத்திமுறையை மாணவன் ஞானகுருவின் முன்னிலையில் நேர்முகமாகப் பயிலவேண்டும். வெறும் ஏட்டுப் படிப்பை வைத்துக்கொண்டு இதைச் செய்ய முயலுவது ஆபத்துகளுக்கு இடந்தரும்.

குருவினால் உணர்த்திக் காட்டக்கூடிய இந்த 'ஆகுஞ்சனம்' என்ற பயிற்சியே, அரைஞாண் என்ற குழூஉக்குறியால் உணர்த்தப்பெறுகிறது. 'இடுப்பை இயக்கு, குண்டலினி எழும்' என்பது மூலக்கனற் பயிற்சியின் தொடக்கப் பாடமாகும். சுற்றி வளைத்துள்ள பாம்பு படம் எடுக்க வேண்டுமானால், இந்த வளையாற்றலின் இயக்கம் அதற்குரிய உத்தி முறையிலே நடைபெற வேண்டும். இவ்வாறு நடைபெற்று 'ஆகுஞ்சனம்' என்ற பயிற்சி முறையினால் 'புரியகட்டகத்தின்' ஆற்றல்மாறி இயங்கத் தொடங்கினால், மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை என்னும் ஆறு ஆன்ம நுண் நிலையங்களும் ஒரு குறிப்பிட்ட முறையிலே செயலாற்றத் தொடங்குகின்றன.

இவ்வாறு அரைஞாண் என்னும் உத்திமுறையானது இடுப்பை வைத்துக்கொண்டு இயங்குமேயானால், நமது உடம்பைச் சுற்றிப் பருவுடலைப் போர்த்து நிற்கும் மேலாடையாகிய ஒளி உடம்பு, ஒளி மிகுந்து கதிர்வீசத் தொடங்குகிறது.

ஞானப் பயிற்சியில் முன்னேற முன்னேற மாணவர்களின் முகத்திலே ஒளித்திகழத் தொடங்குவதை நாம் காண முடியும். சாதாரணமாக அறிவு நிரம்பிய பெரியோர்களுடைய முகத்திலே 'தேஜஸ்' என்றும் 'காந்தி' என்றும், 'அறிவுக்கனல்' என்றும் 'களை' என்றும், பல பெயர்களிலே நாம் அழைக்கின்ற ஓர் ஒளியானது கதிர்வீசுவதைக் காண்கிறோம் அல்லவா! நூலறிவும் கலையறிவுமே இத்தகைய ஒளியை முகத்திலே வீசக் கூடுமானால், பேரறிவின் ஆன்ம ஆற்றல் எழுந்து ஓங்குகின்ற ஒரு ஞானியின் நுண் உடலிலே ஒளியானது ஒப்பற்ற சுடர்ப்புடன் பொலிவது விந்தையாகுமா?

தங்க அரைஞாண் இந்த ஞான ஆற்றலின் இயக்கச் சுழலையும், பொன் என்பது அதனுடைய மின்னாற்றலையும், பூந்துகில் ஆடை என்பது பருவுடலைச் சுற்றி நிற்கும் நுண் உடலையும், அழகு எரித்தல் என்பது ஒளியின் கதிர்கள் எழுந்து வீசுவதையும் குறிக்கின்றன.

'வண்ண மருங்கில் வளர்ந்து' என்ற தொடர் இந்த உடம்பின் மருங்கில் ஒளியுடல் முழுப்பொலிவோடு திகழ்கிறது என்பதைக் குறிக்கிறது.

விநாயகருடைய வடிவம் என்பதே வடமொழியில் 'ஆத்ம ஸ்வரூபம்' என்று கூறப்பெறுகிற பேரறிவுடலாகும். இந்த அறிவு மயமான உடலிலே மூலாதாரக் கனலை இயக்குகின்ற மண்டல வட்டமே தங்கத்தால் ஆகிய அரைஞாண் ஆகும். இந்த உடலை இதன் மருங்கில் இருக்கும் ஒளி உடல் ஆளுகிறது. அந்த ஒளி உடல் பூந்துகில் ஆடைபோன்று பரவுகடலின் மீது மருங்கு சுற்றி அமைந்திருக்கிறது. மூலக்கனல் அதனுடைய இயக்கத்திலே மாற்றம் அடைந்து தொழிற்படும்போது, ஒளி உடலிலே பொலிவு முழுமை பெற்று அதன் ஆற்றலிலே ஏறிப் பாய்கிறது. அப்போது அந்த அறிவுமயமான நுண் உடலில் ஒளித்துகள்கள் வெளியே தெறிக்கிறன்றன. அந்தத்தெறிக்கும் நிலையை அழகு எரிக்கும் நிலை என்று செய்யுள் பாடுகின்றது.

இன்றைய விஞ்ஞானிகள், இன்றைய நுண்கருவிகளைக் கொண்டு, இக்காலத்து அறிவியல் முறையிலே ஒளி உடலின் ஆற்றலை ஆராய்ந்து

வருகிறார்கள். அண்மையில் நமது தமிழகத்தை சேர்ந்த ஒரு மருத்துவ நிபுணர், மனித உடம்பின் மருங்கிலே மன்னி நிற்கிற ஒளி உடலைப் படம்பிடித்து ஆராய்வதற்குரிய ஒரு பெரிய விஞ்ஞான உத்தியை நவீன முறையிலே வளர்த்துள்ளார். இந்த முறையின் படி மனிதனுடைய பரு உடலுக்குக்கேடு வருவதற்கு முன்பே, ஒளிஉடலில் அதன் அறிகுறியைக் கண்டுபிடித்துவிடலாம் என்ற தமது ஆராய்ச்சியை வெளியிட்டிருக்கிறார். அதாவது பரு உடலை ஆராய்ந்தோமானால் அதை ஏற்கனவே பீடித்துள்ள நோயைத்தான் கண்டுபிடிக்க முடியும். உடம்புக்குள்ளே புகுந்துள்ள திருடனைக் கண்டுபிடிப்பது போல, எக்ஸ்ரே போன்ற நுண்ணொளிக் கருவிகள் மூலம் கண்டு பிடிக்கிறோம். ஆனால்இந்தஉடம்புக்குள்ளே வருவதற்கு முனைந்து நிற்கிற, இன்னும் புகவில்லை, ஆனால் புகுவதற்கு முனைந்து நிற்கிற, நோயாகிய திருடனை ஒளிஉடல் நமக்கு முன்கூட்டியே காட்டிவிடுகிறது.

மிகப்பெரிய நோய்கள் ஒரு மனித உடம்பை அணுக முனைகின்றன என்பதை, அவை அணுகுவதற்கு முன்பே கண்டுபிடிக்க வேண்டுமானால், ஒளிஉடலைத்தான் படம் எடுக்க வேண்டும்; பருஉடலின் எக்ஸ்ரே படம் முன்னெச்சரிக்கையை அறிவிப்பது இல்லை. இதுவே அண்மைக் காலத்து மாபெரும் கண்டுபிடிப்பாகும்.

இதிலிருந்து என்ன தெரிகிறது என்றால், ஒளி உடலானது பொலிவைக் கதிர் வீச்சுகளாகத் தெறிக்க அல்லது எரிக்கத் தொடங்கி விட்டால், அந்த ஒளி உடம்பிற்குரிய பரு உடம்பானது பேரறிவின் மயமான தூய புரியட்டகமாக மாறிவிட்டது என்பதே!

சாதாரண மனித உடம்புக்கே இந்த விதி பொருந்துமானால், இன்னும் எத்தனை மடங்கு பெரிதாக இந்த உண்மை இறைவடிவுக்குப் பொருந்தும் என்பதைச் சிந்தித்துப் பார்க்கவேண்டும். அதைத்தான் 'பொன் அரை ஞாணும் பூந்துகில் ஆடையும்' வளர்ந்து அழகை எரிப்பதாக அவ்வையார் பாடுகின்றார்.

## பேழை வயிறும் பெரும்பாரக் கோடும்

பேழை வயிறு என்பது உலகனைத்தையும் தன்னுள் அடக்கிய பரம்பொருள் நிலையைக் காட்டுகிறது.

அண்டங்கள் அனைத்தும் ஆண்டவனுக்குள்ளும், ஆண்டவன் அண்டங்களுக்குள்ளும் அமைந்து நிற்பதுதான் பரம்பொருளின் தத்துவ நிலையாகும். பேரறிஞர் ராஜாஜி 'கடவுள்' என்ற தமிழ்ச் சொல்லுக்கு ஈடாக இறைவனைப் பற்றிய சொல் வேறு எந்த மொழியிலும் இத்தனை அழகோடு கிடையாது என்று அழுத்தமாக அடிக்கடி கூறுவதுண்டு. அண்டங்களைக் கடந்து நிற்கும் நிலையையும், அண்டங்களுக்குள் அடங்கி நிற்கும் நிலையயையும் ஒரு சேர உணர்த்தக்கூடிய ஒப்பற்ற ஒரு சொல் 'கடவுள்' என்ற சொல் ஒன்றுதான்; இத்தனை அழகிய சொல்லை, இத்தனை விரிந்து பரந்து பொருள் தருகிற சொல்லைத் தமிழைத் தவிர வேறு எந்த மொழியிலும் தான் அறிந்த வரை கண்டதே இல்லை என்று அவர் வியந்து வியந்து சொல்வது

இந்த இடத்தில் எனக்கு நினைவு வருகிறது. 'கடவுள்' என்ற இந்த அழகிய சொல்லுக்குரிய உருவகமே பேழை வயிறு!.

'பெரும்பாரக் கோடு' என்பது ஞான உடம்பிலே யோகப் பயிற்சியில் செய்யப்படுகிற ஓர் இரகசிய உத்தியை உணர்த்துகிறது என்ற சிவயோகி இரத்தினசபாபதியார் தமது உரையிலே வற்புறுத்திக் கூறுகிறார். அவருடைய விளக்க உரை வருமாறு:

"பல்லிலேதான் ருத்திரக் கிரந்தி பேதனம் செய்யும் ஆற்றல் உள்ளது. பழையன கழிந்தால்தான் புதுவீடு கட்ட முடியும். பழைய ஆசைகளின் இருப்பாகிய பெட்டகத்தின் சாவி இங்குள்ளது. அறிந்து திறந்தவர் தேகமற்ற ஜீவ ஒளிக்குப் போக முடியும். அதனால் கடைவாய்ப்பல், யானையாகிய பிரணவத்தின் வியட்டிப் பிரணவமான அ,உ, மவையும் விந்து நாதங்களையும் எல்லை பிரிக்கும் இடமாயிற்று. பாரம் - எல்லை".

வேழ முகமும் விளங்க சிந்தூ ரமும்
அஞ்சு கரமும் அங்குச பாசமும்

மனித உடம்பு பருப்பொருள் நிலையிலே தன்னியல்பில் இயங்கும் போது அது இருள்வடிவமாக இருக்கிறது. சித்தர்களின் யோக ஞான முறைப்படி ஆன்மப் பயிற்சியிலே இந்த உடம்பு தோயும்போது அது ஒளிமயமாகிறது. முன்பிருந்த இருளை ஞானமாகிய கை வெருட்டி விடுகிறது. தும்பிக்கை என்பது இதுவே. ஞானக்கண் கொண்டு பார்க்கும் மாணவனுக்கு முகத்தின் முன்பு ஒளிமண்டபம் வாய்க்கிறது. இந்த ஒளி மண்டலமானது யானை தனது தும்பிக்கையை நீட்டுவது போன்ற பாங்கிலே காண்கிறது என்பது சித்தர்களின் அனுபவ வாக்காகும்.

இந்த ஞான விளக்கத்தோடு சிந்தித்தோமானால், வேழ முகம் என்பதன் உட்பொருள் ஞானக்கல்வி என்ற சித்தர் பயிற்சியின் உருவகம் என்பது நமக்குப் புலனாகும்.

ஞானக் கல்வியின் பாதையிலே ஒரு மாணவன் முன்னேறும்போது, அக்கினி கலை என்ற தத்துவமானது மேல் எழுந்து செவ்வொளியுடன் சுடரத் தொடங்குகிறது. அந்த ஒளியானது நெற்றிக்கு நேரே புருவ நடுவின் எதிரிலே தோன்றுவதால் அதைத் திலகம் என்றும், செந்தூரத் திலகம் என்றும் அழைப்பது சித்தர்கள் மரபாகும். இத்தகைய செஞ்சுடர் குருவின் அருளினால் ஒரு மாணவனுக்குத் தோன்றும்பொழுது அவனுடைய ஆணவம் அழிந்து அவன் சிவத்தன்மை பெறுகிறான். சீவன் சிவனாவது இந்த ஞான அனுபவமே.

இதைத்தான் மணிவாசகப் பெருமான் தமது திருத்தெள்ளேணத்தில் அழகாகப் பாடுகிறார்:

நவமாய செஞ்சுடர் நல்குதலும் நாம்ஒழிந்து
சிவமான வாபாடித் தெள்ளேணம் கொட்டாமோ

'அங்குச பாசம்' என்பது அடக்கத்தின் உருவகம். இதுவே அங்குசமாகும். அதாவது உடம்பின் ஆற்றலைக் கட்டுப்படுத்தும்

ஞானக் கருவி. இனி, பாசம் என்பது அடங்கி நிற்கும் மனித உடம்பின் வினையாற்றலை மீண்டும் மேலெழாதவாறு பிணைத்துக்கட்டும் ஆற்றலாகும். பாசங்களை அடக்குவதோடு, அடங்கிய பாசங்கள் மீண்டும் பொங்கி எழாதவாறு இறுக்கிப் பிணைத்து, அவற்றைக் கட்டிப் போடுகிற யோக முறையையே அங்குசமும் பாசமும் உணர்த்துகின்றன.

'அஞ்சுகரம்' என்பது ஐம்புலனையும் ஒடுக்குகின்ற ஞான ஆற்றலையே ஆகும்.

## நெஞ்சிற் குடிகொண்ட நீல மேனியும்

ஞானப் பாதையிலே செல்லும் ஒரு மாணவனுக்கு அகக்கண்ணின் முன்னே தோன்றி நிலைத்து நிற்கிற நீல ஒளியை இங்கு 'நெஞ்சிற் குடிகொண்ட நீல' ஒளியாகக் கூறுகிறார் அவ்வையார். குடிகொள்வது என்பது அதனுடைய நிலைத்த தன்மையை, இந்த நீல ஒளியின் மயமாக மாணவனுடைய பயிற்சி இயங்க இயங்க, ஞான தேகமாகிய நீலமேனி பரிணமிக்கிறது.

சித்தர்களுடைய ஞானக் கல்வியிலே இந்த மனித உடம்பிலுள்ள இரண்டு உறுப்புக்கள் சிறப்பாகப் பேசப் பெறுகின்றன. அவை மூளையின் முன்புறமுள்ள பிட்யூட்டர் சுரப்பியும் **(Pituitary Gland)**, பின்புறமுள்ள பீனியல் சுரப்பியும் **(Pineal Gland)** ஆகும்.

சித்தர்களுடைய மொழியிலே முன்புறத்தைத் தத்புருட முகம் என்றும், பின்புறத்தைச் சத்தியோஜாத முகம் என்றும் அழைப்பது மரபாகும்.

தத்புருடம் என்பது ஞான உலகின் செயலை உணர்த்தும் சக்தி. பின்புறமுள்ள சத்தியோஜாதம் என்பது பேரறிவும் திருவருளும் இணைந்து உருவான ஞான உயிர். முகத்தின்முன் தோன்றுகின்ற நீல ஒளி குண்டலினியின் நுட்பநிலை. இந்த நீல ஒளியே அருட்சத்தியின் வெளியீடாம்.

பின்மூளையில் பீனியல் சுரப்பியின் இயக்கமும் முன் மூளையில் பிட்யூட்டர் சுரப்பியின் ஆற்றலும் இணைந்த நிலையிலேயே நீல ஒளி உதிக்கிறது. இந்த ஒளியை உதிக்கச் செய்யும் பயிற்சிதான் சித்தர்களின் இலக்கியத்திலே உள்ள ஆழமான மிகப் பெரிய ஆன்மக் கல்வியாகும். இதையே சீலாங்க வேதம் என்றும், கூத்தனுடைய நடனத்தின் உட்பொருள் என்றும் ஞானிகள் அழைக்கிறார்கள். இந்த அரிய பெரிய பயிற்சியைக் கற்பிப்பதற்காகவே தான் மாற்றுடல் எடுத்து வந்ததாகத் திருமூலர் பாடுகிறார்:

மாலாங்க னேயிங்கு யான்வந்த காரணம்
நீலாங்க மேனியின் நேரிழை யாளொடு
மூலாங்க மாக மொழிந்த திருக்கூத்தின்
சீலாங்க வேதத்தைச் செப்பவந் தேனே

திருமூலருடைய இந்தத் திருமந்திரத்தோடு அவ்வையின் அகவலில் உள்ள ஒளியின் நுட்பத்தை ஒப்பிட்டுப் பார்த்தோமானால், உமையே

நீல ஒளியாகிய சக்தி என்பது புலப்படும். ஞானிகள் என்போர் இந்த ஒளியைத் தொடர்ந்து சென்று பேரறிவுக் காட்சிகளைக் கண்டு துய்த்தவர் என்பதும் தெளிவாகும்.

சித்தர் ஞானத்தின் கொடுமுடியாகிய அறிவு இதுவேயாகும். நீல ஒளியின் காட்சி! இதைத்தான் பிறிதோர் இடத்திலே திருமூலர் பாடுகிறார்:

ஆங்கது சேரும் அறிவுடை யோர்க்குத்
தூங்கொளி நீலம் தொடர்தலும் ஆமே

உட்கிடை என்னவென்றால் நீல ஒளி என்பது பராசக்தி; அகண்ட ஒளி என்பது சிவம். இவ்விரண்டினுடைய இணைப்பினால் ஏற்படுகின்ற மகவே ஞான வடிவமாகிய விநாயகன். எனவே அவனுடைய மேனி நீல மேனியாம். இந்த நீல மேனியைக் காண்பவர்க்கு மரணமிலாப் பெருவாழ்வு கிட்டுகிறது என்பதைத் திருமந்திர நூலில் பல இடங்களில் நாம் காணுகிறோம்.

'நெஞ்சிற் குடிகொண்ட நீல மேனி' என்பதனால் இத்தொடர் மன உடலின் ஆன்ம சத்தியை உருவகிக்கிறது என்பதைப் புரிந்துகொள்ள வேண்டும்.

நான்ற வாயும் நாலிரு புயமும்

மனித உடம்பிலே முகத்திலுள்ள வாயின் அமைப்பு ஓர் அற்புதமாகும். நம்முடைய கீழ்வாய் அசைக்கும் செயலுக்கு உரியது. மேல்வாய் அசைத்தல் அற்றது. அசைக்கின்ற கீழ்வாயை நான்ற வாய் என்று கவிச்சொல் அழைக்கின்றது.

யோகிகளுடைய பயிற்சியாகிய இந்தக் கீழ்வாயின் அசைவைக் கொண்டு சில உள் ஆற்றல்களை எழுப்புகிற பயிற்சி ஒன்று உண்டு. ஆசானின் வாயிலாக நேரில் அறிந்துகொள்ள வேண்டிய இந்தப் பயிற்சிக்கு உருவகமாக நிற்பது நான்ற வாய் என்ற தொடராகும்.

ஞானப் பயிற்சியிலே கீழ்வாயின் இரகசியத்தை உணர்கின்ற மாணவன், தனது ஞானப் பாதையிலே முன்னேற முன்னேற அவனுக்கு ஒளி மண்டலம் முழுமையான சுடர்ப்புடன் தோன்றத் தொடங்குகிறது. அந்த ஒளியானது முகத்தின் முன்புறம், பின்புறம், மருங்கின் இருபுறம் ஆகிய நான்கு பக்கங்களிலும் எழுந்து பரவி நிற்கிறது. இதை நான்கு புயங்கள் என்ற உருவகித்து உள்ளார்கள். நான்ற வாயின் பயிற்சியினால் இந்த நான்கு புயங்கள் காட்சி தருகின்றன என்பது உட்பொருளாகும்.

இந்தப் பயிற்சியின் முதிர்வு கனியக் கனிய நான்கு திசைகளோடு நான்கு கோணங்களும் ஒளிதோன்றத் தொடங்குகிறது. அந்நிலையிலே நான்கு இரட்டித்து எட்டுத் திசையிலும் எட்டு ஒளிப்புயங்கள் அகக்கண்ணின் புலன் அனுபவமாகச் சித்திக்கின்றன.

விநாயகர் என்ற வடிவம் ஞானமும் ஞானத்தின் பயனும் சேர்ந்து உருவகிக்கப்பெற்ற பேரான்ம வடிவமானதால், அந்த வடிவத்தின் உறுப்புக்களில் ஒவ்வொன்றும் ஞானத்தின் முதிர்வு நிலையை உருவ

கத்திலே சித்திரிக்கின்றது. ஆகையினால் விநாயகருக்கு 'நான்ற வாயும் நாலிரு புயங்களும்' உறுப்புக்களாக அமைகின்றன.

மூன்று கண்ணும் மும்மதச் சுவடும்

விநாயகர் பிரணவத்தின் வடிவம்; பிரணவம் என்பது ஓம் என்னும் ஒலி; இந்த ஓம் என்னும் ஒலி அ உ ம் என்ற மூன்று எழுத்தொலிகளால் ஆன கூட்டொலி என்னும் அடிப்படையை நாம் அறிவோம். முக்கண் என்ற குறியீடும் இதையே குறிக்கின்றது.

வலக் கண்ணாகிய சூரியன் அறிவு மயமானது. இடக் கண்ணாகிய சந்திரன் உணர்வு மயமானது. பிடரிக் கண்ணாகிய ஞானமையம், அகப்பார்வை கைகூடும்போது கனலாக இயங்குகிறது. இந்தக் கனலே ஞான நெருப்பாகும். பிரணவம் என்பது இந்த மூன்றும் இணைந்த யோகக் காட்சியே. எப்படி என்றால் வலக்கண் அகரம்; இடக்கண் உகரம்; பிடரிக்கண் மகரமெய். சித்தர்களின் யோகப் பயிற்சியிலே முனைந்து நிற்கும் மாணவனுக்குச் சூரியனும் சந்திரனும் ஞான நெறியிலே தொழிற்படத் தொடங்கும்போது, பிடரிக்கண்ணின் இயக்கம் கூடுகிறது. இந்த மூன்றும் இணைந்த புணர்ப்பே ஞான யோகமாகும். அப்படிப்பட்ட ஞானயோகம் கைகூடும்போது இந்த மூன்று இடங்களில் இருந்தும் மூன்று வகையான சுரப்புநீர் ஊறி வருகிறது. இந்த மூன்று விதமான சுரப்பு நீரும் யோக மாணவனின் அமுதம்.

மும்மதம் என்பது இந்த மூன்று விதமான சுரப்பு நீரையே .

'சுவடு' என்பது **'Vibrations'** என்னும் ஒலி அதிர்வின் பதிவுகளே. மூன்று கண்ணும் இணையும்போது ஒரு யோகிக்கு மூன்று நிலைகளிலிருந்தும் மூன்று நாதங்கள் எழுகின்றன என்பது, சித்தர் வாக்கு. இந்த நாதங்களை அகச்செவியினால் கேட்டு அதில் ஒடுங்கி நிற்பதே ஞானயோகம்.

'சுவடு' என்று இங்கே குறிப்பது இந்த ஒலி அதிர்வுகளின் பதிவுகளையே. இவை இக்காலத்து **'Tape - Recorder'** பதிவு போன்று மூளையிலே பதிகின்றன. இந்த அக உலகின் ஒலிக்கேள்வியே யோகிகளின் மாபெரும் வல்லமையாம். அடுத்துவரும் வரி இதனை உணர்த்துகிறது.

இரண்டு செவியும் இலங்குபொன் முடியும்

அக உலகின் ஒலிகளைக் கேட்பது என்பது சாதாரண நிலையில் உள்ள மக்களுக்கு இயலுவது இல்லை. அதற்கென்று பல பயிற்சிகளைச் செய்து முன்னேற முன்னேற, அகச்செவி நன்கு திறந்து விடுகிறது. அப்படித் திறக்கும்பொழுது மும்மதம் பொழிவதோடு ஆதார நிலைகளின் ஒலிகளும் அகச் செவியிலே கேட்கத் தொடங்குகின்றன. மூன்று கண்ணும் சேர்ந்து இயங்கும்பொழுது ஏற்படுகிற இந்த அனுபவமானது ஆதார ஒலிகளைக் கேட்கும் வல்லமையைத் தருவதோடுகூட, அகச்செவிகொண்டு தொலைதூரத்து ஒலிகளையும் கேட்கும் ஆற்றலை வழங்குகிறது.

உலகெங்கணும் எழுகின்ற ஒலிகள், அவை எழுந்த மாத்திரத்திலேயே விண் அணுக்களில் கலந்துவிடுகின்றன. வானொலிப்பெட்டி

யிலே குறித்த அலைவரிசையைத் திருப்பும்பொழுது அந்தந்த ஒலிகளை நாம் கேட்ப போல, அகச் செவியானது உலகின் அலைவரிசைகளிலே இயங்கத் தொடங்கிவிடுகிறது. அதன் காரணமாகத் தொலை ஒலிகளை ஒரு யோகி இருந்த இடத்தில் இருந்தே கேட்கும் ஆற்றலைப் பெற்றுவிடுகிறான். அதனோடுகூட அவனுடைய அகக் கருவியானது ஒரு தொலைக்காட்சிப் பெட்டியைப் போன்ற வல்லமையையும் பெற்று விடுகிறது. அப்போது தொலைதூரத்துக் காட்சிகளையும் அவன் இருந்த இடத்திலிருந்தே பார்க்கின்ற ஆற்றலைப் பெற்றுவிடுகிறான். அது தொலை ஒலி ஆற்றலைப் போலவே தொலை ஒளி ஆற்றலையும் பெற்றதாகப் பரிணமிக்கின்றது. இதுவே, 'இலங்குபொன் முடியாக' அவனுடைய ஒளி உடம்பின் மகுடமாகிறது. இந்த ஒளி பொன்னிறமானது.

திரண்ட முப்புரிநூல் திகழொளி மார்பும்

சித்தர்களின் இலக்கியத்திலே மூன்று நாடிகளை முப்பொரி என்ற அழைப்பது மரபு. இடகலை, பிங்கலை, சுழுமுனை என்னும் இந்த மூன்று நாடிகளிலும் இயங்குகின்ற ஆற்றல் முப்புரிநூல் என்று உருவகம் செய்யப்பெற்றுள்ளது.

இந்த மூன்று நாடிகளும் மனித உடம்பிலே அநாகதச் சக்கரம் என்ற நிலைக்களத்தில் மண்டலம் கொள்கின்றன. இந்த அநாகதச் சக்கரம் இருக்கும் இடம் மார்பாகும். அது விரிந்து பரந்த ஒளி மண்டலம். இதைத்தான் 'திகழொளி மார்பு' என்று அவ்வையார் குறிப்பிடுகின்றார்.

சொற்பதம் கடந்த துரியமெய்ஞ் ஞான
அற்புதன் ஈன்ற கற்பகக் களிறே

ஞானத்தின் மூலாதாரம் சொல்லினால் விவரிக்க ஒண்ணாதது. அந்தச் சொற்பதம் கடந்த நிலையிலே ஒரு யோகி தனது உயிர் இயக்கத்தைச் செலுத்தும்போது, அவனுடைய அந்த அனுபவ நிலை துரியம் எனப்படும். அது சொல்லும் செயலும் அற்றுப்போன பாழ்வெளியாகும். அது உருவம், பெயர் முதலிய அளவைகளுக்கு அப்பாற்பட்ட அற்புத நிலையாகும். இந்த நிலையைப் பரவெளி என்றும், பரசிவ ஆதார நிலை என்றும் யோகிகள் அழைக்கிறார்கள். இந்த அற்புத நிலையிலிருந்து பிறப்பதுதான் ஞான ஒளியும் ஞான ஒலியும் கூடிய பிரணவமாகிய விநாயகப் பொருளாம். எனவே இந்த விநாயகப் பொருளைச் சிவன் ஈன்ற குமாரன் என்ற உருவத்திலே சித்தரித்து வழிபடுகிறோம்.

இந்த ஞானமானது எல்லா வல்லமைகளையும் தரக்கூடியதான ஆற்றல் நிரம்பி இருப்பதால் இதைக் கற்பகக் களிறு என்று சொல்வது ஞான மரபாகும். விநாயகனைச் சொற்பதம் கடந்த அற்புதனின் பிள்ளை என்றும், கற்பகக் களிறு என்றும் கூறுவதன் உருவகம் இதுவே. கற்பகம் கேட்டதை எல்லாம் தரக்கூடியது என்பது புராணங்களில் வருகிற உருவகச் செய்தி.

முப்பழம் நுகரும் மூசிக வாகன

யோக நெறியின் அடிப்படை மூன்று கண்களில் அடங்கி உள்ளது. மூன்று நாடிகள் என்பதும் இந்த இயக்க நிலையினையே. இந்த மூன்று நாடிகளும் ஞான நெறிப்படி இயங்கத் தொடங்கும்பொழுது மூன்று வகையான சுரப்புநீர் ஊறுவதோடு ஒலி அநுபவமும் ஒளி அநுபவமும் நுகர்ச்சிக்குள் வசமாகின்றன. எனவே யோகிகள் முப்பழம் புசிக்கும் நிலை என்று இதனைக் கூறுவார்கள்.

இந்த முப்பழ நுகர்ச்சிக்கு ஆதாரமாக வேண்டப்படுவது உடம்பின் ஆதார நிலைகள் நன்கு திறந்துவிட வேண்டும் என்ற நிலையே!

இந்த உடம்பிலுள்ள ஆறு ஆதார நிலைகளும் முக்கண் யோகத்திலே மூலக்கனலை எழுப்பிப் பயிலப் பெறும்போது, இந்த ஆதார நிலைகளுக்கு நடுவிலே அடைபட்டுக் கிடக்கும் தடைச்சுவர்கள் கண் திறந்துவிடுகின்றன. அதாவது, இடைச்சுவர்களிலே பலகணிகள் போன்ற திறப்புக்கள் உண்டாகிவிடுகின்றன. இவற்றை எல்லாம் ஞானத் துளைகள் என்று கூறலாம்.

பெருச்சாளி என்ற வாகனம் விநாயகருக்கு அமைந்ததில் ஓர் உருவகம் பொதிந்துள்ளது என்பதைப் பல பெரியோர்கள் விளக்கி இருக்கிறார்கள். மாணிக்க யோகீசுவரரும் சிவயோகியாரும் இன்னும் பல சித்தர்களும் எலியின் இனமாகிய பெருச்சாளியின் துளை தோன்டும் வல்லமையை ஞான மொழியிலே விளக்கியிருக்கின்றார்கள்.

ஞானப் பாதையிலே முன்னேறிச் செல்கிற மாணவனுக்கு ஆதாரச் சுவர்களிலே துளைபோட்டுச் செல்வதே மெய்ந்நெறிக்கு வழியாகும். இந்தத் துளைபோடும் ஆற்றலை மூசிகம் அல்லது பெருச்சாளி என்று உருவகித்தார்கள். ஞானமாகிய ஒளிவடிவம் இந்தப் பெருச்சாளியிலே இவர்ந்து செல்லும்பொழுது 'முப்பழம் நுகரும்' பேரின்பம் கூடுகிறது. இதனை விளக்குகிற இரத்தினசபாபதியாரின் சிவயோக விளக்கம் வருமாறு:

"மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம் அநாகதம், விசுத்தி, ஆக்ஞை ஒவ்வொன்றுக்கும் மற்றொன்றுக்கும் இடையில் அடைப்பு உள்ளது. சிரசை ஒளி வந்து அடைந்தபோது, இவ் அடைப்புக்கள் எல்லாம் துளைத்தே மேலேறிச் சுழுமுனை நாடியின் உச்சிக்கு வருகிறது".

சிவயோகியாரின் இந்த விளக்கத்தைச் சிந்தித்துப் பார்த்தால் ஞானஒளியாகிய விநாயகர் என்ற உருவகத்திற்குப் பெருச்சாளி என்னும் வாகனம் அமைந்ததன் உட்பொருள் நமக்குப் புலனாகும்.

இப்பொழு தென்னை ஆட்கொள வேண்டி
தாயா யெனக்குத் தானெழுந் தருளி

இறைவனுடைய ஆற்றல்களை ஆராய்ந்து கண்ட ஞானியர் எல்லாரும், அந்த ஆற்றலின் மாண்பை எத்தனையோ விதங்களில் வியந்து விளக்கியிருக்கிறார்கள். அனைத்து வல்லமையும் ஒருங்கிணைத்த பரம்பொருளை அருவத்திலே கண்டு துய்த்தபோதி

லும், பற்பல உருவங்களை அந்தப் பரம்பொருளுக்குக் கற்பித்து, அந்தந்த உருவங்களுக்கு இயைந்த உறுப்புக்களையும் அணிபணிகளையும் வகுத்து, உலகிலே வழிபாடு நிலவுவதற்கு எல்லாச் செயல்களையும் நெறிப்படுத்தியவர்கள் ஞானிகளேயாவார்கள்.

தாங்கள் அருவத்திலே பரம்பொருளை வழிபட்டபோதிலும், உலக மாந்தருக்குக் கடுமையான பயிற்சிகளும் நேர்முகமான இரகசிய நெறிமுறைகளும் வழங்குவது இயலாத காரியம் என்பதனால், கூட்டமாக மக்கள் குழுமி இறைவனை வழிபட்டு, அந்தப் பேரின்பப் பெரும் பயனைத் துய்ப்பதற்குரிய வழி, சமதர்ம வழிபாட்டு நெறிதான் என்பதை உணர்ந்த காரணத்தினால், இத்தகைய உருவ வழிபாட்டு முறைகளையும் விரிவாகவே ஞானிகள் உலகுக்கு தந்தார்கள்.

தமிழகத்தின் வரலாற்றை ஆராய்ந்தோமானால், சமணமும் சாக்கியமும் நமது பண்டைச் சமயங்களைக் கீழ் அமுக்கிக் கொண்டு மக்களிடையே பரவத் தொடங்கியதற்குக் காரணம், அவர்களுடைய கூட்டு வழிபாட்டு முறையே ஆகும். நூற்றுக்கணக்கான மாந்தர் ஒருமித்துக் கூடி வழிபடுகிற முறை சமணத்திலும் சாக்கியத்திலும் வேரூன்றி இருந்தது. 'தம்மம் சரணம் கச்சாமி', 'சங்கம் சரணம் கச்சாமி', 'புத்தம் சரணம் கச்சாமி' என்பன போன்ற மொழித்தொடர்கள் இந்தக் கூட்டு வழிபாட்டு முறைகளை நமக்கு உணர்ததுவதோடு, மக்கள் சங்கத்தின் ஆற்றலையும் நமக்கு அழுத்திக் காட்டுகின்ற சான்றுகளாக விளங்குகின்றன!

தனி மனிதன் தனது தனிப்பட்ட யோகப் பயிற்சியினாலோ அல்லது உடம்பின் ஞான நிலையங்களை ஏகத்திலே இருந்து தனிப்பட்ட முறையில் இயக்குவதினாலோ, இறை இன்பத்தைத் துய்க்க முடியும் என்பதை உணர்ந்து கண்டு, பயின்றும் /பயிற்றுவித்தும் வந்த ஞானியர்கள் , கூட்டு வழிபாட்டின் வேகத்தையும் ஆற்றலையும் அதற்குப் பொதுமக்களிடம் உள்ள செல்வாக்கையும் கண்ட பின்பு, நமது நெறிமுறையிலும் கூட்டு வழிபாட்டுக்கு வகுக்கப்பட்டுள்ள பற்பல உபாயங்களையும் மக்களிடையே பரப்பத் தொடங்கினார்கள்.

இந்த முயற்சியின் விளைவாக, தமிழகத்து பொது மக்களிடையே நமது பண்டைச் சமயங்கள் மீண்டும் மறுமலர்ச்சி பெறத் தொடங்கின. அந்த மறுமலர்ச்சியிலே திருமுறைகள், திவ்வியப் பிரபந்தங்கள், அவ்வையின் அகவல் போன்ற தனி நூல்கள் ஆகியவற்றுக்கு ஒரு பெரிய முக்கியமும் செல்வாக்கும் ஏற்படத் தொடங்கின. இதற்குக் காரணம் இந்த நூல்களில் உள்ள பாடல்களின் போக்கிலேயே, கூட்டுவழிபாடும் அடியார்களின் விண்ணப்பங்களும் கோரிக்கைகளும் உரிய முறையிலேயே இடம்பெற்று விளங்குகின்றன.

இத்தகைய விண்ணப்ப முறையிலான வரிகளே மேற்கண்ட இரண்டு அடிகளும் ஆம்.

வழிபாடு செய்கிற தொண்டனின் குரலிலே அவ்வையார் விநாயகரிடம் விண்ணப்பிக்கிறார். தனக்கு அருளவேண்டும் என்ற கோரிக்கையை ஒரு விண்ணப்பத்தின் முறையிலே, எவ்வாறு அந்த

அருளை வழங்கவேண்டும் என்பதையும் கூறி வேண்டுகிறார். தாயைப் போல் தனக்கு இரங்கி வரவேண்டும் என்கிறார்.

இறையாற்றலின் தத்துவங்களிலே தாய்த்தத்துவம் என்றும், தாதைத் தத்துவம் என்றும் இரண்டு உண்டு. இந்த இரண்டும் இரண்டு வகையான தன்மை உடையன. தாதைத் தத்துவம் ஆற்றலின் மயமானது. தாய்த்தத்துவம் அன்பின் மயமானது. எனவேதான் அன்பையும் ஆற்றலையும் இணைத்து வணங்குகிற வழிபாட்டு நெறியிலே, பரம்பொருளை அம்மையப்பனாக வடிவம் தந்து வணங்குகிற முறை நிலவிவருகிறது.

'தாயுடன் சென்று தந்தையைக் கூடல்' என்ற யோக நெறியிலும் இந்த முறை பேசப்படுகிறது என்பதை ஏற்கனவே பார்த்தோம். அது சந்திர கலையைக் கொண்டு சூரிய கலையை அணுகுகிற முறை. அதேமுறைதான் வழிபாட்டு நெறியிலே தாயினுடைய இரக்கத்தின் துணைகொண்டு, தந்தையை வேண்டுகிற முறையாகப் பரிணமிக்கிறது.

நம்முடைய புராணக் கதைகளிலும், பக்தன் படுகிற வேதனையைக் கண்டு, அம்மை மனம் தாளாது அப்பனை அருள்புரியத் தூண்டுவதாகப் பல கதைகளைப் பார்க்கிறோம். மேலே கண்ட தத்துவ உண்மையைத்தான் இந்த கதைகள் இவ்வாறு நமக்கு உணர்த்துகின்றன. அவ்வையாரும் இந்த வரிகளிலே அந்தத் தத்துவ உண்மையின் பயனை உள்ளடக்கிய தாயின் உள்ளத்தோடு விநாயகர் அருள் செய்ய வேண்டும் என்ற வேண்டுகிறார். அப்பன் தன்னை ஆட்கொள்ளுவதற்கு அம்மையின் இரக்கம்தான் தூண்டுகோலாக அமைய வேண்டும் என்பதே குறிப்பாகும்.

இதே வரிகளைச் சித்தர்களின் ஞான முறையிலே நோக்கினோமானால், உணர்வுமயமான இடகலையினோடு சென்று, அறிவு மயமான பிங்கலையிலே கூடும்பொழுது, முக்கண் திறக்கிறது என்பது தத்துவ இரகசியம் ஆகும்.

மாயப் பிறவி மயக்கம் அறுத்து

இந்த வரி சில பாடல்களில் 'மாயாப் பிறவி' என்று அச்சிடப் பெற்றுள்ளது. அந்தப் பாடத்தைக் கொண்டோமானால் மாயாப் பிறவி என்பதன் பொருள், மாய்தல் இல்லாத, அதாவது ஓய்வு ஒழிவு இல்லாத நித்தியமான தனி உயிர் என்ற பொருளாகும். 'பதியினைப் போல் பசுவும் அநாதி' என்பது சித்தர் வாக்கு, முப்பொருள் உண்மை என்ற அடிப்படையினை உணர்த்துகிற திருமந்திரத்தில் இதையே,

பதிபசு'பாசம் எனப்பகர் மூன்றில்
பதியினைப் போற்பசு பாசம் அநாதி

என்று திருமூலர் பாடுகிறார். அநாதி நித்திய முப்பொருள்களாவன பரம்பொருள், தனி உயிர், பாசம் அல்லது பிணைப்பு என்ற மூன்றும் ஆம். எனவே மாயாப் பிறவி என்னும்போது நிலையான முப்பொருள்களிலே ஒன்றான உயிரை அது குறிக்கிறது.

'மாயப் பிறவி' என்ற பாடத்தை எடுத்துக்கொண்டோமானால் மாயையின் வசமான தனி உயிரின் பிறப்பிறப்புச் சூழல் என்று பொருளாகும்.

தனி உயிருக்கு ஓய்வு ஒழிவின்றிப் பிறப்பிறப்பு என்னும் சக்கரம் சுழல்வதன் காரணம் மாயையே ஆகும். அது, தலைவனை உணர மாட்டாது உயிரை மயக்கத்திலே சிக்க வைக்கிறது.

பதியணு கிற்பசு பாசநி லாவே

என்பது திருமந்திரம். தலைவனுடைய உணர்வு பசுவாகிய உயிருக்கு ஏற்படும்பொழுது, பசுவைப் பிணைக்கும் பாசம் அதனொடு சேர்ந்து நில்லாது கழன்றுவிடுகிறது. ஆகவே மயக்கத்திலே இருக்கும் மன்னுயிருக்கு, அந்த மாயப் பிறவிமயக்கை நீக்கவல்லது தலைவனை அறிகின்ற மெய்யுணர்வேயாகும். அறிவு அதனை அறியாது. உணர்வுதான் அந்த அறிவை உயிருக்குக் கூட்டுவிக்க வேண்டும். அதாவது தாய்த் தத்துவமானது உணர்வாக நின்று உணர்த்தி, உயிரைத் தந்தையின்பால் கூட்டுவிக்கவேண்டும். இதனைத்தான் அவ்வையார்,

தாயா யெனக்குத் தானெழுந் தருளி
மாயாப் பிறவி மயக்கம் அறுத்து

என்று பாடுகிறார்.

இஃபி, உணர்வு என்ற நிலையானது எங்ஙனம் தொழிற்படுகிறது என்பதை, ஞான மொழியிலே அவ்வையார் பேசுகிறார்.

திருந்திய முதல்ஐந் தெழுத்தும் தெளிவாய்ப்
பொருந்தவே வந்தென் உளம்தனில் புகுந்து

வழிபாட்டு முறையிலே ஐந்தெழுத்தாகிய 'நமசிவய' என்னும் மூல மந்திரம், குருவின் வாய்மொழியாகச் சீடனுக்கு உபதேசிக்கப் பெற்று, அந்த மந்திரம் கொண்டு சீடன் முன்னேறுவது மரபாகும். இது தொண்டு நெறியின் வழிபாட்டு முறை. இதையே யோக ஞான நெறிகளிலும் இரகசிய முறையாகச் சித்தர்கள் உணர்த்தியுள்ளார்கள்.

ந, ம, சி, வ, ய ஆகிய ஐந்து எழுத்துக்களையும் உடம்பின் ஐந்து நிலையங்களாக நம் நாட்டுச் சித்தர்கள் நமக்கு கூறியுள்ளார்கள். இடநாடி, பிங்கல நாடி ஆகிய பாதத்திலே 'நம' தொடங்கி, தோள்களில் 'சி' யும், வாயில் 'வ' வும் தலையில் 'ய' வும் மண்டலம் கொள்கின்றன என்பது, சித்தர் இலக்கியம் உணர்த்துகிற ஒரு பெரிய இரகசியமாகும். இந்த இரகசியத்தைத் திருமூலர் ஓர் அரிய பாடலிலே பொதிந்து தருகிறார்.

ஆகின்ற பாதமும் அந்நவாய் நின்றிடும்
ஆகின்ற நாபியுள் அங்கே மகாரமாம்
ஆகின்ற இருதோள் வவ்வாய்க் கண்டபின்
ஆகின்ற அச்சுடர் யவ்வியல் பாமே

நமசிவய என்னும்பொழுது மூலக்கனலானது கீழிருந்து மேல் எழுகிறது. சிவாயநம என்னும்பொழுது மேலிருந்து கீழ் இறங்குகிறது. இதைத்தான் பல சித்தர்கள் தங்கள் பாடல்களிலே 'ஏற்றி இறக்குதல்' என்று குழூஉக் குறியிலே பாடுகிறார்கள்.

மூலக்கனலை ஏற்றி இறக்குகின்ற முறையே சித்தர்களின் ஞான யோகப் பயிற்சி முறையாகும். இப்படி ஏற்றி இறக்கும்போது உடம்பிலுள்ள ஆறு ஆதாரங்களும் கண் திறந்து இயங்கத் தொடங்குகின்றன. ஐம்புலனும் மடைமாறுகிற செயல் நிகழ்கிறது. அப்போது இருள்மயமான உடம்பு ஒளிமயமாகிறது. சாதாரண மனிதன் ஞானியாகிறான். இதுவே சித்தர் இலக்கியத்தின் நோக்கமும் பயனுமாம். இதனால் தான் இந்தப் பயிற்சி முறைக்குச் சித்தர் இலக்கியத்திலே ஒப்பற்ற இடம் தரப்பெற்றுள்ளது.

ஐந்தெழுத்தின் இந்த நுட்பங்களையெல்லாம் ஆராய்ந்து கண்டு அனுபவித்திருக்கும் சிவயோகி இரத்தினசபாபதியாரின் அரியதொரு விளக்கத்தை, அவ்வையாரின் இந்த ஐந்தெழுத்துக் குறிப்பை ஒட்டி நாம் இங்கு காண்பது பொருத்தமாகும்:

"சிவாய என்றபோது தோள்களுக்குமேல் உள்ள ஒளியாகும். இது 'ப' என்ற எழுத்துப்போல் தோள்களில் மேல்முகங்கொண்டு விளங்கும் ஒளிமண்டலமாகும். ஒளிமண்டலததில் உள்ள 'சிவாய நம' வான தேகத்தைத் தாழ்த்தி எழுந்து நிற்பதால், இதற்கு ஓதுமுறை சிவாயநம ஆயிற்று. சிவாய என்பதும், பிரணவத்தில் உள்ள விந்து நாதங்களும் ஒன்றேதான். பிரணவத்தைக் கொண்டோ, பஞ்சாக்கரமாகிய சிவாயநம கொண்டோ ஒளியை அறிந்திடில், முகத்தின் முன் ஒளி தோன்றிவிடும்.

எளிய வாதுசெய் வாரெங்கள் ஈசனை
ஒளியை யுன்னி யுருகு மனத்தராய்த்
தெளிய வோதிச் சிவாய நமவென்னுங்
குளிகை யிட்டுபொன் னாக்குவன் கூட்டையே

என்பது திருமந்திரம்.

அல்லது சிவாய சிவ சிவ என்பதும் மலமற்ற பஞ்சாக்கரமாகும்.

சிவாய நமவெனச் சித்தம் ஒருக்கி
அவாயம் அறவே யடிமைய தாக்கிச்
சிவாய சிவசிவ வென்றென்றே சிந்தை
அவாயங் கெடநிற்க ஆனந்த மாமே

(திருமந்திரம்)

'பொருந்தவே வந்தென் உளந்தனில் புகுந்து' என்றதனால், தேகங்கடந்து சிரசின் மேலுள்ள துவாதசாந்த வெளியில் ஒளியாய் விளங்கி என்று பொருள். சிரசின்மேல் உள்ள ஆகாயப் பகுதியிலே தான் சிவசத்தியின் வியாபகமான நிர்வத்தியாதி கலைகளும் இந்திகையாதியான சிவகலைகளும் விளங்கும் சாந்தியதீதை கலையுள்ளது. இது ஆங்கிலத்தில் **'Ethenic Brain'** என்று கூறப்படுகிறது. இதன் தொழில் நிலை முன்மூளையிலும் பின்மூளையிலுமாக உள்ளது.

உள்ளுதலின் காரியம் மூளையில் உள்ளது; காரணம் தேகமற்றதாய் உள்ளது. மனிதனின் காரண சரீரம் தேகத்தில் இல்லை; தேகங்கடந்ததாய் இருந்துகொண்டே தேகத்தை யுண்டாக்கி அதிலும் ஆட்சி செய்கிறது. தேகங்கடந்த நிலையில் அறிவு பதித்துவிடுவதால்

சில ஞானிகள் அறிவின் செயலின்றியே பித்தர், பாலர், பைசாசர் தன்மையில் விளங்குகின்றனர்".

இந்த விளக்கத்தின் தொடர்பாக நம் சிவயோகியார் கீழ்க்கண்ட இரண்டு திருமந்திரப் பாடல்களையும் நினைவூட்டுகின்றார்.

சந்திப் பதுநந்தி தன்திருத் தாளிணை
சிந்திப் பதுநங்தி செய்ய திருமேனி
வந்திப் பதுநந்தி நாமம்என் வாய்மையாற்
புந்திக்குள் நிற்பது நந்திபொற் பாதமே

போதந் தரும்எங்கள் புண்ணிய நந்தியைப்
போதந் தனில்வைத்துப் புண்ணிய ராயினார்
நாதன் நடந்தால் நயனங் களிகூர
வேதந் துதித்திடப் போயடைந் தார்விண்ணே

அவ்வையாருடைய பாடலில் ஐந்தெழுத்தை ஓதுவது என்று மட்டும் குறிப்பிடாமல், ஞான நுட்பத்தோடு இந்த ஐந்து எழுத்துக்களும் பொருந்தும்படியாக உள்ளத்தில் வந்து புகவேண்டும் என்று மொழிந்துள்ளதை ஆழ்ந்து நோக்க வேண்டும்.

எழுத்தும் அதன் ஒலியும், சொல்லுகிற நாவின் செயலும் கேட்கிற செயலுமாம். இது ஒருவகை. ஆனால் இந்த எழுத்துக்களின் உள்ளொலிகள் தெளிவாகப் பொருந்தும்படி உள்ளத்திலே வந்து புகவேண்டும் என்று அவ்வையார் குறிப்பிடுவதால், இந்த ஒலிகளுக்குள்ள ஆதார நிலைகள் அனைத்தும் இணைந்து ஒலிக்க வேண்டும் என்னும் உட்பொருள் காணக் கிடக்கின்றது. அதனால்தான் ஐந்தெழுத்தைப் பற்றிய இந்த ஞான உரைகளை உட்புகுந்து பார்க்க வேண்டிய அவசியம் இந்த வரிகளில் உணர்த்தப்படுகிறது. எனவே, ஐந்து எழுத்துக்களில் நிலையங்களைப் பெரியோர்கள் இந்த வரியின் பொருளாக நமக்கு எடுத்துச் சொல்லியுள்ளார்கள்.

குருவடி வாகிக் குவலயந் தன்னில்
திருவடி வைத்துத் திறம்இது பொருளென

இந்த வரிகளிலே மிகவும் முக்கியமான சித்தர்களின் ஞானக் கருத்துக்கள் ஆழமாகப் புதைந்துள்ளன.

இந்த வரிகளில் உள்ள மூன்று சொற்றொடர்கள் மிகவும் நுட்பமான ஆன்மப்பொருள் கொண்டவை. அவையாவன: ஒன்று, குருவடிவு: இரண்டு, குவலயந் தன்னில்; மூன்று, திருவடி வைத்து.

ஒரு மாணவனுக்கு அவனுடைய ஞானப் பயிற்சியிலே இரகசியங்களை உணர்த்துகின்ற ஆசிரியர்கள் மூவராவர்.

நூற்பாக்களைக் கற்று, அந்தக் கல்வியின் மூலம் அவன் பெறுகின்ற நூலறிவு அவனுக்குக் கிட்டும்படி செய்பவர் நூலாசிரியர் ஆவார். இவர் குருமார்களின் ஆரம்ப இனத்தைச் சேர்ந்தவர்.

இனி, அவன் தனது பயிற்சியைத் தொடங்குவதற்கு நூலறிவுமட்டும் அவனுக்குப் போதுவதில்லை. சொற்களின் சில பூட்டுக்களைத் திறந்து காட்டவல்ல அனுபவம் உடையவரும், உடம்பின்

ஆதாரநிலைகளையும், ஆன்ம ஆற்றல்களையும் செயல்மூலம் செய்துகாட்ட வல்லவருமான ஒரு நேர்முக ஆசானின் உபதேசம் அவனுக்கு அவசியமாகியது. இத்தகைய நேர்முக ஞானத்தை அவனுக்குக் குரு வடிவிலே நேர்முகமாகத் தோன்றி, தொட்டும் பயிற்றுவித்தும் காட்டவல்ல இத்தகைய ஆசான் இரண்டாவது நிலையில் உள்ள புறக் குரு ஆவார்.

இதற்கமேல் ஒரு நிலை இருக்கிறது. நேர்முக ஆசான் கற்பித்த பயிற்சிகளை, உடம்புக்குள்ளே இயங்குகின்ற கடவுள் ஆற்றலான பரம்பொருட் சக்தி திருவருளோடு அவனுக்கு உணர்த்த வேண்டியது இருக்கிறது. இத்தகைய உள் உணர்வை எழுப்பி இயக்க வல்லவன் பரம்பொருளாகிய இறைவனே. அவன் உடம்பிலே குடியிருந்து உணர்த்துகிற பரமகுரு ஆவான்.

ஆகவே, குருவாகி வந்து உணர்த்த வேண்டும் என்ற வேண்டுகோளிலே, இந்த மூன்று வகையான ஆசான்களின் வல்லமைகளும் பேசப்பெறுகின்றன.

சித்தர்களுடைய ஞான மொழியிலே குரு என்ற சொல்லுக்கு ஒளி என்ற பொருளாகும். உள்ளத்திற்குள்ளே ஒளிந்து வாழ்கின்ற கருணை வடிவான இறைவன், ஒளியைக் காட்டி ஞானத்தை உணர்த்துகிறான். இந்த ஒளிப் பயிற்சியினோடு மாணவனுக்கு ஒலி அனுபவமும் இணைந்து கைகொடுத்து உதவுகிறது. இதுவே ஞான யோகத்தின் கல்வி அனுபவம் ஆகும்.

'குவலயம்' என்ற சொல்லுக்குக் குவளை மலர் என்பது பொருள். உலகம் என்பதற்கு ஞானிகள் ஆன்மப் பொருள் கூறுவது இங்கே சிந்திக்கற்பாலது. ஞானிகளின் உலகம் அக உலகமாகும். அந்த அக உலகம், ஞானக் கண்ணிலே புலனாகின்ற ஒளி வடிவமானது. எனவே 'குவலயம்' என்ற சொல்லுக்குச் சித்தர்களின் இலக்கியத்திலே குவளைமலர் போன்ற கண்கள் என்பது ஆன்மப் பொருள் ஆகும்.

கண்களூடு புலனுக்குத் தோற்றம் தருகிற உள்ளொளியானது மூலாதாரத்திலிருந்து எழுந்து கண்களிலே இயங்குகிறது. இந்த இயக்கம் ஞானப் பயிற்சியினால் விளைகின்ற பலனாகும்.

கனலின் தன்மை வெப்பமும் ஒளியுமாம். மூலாதார நிலையிலே நெருப்பாக இருந்த ஞானக் கனல், கண்களிலே ஞான ஒளியாக இயங்கத் தொடங்குவதுதான் ஞான பயிற்சி மாணவனின் அடிப்படைக் கல்வியாகும். ஞான நூல்கள் இந்தக் கல்வியைப் பற்றி ஆயிரம் ஆயிரம் சொற்களிலே ஏட்டுக்கல்வியாக எழுதி வைத்துள்ளன. இதனை நேர்முக ஆசான் அநுபவத்திலே புலனாகும்படி காட்டுகிறான். அப்போது மூலக்கனல் எழுந்து சந்திரன் ஒளியைப் போலப் பரிணமிக்கத் தொடங்குகிறது. அந்தச் சந்திரனின் ஒளியிலே குவளை மலராகிய அகக்கண் நன்கு மலர்கிறது. இரவிலே சந்திரன் ஒளியிலே மலரக்கூடிய பூ அல்லவா குவளை! அவ்வாறுதானே ஞானக் குவளையும் மலர்கிறது!

குரு என்னும் அக ஒளியானது முழுமைபெற்று ஞான அமைதியை வழங்கத் தொடங்குகிறது. இந்த நிலையைத்தான் யோக நூல்கள் 'சாந்தியதீத கலை' என்று அழைக்கின்றன.

'திருவடி வைத்தல்' என்பது ஞான குருவானவன் தனது திருவருளினால் அகக் கண்ணிலே இந்த மலர்ச்சி தோற்றுமாறு தன் திருவருளைக் கொண்டு தொடுவதாகும். திருவடி வைத்தல் என்றும் 'ஸ்பரிச தீட்சை' என்றும் சித்தர் இலக்கியம் இதை அழைக்கிறது.

மாணிக்கவாசகர் தமது திருவாசகத்திலே பாவியேனுடைய ஊனினை உருக்கி என்றும், 'உள்ளொளி பெருக்கி' என்றும் பாடுகிறார். உள்ளொளி பெருகுவதற்கு ஆரம்ப நிலை ஊன் உருக வேண்டும் என்பதாகும். ஊன் உருகுவது மூலாதாரத்திலுள்ள கனலின் எழுச்சியினால். இந்த உருக்கத்திலிருந்து அக உடலிலே ஒளி கிடைக்கிறது.

மெழுகுவத்தி எரிகிறது. எரியும்பொழுது அந்த மெழுகு உருகுகிறது. அந்த உருக்கத்தின் பயனாக ஒளி சுடர்கிறது. மனித உடம்பின் தன்மையும் இதுவே.

பருப்பொருளாக அமைந்துள்ள இந்த உடம்பின் உருக்கம் அதிகரிக்க அதிகரிக்க, அக உடல் ஒளிமயமாகிறது. ஊன் உருகுவதும் உள்ளொளி பெருகுவதும் இவ்வாறு நிகழ்கின்றன. இதற்குரிய பல பயிற்சிகளை நம்முடைய நாட்டுச் சித்தர் இலக்கியம் விரிவாகப் பேசுகிறது. நமது நாட்டு ஞானிகள் இந்த பயிற்சிகளை மாணவர்களுக்குக் கற்பித்து, உடம்பின் உருக்கத்தினால் மூலக்கனல் ஞான ஒளியாகப் பரிணமிக்கும் வித்தையைக் கற்பித்து வந்துள்ளார்கள்.

வலக்கண்ணைச் சூரியன் என்றும், இடக்கண்ணைச் சந்திரன் என்றும் அழைக்கும் மரபு நமக்குத் தெரியும். இந்தச் சூரிய சந்திரர்களின் இயக்கமே கனலும் ஒளியும் எழுவதற்குக் காரணமாக அமைகிறது. வெப்பத்தைத் தருகிற சூரியனும், தண்மை நிலவைப் பொழிகிற சந்திரனும் இரண்டு வகையான ஒளியாற்றல்கள். இந்த ஒளி ஆற்றலுக்கு அடிப்படையாக அமைவது மூலக்கனலே ஆகும். அது மின் ஆற்றலைப் போன்றது. அந்த மின் ஆற்றல் மின்சார அடுப்பாகவும் எரியும்; மின்சாரக் குமிழாகவும் ஒளிவீசும். எந்தெந்த நிலையங்களிலே இந்த மின் ஆற்றலைக் கொண்டுவந்து இயக்குகிறோம் என்பதைப் பொறுத்தே, கனலும் ஒளியும் பிறக்கின்றன.

கனல் என்பது அறிவின் செயல்; ஒளி என்பது அன்பின் செயல். பேரறிவாகிய ஞானத்தின் வசமாகும்பொழுது கனலானது ஒளியாகிறது. இதைத்தான் சித்தர்கள் ஞானம் சமைந்தது என்று கூறுகிறார்கள்.

சமைதல் என்பது பக்குவப்படுதல் என்ற பொருள் தரும். அகஉடம்பு சமையும்போது ஞானக் கருவுக்குரிய 'கருப்பக்கிரியை' என்னும் உள்வாங்கும் ஆற்றல் கண் திறக்கிறது. குவளை மலர்வது என்பது இதுவே ஆகும். ஞானக் கன்னி பூப்பெய்தினாள், திரண்டாள், சமைந்தாள் என்றெல்லாம் பல மொழிகளிலே இந்த ஞானச்சடங்கு

பேசப்பெறுகிறது. இதைத்தான் திறத்தின் பொருள் என்பார்கள். அதுவே பேரறிவாகிய ஞானத்திறத்தின் செம்பொருள் ஆகிய பக்குவ நிலையாகும்.

வாடா வகைதான் மகிழ்ந்தெனக் கருளி
கோடா யுதத்தால் கொடுவினை களைந்தே

ஞானப் பேரின்ப அநுபவத்தில் வாட்டம் நாட்டமாகி, நாட்டம் இறையுணர்வோடு ஒன்றுகிற பயிற்சியாகிறது. நாட்டத்தில் வாட்டம் மறைகிறது. பயிற்சியில் நாட்டம் ஒன்றிவிடுகிறது. எனவே வாட்டம் மறைவதற்கும் நாட்டம் முனைப்பில் கூடுவதற்கும் குருவே காரணராகிறார். அந்த ஆசான் தொடக்கப் பாடமாக ஞானக் கல்வியிலே கற்பிப்பது கடைவாய்ப் பல்லைக்கொண்டு செய்கின்ற ஒரு யோகப் பயிற்சி முறையாகும். மூலக்கனல் மேல் எழுந்து செல்வதற்கு இந்தப் பயிற்சியே தொடக்கமாகிறது. இந்தப் பயிற்சியைத்தான் ஞானிகள் கோடாயுதப் பயிற்சி என்பார்கள். அக உடலிலே பற்களின் செயலானது கொம்புகொண்டு செய்கின்ற ஒரு வித்தையாகும். இந்த ஞானச் செயலே வினைகளைக் களைவதற்கு ஆரம்பப் பயிற்சியாகும்.

பல்லின் பயிற்சியும் கண்களின் பயிற்சியும் ஆசான் கற்பிக்கிற முறையில் நடக்க வேண்டும் என்பதோடு கூட, குருவானவன் நேரில் இருந்து அதை வழிப்படுத்தவேண்டிய அவசியமும் கொண்டதாக இந்தப் பயிற்சி அமைந்துள்ளது. வெறும் ஏட்டுப் படிப்பு இந்தப் பயிற்சிக்குத் துணை செய்வதில்லை.

குருவானவன் மாணவனிடம் கருணை கொண்டு அவனுடைய பயிற்சிகள் ஒவ்வொன்றுக்கும் பரிவோடும் மகிழ்ச்சியோடும் வழி நடத்திச்சென்றால்தான், ஞான பரிபக்குவம் ஒருவனுக்குக் கிடைக்கும்.

பொதுவாக வழிபாட்டு முறையிலே இரண்டு வரிகள் கூறப்பட்டுள்ளன. ஒன்று, புறத்தே செய்யும் பூசனை முறை; மற்றொன்று, அகத்தே செய்யும் பூசனைமுறையாகும். திருமூலர் போன்ற சித்தர்கள் இந்த இரண்டுவிதமான பூசனைகளையும் பற்றி விரிவாகப் பாடியுள்ளனர்.

புறத்தே செய்யும் வழிபாட்டுக்கு ஐந்துவிதமான காணிக்கை முறைகள் சொல்லப்பட்டுள்ளன. இவற்றை வடநூலார் 'பஞ்சோப சாரம்' என்ற கூறுவர். அவையாவன : சந்தனமிடுவது, பூக்கொண்டு தூவுவது, வாசனைப்புகை காட்டுவது, சுடர் காண்பிப்பது, படையல் இடுவது ஆகியன.

அகப்பூசனை செய்யும் ஒரு ஞானி இவற்றைச் செய்வதில்லை. அவனுக்குச் சந்தனம் என்பது உலக ஆசையை இறை பற்றாகக் கமழும்படி செய்வது. அவனுடைய படையல் எல்லாம் மனத்தின் செயல்களே. உந்திக் கமலமாகிய தண்ணீரின் இருப்பிடத்தை அவன் மாற்றும்போது தன்னையே படையலாகச் செய்கிறான். அவன் காட்டுகிற வாசனைப் புகை உடம்பிலுள்ள வாயுவைக் கொண்டு நிகழ்கிறது. அபானன் மேல் எழுகிற செயலாகும் அது. ஞானியினுடைய ஆன்ம ஒளி சுடர்காட்டும் செயலாகிறது. வான மயமான

பெருவெளியில் அவனுடைய மனம் ஒன்றும்போது அதுவே அர்ச்சனையாகிறது. இவையே அவனுடைய ஐம்பூதக் காணிக்கையாகும்.

ஐம்புலன்களின் செயலாகிய கேள்வி, ஊறு, காட்சி, சுவை, நுகர்ச்சி ஆகியன ஓசையில் ஒடுங்கும்போது உடலின் செயல் அடங்கிச் சமாதி நிலை கூடுகிறது. அப்படிப்பட்ட ஞான ஒழுக்கம் ஒரு மாணவனுக்கு வசமாகும்போது ஐந்து புலன்களும் வாடா விளக்காக ஒளிவீசத் தொடங்குகின்றன. இதைத்தான் திருமூலர் பாடினார்:

உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்
வள்ளற் பிரானார்க்கு வாய்கோ புரவாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்தும் காளா மணிவிளக்கே

இப்பாடலிலே பெருங்கோயில் என்றும், ஆலயம் என்றும் இரண்டு சொற்கள் வருகின்றன. இவ்விரண்டும் ஒரு பொருள் குறித்த கிளவிகள் அல்ல. ஆலயம் என்பது முழுமையான கோயில். பெருங்கோயில் என்பது கருவறை. சீவன் சிவத்தைப் பூசிக்கும் முறை என்றும், தன்னையே தான் அர்ச்சித்துக் கொள்ளல் என்றும், 'என்னை விட்டென்ன உசாவுதல்' என்றும், இன்னும் பலவிதமாகவும் சித்தர்கள் கூறுகிறார்கள்.

இத்தகைய அக வழிபாடு செய்கின்ற ஞானிகள் புறச் சடங்குகளினின்று விடுபட்டவராவர். அவர்களுக்கு நீரும்பூவும் இந்த உடம்புக்குள்ளேயே உள்ளன. அவர்கள் புறப்பூக்களைப் பறித்து இறைவன் திருவடிகளிலே தூவ வேண்டியவர்கள் இல்லை. மனமாகிய மலர் கொண்டு அர்ச்சிப்பவர்கள் அவர்கள். அவர்கள் ஆடுகிற தீர்த்தங்கள் எல்லாம் உள்ளத்திலேயே சுரந்து பெருகியுள்ளன.

உள்ளத்தின் உள்ளே உளபல தீர்த்தங்கள்

என்று திருமூலர் பாடுவது இந்த அக உலகின் நீர்நிலைகளையே.

சித்தத்தின் உள்ளே சிறக்கின்ற நூல்களில்
உத்தம மாகவே ஓதிய வேதத்தின்
ஒத்த உடலையும் உள்நின்ற உற்பத்தி
அத்தன் எனக்கிங் கருளால் அளித்ததே

என்பது திருமந்திரம்.

இந்த உடம்புக்குள்ளே அகப்பூசனைக்கு வேண்டிய அத்தனை பொருள்களையும் இட்டு நிரப்பி அப்பனாகிய இறைவன் நமக்கு வழங்கியுள்ளான். இந்த இரகசியங்களைத் தெரிந்து வழிபடுவதற்கு அவனே காரண குருவாக வந்து தோன்றுவதும், ஞான குருவாக உள்நின்று உணர்த்துவதும் ஆகிய அருட்செயல்களைச் செய்கிறான். இந்த உண்மையை மேல் வரும் அகவல் அடிகள் தொடர்ந்து உணர்த்துகின்றன.

உவட்டா உபதேசம் புகட்டி என்செவியில்
தெவிட்டாத ஞானத் தெளிவையும் காட்டி

இத்தனை கல்வியையும் செய்ய வேண்டியவன் இறைவனே. அந்தச் செயலுக்கு உரிய வடிவமே விநாயகர்.

தாயுமானவர் தெய்வத்தை 'அறிவான தெய்வமே' என்று பாடுகிறார். அந்த அறிவான தெய்வம் 'சித்தமிசை குடிகொண்டுள்ளது' என்கிறார். அது 'சத்தானது' என்றும், தேடரிய சத்து என்றும் மேலும் கூறுகிறார். இவ்வாறு சித்தத்தில் குடிகொண்டு அறிவுக்கு அறிவை உணர்த்துகின்ற பேருயிர்க் கல்வியானது, தெவிட்டாத தேனாகும். உயிருக்கு அது உவட்டாத உணவு.

அவ்வையார் அறிவுமயமான இந்த ஞான உபதேசத்தை உயிருக்கு உரிய உவட்டாத உணவு என்றும், பருகப் பருகத் தெவிட்டாத ஞானத் தெளிவு என்றும் பாடுகின்றார். தெளிவும் தேறலும் ஞானத் தேனின் சித்தர் மொழிகள்.

உவட்டுகிற அளவுக்கு உணவு உட்கொள்ளுகிற உடம்பு தாமச குணத்தின் வசமாகி, அறியாமையில் உழல்கிறது. ஆனால் ஞான உணர்வு இதற்கு நேர்மாறானது. உலப்பிலா ஆனந்தமாய தேனைச் சொரிகின்ற ஞானத் தாயாகி நிற்கின்றவன் இறைவன். அவன் சித்தமிசை குடிகொண்டு புகட்டுகிற ஞான உணவு அகச் செவியின் வழியே புகுவதாகும். அது உவட்டுவதில்லை. அம்மட்டோடு நில்லாது, பயிலப் பயிலத் தெவிட்டாத தேனாகத் தித்தித்துக் கொண்டே செல்கின்ற தன்மையதாகும்.

இறை முயக்கம் என்பது எல்லையற்ற சுகத்தைத் தருவது. அதனால்தான் ஞானிகள் அந்தச் சுகத்தைப் பேரின்பம் என்றார்கள். மாணிக்கவாசகர் 'குறைவிலா நிறைவே' என்றும், 'கோதிலா அமுதே' என்றும் இந்தப் பேரின்பத்தை வியந்து பாடுகிறார். இத்தகைய உலப்பில்லாத ஆனந்த நிலையைத்தான் ஞானிகள் சித்தயோக நிலை என்றும், சச்சிதானந்த யோகம் என்றும், இரவுபகல் அற்ற இன்பநிலை என்றும் பல மொழிகளில் பாடுகிறார்கள்.

இந்த ஆனந்த நிலைக்கு மனித உயிரை அழைத்துச் செல்கின்றவன் தும்பிக்கை மூர்த்தியே. அதனால்தான் அவனிடம் உவட்டாத உபதேசத்தைப் புகட்டுமாறும், செவியிலே தெவிட்டாத ஞானத் தெளிவைக் காட்டும்படியும் அவ்வையார் வேண்டுகிறார்.

உண்ணுகின்ற தேனை ஊட்டுவது போலே உணர்விலே நுகர்கின்ற தேனைக் காட்டுவதே முறை. காட்டுவது என்றால் உணர்த்துவதும், செய்து காட்டுவதும், துய்ப்பதும் ஆகிய உபதேச நெறியாகும்.

ஐம்புலன் தன்னை அடக்கும் உபாயம்
இன்புறு கருணை இனிதெனக் கருளி

மனம் என்பது ஒன்றைப் பற்றும்பொழுது இன்னொன்றை விட்டு விடுகிறது. இது காரணம் பற்றியே உலகப்பற்றை விட வேண்டுமானால், இறைவனைப் பற்றிக் கொள்வதே வழி என்று ஞானிகள் கூறுகின்றார்கள்.

திருவள்ளுவரும்,

"பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு"

என்று அரியதோர் முறையிலே பாடுகிறார்.

புற உலகிலே மனத்தை ஈடுபடுத்தாமல் அக உலகிலே திருப்பும் பொழுது அதனுடைய மடை மாறிவிடுகிறது. இதனால் இரண்டு பயன்கள் விளைகின்றன. முதலாவது பயன், புற உலகின் கதவு மூடிவிடுகிறது. இரண்டாவது பயன், அக உலகின் கதவு திறந்து விடுகிறது. இது பேரறிவு கொண்டு செய்கின்ற செயல். அதுவே ஐம்புலன் அடக்கம் என்பது. புலனின் வழிச் செல்கின்ற பற்றானது உணர்ச்சியின் பாற்பட்டது. புலனை ஒடுக்கும் வழியில் செல்கின்ற பற்று அறிவின்பாற்பட்டது.

அந்தப் பற்று அறிவு மயமானதாக இருப்பதால் பற்றற்ற இடத்தை நோக்கி அது செல்கிறது. இதுவே இப் பயிற்சியின் நோக்கமாகும். இதைத்தான் 'பற்றற்றான் பற்றைப் பற்றுக' என்று திருக்குறள் ஓதுகிறது. அத்தகைய பற்றைப் பற்றும்பொழுது, புற உலகினை நோக்கிச் செல்லும் இச்சையாகிய பற்று தானாகவே அற்று விடுகிறது. அதுவே ஐம்புலன்களும் அடங்குகிற நிலை. ஞானிகள் கூறுகின்ற பயிற்சி இத்தகைய புலன் அடக்கமே ஆகும். இதைத்தான் அவ்வையார் புலனை அடக்குகின்ற உபாயம் என்கிறார்.

இந்த உபாயம் இறைவனுடைய பற்றின் மேலீட்டனால் நிகழ்வதற்கு வழி செய்கின்ற முறையாக இருப்பதால், இன்புறு கருணையில் இனிதாக இயங்குகின்ற முறையாக அமைகிறது. இதனை விட்டு ஐம்புலன்களை அடக்குவதற்கு ஒருவன் செய்யகூடிய மற்ற முயற்சிகள் எல்லாம் தொல்லை மிக்கன. பயன்தருவனவும் அல்ல. இன்ப மயமான நிலையை நோக்கி முன்னேறுவதற்கு உரிய வழியும், இவ்வாறு இன்ப மயமாகவே இருப்பது இதன் ஒப்பற்ற சிறப்பாகும். பற்றுக்களை விடுவதற்கு வேறில்லை வழி.

**கருவிகள் ஒடுங்கும் கருத்தினை அறிவித்து**
**இருவினை தன்னை அறுத்திருள் கடிந்து**

இந்த உடம்பில் உள்ள தத்துவங்கள் அனைத்தும் புற உலகை நோக்கிச் செல்லும் தன்மையன. கண் வெளியே பார்க்கிறது. அழகான காட்சிகளிலே பார்வை கூடுகிறது. காது வெளி ஒலிகளைக் கேட்கிறது. இனிமையான ஓசையிலே இன்பம் பெறுகிறது. மூக்கானது புற உலகில் இருந்து எழுகிற மணத்தை நுகர்கிறது. நறுமணத்தை அது துய்க்கிறது. நாவானது உண்ணும் பொருள்களை உட்கொள்ளுகிறது. சுவைமிகுந்த பண்டங்களை ஆர்வத்துடன் உண்கிறது. அதனோடு நாவானது உள்ளத்தை வெளிப்படுத்தும் கருவியாக வெளியுலகோடு தொடர்புகொண்டு இயங்குகிறது. உடம்பானது புறப்பொருள்களைத் தொட்டு அனுபவிக்கிறது. மெய்யின் சிலர்ப்பிலே ஆனந்தம் கொள்கிறது.

மனித உடம்பில் உள்ள ஐந்து கருவிகளும் அவற்றின் துணைக் கருவிகளும் புற உலகோடு இயைந்து இயங்குவதே உடம்பின் தன்மையாக விளங்குகிறது. இவ்வாறு தொடர்பு கொள்வதற்கு இந்தக் கருவிகள் புறத்தே நீண்டு செயற்படுகின்றன. இவை ஒடுங்குவதற்குப் பதிலாக எழுந்து இயங்குகின்றன. இந்த இயக்கத்தை உள்முகமாக ஒடுக்க வல்லவனே இறை இன்பத்தில் ஒடுங்குகிற யோகியாவான்.

வழிபாட்டு நெறி, சேவை செய்யும் நெறி, யோகப் பயிற்சி, ஞான ஒடுக்கம் ஆகிய நான்கு வழிகளில் செல்வாருமே, வெளியே செல்கின்ற கருவிகளின் இயக்கத்தைக் கட்டுப்படுத்தி இறை உணர்விலே மனத்தை ஒன்றச் செய்யும்போதுதான் சிற்றின்பமானது பேரின்பமாகிறது. உருவ வழிபாடு செய்பவனும்கூட, தனது வழிபாட்டுச் சடங்கின் உச்சத்திலே இமைகளை மூடிவிடுகிறான் அல்லவா! இதுவே ஒடுக்கம்.

உணர்வின் ஒரு நிலையிலே இமைகள் தாமாக மூடுகின்ற இந்த ஒடுக்கத்தைத் தானே முயன்று, தன் கருத்துப்படி ஒடுக்க முனைகிற கல்வியே சித்தர்கள் கற்பிக்கும் முறையாகும். விநாயகனுடைய திருவருளினால் இத்தகைய ஞானக்கல்வி வாய்க்கப்பெறும்போது, கருவிகளை ஒடுக்கும் உபாயம் கைகூடுகிறது. ஞான விநாயகனாகிய பரம குருவானவன் ஞானப் பயிற்சியின் மூலம் இந்த ஒடுக்கத்தைக் கற்பித்தருளுகிறான். இந்தக் கல்வி மனத்தின் நினைவுகொண்டு கருத்தினால் செய்கின்ற ஒரு வித்தையாகும். இதுவே கருவிகள் ஒடுங்கும் கருத்தை அறிவித்தல் என்னும் ஞானக் கல்வியாம்.

இனி, பிறவிச் சுழலுக்குக் காரணமாக அமைகின்ற நல்வினை தீவினை என்னும் இரண்டு பிணைப்புக்களிலிருந்தும் உயிரானது விடுபட்டால் ஒழிய ஊழி ஊழியாக வருகின்ற மனஇருள் மாய்வதில்லை. தீவினையை இரும்பு விலங்கு என்று அழைத்தால், நல்வினையைப் பொன்விலங்கு என அழைக்கலாம். இரண்டுமே பிறவித் தளைகளே ஆம். நல்வினை நற்பிறவிக்கும், தீவினை தீப்பிறவிக்கும் வித்தாகின்றன. இந்த இரண்டும் அறுப்பதே பிறவி இருளைக் கடியும் வழியாகும். ஞானாசிரியன் இந்த இருவினைத் தளைகளிலிருந்தும் உயிருக்கு விடுதலை தருகிறான்.

தலமொரு நான்கும் தந்தெனக் கருளி

சித்தர்களின் உடல் அமைப்பு இரகசியங்களிலே தலைக்குள் நான்கு முக்கிய இடங்கள் சொல்லப்பெறுகின்றன. இந்த நான்கையும் ஞானத்தலங்கள் என்ற சித்தர் இலக்கியம் அழைக்கின்றது. இந்த நான்கிலும் நான்கு மூர்த்திகள் சொல்லப்பெறுகிறார்கள்.

தலையின் பின் மூளையானது 'சத்தியோசாதம்' என அழைக்கப்பெறுகிறது. இடப்பக்க மூளை 'வாமதேவம்' என அழைக்கப்பெறுகிறது. முன்பக்க மூளை 'தத்புருடம்' எனப்படும். வலப்பக்கத்து மூளை 'அகோரம்' என அழைக்கப்பெறுகிறது. இவையே சதாசிவ மூர்த்தியின் இயக்க நிலைகள்.

மனிதனுடைய மூளையில் உடம்பை இயக்குகின்ற ஆற்றலும், இந்த உடம்பினுக்கு அப்பாற்பட்ட பேராற்றலும், இந்த இரண்டுமே, பொதிந்து கிடக்கின்றன. மனிதனானவன் புற உலகத்தைப் பற்றி நிற்கின்ற இச்சையை ஒடுக்கும்போது, சதாசிவ மூர்த்தியின் ஈசான முகம் முனைப்புக் கொள்கிறது. அது ஒளிமயமானது. சாதாக்கியத்தில் இதனை அமூர்த்தி சாதாக்கியம் என அழைக்கின்றார்கள். இந்த நிலை கைகூடும்பொழுது கவிழ்ந்து இருக்கும் ஆயிரம் இதழ்கொண்ட ஞானத் தாமரையானது நிமிர்ந்து மலரத் தொடங்குகிறது. இதுவே சகஸ்ரதள மலர்ச்சி என்று சித்தர் இலக்கியத்தில் பெயர் பெறுகிறது.

இதனுடைய பயிற்சி முன்னேற்றத்தில் மூர்த்திகளின் நான்கு நிலைகளையும் கடந்து நிற்கும் நிலை சித்திக்கிறது. இந்நிலை கைகூடப் பெற்றவர் நிவர்த்தி கலை, வதிட்டை கலை, பிரதிட்டை கலை, வித்தியா கலை, சாந்தி கலை என்ற நான்கு கலைகளையும் கடந்து விடுகின்றன. இத்தகைய சாந்தியதீதை என்னும் கலையில் சதாசிவத்திற்கு ஆதிக்கம் இல்லை. இந்த ஞான இரகசியங்களை நேர்முகப் பயிற்சியின் மூலம் யோக மாணவன் பெறுகிறான்.

மலமொரு மூன்றின் மயக்கம் அறுத்தே

இறை உணர்விலிருந்து தனி உயிர் வேறுபட்டு இயங்கும்போது தன்முனைப்பு என்கிற ஆணவம் செயற்படுகிறது. அதைத் தொடர்வது தன்முனைப்போடு கூடிய செயலாகிய கன்மம். இவற்றிற்கு அடிப்படையாக அமைவது, தான் வேறு பரம்பொருள் வேறு என்கிற மயக்கமாகிய மாயை. இந்த மூன்றையும் பெரியோர்கள் மும்மலங்கள் என்றனர். ஞானத்தெளிவு கைகூடும்பொழுது ஆணவம், கன்மம், மாயை ஆகிய மூன்று மலங்களின் மயக்கமும் அறுந்துவிடுகிறது. தன்னலம் மாறிப் பிறர்நலம் பேணும் தன்மை மிகுகிறது.

மக்கள் தொண்டே மகேசன் தொண்டு என்ற மகத்தான கொள்கையிலே ஈடுபடுகின்ற ஒரு சமுதாய ஊழியனும்கூட, இத்தகைய பொது நலத் தொண்டிலே முன்னேற அவனுடைய ஆணவமலம் கரைவதோடு, அவனுடைய தன்னலக் கருமமும் மாறி நீங்கி விடுகிறது. பிறர் நலமே தன்னலம் என்ற முனைப்பிலே, தான் வேறு பிறர்வேறு என்ற மாயையும் அறுந்துவிடுகிறது. அந்நிலையில் அவனும் அப் பரம்பொருள் உணர்விலே ஒன்றியவனே ஆகிறான். இது சாதாரண நிலையில் உள்ள வழிபாடுகள் என்ற சடங்குகள் இல்லாத, இறைவனிடம் நம்மை அழைத்துச் செல்கிற, தொண்டு நெறியாகும். இந்நெறியிலும் மும்மலங்கள் அறுகின்றன.

இனி, ஓர் உருவத்தை வழிபடுகிறவன் அதனுடைய அழகிலும் அதற்குச் செய்கின்ற சடங்குகளிலும் ஒன்றும்பொழுது, ஆணவம் நீங்குகிறது. செயல் அனைத்தும் வழிபாடாவதால் கருமமும் மாறி நீங்குகிறது. தான் வேறு பரம்பொருள் வேறு என்ற மயக்கம் ஒழிவதால், மூன்றில் மற்றொரு மலமாகிய மாயையும் நீங்கிவிடுகிறது. இது வழிபாட்டு நெறியிலே மும்மலம் அகல்கிற முறை.

யோகியும் ஞானியும் முழுமையான முயற்சியோடு, தங்கள் பயிற்சியின் மூலம் சித்தர்கள் காட்டிய முறையிலே, யோகத்தையோ ஞானத்தையோ பயின்று, மூன்று மலங்களையும் களைந்து கொள்கிறார்கள்.

ஆகவே இறை உணர்வுக்கு அடிப்படையாக வேண்டப்படுவது மும்மல நீக்கமே ஆகும். விநாயகன் அந்த மும்மல நீக்கத்தை செய்து அருளுகிறான்.

ஒன்பது வாயில் ஒருமந் திரத்தால்
ஐம்புலக் கதவை அடைப்பதுங் காட்டி

இந்த உடம்புக்கு ஒன்பது வாயில்கள் உள்ளன. அவையாவன: கண்கள் இரண்டு, செவிகள் இரண்டு, மூக்கின் புழைகள் இரண்டு, வாய்

ஒன்று, ஆதனம் ஒன்று, குறி ஒன்று. இந்த ஒன்பது வாயில்களைச் சொல்லும்பொழுது, சித்தர்கள் மனித உடம்பை ஒன்பது வாயில் கோட்டை என்றே அழைக்கிறார்கள்.

ஐம்புலன் என்பது ஓசை, ஊறு, காட்சி, சுவை, நாற்றம் ஆகிய ஐந்தையும் அறிகின்ற அறிவாகும். ஒரு மந்திரம் என்பது பிரணவத்தை.

ஐம்புல அறிவு, ஒன்பது வாயிலையும் பயன்படுத்துகிறது. போக்கு வரவு என்பது ஐம்புல அறிவுக்கு இந்த ஒன்பது வாயில்களேயாம்.

சித்தர்கள் நேர்முகமாகச் சொல்கின்ற ஞான இரகசியக் கல்வியானது, ஒரு நுட்பமான பயிற்சியின் மூலம் இந்த ஒன்பது வாயில்களையும் போக்குவரவாக உடைய ஐம்புலக் கதவை அடைத்து விடுகிறது. ஐம்புலக் கதவைத் திறந்துகொண்டு வரும்போதுதான் உடலறிவானது ஒன்பது வாயிலின் வழியே செயற்படுகிறது. எனவே ஐம்புலக் கதவை அடைத்துவிட்டால் இந்த ஒன்பது வாயல்களிலும் போக்குவரத்து நின்றுவிடுகிறது. எப்படி என்றால், கண்பார்வையானது புறத்தே ஓடுவதில்லை. செவியின் கேள்வியானது புறஉலகைப் பற்றுவது இல்லை. நாசியின் நுகர்ச்சி உள்ளொடுங்கி விடுகிறது. சரங்கள் என்னும் சுவாசம் ஒரு குறிப்பிட்ட சட்டத்தின் கீழ் உள்ஒடுங்கிவிடுகிறது. நாவானது மோன நிலையிலே ஒன்றிவிடுகிறது. காம இச்சை அடங்கிவிடுவதால் எட்டாவது வாயிலும் அடைத்துவிடுகிறது. ஆதனவாயிலோ என்றால் கீழ்முகமாகச் செல்கின்ற அபானன், மேல் நாடியோடு சென்று ஒடுங்கிவிடுகிறது. ஆகவே ஐம்புலக்கதவும் அடைத்து ஒன்பது வாயில்களும் மூடிவிடுகின்றன. இந்த மாபெரும் சாதனையைச் செய்கிற கலை ஒப்பற்ற ஒரே மந்திரமான பிரணவத்தின் கலையாகும். இந்த ஓர் மந்திரக் கலையை அடுத்த வரிகள் மேலும் விளக்குகின்றன.

ஆறா தாரத்து அங்குச நிலையும்
பேறா நிறுத்திப் பேச்சுரை அறுத்தே

இந்த அடிகளில் அங்குச நிலையும் என்பது, அங்கிசை நிலையும் என்று சிவயோகியார் போன்ற சில ஞானிகளின் பாடமாகக் காணப்படுகிறது.

ஆறு ஆதாரங்களில் உள்ள ஆற்றலை விளக்குகின்ற சித்தர்கள், மனித மனமானது மதம் கொண்ட யானையைப் போல் உலக இச்சைகளிலே திரியாதவாறு அதை நெறிபடுத்தும் அங்குசமாக விளங்குகிறது என்று கூறியிருக்கிறார்கள். அங்குசம் என்ற பாடத்தைக் கொண்டோமானால் ஆறு ஆதாரங்களின் ஆற்றல் எழுந்து செயற்படுகின்ற முறையைப் பரமகுரு விளக்குகிறான் என்று கொள்ள வேண்டும்.

அங்கிசை நிலையும் என்ற பாடத்தைக் கொண்டோமானால், அங்கு-இசை-நிலையும் என்று பிரித்து ஆறு ஆதாரங்களின் இயக்கத்தினால் எழுகின்ற இசை போன்ற இனிய ஒலியை இத்தொடர் குறிப்பதாகப் பொருள் கொள்ள வேண்டும்.

சிவயோகி இரத்தினசபாபதியார் போன்ற சில பெரியோர்கள் இப்பொருளையே கூறியுள்ளார்கள். அப்பொருளின் தொடர்பாகவே அடுத்த அடியில் வருகின்ற 'பேச்சு உரை அறுத்தே' என்னும் சொற்களுக்குப் பொருள் மொழிகிறார்கள்.

சகஸ்ரதளம் என்ற ஆயிரம் இதழ்த் தாமரை ஞானப் பயிற்சியின் மூலம் மலரும்போது, அதாவது ஆறு ஆதாரங்களிலே நடைபெறுகின்ற ஞானத் தொழிலின் விளைவாக இந்தத் தாமரையானது மலரும் பொழுது, அங்கே நாதம் உதிக்கிறது. சக்கரதளம் என்று அழைக்கப்பெறுகிற இந்தத் தாமரையிலே மனம் நிலைபெற்றால், பிரணவத்தின் ஆற்றலாகிய நாதமும் ஒரு முன்னேற்ற நிலையில் ஒய்ந்துவிடும். அதனைத்தான் சித்தர்கள் நாதாந்தம் என்று குறிப்பிடுகிறார்கள். அப்போது கண்கள் காணுவதில்லை. செவிகள் கேட்பதில்லை. ஞானப் பெருநெறியாகிய மோன ஒடுக்கத்தில் இந்த இயல்பைத் திருமூலர் தமது திருமந்திரத்திலே மிக அழகாகப் பாடுகிறார்:

காணாத கண்ணுடன் கேளாத கேள்வியும்
கோணாத போகமும் கூடாத கூட்டமும்
நாணாத நாணமும் நாதாந்த போதமும்
காணாய் எனவந்து காட்டினன் நந்தியே

என்று, தமது ஞானாசிரியனாகிய பரமகுரு நந்திதேவர் தமக்கு ஞானத்தை வழங்கிய நிலைபேறான பேரின்பக் கல்வியை, வியந்து பாடுகிறார்.

இடைபிங் கலையின் எழுத்தறி வித்துக்
கடையிற் சுழுமுனை கபாலமுங் காட்டி

சித்தர்கள் இலக்கியத்தில் உள்ள மந்திர இரகசியம் என்னவென்றால் இடைநாடி, பிங்கலைநாடி என்ற இரண்டு நாடிகளுக்கும் இரண்டு எழுத்துக்களே அதிர்வு நிலைகளாம். இடைநாடியின் அதிர்வுநிலை மொழியின் முதல் எழுத்தாகிய அகரம். பிங்கலையின் அதிர்வு நிலை உகரமாகும். ஞானம் பயில்கின்ற மாணவனுக்கு இந்த இரண்டு நாடிகளும் பேசத் தொடங்கும்போது அகரமும் உகரமும் அதிரத் தொடங்குகின்றன. இந்த இரண்டு அதிர்வுகளும் 'தொழிற்பட ஆரம்பித்ததும், தலையின் மண்டை ஓட்டிலே, அதன் நடுவிலே உள்ள ஒலி அதிர்வு தொடங்கி விடுகிறது. அந்த அதிர்வுநிலை மகரமாகும். இந்த மூன்று அதிர்வுகளும் சேர்ந்ததே அ, உ, ம ஆகிய மூன்று எழுத்துக்களும் இணைந்த பிரணவ ஒலியாகும். எனவேதான் இடைகலை, பிங்கலை இவற்றைக் காட்டி நடுவொலியாகிய மகரத்தைக் குருநாதன் காட்டுகிறான் என்று சொல்லப்படுகிறது: இந்த நடுஒலியின் பிறப்பிடமே சுழுமுனையாகும். இது இயங்குகின்ற உச்சிமுடிவே கபாலம் என்ற மண்டை ஓட்டின் நடுப்பகுதியாகும்.

மூன்றுமண் டலத்தின் முட்டிய தூணின்
நான்றெழு பாம்பின் நாவிலு ணர்த்தி

சுழுமுனையின் அதிர்வுநிலையைப் பிரம்மப்புழை என்று சித்தர்கள் அழைக்கிறார்கள். இது குருநாதனால் நேர்முகமாகக் காண்பிக்க வேண்டிய பேரறிவுத் தளமாகும். இதில் நினைவு முழுவதையுங்

ஒடுக்குவதே ஞானானந்த யோகம் என்பது. இவ்வாறு சுழுமுனை நாடியின் இறுதியில் விளங்குகின்ற பிரம்மப்புழையை உணரத் தொடங்கும்பொழுது, குண்டலினியின் ஆற்றல் வளர்ந்தோங்குகிறது. இந்த ஆற்றலையே சித்தர் இலக்கியம் நீண்டு விரிந்த பாங்கிலே பற்பல உவமைகளோடு விளக்கிச் சொல்கிறது.

மனித உடம்பிலும் மூன்று மண்டலங்கள் உள்ளன. அவை சூரியன், சந்திரன், அக்கினி என்று பெயர் பெறுவன. இந்த மூன்று மண்டலங்களிலும் பொருந்திக்கொண்டு தூண்போன்று நிற்பதே உடம்பினில் உள்ள முதுகெலும்புத் தண்டாகும். இதை வீணாதண்டம் என்று சித்தர் இலக்கியம் பேசும். இந்த வீணாதண்டத்தின் அடியிலே குண்டலினி என்னும் ஆற்றல் தூங்கிக் கொண்டு இருக்கிறது. முதுகுத் தண்டின் வடிவம் பாம்பு போன்றது. அதன் முடிவாகிய பாம்பின் நாவிலே குண்டலினி ஆற்றல் துயில்கிறது. இந்தப் பேருண்மையை ஞானகுரு உணர்த்துகிறான். இதையே முதுகுத்தண்டாகிய தூணிலே தொங்கிக் கொண்டிருக்கின்ற பாம்பின் நாக்கு என்று கூறிக் குண்டலினி ஆற்றலைச் சித்தர்கள் உருவகப் படுத்துகிறார்கள்.

குண்டலி யதனில் கூடிய அசபை
விண்டெழு மந்திரம் வெளிப்பட உரைத்து

குண்டலி என்னும் ஆற்றலானது முதுகுத் தண்டிலே தொங்குகின்ற பாம்பின் நாவிலே உள்ளது. அதை எழுப்பினால் அந்த ஆற்றலானது முதுகுத்தண்டின் வழியே மேலெழுந்து சென்று, உள்நாக்கு இயங்குகிற நிலையில் வந்து தொடுகிறது. இது சித்தர்களின் மிகப்பெரிய பயிற்சி முறையாகும்.

அசபை என்றால் ஜெபிக்க முடியாதது என்று பொருள்படும். அஜபா மந்திரம் என்பது உச்சரிப்பைக் கடந்த மோனமந்திரமாகும். அது சொற்களைக் கடந்த அதிர்வுநிலை. வாயினால் சொல்ல முடியாத இந்த அதிர்வாகிய 'வைபிரேஷ'னை **(VIBRATION)** குருவானவன் வாயினால் சொல்லாமல், கையினால் தொட்டு அதிர்வெழும்படியாக அசைக்கச் செய்கிறான். இதுவே அஜபா தந்திரம் என்ற பயிற்சி முறை. இந்த அதிர்வை ஞானகுரு செய்து காட்டும்பொழுது, வீணாதண்டத்தின் அடியிலே அடைத்துக் கிடந்த ஆற்றல் விழித்தெழுந்து, வெளிக்கிளம்பி, மேலே செல்லத் தொடங்குகிறது. இந்த ஞானக் கல்வியைத்தான் பேசாத பேச்சு என்றும், அஜபா மந்திரம் என்றும் சித்தர் இலக்கியம் அழைக்கிறது.

குண்டலியில் கூடியிருக்கின்ற அசைபையாகிய அதிர்வை மேலெழும்பச்செய்வதே ஞானகுரு உணர்த்துகின்ற மூடு மந்திரம். அதன் இயக்கம் வெளிப்படையாகத் தொழிற்படத் தொடங்குவதால் அந்தப் பயிற்சி முறையின் உபதேசத்தை 'அசபை விண்டெழு மந்திரம் வெளிப்பட உரைத்து' என்று அவ்வையார் பாடுகிறார்.

மூலா தாரத்து மூண்டெழு கனலைக்
காலா லெழுப்பும் கருத்தறி வித்தே

வீணா தண்டத்தின் அடியில் மூலாதாரத்தில் துயில்கின்ற ஆற்றல் கனல் போன்றது. அந்தக் கனலை மேலெழுப்பி, முதுகந் தண்டின்

வழியாக ஆற்றுப்படுத்துகின்ற சித்தர்களின் பயிற்சி முறையை, முதலாவது தொகுதியில் மூலக்கனல் என்ற தலைப்பிலே விரிவாக ஆராய்ந்து பார்த்திருக்கிறோம். அந்த இரகசியப் பயிற்சியாகிய சித்தர் கல்வியையே அவ்வையார் இங்கே குறிப்பிடுகிறார். இதையொட்டி உடம்பின் சில அடிப்படை இரகசியங்களை இங்கே குறிப்பிட வேண்டியது அவசியமாகும்.

அ என்ற எழுத்து இடைநாடி. இது இடக்கண் பார்வையோடு பொருந்தியது.

உ என்ற எழுத்து பிங்கலை நாடி. இது வலக்கண் பார்வையோடு பொருந்தியது.

ம என்பது சிரசின் உச்சியிலே உள்ள அதிர்வுநிலை. இதுவே சுழுமுனை நாடியில் உள்ள ஆன்ம ஒளியாகும். இந்த இரகசியத்தையே சித்தர்கள் மூன்று மண்டலங்கள் என்று குறிப்பிடுகிறார்கள்.

இனி மூலக்கனலைக் காலால் எழுப்புவது என்ற பயிற்சி உத்தியைப் பற்றி ஆயும்பொழுது, திருமூலருடைய திருமந்திரத்தை ஒப்பு நோக்குதல் பயனுடையதாகும்.

மூலத் துவாரத்து மூளும் ஒருவனை
மேலைத் துவாரத்து மேலுற நோக்கிமுற்
காலுற்றுக் காலனைக் காய்ந்தங்கி யோகமாய்
ஞாலக் கடவூர் நலமாய் இருந்ததே

இந்தத் திருமந்திரத்திற்குப் பொருள் சொல்லுகிற பல பெரியோர்கள், மூலக் கனலைக் காலால் எழுப்புவதே காலனைக் காலால் உதைக்கின்ற உத்தி என்றும், மரணமில்லாப் பெருவாழ்வுக்கு வழி என்றும் சொல்லி, திருக்கடவூர்த் தலத்தின் புராணக் கதையின் உருவகம் இதுவே என்று விளக்குகிறார்கள். சிவயோகி இரத்தின சபாபதியார் இந்த உத்தியைப் பற்றி விளக்கும்பொழுது கீழ்கண்டவாறு கூறுகிறார்:

"சுழுமுனை என்பது மூலாதாரத்திலிருந்து முதுகந் தண்டின் ஊடே இடைகலை பிங்கலை வழியே செல்லும் ஒரு நாடி. இடதுநாடி இடது கால் பெருவிரலிலும், பிங்கலா நாடி வலதுகால் பெருவிரலிலும் புகுந்து, குறி இரத்தாசயம் தாண்டி, சிரசின் உச்சியில் சுழுமுனா நாடியுடன் கலக்கிறது. இது மூன்று வட்டங்களாகச் சுற்றி, மேலே இரண்டு பாம்புகள் எதிர்முகமாய் நிற்பதுபோல், நாகப் பிரதிஷ்டையில் விளக்கப்பட்டிருக்கும். சிரசுக்குமேல் மூன்று நாடிகளும் ஒளிவடிவாகக் கலந்து பின்னிக் கொள்கின்றன. அங்கு நாடியற்ற ஆகாய வெளிப்பாதையும் உள்ளது".

அமுத நிலையும் ஆதித்தன் இயக்கமும்
குமுத சகாயன் குணத்தையும் கூறி

இந்த உடம்பினுள் உள்ள உயிர் இயக்க நிலைகள் சித்தர் இலக்கியத்தில் ஞான மையங்கள் என்ற சிறப்பைப் பெறுகின்றன. இந்த மையங்களை மாணவர்களுக்கு உணர்த்தி, இவற்றின் இயக்கத்தின் மூலமான ஆன்ம ஆற்றலை வளர்ப்பதே, சித்தர் இலக்கியம் தோன்றிய

தன் குறிக்கோளாகும். இந்தக் கோணத்திலிருந்து பார்க்கும்போது, விநாயகர் அகவலில் உள்ள இனிவரும் வரிகளுக்கு, ஆன்ம முக்கியமும் பயிற்சி இரகசியத்தை உள்ளடக்கிய பெருமையும் உண்டு.

நித்திய வழிபாட்டிலே விநாயகர் அகவலை ஓதிவருகின்ற பக்தர்கள், மேலே வருகின்ற அகவற் பகுதியின் பொருளைப் பற்றிக் கவலைப் படுவதில்லை. ஏனென்றால் இந்த அடிகளின் பொருள் வெறும் நிகண்டுப் பொருள் அன்று.

அவ்வையின் குறளிலும், ஞானசரநூல், அகத்தியர் ஞானம், ஆன்மயோகப் பயிற்சி முறைமை போன்ற சித்தர் இலக்கியங்களிலும், விரிவாகக் கூறுப்பட்டுள்ள ஞானக் கல்வியின் பயிற்சிமுறை தெரிந்தவர்களுக்கே, இந்த அடிகளின் பொருள் ஓரளவு புலனாகும். ஓரளவு என்று குறிப்பிடுவதன் நோக்கம் என்னவென்றால், கருத்தைப் புரிந்து கொள்வதோடு இந்த வரிகளின் உட்பொருள் அமைந்து விடுவதில்லை. அந்தக் கருத்துகளுக்கு நிலைக்களனாக உள்ள உடம்பின் ஞான மையங்களை, ஒரு சித்தன் நேர்முகமாக இருந்து தொட்டு உணர்த்தினாலன்றிக் குழப்பங்கள் ஏற்பட்டு, ஆன்ம நிலையங்களின் மைய வரிசை மாறிப் போய்விட இடமுண்டு. அப்படி மாறிவிட்டால் 'பிள்ளையார் பிடிக்க குரங்காக முடிந்த' கதையாகிவிடும்.

அவ்வையின் அகவலிலே உள்ள இந்தப் பகுதிக்குப் பொருள்கூற முனைகிற பெரியோர்கள், இந்த எச்சரிக்கையை முன்மொழிந்தே செய்யுளுக்குப் பொருள் சொல்லத் தொடங்குகிறார்கள். அப்படிச் சொல்லப்பட்டுள்ள பொருளின் அடிப்படையை ஓரளவு இங்கே ஆராயலாம்.

'அமுதநிலை' என்று இங்கே குறிக்கப்பெறுவது, உடம்பின்கண் உள்ள உயிர்ச்சுரப்பிகளிலிருந்து ஞானநீர் சுரந்து வருகிற மையத்தின் இருப்பிடத்தையே ஆகும். இந்த நிலையத்தைத் தெளிந்துணர்ந்து, இவ்விடத்திலே செய்ய வேண்டிய பயிற்சிகளை மேற்கொள்ளும் பொழுது, மரணமில்லா பெருவாழ்வுக்குரிய வாயில் திறக்கிறது.

'ஆதித்தன் இயக்கம்' என்பது இந்த உடம்பினுள் இயங்குகிற சூரியனின் தொழிலையே ஆகும். பிங்கலை நாடி, வலக்கண், வலது நாசி, உடம்பின் வலப்பகுதியில் உள்ள நரம்பு முடிச்சுக்கள், ஆகியவற்றிலே செயற்படுகிற சூரியனின் தொழிலே, ஆதித்தன் இயக்கம் எனப் பெயர் பெறுகிறது. இந்த ஆதித்தன் சித்தர்களின் மொழியிலே பிண்டாதித்தன் என்று பெயர் பெறுகிறான்.

'அண்டத்தில் உள்ளது பிண்டத்திலே' என்னும் சித்தர் மொழிக்கு ஏற்ப, புற உலகில் இயங்குகிற சூரியனைப் போன்று இந்த உடம்பாகிய அக உலகிலும் சூரியன் தொழிற்படுகிறான். இந்த உண்மையைத் தான் திருமூலர் போன்ற சித்தர்கள் அண்டாதித்தன் நிலை, பிண்டாதித்தன் நிலை என்று வேறு பிரித்துக் கூறுகிறார்கள்.

இனி, குமுத ச்சாயன் என்ற தொடர் சந்திரனைக் குறிப்பது. சூரியன் தாமரையின் சகாயன் ஆவான். சந்திரன் குமுத சகாயன் ஆவான். தாமரை உதய மலர். குமுதன் அல்லில் (அல்-இரவு)

மலர்கின்ற அல்லிமலர். அல்லி என்ற சொல் 'அல்' என்பதன் அடியாகப் பிறந்தது. தாமரையைப் பகற்பூ என்றும், குமுதத்தை அல்லி என்றும் அழைப்பது இது காரணம் பற்றியே ஆகும்.

குமுத சகாயனாகிய சந்திரனின் இயக்கம் இடைகலை, இடக்கண், இடநாசி, உடம்பின் இடப்பக்கத்து நரம்பு முடிச்சுக்கள் ஆகிய மையங்களாம்.

ஞான குருவானவன் இந்த உடம்பின் நுட்பங்களை மாணவனுக்கு உணர்த்தும்பொழுது, இந்த உடம்பிலே அமுதம் விளைகிற பாற்கடல் எங்கிருக்கிறது என்பதையும், சூரியன் இயங்குகின்ற உடல் மையங்களையும், சந்திரன் இயங்குகின்ற மையங்களையும் கையினால் தொட்டுக் காட்டுகிறான். அப்படிக் காட்டும்பொழுது, உடம்பின் இடப்பக்கத்தில் இயங்குகின்ற சந்திரனுடைய பதினாறு கலைநிலைகள் மாணவனுக்குப் புலனாகின்றன. இதனைத்தான் அடுத்தவரி குறிப்பிடுகிறது.

இடைச்சக் கரத்தின் ஈரெட்டு நிலையும்
உடற்சக் கரத்தின் உறுப்பையுங் காட்டி

உடம்பின் இடப்பகுதியிலே உள்ள சந்திர நிலைகளாகிய பதினாறையும் உடம்பாகிய இயந்திரத்தின் ஐந்து கோசங்களையும், அவை பொருந்துகிற நுட்பங்களையும் ஞானாசிரியன் விளக்கிக் காட்டுகிறான். அதனோடு,

சண்முகத் தூலமும் சதுர்முக சூக்கமும்
எண்முக மாக இனிதெனக் கருளி

'சண்முகம்' என்றது, ஆறு ஆதாரங்களாகிய ஆறு முகங்களை இந்த ஆறு ஆதார நிலைகளையும், அவற்றில் ஒளிர்கின்ற சூக்குமங்களாகிய நான்கு அந்தக் கரணங்களையும், எனது உடம்பின் வாயிலாகவே எனக்கு உணர்த்தி என்பது இந்த வரிகளின் பொருள்.

புரியட்ட காயம் புலப்பட எனக்குத்
தெரிஎட்டு நிலையும் தெரிசனப் படுத்திக்
கருத்தினிற் கபால வாயில் காட்டி
இருத்தி முத்தி இனிதெனக் கருளி
என்னை அறிவித்து எனக்கருள் செய்து

மனம், புத்தி, சித்தம், ஐம்புல நுகர்வுகள் ஆகிய அனைத்தும் இயைபு கொண்டுள்ள நுண்ணுடலை, ஆகாயதேகம் என்று சித்தர் இலக்கியம் அழைக்கிறது. இதையே 'புரியட்டகம்' என்று அழைப்பது சித்தர் மரபாகும். அட்டகம் என்பது எட்டின் தொகையாகும். அந்த எட்டாவன, தேகத்திலுள்ள ஏழு நிலைகளும், துவாதசாந்தமும் சேர்ந்தது. இத்தகைய புரியட்டகத்தைப் புலனாகும்படி செய்து, எட்டு நிலைகளையும் காட்டி, 'பிரம்மப்புழை' என்று அழைக்கப்படுகிற கபால வழியையும் திறந்துகாட்டி, அந்த நிலையிலே மாணவனாகிய என்னை நிலைநிறுத்தி, என் உடம்புக்குள்ளே நான் இதுவரை தெரிந்துகொள்ளாத நுட்பங்களை எனக்கு உணர்த்தி, அதாவது என்னை எனக்கு அறிவித்து, அந்தப் பேரின்பத்திலே என்னை நிலை நிற்குமாறு செய்து - என்பது இவ்வரிகளின் பொருள்.

இந்த பகுதியை நன்கு ஆராய்ந்து மிக அழகான, ஆழமான முறையிலே ஞானவிளக்கம் எழுதியுள்ளார் சிவயோகியார். இது பல நுட்பங்களைத் தன்னுள் பொதிந்து தருகிறது. அந்தப் பகுதியை அப்படியே கீழே தருகிறேன்:

சூரியனுடைய ஒளியில் சிவசக்தி என்ற மூலப்பொருள் கலந்துள்ளது. அதுவே உயிர்வாழ்வனவற்றிற்கெல்லாம் ஆதாரமாக உள்ளது. மூலப்பொருள் நமது தூலக் கண்ணுக்குப் புலப்படாமல் உள்ளது. நாம் காண்பது சூரியனின் ஒளியைத்தான். நாம், நம் உடலில் அம்மூலப் பொருளை ஏற்றுக்கொண்டே உயிர் வாழ்கிறோம். மனிதனிடம் குண்டலினி சக்தி, ஜீவசக்தி, இரண்டும், கவிழ்ந்துள்ள மூலாதாரத்தின் வழியாக வெளியிலிருந்து உள்புகுகின்றது. பிராண சக்தி மண்ணீரல் **(Spleen)** வழியாக உட்புகுகிறது. புகுந்து, அது அங்கு ஐந்து வாயுக்களாகப் பிரிந்து, உடலில் வெவ்வேறு இடத்தையடைந்து, வெவ்வேறான தொழில்களைச் செய்கின்றது.

இது மஞ்சள் ஒளியுடன் பொருந்தி, இரத்தாசயத்தையடைந்து, இரத்த ஓட்டம், சுவாசப்பை இவற்றின் வேலைகளை நடத்தும். தேகத்திற்கு மூச்சும் இரத்த ஓட்டமும் சூரியனொளியால் உண்டாவதால் அவன் சிறப்பொளி மஞ்சள் நிறம் ஆதல் பற்றி, இதன் இயக்கம் பொருந்திய நாடியைப் பிங்கலா (பொன்) நாடி என்று பெயரிட்டனர். வாயு பரிசத்தால் உணரப்படுவது. நாடி அந்த ஆற்றல்கொண்ட நரம்பாற்றலாகும். பிராண சக்தியின் ஒவ்வொரு பகுதிக்கும் வெவ்வேறு பெயரானபடியால், பிராண சக்தியின் ஒரு பிரிவே பிராணவாயுவாக இதயம் சுவாசப்பைகளில் தொழிற்படுகிறது. வலக்கண் ஒளியிலும் நாடியாக இயங்குகின்றது. தேகத்தின் இதயத்திற்கு அதிபராக உள்ளவரை 'அகோர ஹ்ருதயாய நம' என்று வலப்பக்கம் சிரசில் நியாசம் செய்கின்றனர்.

பஞ்ச வாயுக்களில் இரண்டாவது கிச்சிலிச் சிவப்பு நிறங் கொண்டது. அது மூலாதாரத்துட் சென்று, மலம், ஜலம், விந்து இவற்றை கழிக்கும். இதன் ஆதிக்கம் இடக்கண்ணில் இடாநாடியாக மூளைக்குச் செல்லுகிறது. அதனால் இடப்பக்க மூளையில் 'வாமதேவ குஹ்யாய நம' என்று நியாசம் செய்கின்றனர்.

மூன்றாவது, பச்சை நிறங்கொண்டது. அது நாபிச் சக்கரத்தில் (மணிபூரகத்தில்) வேலை செய்து, உண்ட அன்னத்தைச் சீரணிக்கச் செய்யும். இதன் ஆதிக்கம் நடுநெற்றியில் உள்ளபடியால், அந்த இடத்தில் 'தத்புருஷ வந்தரரய நம' என்று மந்திரம் கொண்டு நியாசம் செய்கின்றனர்.

நான்காவதான உதானவாயு தொண்டைச் சக்கரத்தில் விளங்கிப் பேசும் சக்தியை யளிக்கிறது. இது நீலத் தடாகத்தில் நிலவொளி போல் உள்ளது. குண்டலினி குரு காட்டும் நெறியில் கண் பார்வை ஒன்றுபட்டு விளங்கும்போது, முகத்தின்முன் நீலவொளி விளங்கும். அப்போது சந்திரனாதிக்கம் பெற்றவராவர். அப்போது, சிரசில்நாத முழக்கமும் நீலவொளியும் விளங்கும். இதுவே பிரணவ உதிப்பின் அநுபவம் தொடங்கும் நிலையாகும். இந்த நிலை கைவரப்

பெற்றவர்க்கு வீரியம் காலக் கிரமத்தில் வற்றிப்போகும். இதுவே திருப்பாற்கடல் கடைந்த இரகசியமாகும். முன்னர்க் கருமையான ஒளியே பின்னர் நீலவொளியாக மாற்றமடைந்து, தேகத்திற்கு அமுத ஊற்றாக மாறுகிறது.

அண்டமோ டெண்டிசை தாங்கும் அதோமுகங்
கண்டங் கறுத்த கருத்தறி வாரில்லை
உண்டது நஞ்சென் றுரைப்பர் உணர்விலோர்
வெண்டலை மாலை விரிசடை யோற்கே

- திருமந்திரம்

செய்தான் அறியுஞ் செழுங்கடல் வட்டத்துப்
பொய்யே யுரைத்துப் புகலும் மனிதர்கள்
மெய்யே யுரைக்கில் விண்ணோர் தொழச்செய்வன்
மைதாழ்ந் திலங்கு மிடறுடை யோனே

- திருமந்திரம்

ஐந்தாவதான வியான வாயு இளஞ்சிவப்பு நிறத்துடன் உடம்பு முற்றிலும் நரம்பாற்றலாக உள்ளது. இதன் ஆற்றலே தேகத்திற்கு வலுவை அளிக்கிறது.

மூளையின் வலுவும் வலுக்குறைவும் புருவ நடுவிலுள்ள வெற்றிச் சக்கரத்தைப் பொறுத்துள்ளன. இது நெற்றிக்கு நேரே ஒரு முழம் நீண்டவொளி காணும்போது, யோகியின் இச்சையுடம்பு மாற்றமடைவதைக் காணலாம். இந்த மாற்றத்தினால் ஆறாதாரங்களும் வளர்ச்சியுறும்:

பிரணா சக்தியின் பஞ்ச வாயுக்கள்

| எண் | வாயு | நிறம் | மண்ணீரலிருந்து நோக்கிச் செல்லும் சக்கரம் | வேலை |
|---|---|---|---|---|
| 1. | பிராணன் | மஞ்சள் | இதயம் | இரத்த ஓட்டம், சுவாசம் |
| 2. | அபானன் | கிச்சிலிச் சிவப்பு | குதம், குய்யம் | மலம், ஜலம், விந்து பாகம் பண்ணல் |
| 3. | சமானன் | பச்சை | நாபி | ஜீரணம் |
| 4. | உதானன் | கருநீலம் | கழுத்து | குரல், பேச்சு |
| 5. | வியானன் | இளஞ் சிவப்பு | மண்ணீரல் | நரம்பு, மூளை பண்படுதல் |

இந்த சூரியவொளியில் விளங்கும் சிவசக்தியைச் சூக்ஷ்ம திருஷ்டியில் கண்ட முன்னோர்கள், சிவலிங்கமாக அமைத்து வழிபட்டனர். அதைச் சங்கேத குறியாக எழுத்தாலும் விளக்கினர். சூரியவொளியில் செங்குத்தாக இயங்கும் ஆற்றலுள்ள அணுக்களும், வட்டமாகப் பறந்து செல்லும் அணுக்களும் பொருந்திய சேர்க்கையாலே, உலகம் பல்வேறு வகையாகப் படைக்கப்பட்டுள்ளதென்பதைக் கண்டுள்ளனர். செங்குத்தாக மேலும் கீழும் சென்ற கொண்டிருப்பதை ஆண் அணு

வென்றும், வட்ட வடிவமாக மையத்தினின்றும் பிரிந்து சுற்றுவதைச் சத்தி என்றும் கண்டனர். இந்த அடிப்படையைக் கொண்டு தத்துவ உண்மையை விளக்கினர்.

அ என்றபோது சுழி, வட்டம், படுக்கைக் கோடு, செங்குத்துக்கோடு ஆகிய நான்கு உறுப்புகளும் ஒருங்கிணைந்துள்ளன. உ என்றபோது சுழியின் பகுதியும், படுக்கைக் கோடும்தான் உள்ளன. சுழியின், நேர்கோடும் அகரத்தில் அடங்கிவிடுவதால், 'சக்தி தொழிலறுதியானபோது, சிவத்தில் ஒன்றிவிடும்' என்றனர். சூரியன் ஒரேமாதிரியாக உள்ளவன் ஆதல் பற்றிச் சூரியனை உகாரம் என்ற சக்தியாக வழிபட்டனர். காயத்திரி தேவியின் ஆற்றலே பெரிய வைதிகர்களுக்காயிற்று. வைஷ்ணவர், காணும் சூரியனை நாராயணனின் தூல உருவென்கின்றனர். சைவர்களும் சதாசிவத்தின் தூல உடலைச் சூரியன் என்று கூறுகின்றனர்.

பகலவன் மாலவன் பல்லுயிர்க் கெல்லாம்
புகலவ னாய்நின்ற புண்ணிய நாதன்
இகலற ஏழுல கும்முற வோங்கும்
பகலவன் பல்லுயிர்க் காதியு மாமே
-திருமந்திரம்

ஆதித்தனுக்கு ஆதிகுருவென்று ஒரு பெயருண்டு. சக்தியாகவோ, சிவமாகவோ, விஷ்ணுவாகவோ, சூரியனாகவோ, அவ்வொளியை வழிபடில், அவரவர் ஜீவவொளியும் பெருகும் என்கிறார்.

ஆதித்தன் அன்பினோ டாயிர நாமமுஞ்
சோதியி னுள்ளே சுடரொளி யாய்நிற்கும்
வேதியர் வேண்டினும் விண்ணவர் சொல்லினும்
ஆதியில் அன்பு பழுக்கின்ற வாறே - திருமந்திரம்

தானே யுலகுக்குத் தத்துவ னாய்நிற்கும்
தானே யுலகுக்குத் தையலு மாய்நிற்கும்
தானே யுலகுக்குச் சம்புவு மாய்நிற்கும்
தானே யுலகுக்குத் தண்சுட ராகுமே - திருமந்திரம்

மண்ணீரல் பகுதியிலிருந்து சுவாதிஷ்டானம் மூலாதாரம் வந்து, சிரசை அடையும் அண்டாதித்தனை யாரும் அறியமாட்டார்.

பாருக்குக் கீழே பகலோன் வரும்வழி
யாருக்குங் காணவொண் ணாத அரும்பொருள்
நீருக்குந் தீக்கு நடுவே யுதிப்பவன்
ஆருக்கும் எட்டாத ஆதித்தன் தானே - திருமந்திரம்

குறிப்பு : பாருக்குக் கீழே பகலோன் வரும்வழி என்பது சுழுமுனை நாடி. நீருக்கு தீக்கு நடுவே என்பது, மணிபூரகத்திற்கும் அநாகதத்திற்கும் இடையே உள்ள மண்ணீரல் ஆகும்.

கண்களில் செய்யும் கிரியைக்கும் தோத்திரத்திற்கும் இசைந்து, சிரசின் பகுதியில் வெளிப்படுவன.

மண்ணை யிடந்ததின் கீழொடும் ஆதித்தன்
விண்ணை யிடந்து வெளிசெய்து நின்றிடும்
கண்ணை யிடந்து களிதந்த வானந்தம்
எண்ணுங் கிழமைக் கிசைந்துநின் றானே - திருமந்திரம்

பாரை யிடந்து பகலோன் வரும்வழி
யாரும் அறியார் அருங்கடை நூலவர்
தீரன் இருந்த திருமலை சூழென்பர்
ஊரை யுணர்ந்தார் உணர்ந்திருந் தாரே - திருமந்திரம்

நின்றும் இருந்தும் கிடந்தும் நடந்தும்
கன்றாய நந்தி கருத்துள் இருந்தனன்
கொன்று மலங்கள் குழல்வழி யோடிட
வென்று விளங்கும் விரிசுடர் காணுமே - திருமந்திரம்

ஆதித்தன் ஓடி யடங்கும் இடங்கண்டு
சாதிக்க வல்லவர் தம்மை யுணர்ந்தவர்
பேதித் துலகம் பிதற்றும் பிதற்றெல்லாம்
ஆதித்த னோடே யடங்குகின் றாரே -திருமந்திரம்

*குறிப்பு : ஆதித்தனால் அடைந்த அறிவெல்லாம் சுட்டி அறியும் பிரபஞ்ச ஞானமே யாகும். சுட்டி அறிதலின் செயல் மடங்கினபோது, ஆதித்தனது நிலை முடிவுறும்.*

உருவிப் புறப்பட் டுலகை வலம்வந்து
சொருகிக் கிடக்குந் துறையறி வாரில்லை
சொருகிக் கிடக்கும் துறையறி வாளர்க்கு
உருகிக் கிடக்குமென் உள்ளன்பு தானே - திருமந்திரம்

*வலப்புறச் சூரியனுக்கும் இடப்புறச் சந்திரனுக்கும் இடையில் ஆன்மா உள்ள நிலையாகும். இதுவே சகஸ்ரதள நிலையாகும். இது உள்ளத்தில் விளங்கும் ஆதித்தனாகும்.*

எறிகதிர் ஞாயிறு மின்பனி சோரும்
எறிகதிர் சோமன் எதிர்நின் றெறிப்ப
விரிகதி ருள்ளே விளங்குமென் ஆவி
ஒருகதி ராகில் உவாவது வாமே - திருமந்திரம்

சந்திரன் சூரியன் தான்வரிற் பூசனை
முந்திய பானுவில் இந்துவந் தேய்முறை
அந்த இரண்டும் உபய நிலத்திற்
சிந்தை தெளிந்தார் சிவமாயி னாரே - திருமந்திரம்

*சோமவொளி, சூரியவொளி, அக்கினியொளி (பிடரிக்கண்) மூன்றும் சேர்ந்ததே ஆன்மா. இம்மூன்றும் சேர்வதே உள்ளத்தின் பௌர்ணமியாகும்.*

ஆகுங் கலையோ டருக்கன் அனல்மதி
ஆகுங் கலையிடை நான்கென லாமென்பார்
ஆகும் அருக்கன் அனல்மதி யோடொன்ற
ஆகும்அப் பூரணை யாமென் றறியுமே - திருமந்திரம்

*அவ்வொளி பூலோக புவர்லோக வொளிக்களுக்கப்பாற்பட்டது.*

ஈரண்டத் தப்பால் இயங்கிய வவ்வெளி
ஓரண்டத் தார்க்கும் உணரா வுணர்வது
பேரண்டத் தூடே பிறங்கொளி யாய்நின்ற
தாரண்டத் தக்கா ரறியத்தக் காரே - திருமந்திரம்

ஒன்பதின் மேவி யுலகம் வலம்வரும்
ஒன்பது மீசன் இயலறி வாரில்லை
முன்பதின் மேவி முதல்வன் அருளிலார்
இன்ப மிலாரிருள் சூழநின் றாரே - திருமந்திரம்

*இதன்மேல், சதாசிவ தத்துவ விளக்கம் கூறப்படுகிறது:*

விந்து அபரம் பரமிரண் டாய்விரிந்
தந்த அபரம் பரநாத மாகியே
வந்தன தம்மிற் பரங்கலை யாதிவைத்
துந்தும் அருணோதய மென்ன வுள்ளத்தே - திருமந்திரம்

*குறிப்பு: பரங்கலை யாதிவைத்து உந்தும் சாந்தியதீதகலை சிறப்புற்றபோது அதன் கீழான சாந்தி, வித்தை, பிரதிட்டை, நிவர்த்தி முதலியனவும் அங்குச் சூக்குமமாய் இடம்பெறும் என்றபடி. இது சூக்குமை வாக்கின் நிலையாகும். அபரம் மற்ற வாக்குளின் நிலையாகும்.*

உள்ள அருணோ தயத்தெழும் ஓசைதான்
தெள்ளும் பரநாத தின்செய லென்பதால்
வள்ளல் பரவிந்து வைகரி யாதிவாக்
குள்ளன ஐங்கலைக் கொன்றாம் உதயமே - திருமந்திரம்

தேவர் பிரான்திசை பத்துத யஞ்செய்யும்
மூவர் பிரானென முன்னொரு காலத்து
நால்வர் பிரான்நடு வாயுரை யாநிற்கும்
மேவு பிரான்என்பர் விண்ணவர் தாமே - திருமந்திரம்

பொய்யிலன் மெய்யன் புவனா பதியெந்தை
மையிருள் நீக்கு மதியங்கி ஞாயிறு
செய்யிருள் நீக்குந் திருவுடை நந்தியென்
கையிருள் நீங்கக் கலந்தெழுந் தானே - திருமந்திரம்

தனிச்சுட ரெற்றித் தயங்கிருள் நீங்க
அணித்திடு மேலே யருங்கணி யூறல்
கனிச்சுட ராம்நின்ற கயிலையில் ஈசன்
நனிச்சுடர் மேல்கொண்ட வண்ணமு மாமே - திருமந்திரம்

நேரறி வாக நிரம்பிய பேரொளி
போரறி யாது புவனங்கள் போய்வருந்
தேரறி யாத திசையொளி யாயிடும்
ஆரறி வாரிது நாயக மாமே - திருமந்திரம்

மண்டலத் துள்ளே மலர்ந்தெழும் ஆதித்தன்
கண்டிடத் துள்ளே கதிரொளி யாயிடும்
சென்றிடத் தெட்டுத் திசையெங்கும் போய்வரும்
நின்றிடத் தேநிலை நேரறி வார்க்கே - திருமந்திரம்

*இந்த ஆதித்தனை உடலில் காணவேண்டும்.*

நாபிக்கண் ணாசி நயன நடுவினுந்
தூபியோ டைந்துஞ் சுடர்விடு சோதியைத்
தேவர்கள் ஈசன் திருமால் பிரமனும்
மூவரு மாக வுணர்ந்திருந் தாரே - திருமந்திரம்

*இந்தச் சிவாதித்தனேதான் ஆன்மா, சிவசக்தி என்றெல்லாம் வழங்கப்படுகிறது.*

அன்றிய பாச இருளுமஞ் ஞானமும்
சென்றிடு ஞானச் சிவப்பிர காசத்தால்
ஒன்று மிருசுட ராம்அரு ணோதயம்
துன்றிருள் நீங்குதல் போலத் தொலைந்ததே - திருமந்திரம்

கடங்கடந் தோறும் கதிரவன் தோன்றில்
அடங்கிட மூடில் அவற்றில் அடங்கான்
விடங்கொண்ட கண்டனு மேவிய காயத்
தடங்கிட நின்றதும் அப்பரி சாமே - திருமந்திரம்

தானே விரிசுடர் மூன்றுமொன் றாய்நிற்கும்
தானே யயன்மா லெனநின்று தாபிக்கும்
தானே யுடலுயிர் வேறன்றி நின்றுளன்
தானே வெளியொளி தானிருட் டாமே - திருமந்திரம்

*ஆறு ஆதாரங்களிலும் ஐந்து மூர்த்திகளும் உளர்; மூன்று சுடர்களுமுள்ளன; பஞ்சபூத நிலைகளும் உள்ளன.*

தெய்வச் சுடரங்கி ஞாயறுந் திங்களும்
வையம் புனல்அனல் மாருதம் வானகஞ்
சைவப் பெரும்பதி தாங்கிய பல்லுயிர்
ஐவர்க் கிடமிடை யாறங்க மாமே - திருமந்திரம்

## குமுத சகாயன் குணம்

*குமுதம்: அல்லிப்பூவிற்குப் பெயர்; இது மாலையில் மலர்வது பற்றிச் சந்திரனுக்குகந்த புஷ்பமாயிற்று. சந்திரன் வீரியத்திற்கும் ஜீவனின் சாந்த ஒளிக்கும் காரணமாகும். இவனது திசை வடக்கைக் குறிக்கும் இடக்கண் பக்கமாகும். இங்கு உணர்வுதித்துச் செயல்படுவதே உத்திராயண புண்ணிய காலமாகும். பௌதிகச் சூரியனல்லவென்பதை அறியவும். அறிவுருவமான சூரியன் ஈசான திக்கில் விளங்குவதே சந்திரனின் பிராபல்யம் ஆகும். இப்பகுதியில் உணர்வு*

பெற்றோர் காமக் குரோத லோப மோகங்ளையும், சிற்றின்ப இச்சைகளையும் அடக்கத் திறம் பெற்றோராவர். முன்னர்க் காமக் கழிவு செய்தபோது சந்திரன் ஒரு கலையுடையவனாய்ச் சுவாதிட்டானத்தில் பொருந்தியிருந்தான். இங்கே உணர்வு சிறப்புற்றபோது சிரசில் நாதமுழக்கம் உண்டாகும். நாத சம்மியத்தால் வாழ்நாள் நீடிக்கும். இந்த நிலையை ஆங்கிலத்தில் **'Speech centre'** என்பர். கிரியை வழிப் பூசிப்போர் புறத்தே வாகீஸ்வரன், வாகீஸ்வரி என்று ஈசானத் திக்கில் பூசிப்பர். இந்நிலை விளங்கப் பெற்றவர் சாந்தகுண சீலராயிருப்பர். சிரசில் ஒரு இன்பக் கிளுகிளுப்பும் பொருந்தும்.

விடாத மனம்பவ னத்தொடு மேவி
நடாவு சிவசங்கின் நாதங் கொளுவிக்
கடாவிடா ஐம்புலன் கட்டுண்ணும் வீடு
படாதன இன்பம் பருகார் அமுதமே - திருமந்திரம்

அமுதப் புனல்வரு மாற்றங் கரைமேற்
குமிழிக் குட்சுட ரைந்தையுங் கூட்டிச்
சமயத்தண் டோட்டித் தரிக்கவல் லார்க்கு
நமன்இல்லை நற்கலை நாள்இல்லை தானே - திருமந்திரம்

உண்ணீ ரமுத முறுமூ றலைத்திறந்
தெண்ணீர் இணையடித் தாமரைக் கேசெலத்
தெண்ணீர்ச் சமாதி யமர்ந்துதீ ராநலங்
கண்ணாற் றொடெசென்று கால்வழி மாறுமே - திருமந்திரம்

## இடைச்சக்கரத்தின் ஈரெட்டு நிலை

| | பெயர் | நிலை |
|---|---|---|
| 1. | அகரம் (மேதை) | உந்தி |
| 2. | உகரம் (அர்க்கீசம்) | ஹருதயம் |
| 3. | மகரம் (விஷம்) | கண்டம் |
| 4. | விந்து | புருவமத்தி |
| 5. | அர்த்தசந்திரன் | நடுநெற்றி |
| 6. | நிரோதினி | மேல்நெற்றி |
| 7. | நாதம் | சிரசு |
| 8. | நாதாந்தம் | சிரசு |
| 9. | சத்தி | இவைகள் எல்லாம் சிரசின் மேல் நிமிர்ந்த சகஸ்ர தளத்தில் விளங்குபவை |
| 10. | வியாபினி | |
| 11. | வியோபரூபினி | |
| 12. | அநந்தை | |
| 13. | அநாகிருதை | |
| 14. | நோதை | |
| 15. | சமனை | |
| 16. | உன்மனை | |

உடற்சக்கரத்தின் உறுப்பையும் காட்டி

உடலாகிய இயந்திரத்தில் தூல நிலையில் பொருந்தியுள்ள பிராணமய கோசம் இயங்கும் மூலாதாரமாகிய ஆறு ஆதாரங்களையும் காட்டி என்பதாகும்.

சண்முக தூலமும் சதுர்முக சூக்கமும்
எண்முக மாக இனிதெனக் கருளி

என்னறிவில் புலப்படும்படியாக, தூலமான ஆறு ஆதாரங்களையும் உருவ, அருவ, விஞ்ஞானமய, ஆனந்தமய கோசங்களையும் காட்டியருளியும், அதனால் இன்பமடையச் செய்தும், என்பது.

புரியட்ட காயம் புலப்பட எனக்குத்
தெரிஎட்டு நிலையும் தெரிசனப் படுத்தி

புரியட்ட காயம் என்பது சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம், மனம், புத்தி, அகங்காரம் பொருந்திய சூக்கும உடலுக்குப் பெயர். இது தெரியவேண்டுமானால் முகத்தின்முன் ஒரு முழ அளவுள்ள மனமண்டலம் (உள்ளத்தின் சோதி) விளங்கவேண்டும். இது புலப்பட்டு அவ்வறிவு பெற்றால், எங்கெங்கும் உள்ள மக்கள் செயலை இருந்த இடத்தில் நினைத்தபோதே அறியும் ஆற்றல் கிட்டும். மக்கள் இவ்வெட்டின் காரியத்திலீடுபடுவதை, அறிவதைக் காணும் திறனை உண்டாக்கி கொடுத்து -என்றபடி.

கருத்தினில் கபால வாயில் காட்டி, இருத்தி

மனத்தின் ஆற்றலால் மர்மப் புழையைக் கடந்து, ஊர்த்துவ சகஸ்ரதளம் பெற்று, அங்கு என்னை நிலைபெறும்படி செய்து (சிவராஜயோக சமாதியிருத்தி)...

முத்தி இனிதெனக்கு அருளி

தேகங் கடந்து சிவசாதாக்கியத்தில் பொருந்திய அழியாத நிலையைச் சிவானந்தம் பெற்றுய்யுமாறு எனக்களித்து...

என்னை அறிவித்து

ஆன்ம சொரூபம் சுயம்ஜோதியானது. அது மனம், புத்தி, அகங்காரம், தேகோபாதைகள் யாவும் கடந்து விளங்கும் அகண்ட அறிவு நிலையாகும். அப்படிப்பட்ட நிலையை எனக்கு அறிவித்து...

எனக்கு அருள் செய்து

மேலே கண்டவைகளெல்லாம் எனக்கு உனதருளால் கிடைக்கச் செய்து...

முன்னை வினையின் முதலைக் களைந்தே
வாக்கும் மனமும் இல்லா மனோலயம்
தேக்கிய என்றன் சிந்தை தெளிவித்து
இருள்வெளி இரண்டிற்கு ஒன்றிடம் என்ன

அருள்தரும் ஆனந்தத்து அழுத்திஎன் செவியில்
எல்லை இல்லா ஆனந்தம் அளித்து
அல்லல் களைந்தே அருள்வழி காட்டி

ஆன்ம பரிபக்குவத்தில் உயர்நிலை அடைகின்ற இரகசிய நெறியின் பல நுட்பங்கள் இந்த வரிகளிலே பொதிந்துள்ளன. இந்த அடிகளும் இவற்றைத் தொடர்ந்து வருகின்ற அடிகளும், அநுபவ ஞான முதிர்ச்சி பெற்ற பல பெரியோர்களை மெய்ம்மறக்கச் செய்த அருங்கவி மொழிகளாம். இவற்றின் கவிப்பண்பு ஒருபுறம் இருக்க, இவை கூறி விளக்குகின்ற ஆன்ம இரகசியங்கள், பல்லாயிரம் ஆண்டுகளாக இமயமலை முதல் பொதிகை மலை ஈறாகக் குகைகளிலும், வனக் குடில்களிலும் வதிந்து, பேரின்பத்தைத் துய்த்துப் பிறரையும் துய்க்க வைத்த மாபெரும் சித்தர்களின், அநுபவ ஞானக் களஞ்சியங்களாம். எனவே, இந்த வரிகளை அனுபவ ஞானம் பெற்ற சிவயோகி இரத்தின சபாபதியார் தந்துள்ள விளக்கத்தின் வாயிலாகக் காண்பது சிறப்புடையதாகும். அந்த விளக்கத்தை அப்படியே கீழே தருகின்றேன்.

"அநாதி காலந்தொட்டு இடையறாது வரும் பிறப்பு இறப்புகளுக்குக் காரணமாகிய வினைகளையெல்லாம் (செயல்படாமல்) வேரோடு பறித்து எறிந்து, வாக்கினாற் சொல்லுதற்கும், மனத்தினால் நினைத்ததற்கும் எட்டாத, மனம் தொழிற்படாத மௌன நிலையை நிலைநிறுத்தி, (அதனால்) அடியனது சிந்தனையினைத் தெளிவுபெறச் செய்து, அறியாமை அறிவு என்ற இரண்டிற்கும் ஆன்மாவே பிறப்பிடம் என்று வைத்து, அடியேன் செவியில் திருவருட்பேற்றைத் தரும் சிவானந்த மாவெள்ளமாகிய நாதவொலியால் அடியேனை மூழ்கும்படி செய்து, வரம்பு இல்லாத சிவனாந்த சுகத்தை (அடியேனுக்கு) வழங்கிப் பிறவித் துன்பத்தை வேரோடு அறுத்துத் திருவருள் நெறியினைக் காண்பித்து...

**விளக்கம்:**

முன்னை வினையின் முதலைக் களைந்தே
வாக்கும் மனமும் இல்லா மனோலயம்
தேக்கியே என்றன் சிந்தை தெளிவித்து

முன்னை வினையின் முதல் அசுத்த மாயையிலும், சுத்தாசுத்த மாயையிலும் உள்ளது. அசுத்த மாயை ஆன்ம தத்துவம் இருபத்து நான்கிலும், சுத்தாசுத்தம் வித்தியாதத்துவம் ஏழிலும் பொருந்தியே, தேகம் எடுக்க காரணமாக உள்ளன. பக்குவான்மாக்களுள், பண்டையப் பிறவிகளில் சரியை, கிரியை, யோக நெறிகளைக் கடைப் பிடித்து வந்தவர்களே உண்மையான ஞானயோகத்திற்குத் தகுதி பெறுகின்றனர்.

யோகியர்க்கே ஞானம் ஒழுங்காம் பேரன்பான்
தாகியரும் யோகம்முன்னே சார்ந்தோர் பராபரமே

- தாயுமானவர்

இங்கு யோகம் என்பது ஹடயோகம் அல்ல. மந்திர சாதனத்தால் வாசியோகத்தால் அடையும் யோகமேயாகும்.

காலையுயிர் என்னுங் கலதிகள் சொற் கேளாமல்
சீலமுடன் எம்மைத் தெளிந்துகொள்வ தெந்நாளோ?

- தாயுமானவர்

பாவனையால் இறைவனையடைய முடியாது.

வான்காண வேண்டின் மலையேறல் ஒக்கும் உன்னை
நான்காணப் பாவனைசெய் நாட்டம் பராபரமே

- தாயுமானவர்

கிரியை வழியால் இறைவனை அடைய முடியாது.

காணுறு கோடி கடிகமழ் சந்தனம்
வானுற மாமல ரிட்டு வணங்கினும்
ஊனினை நீக்கி உணர்பவர்க் கல்லது
தேனமர் பூங்கழல் சேரவொண் ணாதே

- திருமந்திரம்

தன்னை யறிந்தருளே தாரகமாய் நிற்பதுவே
உன்னை அறிதற் குபாயம் பராபரமே

- தாயுமானவர்

ஞானயோகத்தில் தன்னுண்மை ஒளிவடிவு என்று அறிந்தபோது அருள்வயப்பட்டவராகின்றனர். சிவதத்துவம் திடப்படுகிறது. அதனால் இருள் கெடுகின்றது. இருள் கெட்டொழிந்தபோது, வினைக்குக் காரணமான காரண சரீரம் அழிந்துவிடுகிறது. உருவ மனம் அழிந்தவர்க்குக் காரண சரீரம் அழிந்து விடுகிறது. தேகங்கடந்து அறிவொளியால் நிற்பவர்க்கு முன்னை வினையாகிய மருள் முதல் அகற்றப்பட்டுவிடுகிறது.

வாக்கும் மனமும் உள்ளவரையில் சிரசில் நாதமுழக்கம் என்ற நாதம் இருந்துகொண்டிருக்கும். அந்நிலையில் காண்போன், காட்சி, காணப்படுபொருள் மூன்றும் விளங்கிக்கொண்டேயிருக்கும். நாதாந்தம் சென்றபோது, திரிபுடி என்ற இம் மூன்றும் அற்று, அகண்டத்தில் நிற்கக்கூடும். அதனால், வாக்கும் மனமும் இல்லா மனோலயம் என்று கூறப்பட்டுள்ளது.

கற்றகலை யால்நிலைதான் காணுமோ காண்பதெல்லாம்
அற்றஇடத் தேவெளிஆம் அன்றோ பராபரமே
நேரே நினதுஅருள்என் நெஞ்சைக் கவரின்ஒன்றும்
பாரேன் சுகமும் படைப்பேன் பராபரமே
வாதனைவிட்டு உன்அருளின் மன்னின் அல்லால் வேறும்ஒரு
சாதனைதான் உண்டோநீ சாற்றாய் பராபரமே
ஒப்புயர்வொன் றின்றி ஒலிபுகா மோனவட்டக்
கப்பலுக்குஆம் வான்பொருள்நீ கண்டாய் பராபரமே
சிந்தனைபோய் நான்எனல்போய்த் தேக்க இன்ப மாமழையை
வந்து பொழிந்தனைநீ வாழி பராபரமே

- தாயுமானவர்

உரையிறந்தால் உன்னு முணர்விறந்தால் மாயைத்
திரையிறந்தால் காண்கின்ற தேவை - வரைபெருக
வாசிப்ப தும்நாவால் வாழ்த்துவதும் நாடகமாய்ப்
பூசிப்ப துஞ்சுத்தப் பொய்

- சிவபோகசாரம்

அருள்தரும் ஆனந்தத்து அழுத்திஎன் செவியில்
எல்லை இல்லா ஆனந்தம் அளித்து
அல்லல் களைந்தே அருள்வழி காட்டி

ஆன்ம பரிபக்குவத்தில் உயர்நிலை அடைகின்ற இரகசிய நெறியின் பல நுட்பங்கள் இந்த வரிகளிலே பொதிந்துள்ளன. இந்த அடிகளும் இவற்றைத் தொடர்ந்து வருகின்ற அடிகளும், அநுபவ ஞான முதிர்ச்சி பெற்ற பல பெரியோர்களை மெய்ம்மறக்கச் செய்த அருங்கவி மொழிகளாம். இவற்றின் கவிப்பண்பு ஒருபுறம் இருக்க, இவை கூறி விளக்குகின்ற ஆன்ம இரகசியங்கள், பல்லாயிரம் ஆண்டுகளாக இமயமலை முதல் பொதிகை மலை ஈறாகக் குகைகளிலும், வனக் குடில்களிலும் வதிந்து, பேரின்பத்தைத் துய்த்துப் பிறரையும் துய்க்க வைத்த மாபெரும் சித்தர்களின், அநுபவ ஞானக் களஞ்சியங்களாம். எனவே, இந்த வரிகளை அனுபவ ஞானம் பெற்ற சிவயோகி இரத்தின சபாபதியார் தந்துள்ள விளக்கத்தின் வாயிலாகக் காண்பது சிறப்புடையதாகும். அந்த விளக்கத்தை அப்படியே கீழே தருகின்றேன்.

"அநாதி காலந்தொட்டு இடையறாது வரும் பிறப்பு இறப்புகளுக்குக் காரணமாகிய வினைகளையெல்லாம் (செயல்படாமல்) வேரோடு பறித்து எறிந்து, வாக்கினாற் சொல்லுதற்கும், மனத்தினால் நினைத்ததற்கும் எட்டாத, மனம் தொழிற்படாத மௌன நிலையை நிலைநிறுத்தி, (அதனால்) அடியனது சிந்தனையினைத் தெளிவுபெறச் செய்து, அறியாமை அறிவு என்ற இரண்டிற்கும் ஆன்மாவே பிறப்பிடம் என்று வைத்து, அடியேன் செவியில் திருவருட்பேற்றைத் தரும் சிவானந்த மாவெள்ளமாகிய நாதவொலியால் அடியேனை மூழ்கும்படி செய்து, வரம்பு இல்லாத சிவனாந்த சுகத்தை (அடியேனுக்கு) வழங்கிப் பிறவித் துன்பத்தை வேரோடு அறுத்துத் திருவருள் நெறியினைக் காண்பித்து...

**விளக்கம்:**

முன்னை வினையின் முதலைக் களைந்தே
வாக்கும் மனமும் இல்லா மனோலயம்
தேக்கியே என்றன் சிந்தை தெளிவித்து

முன்னை வினையின் முதல் அசுத்த மாயையிலும், சுத்தாசுத்த மாயையிலும் உள்ளது. அசுத்த மாயை ஆன்ம தத்துவம் இருபத்து நான்கிலும், சுத்தாசுத்தம் வித்தியாதத்துவம் ஏழிலும் பொருந்தியே, தேகம் எடுக்க காரணமாக உள்ளன. பக்குவான்மாக்களுள், பண்டையப் பிறவிகளில் சரியை, கிரியை, யோக நெறிகளைக் கடைப் பிடித்து வந்தவர்களே உண்மையான ஞானயோகத்திற்குத் தகுதி பெறுகின்றனர்.

யோகியர்க்கே ஞானம் ஒழுங்காம் பேரன்பான்
தாகியரும் யோகம்முன்னே சார்ந்தோர் பராபரமே

- தாயுமானவர்

இங்கு யோகம் என்பது ஹடயோகம் அல்ல. மந்திர சாதனத்தால் வாசியோகத்தால் அடையும் யோகமேயாகும்.

காலையுயிர் என்னுங் கலதிகள் சொற் கேளாமல்
சீலமுடன் எம்மைத் தெளிந்துகொள்வ தெந்நாளோ?

- தாயுமானவர்

பாவனையால் இறைவனையடைய முடியாது.

வான்காண வேண்டின் மலையேறல் ஒக்கும் உன்னை
நான்காணப் பாவனைசெய் நாட்டம் பராபரமே

- தாயுமானவர்

கிரியை வழியால் இறைவனை அடைய முடியாது.

காணுறு கோடி கடிகமழ் சந்தனம்
வானுற மாமல ரிட்டு வணங்கினும்
ஊனினை நீக்கி உணர்பவர்க் கல்லது
தேனமர் பூங்கழல் சேரவொண் ணாதே

- திருமந்திரம்

தன்னை யறிந்தருளே தாரகமாய் நிற்பதுவே
உன்னை அறிதற் குபாயம் பராபரமே

- தாயுமானவர்

ஞானயோகத்தில் தன்னுண்மை ஒளிவடிவு என்று அறிந்தபோது அருள்வயப்பட்டவராகின்றனர். சிவதத்துவம் திடப்படுகிறது. அதனால் இருள் கெடுகின்றது. இருள் கெட்டொழிந்தபோது, வினைக்குக் காரணமான காரண சரீரம் அழிந்துவிடுகிறது. உருவ மனம் அழிந்தவர்க்குக் காரண சரீரம் அழிந்து விடுகிறது. தேகங்கடந்து அறிவொளியால் நிற்பவர்க்கு முன்னை வினையாகிய மருள் முதல் அகற்றப்பட்டுவிடுகிறது.

வாக்கும் மனமும் உள்ளவரையில் சிரசில் நாதமுழக்கம் என்ற நாதம் இருந்துகொண்டிருக்கும். அந்நிலையில் காண்போன், காட்சி, காணப்படுபொருள் மூன்றும் விளங்கிக்கொண்டேயிருக்கும். நாதாந்தம் சென்றபோது, திரிபுடி என்ற இம் மூன்றும் அற்று, அகண்டத்தில் நிற்கக்கூடும். அதனால், வாக்கும் மனமும் இல்லா மனோலயம் என்று கூறப்பட்டுள்ளது.

கற்றகலை யால்நிலைதான் காணுமோ காண்பதெல்லாம்
அற்றஇடத் தேவெளிஆம் அன்றோ பராபரமே
நேரே நினதுஅருள்என் நெஞ்சைக் கவரின்ஒன்றும்
பாரேன் சுகமும் படைப்பேன் பராபரமே
வாதனைவிட்டு உன்அருளின் மன்னின் அல்லால் வேறும்ஒரு
சாதனைதான் உண்டோநீ சாற்றாய் பராபரமே
ஒப்புயர்வொன் றின்றி ஒலிபுகா மோனவட்டக்
கப்பலுக்குஆம் வான்பொருள்நீ கண்டாய் பராபரமே
சிந்தனைபோய் நான்எனல்போய்த் தேக்க இன்ப மாமழையை
வந்து பொழிந்தனைநீ வாழி பராபரமே

- தாயுமானவர்

உரையிறந்தால் உன்னு முணர்விறந்தால் மாயைத்
திரையிறந்தால் காண்கின்ற தேவை - வரைபெருக
வாசிப்ப தும்நாவால் வாழ்த்துவதும் நாடகமாய்ப்
பூசிப்ப துஞ்சுத்தப் பொய்

- சிவபோகசாரம்

அருள்தரும் ஆனந்தத்து அழுத்திஎன் செவியில்
எல்லை இல்லா ஆனந்தம் அளித்து
அல்லல் களைந்தே அருள்வழி காட்டி

ஆன்ம பரிபக்குவத்தில் உயர்நிலை அடைகின்ற இரகசிய நெறியின் பல நுட்பங்கள் இந்த வரிகளிலே பொதிந்துள்ளன. இந்த அடிகளும் இவற்றைத் தொடர்ந்து வருகின்ற அடிகளும், அநுபவ ஞான முதிர்ச்சி பெற்ற பல பெரியோர்களை மெய்ம்மறக்கச் செய்த அருங்கவி மொழிகளாம். இவற்றின் கவிப்பண்பு ஒருபுறம் இருக்க, இவை கூறி விளக்குகின்ற ஆன்ம இரகசியங்கள், பல்லாயிரம் ஆண்டுகளாக இமயமலை முதல் பொதிகை மலை ஈறாகக் குகைகளிலும், வனக் குடில்களிலும் வதிந்து, பேரின்பத்தைத் துய்த்துப் பிறரையும் துய்க்க வைத்த மாபெரும் சித்தர்களின், அநுபவ ஞானக் களஞ்சியங்களாம். எனவே, இந்த வரிகளை அனுபவ ஞானம் பெற்ற சிவயோகி இரத்தின சபாபதியார் தந்துள்ள விளக்கத்தின் வாயிலாகக் காண்பது சிறப்புடையதாகும். அந்த விளக்கத்தை அப்படியே கீழே தருகின்றேன்.

“அநாதி காலந்தொட்டு இடையறாது வரும் பிறப்பு இறப்புகளுக்குக் காரணமாகிய வினைகளையெல்லாம் (செயல்படாமல்) வேரோடு பறித்து எறிந்து, வாக்கினாற் சொல்லுதற்கும், மனத்தினால் நினைத்ததற்கும் எட்டாத, மனம் தொழிற்படாத மௌன நிலையை நிலைநிறுத்தி, (அதனால்) அடியனது சிந்தனையினைத் தெளிவுபெறச் செய்து, அறியாமை அறிவு என்ற இரண்டிற்கும் ஆன்மாவே பிறப்பிடம் என்று வைத்து, அடியேன் செவியில் திருவருட்பேற்றைத் தரும் சிவானந்த மாவெள்ளமாகிய நாதவொலியால் அடியேனை மூழ்கும்படி செய்து, வரம்பு இல்லாத சிவனாந்த சுகத்தை (அடியேனுக்கு) வழங்கிப் பிறவித் துன்பத்தை வேரோடு அறுத்துத் திருவருள் நெறியினைக் காண்பித்து...

**விளக்கம்:**

முன்னை வினையின் முதலைக் களைந்தே
வாக்கும் மனமும் இல்லா மனோலயம்
தேக்கியே என்றன் சிந்தை தெளிவித்து

முன்னை வினையின் முதல் அசுத்த மாயையிலும், சுத்தாசுத்த மாயையிலும் உள்ளது. அசுத்த மாயை ஆன்ம தத்துவம் இருபத்து நான்கிலும், சுத்தாசுத்தம் வித்தியாதத்துவம் ஏழிலும் பொருந்தியே, தேகம் எடுக்க காரணமாக உள்ளன. பக்குவான்மாக்களுள், பண்டையப் பிறவிகளில் சரியை, கிரியை, யோக நெறிகளைக் கடைப் பிடித்து வந்தவர்களே உண்மையான ஞானயோகத்திற்குத் தகுதி பெறுகின்றனர்.

யோகியர்க்கே ஞானம் ஒழுங்காம் பேரன்பான்
தாகியரும் யோகம்முன்னே சார்ந்தோர் பராபரமே

- தாயுமானவர்

இங்கு யோகம் என்பது ஹடயோகம் அல்ல. மந்திர சாதனத்தால் வாசியோகத்தால் அடையும் யோகமேயாகும்.

காலையுயிர் என்னுங் கலதிகள் சொற் கேளாமல்
சீலமுடன் எம்மைத் தெளிந்துகொள்வ தெந்நாளோ?

- தாயுமானவர்

பாவனையால் இறைவனையடைய முடியாது.

வான்காண வேண்டின் மலையேறல் ஒக்கும் உன்னை
நான்காணப் பாவனைசெய் நாட்டம் பராபரமே

- தாயுமானவர்

கிரியை வழியால் இறைவனை அடைய முடியாது.

காணுறு கோடி கடிகமழ் சந்தனம்
வானுற மாமல ரிட்டு வணங்கினும்
ஊனினை நீக்கி உணர்பவர்க் கல்லது
தேனமர் பூங்கழல் சேரவொண் ணாதே

- திருமந்திரம்

தன்னை யறிந்தருளே தாரகமாய் நிற்பதுவே
உன்னை அறிதற் குபாயம் பராபரமே

- தாயுமானவர்

ஞானயோகத்தில் தன்னுண்மை ஒளிவடிவு என்று அறிந்தபோது அருள்வயப்பட்டவராகின்றனர். சிவதத்துவம் திடப்படுகிறது. அதனால் இருள் கெடுகின்றது. இருள் கெட்டொழிந்தபோது, வினைக்குக் காரணமான காரண சரீரம் அழிந்துவிடுகிறது. உருவ மனம் அழிந்தவர்க்குக் காரண சரீரம் அழிந்து விடுகிறது. தேகங்கடந்து அறிவொளியால் நிற்பவர்க்கு முன்னை வினையாகிய மருள் முதல் அகற்றப்பட்டுவிடுகிறது.

வாக்கும் மனமும் உள்ளவரையில் சிரசில் நாதமுழக்கம் என்ற நாதம் இருந்துகொண்டிருக்கும். அந்நிலையில் காண்போன், காட்சி, காணப்படுபொருள் மூன்றும் விளங்கிக்கொண்டேயிருக்கும். நாதாந்தம் சென்றபோது, திரிபுடி என்ற இம் மூன்றும் அற்று, அகண்டத்தில் நிற்கக்கூடும். அதனால், வாக்கும் மனமும் இல்லா மனோலயம் என்று கூறப்பட்டுள்ளது.

கற்றகலை யால்நிலைதான் காணுமோ காண்பதெல்லாம்
அற்றஇடத் தேவெளிஆம் அன்றோ பராபரமே
நேரே நினதுஅருள்என் நெஞ்சைக் கவரின்ஒன்றும்
பாரேன் சுகமும் படைப்பேன் பராபரமே
வாதனைவிட்டு உன்அருளின் மன்னின் அல்லால் வேறும்ஒரு
சாதனைதான் உண்டோநீ சாற்றாய் பராபரமே
ஒப்புயர்வொன் றின்றி ஒலிபுகா மோனவட்டக்
கப்பலுக்குஆம் வான்பொருள்நீ கண்டாய் பராபரமே
சிந்தனைபோய் நான்எனல்போய்த் தேக்க இன்ப மாமழையை
வந்து பொழிந்தனைநீ வாழி பராபரமே

- தாயுமானவர்

உரையிறந்தால் உன்னு முணர்விறந்தால் மாயைத்
திரையிறந்தால் காண்கின்ற தேவை - வரைபெருக
வாசிப்ப தும்நாவால் வாழ்த்துவதும் நாடகமாய்ப்
பூசிப்ப துஞ்சுத்தப் பொய்

- சிவபோகசாரம்

அருள்தரும் ஆனந்தத்து அழுத்திஎன் செவியில்
எல்லை இல்லா ஆனந்தம் அளித்து
அல்லல் களைந்தே அருள்வழி காட்டி

ஆன்ம பரிபக்குவத்தில் உயர்நிலை அடைகின்ற இரகசிய நெறியின் பல நுட்பங்கள் இந்த வரிகளிலே பொதிந்துள்ளன. இந்த அடிகளும் இவற்றைத் தொடர்ந்து வருகின்ற அடிகளும், அநுபவ ஞான முதிர்ச்சி பெற்ற பல பெரியோர்களை மெய்ம்மறக்கச் செய்த அருங்கவி மொழிகளாம். இவற்றின் கவிப்பண்பு ஒருபுறம் இருக்க, இவை கூறி விளக்குகின்ற ஆன்ம இரகசியங்கள், பல்லாயிரம் ஆண்டுகளாக இமயமலை முதல் பொதிகை மலை ஈறாகக் குகைகளிலும், வனக் குடில்களிலும் வதிந்து, பேரின்பத்தைத் துய்த்துப் பிறரையும் துய்க்க வைத்த மாபெரும் சித்தர்களின், அநுபவ ஞானக் களஞ்சியங்களாம். எனவே, இந்த வரிகளை அனுபவ ஞானம் பெற்ற சிவயோகி இரத்தின சபாபதியார் தந்துள்ள விளக்கத்தின் வாயிலாகக் காண்பது சிறப்புடையதாகும். அந்த விளக்கத்தை அப்படியே கீழே தருகின்றேன்.

"அநாதி காலந்தொட்டு இடையறாது வரும் பிறப்பு இறப்புகளுக்குக் காரணமாகிய வினைகளையெல்லாம் (செயல்படாமல்) வேரோடு பறித்து எறிந்து, வாக்கினாற் சொல்லுதற்கும், மனத்தினால் நினைத்ததற்கும் எட்டாத, மனம் தொழிற்படாத மௌன நிலையை நிலைநிறுத்தி, (அதனால்) அடியனது சிந்தனையினைத் தெளிவுபெறச் செய்து, அறியாமை அறிவு என்ற இரண்டிற்கும் ஆன்மாவே பிறப்பிடம் என்று வைத்து, அடியேன் செவியில் திருவருட்பேற்றைத் தரும் சிவானந்த மாவெள்ளமாகிய நாதவொலியால் அடியேனை மூழ்கும்படி செய்து, வரம்பு இல்லாத சிவனாந்த சுகத்தை (அடியேனுக்கு) வழங்கிப் பிறவித் துன்பத்தை வேரோடு அறுத்துத் திருவருள் நெறியினைக் காண்பித்து...

**விளக்கம்:**

முன்னை வினையின் முதலைக் களைந்தே
வாக்கும் மனமும் இல்லா மனோலயம்
தேக்கியே என்றன் சிந்தை தெளிவித்து

முன்னை வினையின் முதல் அசுத்த மாயையிலும், சுத்தாசுத்த மாயையிலும் உள்ளது. அசுத்த மாயை ஆன்ம தத்துவம் இருபத்து நான்கிலும், சுத்தாசுத்தம் வித்தியாதத்துவம் ஏழிலும் பொருந்தியே, தேகம் எடுக்க காரணமாக உள்ளன. பக்குவான்மாக்களுள், பண்டையப் பிறவிகளில் சரியை, கிரியை, யோக நெறிகளைக் கடைப் பிடித்து வந்தவர்களே உண்மையான ஞானயோகத்திற்குத் தகுதி பெறுகின்றனர்.

யோகியர்க்கே ஞானம் ஒழுங்காம் பேரன்பான்
தாகியரும் யோகம்முன்னே சார்ந்தோர் பராபரமே

- தாயுமானவர்

இங்கு யோகம் என்பது ஹடயோகம் அல்ல. மந்திர சாதனத்தால் வாசியோகத்தால் அடையும் யோகமேயாகும்.

காலையுயிர் என்னுங் கலதிகள் சொற் கேளாமல்
சீலமுடன் எம்மைத் தெளிந்துகொள்வ தெந்நாளோ?

- தாயுமானவர்

பாவனையால் இறைவனையடைய முடியாது.

வான்காண வேண்டின் மலையேறல் ஒக்கும் உன்னை
நான்காணப் பாவனைசெய் நாட்டம் பராபரமே

- தாயுமானவர்

கிரியை வழியால் இறைவனை அடைய முடியாது.

காணுறு கோடி கடிகமழ் சந்தனம்
வானுற மாமல ரிட்டு வணங்கினும்
ஊனினை நீக்கி உணர்பவர்க் கல்லது
தேனமர் பூங்கழல் சேரவொண் ணாதே

- திருமந்திரம்

தன்னை யறிந்தருளே தாரகமாய் நிற்பதுவே
உன்னை அறிதற் குபாயம் பராபரமே

- தாயுமானவர்

ஞானயோகத்தில் தன்னுண்மை ஒளிவடிவு என்று அறிந்தபோது அருள்வயப்பட்டவராகின்றனர். சிவதத்துவம் திடப்படுகிறது. அதனால் இருள் கெடுகின்றது. இருள் கெட்டொழிந்தபோது, வினைக்குக் காரணமான காரண சரீரம் அழிந்துவிடுகிறது. உருவ மனம் அழிந்தவர்க்குக் காரண சரீரம் அழிந்து விடுகிறது. தேகங்கடந்து அறிவொளியால் நிற்பவர்க்கு முன்னை வினையாகிய மருள் முதல் அகற்றப்பட்டுவிடுகிறது.

வாக்கும் மனமும் உள்ளவரையில் சிரசில் நாதமுழக்கம் என்ற நாதம் இருந்துகொண்டிருக்கும். அந்நிலையில் காண்போன், காட்சி, காணப்படுபொருள் மூன்றும் விளங்கிக்கொண்டேயிருக்கும். நாதாந்தம் சென்றபோது, திரிபுடி என்ற இம் மூன்றும் அற்று, அகண்டத்தில் நிற்கக்கூடும். அதனால், வாக்கும் மனமும் இல்லா மனோலயம் என்று கூறப்பட்டுள்ளது.

கற்றகலை யால்நிலைதான் காணுமோ காண்பதெல்லாம்
அற்றஇடத் தேவெளிஆம் அன்றோ பராபரமே
நேரே நினதுஅருள்என் நெஞ்சைக் கவரின்ஒன்றும்
பாரேன் சுகமும் படைப்பேன் பராபரமே
வாதனைவிட்டு உன்அருளின் மன்னின் அல்லால் வேறும்ஒரு
சாதனைதான் உண்டோநீ சாற்றாய் பராபரமே
ஒப்புயர்வொன் றின்றி ஒலிபுகா மோனவட்டக்
கப்பலுக்குஆம் வான்பொருள்நீ கண்டாய் பராபரமே
சிந்தனைபோய் நான்எனல்போய்த் தேக்க இன்ப மாமழையை
வந்து பொழிந்தனைநீ வாழி பராபரமே

- தாயுமானவர்

உரையிறந்தால் உன்னு முணர்விறந்தால் மாயைத்
திரையிறந்தால் காண்கின்ற தேவை - வரைபெருக
வாசிப்ப தும்நாவால் வாழ்த்துவதும் நாடகமாய்ப்
பூசிப்ப துஞ்சுத்தப் பொய்

- சிவபோகசாரம்

சித்த தடாகத்தில் மனம், புத்தி, அகங்காரம் பொருந்திய அந்தக்கரணம் உள்ளது. சித்தம் மனம் செயல் ஒழிந்தபோது புத்திக்கும், செலுத்தும் அகங்காரத்திற்கும் வேலையில்லை. கரை கட்டிய நீர்த்தேக்கம்போல் தன்னிலையில் நிற்கும்போது, ஆன்மாவின் செயல் கருவிகளான தத்துவங்கள் முப்பத்தாறும் சேட்டையிற்றன. அதனால், ஆன்மாவின் தனிநிலையில் உள்ளதைத் 'தேக்கியே என்றன் சிந்தை தெளிவித்து' என்றார். ஆன்மா தனது நிலையில் சத்து, சித்து, ஆனந்தமயமாய் உள்ளது.

இருள்வெளி இரண்டிற்கு ஒன்றிடம் என்ன
அருள்தரும் ஆனந்தத் அழுத்தி

ஆன்மா
இச்சை
(அகங்காரம்)




சாதாரண மனிதனின் கீழ்முகங் கொண்ட அந்தக்கரணச் செயலுக்குரிய நிலையை இப்படம் காட்டுகிறது. ஆன்மா அந்தக் கரணத்தைக் கீழ் நோக்கிச் செலுத்தும் இயக்க நிலை இது ஆகும்.

கிரியை
(மனம்)




ஞானியின் மேல்முகங் கொண்ட சித்தத் தடாகநிலையை இப்படம் காட்டுகிறது.

முன்னர்ப் பாசபந்தியா யிருந்தபோது 'தேகமேதான்' என்றிருந்தான். தேகம் தானல்ல; தான் தேகங்கடந்த வெளியே என்றறிந்த போது, வெளியனாக ஞானி ஆனான். முன்னர் இருளாக இருந்து தன்னை யுணராது மறைத்ததும், ஒளியாகத் தன்னுண்மையை உணர உணர்த்தியதும், இந்த ஒரே ஆகாயம்தான் என்பதை அறிகிறான். அறிந்தபோது இருளும் ஒளியுமாகவும், தனக்குப் பாசபந்தமாகவும், அருளாகவும் இருப்பது, ஆகாயத்தை இடமாகக் கொண்டு விளங்கும் ஒரு சக்தி என்பனத உணரமுடிந்தது. அந்தச் சக்தி பாசபந்தியாக இருந்த போது உலகப்பொருளை நாடிப் பெற்று, அதனால் இன்பம்

பெறச் சுட்டறிவாகச் செயல்படுத்தியது. ஒளியான ஞான சத்தியான போது, புறத்தே நாடுவதைவிட்டு, அகநிலையில் இன்பத்தையளித்து அதிலே என்னைத் திளைக்கச் செய்து, அகண்ட ஞானத்தை அளித்து,

ஆகாச வண்ணன் அமரர் குலக்கொழுந்
தேகாச மாசுண மிட்டங் கிருந்தவன்
ஆகாச வண்ணம் அமர்ந்து நின்றப்புறம்
ஆகாச மாயங்கி வண்ணனு மாமே

- திருமந்திரம்

சிரசில் ஒரு இன்பக் கிளுகிளுப்புத் தோன்றுவதில் இது தன்னையே மறக்கச் செய்துவிடும். திருப்பாண்டிப் பதிகம் திருவாசகம் பார்க்க இது நன்கு விளங்கும்.

நீரின்ப வெள்ளத்துள் நீந்திக்
குளிக்கின்ற நெஞ்சங் கொண்டீர்
பாரின்ப வெள்ளங் கொளப்பரி
மேற்கொண்ட பாண்டியனார்
ஓரின்ப வெள்ளத் துருக்கொண்டு
தொண்டரை உள்ளங் கொண்டார்
பேரின்ப வெள்ளத்துட் பெய்கழ
லேசென்று பேணுமினே

மாய வனப்பரி மேல்கொண்டு
மற்றவர் கைக்கொளலும்
போயறும் இப்பிறப் பென்னும்
பகைகள் புகுந்தவருக்
காய அரும்பெருஞ் சீருடைத்
தன்னரு ளேயருளும்
சேய நெடுங்கொடைத் தென்னவன்
சேவடி சேர்மின்களே

அழிவின்றி நின்றதோர் ஆனந்த
வெள்ளத் திடையழுத்திக்
கழிவில் கருணையைக் காட்டிக்
கடிய வினையகற்றிப்
பழமலம் பற்றறுத் தாண்டவன்
பாண்டிப் பெரும்பதமே
முழுதுல குந்தரு வான்கொடை
'யேசென்று முந்துமினே

-திருவாசகம்

என் செவியில்
எல்லை யில்லா ஆனந்தம் அளித்து
அல்லல் களைந்தே அருள்வழி காட்டி

ஆகாய பூதத்தின் செயல் சத்தம். சத்தம் தன்மாத்திரையைச் செவிப்புலன்வழியே அறிவது அறிவு உருவான ஆன்மா ஆகும். மந்திரத்தின் வாச்சியார்த்தப் பொருள் பிரணவ கோஷமாகும். இது நுண்புலனறிவு. எந்த மகாமந்திர செபமும் சித்திக்கும் அறிகுறி

அருள்தரும் ஆனந்தத்து அழுத்திஎன் செவியில்
எல்லை இல்லா ஆனந்தம் அளித்து
அல்லல் களைந்தே அருள்வழி காட்டி

ஆன்ம பரிபக்குவத்தில் உயர்நிலை அடைகின்ற இரகசிய நெறியின் பல நுட்பங்கள் இந்த வரிகளிலே பொதிந்துள்ளன. இந்த அடிகளும் இவற்றைத் தொடர்ந்து வருகின்ற அடிகளும், அநுபவ ஞான முதிர்ச்சி பெற்ற பல பெரியோர்களை மெய்ம்மறக்கச் செய்த அருங்கவி மொழிகளாம். இவற்றின் கவிப்பண்பு ஒருபுறம் இருக்க, இவை கூறி விளக்குகின்ற ஆன்ம இரகசியங்கள், பல்லாயிரம் ஆண்டுகளாக இமயமலை முதல் பொதிகை மலை ஈறாகக் குகைகளிலும், வனக் குடில்களிலும் வதிந்து, பேரின்பத்தைத் துய்த்துப் பிறரையும் துய்க்க வைத்த மாபெரும் சித்தர்களின், அநுபவ ஞானக் களஞ்சியங்களாம். எனவே, இந்த வரிகளை அனுபவ ஞானம் பெற்ற சிவயோகி இரத்தின சபாபதியார் தந்துள்ள விளக்கத்தின் வாயிலாகக் காண்பது சிறப்புடையதாகும். அந்த விளக்கத்தை அப்படியே கீழே தருகின்றேன்.

"அநாதி காலந்தொட்டு இடையறாது வரும் பிறப்பு இறப்புகளுக்குக் காரணமாகிய வினைகளையெல்லாம் (செயல்படாமல்) வேரோடு பறித்து எறிந்து, வாக்கினாற் சொல்லுதற்கும், மனத்தினால் நினைத்ததற்கும் எட்டாத, மனம் தொழிற்படாத மௌன நிலையை நிலைநிறுத்தி, (அதனால்) அடியனது சிந்தனையினைத் தெளிவுபெறச் செய்து, அறியாமை அறிவு என்ற இரண்டிற்கும் ஆன்மாவே பிறப்பிடம் என்று வைத்து, அடியேன் செவியில் திருவருட்பேற்றைத் தரும் சிவானந்த மாவெள்ளமாகிய நாதவொலியால் அடியேனை மூழ்கும்படி செய்து, வரம்பு இல்லாத சிவனாந்த சுகத்தை (அடியேனுக்கு) வழங்கிப் பிறவித் துன்பத்தை வேரோடு அறுத்துத் திருவருள் நெறியினைக் காண்பித்து...

**விளக்கம்:**

முன்னை வினையின் முதலைக் களைந்தே
வாக்கும் மனமும் இல்லா மனோலயம்
தேக்கியே என்றன் சிந்தை தெளிவித்து

முன்னை வினையின் முதல் அசுத்த மாயையிலும், சுத்தாசுத்த மாயையிலும் உள்ளது. அசுத்த மாயை ஆன்ம தத்துவம் இருபத்து நான்கிலும், சுத்தாசுத்தம் வித்தியாதத்துவம் ஏழிலும் பொருந்தியே, தேகம் எடுக்க காரணமாக உள்ளன. பக்குவான்மாக்களுள், பண்டையப் பிறவிகளில் சரியை, கிரியை, யோக நெறிகளைக் கடைப் பிடித்து வந்தவர்களே உண்மையான ஞானயோகத்திற்குத் தகுதி பெறுகின்றனர்.

யோகியர்க்கே ஞானம் ஒழுங்காம் பேரன்பான்
தாகியரும் யோகம்முன்னே சார்ந்தோர் பராபரமே

- தாயுமானவர்

இங்கு யோகம் என்பது ஹடயோகம் அல்ல. மந்திர சாதனத்தால் வாசியோகத்தால் அடையும் யோகமேயாகும்.

காலையுயிர் என்னுங் கலதிகள் சொற் கேளாமல்
சீலமுடன் எம்மைத் தெளிந்துகொள்வ தெந்நாளோ?

- தாயுமானவர்

பாவனையால் இறைவனையடைய முடியாது.

வான்காண வேண்டின் மலையேறல் ஒக்கும் உன்னை
நான்காணப் பாவனைசெய் நாட்டம் பராபரமே

- தாயுமானவர்

கிரியை வழியால் இறைவனை அடைய முடியாது.

காணுறு கோடி கடிகமழ் சந்தனம்
வானுற மாமல ரிட்டு வணங்கினும்
ஊனினை நீக்கி உணர்பவர்க் கல்லது
தேனமர் பூங்கழல் சேரவொண் ணாதே

- திருமந்திரம்

தன்னை யறிந்தருளே தாரகமாய் நிற்பதுவே
உன்னை அறிதற் குபாயம் பராபரமே

- தாயுமானவர்

ஞானயோகத்தில் தன்னுண்மை ஒளிவடிவு என்று அறிந்தபோது அருள்வயப்பட்டவராகின்றனர். சிவதத்துவம் திடப்படுகிறது. அதனால் இருள் கெடுகின்றது. இருள் கெட்டொழிந்தபோது, வினைக்குக் காரணமான காரண சரீரம் அழிந்துவிடுகிறது. உருவ மனம் அழிந்தவர்க்குக் காரண சரீரம் அழிந்து விடுகிறது. தேகங்கடந்து அறிவொளியால் நிற்பவர்க்கு முன்னை வினையாகிய மருள் முதல் அகற்றப்பட்டுவிடுகிறது.

வாக்கும் மனமும் உள்ளவரையில் சிரசில் நாதமுழக்கம் என்ற நாதம் இருந்துகொண்டிருக்கும். அந்நிலையில் காண்போன், காட்சி, காணப்படுபொருள் மூன்றும் விளங்கிக்கொண்டேயிருக்கும். நாதாந்தம் சென்றபோது, திரிபுடி என்ற இம் மூன்றும் அற்று, அகண்டத்தில் நிற்கக்கூடும். அதனால், வாக்கும் மனமும் இல்லா மனோலயம் என்று கூறப்பட்டுள்ளது.

கற்றகலை யால்நிலைதான் காணுமோ காண்பதெல்லாம்
அற்றஇடத் தேவெளிஆம் அன்றோ பராபரமே
நேரே நினதுஅருள்என் நெஞ்சைக் கவரின்ஒன்றும்
பாரேன் சுகமும் படைப்பேன் பராபரமே
வாதனைவிட்டு உன்அருளின் மன்னின் அல்லால் வேறும்ஒரு
சாதனைதான் உண்டோநீ சாற்றாய் பராபரமே
ஒப்புயர்வொன் றின்றி ஒலிபுகா மோனவட்டக்
கப்பலுக்குஆம் வான்பொருள்நீ கண்டாய் பராபரமே
சிந்தனைபோய் நான்எனல்போய்த் தேக்க இன்ப மாமழையை
வந்து பொழிந்தனைநீ வாழி பராபரமே

- தாயுமானவர்

உரையிறந்தால் உன்னு முணர்விறந்தால் மாயைத்
திரையிறந்தால் காண்கின்ற தேவை - வரைபெருக
வாசிப்ப தும்நாவால் வாழ்த்துவதும் நாடகமாய்ப்
பூசிப்ப துஞ்சுத்தப் பொய்

- சிவபோகசாரம்

சித்த தடாகத்தில் மனம், புத்தி, அகங்காரம் பொருந்திய அந்தக்கரணம் உள்ளது. சித்தம் மனம் செயல் ஒழிந்தபோது புத்திக்கும், செலுத்தும் அகங்காரத்திற்கும் வேலையில்லை. கரை கட்டிய நீர்த்தேக்கம்போல் தன்னிலையில் நிற்கும்போது, ஆன்மாவின் செயல் கருவிகளான தத்துவங்கள் முப்பத்தாறும் சேட்டையிற்றன. அதனால், ஆன்மாவின் தனிநிலையில் உள்ளதைத் ‘தேக்கியே என்றன் சிந்தை தெளிவித்து’ என்றார். ஆன்மா தனது நிலையில் சத்து, சித்து, ஆனந்தமயமாய் உள்ளது.

*இருள்வெளி இரண்டிற்கு ஒன்றிடம் என்ன*
*அருள்தரும் ஆனந்தத் அழுத்தி*

ஆன்மா
இச்சை
(அகங்காரம்)




சாதாரண மனிதனின் கீழ்முகங் கொண்ட அந்தக்கரணச் செயலுக்குரிய நிலையை இப்படம் காட்டுகிறது. ஆன்மா அந்தக் கரணத்தைக் கீழ் நோக்கிச் செலுத்தும் இயக்க நிலை இது ஆகும்.




ஞானியின் மேல்முகங் கொண்ட சித்தத் தடாகநிலையை இப்படம் காட்டுகிறது.

முன்னர்ப் பாசபந்தியா யிருந்தபோது ‘தேகமேதான்’ என்றிருந்தான். தேகம் தானல்ல; தான் தேகங்கடந்த வெளியே என்றறிந்த போது, வெளியனாக ஞானி ஆனான். முன்னர் இருளாக இருந்து தன்னை யுணராது மறைத்ததும், ஒளியாகத் தன்னுண்மையை உணர உணர்த்தியதும், இந்த ஒரே ஆகாயம்தான் என்பதை அறிகிறான். அறிந்தபோது இருளும் ஒளியுமாகவும், தனக்குப் பாசபந்தமாகவும், அருளாகவும் இருப்பது, ஆகாயத்தை இடமாகக் கொண்டு விளங்கும் ஒரு சக்தி என்பனத உணரமுடிந்தது. அந்தச் சக்தி பாசபந்தியாக இருந்த போது உலகப்பொருளை நாடிப் பெற்று, அதனால் இன்பம்

பெறச் சுட்டறிவாகச் செயல்படுத்தியது. ஒளியான ஞான சத்தியான போது, புறத்தே நாடுவதைவிட்டு, அகநிலையில் இன்பத்தையளித்து அதிலே என்னைத் திளைக்கச் செய்து, அகண்ட ஞானத்தை அளித்து,

ஆகாச வண்ணன் அமரர் குலக்கொழுந்
தேகாச மாசுண மிட்டங் கிருந்தவன்
ஆகாச வண்ணம் அமர்ந்து நின்றப்புறம்
ஆகாச மாயங்கி வண்ணனு மாமே

- திருமந்திரம்

சிரசில் ஒரு இன்பக் கிளுகிளுப்புத் தோன்றுவதில் இது தன்னையே மறக்கச் செய்துவிடும். திருப்பாண்டிப் பதிகம் திருவாசகம் பார்க்க இது நன்கு விளங்கும்.

நீரின்ப வெள்ளத்துள் நீந்திக்
குளிக்கின்ற நெஞ்சங் கொண்டீர்
பாரின்ப வெள்ளங் கொளப்பரி
மேற்கொண்ட பாண்டியனார்
ஓரின்ப வெள்ளத் துருக்கொண்டு
தொண்டரை உள்ளங் கொண்டார்
பேரின்ப வெள்ளத்துட் பெய்கழ
லேசென்று பேணுமினே

மாய வனப்பரி மேல்கொண்டு
மற்றவர் கைக்கொளலும்
போயறும் இப்பிறப் பென்னும்
பகைகள் புகுந்தவருக்
காய அரும்பெருஞ் சீருடைத்
தன்னரு ளேயருளும்
சேய நெடுங்கொடைத் தென்னவன்
சேவடி சேர்மின்களே

அழிவின்றி நின்றதோர் ஆனந்த
வெள்ளத் திடையழுத்திக்
கழிவில் கருணையைக் காட்டிக்
கடிய வினையகற்றிப்
பழமலம் பற்றறுத் தாண்டவன்
பாண்டிப் பெரும்பதமே
முழுதுல குந்தரு வான்கொடை
'யேசென்று முந்துமினே

-திருவாசகம்

என் செவியில்
எல்லை யில்லா ஆனந்தம் அளித்து
அல்லல் களைந்தே அருள்வழி காட்டி

ஆகாய பூதத்தின் செயல் சத்தம். சத்தம் தன்மாத்திரையைச் செவிப்புலன்வழியே அறிவது அறிவு உருவான ஆன்மா ஆகும். மந்திரத்தின் வாச்சியார்த்தப் பொருள் பிரணவ கோஷமாகும். இது நுண்புலனறிவு. எந்த மகாமந்திர செபமும் சித்திக்கும் அறிகுறி

நாதகோஷமாகும். அதில் திளைப்பதில் துன்பமயமான உலக வாசனைவிட்டு, அருள்மயமான ஆகாசப்பேறு கிட்டும்.

முக்குணம் புலனைந் துடனடக்கி
மூல வாயுவை யடைத்திரு விழியைச்
சிக்கெனும்படி யடைத்தொரு விழியைத்
திறந்து தாண்டவச் சிலம்பொலி யுடன்போய்த்

தக்கவைந்தெழுத் தோரெழுத் துருவாய்த்
தன்மை கண்டவர் தரும்பெரு வெளிக்கே
புக்கழுந் தினரெமதுருப் பெறுபவர் புவியில்
வேட்டுவ னெடுத்தமண் புழுப்போல்

-வாதவூரர் புராணம்

திருச்சிலம் போசை ஒலிவழியே சென்று
நிருத்தனைக் கும்பிடென்றுந் தீபற
நேர்பட அங்கே நின்றுந் தீபற
மருளுந் தெருளும் மறக்கும் அவன்கண்
அருளை மறவா தேவுந் தீபற
அதுவே யிங்குள்ள தென்றுந் தீபற

- திருவுந்தியார்

முன்னரே சிலம்பொலி பரையோகம், பரைபோகம், பரையிலதீதம் என்ற விடத்தில் விளக்கப்பட்டுள்ளது.

பிறியாத தண்ணருட் சிவஞானியாய் வந்து
பேசரிய வாசியாலே
பேரின்ப வுண்மையையளித்த தனையென் மனதறப்
பேரம்பலக் கடவுளாய்
அறிவா யிருந்திடு நாதவொலி காட்டியே
அமுர்தப் பிரவாக சித்தி
அருளினை யலாதுதிரு வம்பலமு மாகியெனை
ஆண்டனைபின் எய்தி நெறியாக்
குறிதா னளித்தனைநன் மாவுரி கொந்தணக்
கோலமாய் அசபாநலங்
கூறினபின் மௌனியாய்ச் சும்மா இருக்கநெறி
கூட்டினை யெலாமிருக்கச்
சிறியோன் மயங்கிமிக வறிவின்மை யாவனோ
தேடறியச் சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே
தேசோ மயானந்தமே

- தாயுமானவர்

இதையடுத்து வருகின்ற வரிகள் ஆன்ம அநுபவத்தின் மிகப்பெரிய இரகசியங்களை உள்ளடக்கியுள்ளன. தலைக்குமேல் சாதாக்கியம் என்ற நிலையில் சித்தர்கள் கூறுகிற அமூர்த்தி சாதாக்கியத்தை வெளிப்படுத்துவதையும் விந்துநாத அநுபவங்களைப் பெறுவதையும், அவ்வையார் மிக எளிய தமிழிலே வெளியிடுகிறார்.

சத்தத்தி னுள்ளே சதாசிவம் காட்டி

சித்தர்கள் கற்பிக்கின்ற யோகப் பயிற்சியிலே தேர்ந்து முன்னேறுகிற மாணவனுக்கு, அவனுடைய தலைக்கு மேலே நுட்பமான ஓர் ஓசை எழுந்து ஒலிக்கத் தொடங்கும். வான் அணுக்களின் அதிர்வோடு ஒன்றிய நிலையிலே ஏற்படுகின்ற மன அதிர்விலே இது நிகழ்கிறது. இந்த நிலை சிவ தத்துவம் கலந்த நிலை என்று அழைக்கப்பெறும். இதுவே, சத்தத்தினுள்ளே சதாசிவத்தைக் காணுகிற பயிற்சி முறையாகும்.

சிவதத்துவம் என்பது சுத்த வித்தை, மகேசுவரம், சாதாக்கியம், விந்துநாதம் ஆகிய தத்துவங்களின் நிலையமாகும். 'ஆன்மாவின் வடிவம் விந்து நாதமேயாம். எனவே அண்டமும் பிண்டமும், பரவெளியும் உடலும் தத்துவ நிலையிலே ஒன்றும்பொழுது, எங்கும் பரந்துள்ள சிவதத்துவநாதம் உடம்புக்குள்ளே கேட்கத் தொடங்குகிறது. எங்கேயோ நடைபெறுகின்ற ஒரு நிகழ்ச்சியை நமது வீட்டு வானொலிப் பெட்டியிலே கேட்பது போலவும், எங்கேயோ நடக்கின்ற ஒரு நாடக நிகழ்ச்சியை நமது வீட்டுத் தொலைக்காட்சி பெட்டியிலே பார்ப்பது போலவும், நமது உடம்புக்குள்ளே சிவநாதத்தைக் கேட்பதும், சிவ வடிவத்தைக் காண்பதும் கைகூடுகின்றன. இதுவே சித்தத்தினுள்ளே சிவலிங்கம் காணுவதும் ஆகும்.

சத்தத்தி னுள்ளே சதாசிவம் காட்டி
சித்தத்தி னுள்ளே சிவலிங்கம் காட்டி

என்னும் இரண்டு வரிகளும் வானொலி போன்ற ஒலியநுபவத்தையும், தொலைக்காட்சி போன்ற ஒளி அநுபவத்தையும் உணர்த்துகின்றன.

சிவதத்துவம் எங்கும் பரந்து நிற்பது. அதனுடைய ஒலி நுண்வான் அலையாகவும், அதன் ஒளி நுண்வான் ஒளியாகவும் திகழ்கின்றன. இந்த இரண்டையும் வாங்கிப் பிடிக்கிற ஆற்றலே ஆன்மாவின் ஆற்றலாகும். இந்த ஆற்றல் எல்லா மக்களுக்கும் இயல்பாக அமைந்திருக்கின்றது. ஆனால் அது நீறுபூத்த நெருப்புப்போல் அடங்கி இருக்கிறது. ஒரு ஞானகுரு அதைக் கிளறிவிடுகிறான். அப்போது அந்த ஆற்றல் சுடர்வீசத் தொடங்குகிறது. இந்த ஆற்றலின் வளர்ச்சியினால் ஒரு யோகிக்குச் சூக்குமப் பார்வையும், சூக்குமக் கேள்வியும் கைகூடுகின்றன.

சித்தர்களுடைய ஞானப் பயிற்சியிலேயே முக்கியமானவை, ஒலியைக் கேட்டலும், ஒளியைக் காணலுமே ஆம். நம்முடைய முகத்திற்கு முன்னே பரந்து இருக்கின்ற வான் அணுக்களிலே, ஒரு யோகி சிவ ஒளியைக் காணுகிறான். தலைக்கு மேலே பரந்துள்ள வான் அணுக்களிலே, ஒருயோகி சிவநாதத்தைக் கேட்கிறான். இந்த அநுபவங்களின் விரிவையும் களிப்பையும் தமிழ்மொழியில் உள்ள சித்தர் நூல்கள் அனைத்தும் மிகத் தெளிவுடன் விளக்குகின்றன.

அணுவிற்கு அணுவாய் அப்பாலுக்கு அப்பாலாய்
கணுமுற்றி நின்ற கரும்புள்ளே காட்டி
வேடமும் நீறும் விளங்க நிறுத்தி

தனி உடலும் பரவெளியும் ஆன்மயோகப் பயிற்சியின் வாயிலாக ஒன்றி நிற்கும்போது, அந்த ஆற்றலானது நொய்ம்மைக்கு நொய்ம்மையாய்க் கூர்ந்து சென்று காணும் திறனுடையதாயும், அண்டவெளியையும் தாண்டிப் பார்க்கும் ஆற்றல் உடையதாகவும் சுருக்கமும் பெருக்கமும் பெறுகிறது. இதுவே அணுவுக்கு அணுவாகுதலும், அப்பாலுக்கு அப்பாலாகுதலும் ஆம்.

ஒரு கரும்பினுள்ளே சாறு பொதிந்து நிரம்பி நிற்கும்படி, அதனைக் காப்பது அந்தக் கரும்பின் கணுவே ஆகும். கணு உடையும்போது, சாறு பிழியுறுகிறது. இவ்வாறுதானே உடம்புக்குள்ளே உள்ள நுண்உடம்பும் செயற்படுகிறது. ஆன்ம பரிபக்குவம் அடையும்போது பருவுடலின் கணுக்கள் உடைந்து, நுண் உடலின் சாறு வெளிப்படத் தொடங்குகிறது.

திருநீறும் சிவவேடமும், உடம்பிற்குள்ளே உள்ள நுண்உடம்பின் பக்குவ நிலையை உணர்த்துவனவாம். அகஉடலில் பக்குவம் இல்லாதார் புற உடலின் வேடங்களுக்கு அருகதை அற்றவர். இரண்டும் இயையும் போதுதான், அகஉடல் விளங்கும்படி புற உடம்பை நிலைநிறுத்துவதில் பொருள் உண்டாகிறது. விநாயகப் பெருமானுடைய திருவருள் இந்த ஆன்ம இயைபை வழங்கி, வேடமும் நீறும் விளங்கும்படி நிறுத்துகிறது.

கூடுமெய்த் தொண்டர் குழாத்துடன் கூட்டி

சித்தர்களின் பரிபாஷையாகிய ஞானக் குழூஉக் குறியிலே தொண்டர்குழாம் என்பதற்குச் சிறப்பானதோர் பொருள் உண்டு. ஞானிகளின் உபதேச இரகசியம் என்னவென்றால், ஒரு ஞானியின் மாணவனாக ஒருவன் நேர்முக உபதேசம் பெற்று, ஞானப் பயிற்சியைத் தொடங்கிவிட்டான் என்றால், அவனுக்கு வழிகாட்டுவது நேர்முக ஆசான் மட்டுமல்லாமல், அந்த குரு பரம்பரையே நுண்ணிய உருவில் நின்று நுட்பமான முறையிலே நெறியைத் தெளிவுபடுத்துகிறது என்பதை முன்னர் பொது நோக்கிலே பார்த்தோம். இந்த ஞானகுரு பரம்பரை திருக்கயிலாயப் பரம்பரை என்று அழைக்கப் பெறுவதுபோல, மெய்த்தொண்டர் குழாம் என்றும் பேசப் பெறுகிறது. ஞானம் பயிலும் மாணவனை ஒரு ஞானகுரு இத்தகைய தொண்டர் குழாத்துடன் கூட்டுவிக்கிறார்.

அஞ்சக் கரத்தின் அரும்பொருளு தன்னை
நெஞ்சக் கருத்தின் நிலையறி வித்து

அஞ்சக்கரம் என்பது பஞ்சாக்கரம் என்னும் ஐந்தெழுத்து மந்திரம். இது சித்தர்களுடைய உலகிலே உடம்பிலுள்ள ஒவ்வொரு நிலையத்திலும் ஒவ்வொரு எழுத்தாக நின்று செயற்படுகிறது. இந்த நுட்பத்தை நேரிலே உணர்த்துகிறவனே ஞானகுரு. அவன் அந்த நுட்பத்தை மாணவனுடைய உடம்பைத் தொட்டுக் காட்டி உணர்த்தி, அது செயற்படுமாறு அதை முடுக்கிவிடுவதனால், இந்தப் பயிற்சி ஐந்தெழுத்தை நிலைபெறச் செய்யும் ஞானக்கலை என்று அழைக்கப்பெறுகிறது.

தத்துவ நிலையைத் தந்தெனை ஆண்ட
வித்தக விநாயக விரைகழல் சரணே

இந்த இரண்டு வரிகளுக்கும் சிவயோகியார் கூறுகிற பொருளுரை வருமாறு:

"ஆகாய மண்டலத்தில் அறிவுடன் உலாவும் பிரளயாகலர் விஞ்ஞானகலர்களின் கூட்டத்தில் ஒருவனாக என்னைச் சேர்த்து, பஞ்சாக்கரத்தில் நடுநாயகமான சிகாரத்தால் குறிப்பிடப்படும் அரிய பொருளை எனக்கு உணர்த்தி, அதன் பயனான நிலையை எனக்களித்து என்னை ஆண்டுகொண்ட சகல சாமர்த்தியம் உடைய பெருமானே! மேலாகிய விநாயகக் கடவுளே! விந்து நாதமாகிய உனது திருவடிகளைச் சரணடைகின்றேன்".

அவ்வையார் இயற்றியுள்ள விநாயகர் அகவல் என்ற இந்த அரிய செய்யுள், "இயற்றுதல்" என்ற சொல்லுக்கு உரிய ஒரு செயல் ஆகாது. நம்முடைய சமய ஞானியர்களின் மரபிலே 'அருளுதல்' என்றும், 'திருவாய் மலர்ந்தருளுதல்' என்றும் சிறப்பான வினைச்சொற்கள் பயன்பெறுகின்றன அல்லவா! அத்தகைய ஓர் அருள்வினைத்தான் அவ்வையாரின் இந்த விநாயகர் அகவல் என்னும் நூற்படைப்பும் ஆகும்.

மந்திர ஆற்றலும், உயிர்ப்புள்ள எழுத்துக்களின் மையங்களும், நிரம்பி ஒழுகும் ஓர் அரிய செய்யுளே இந்த விநாயகர் அகவலாகும். அதனோடு ஓதுவதற்கு எளிய சொல்லும் யாப்பும் கொண்டு விளங்குவதால் பலரும் நம் தமிழ்நாட்டிலே தங்கள் பூசனைகளில் இந்த நூலை ஆர்வத்தோடு ஓதிவருவது நாடளாவிய பழக்கமாக இருக்கக் காண்கிறோம். இந்த நூலை ஓதுகிறவர்களில் பலருக்கும்,

"சொற்பதம் கடந்த துரிய மெய்ஞானம்"
"தலமொரு நான்கும் தந்தெனக் கருளி"
"ஆறாதா ரத்து அங்குச நிலையும்"
"இடைபிங் கலையின் எழுத்தறி வித்து"
"கடையிற் சுழுமுனை கபாலமும் காட்டி"
"குண்டலி அதனிற் கூடிய அசபை"
"இடைச்சக் கரத்தின் ஈரெட்டு நிலையும்"
"புரியட்ட காயம் புலப்பட எனக்குத்"
"தெரியெட்டு நிலையும் தெரிசனப் படுத்தி"
"சத்தத்தி னுள்ளே சதாசிவம் காட்டி"

போன்ற வரிகளின் பொருள் விளங்காது என்பது வெளிப்படை. ஆனாலும் கல்லாத ஒரு மொழியிலே மந்திரங்களைச் சொல்வது போல, இந்தப் புரியாத தமிழை அவர்கள் ஓதி வருகிறார்கள் என்பது உண்மை என்றாலும், பூசனை முறையிலே ஓதுதல் என்ற செயலின் பயனை அவர்கள் அடைந்தே வருகிறார்கள். அதில் ஐயம் இல்லை. வைத்தியர் கொடுக்கும் ஒரு மருந்தின் இயல்பையும், அதன் வேதியியற்

பண்புகளையும், அதிலுள்ள சரக்குகளின் தன்மைகளையும் தெரிந்து கொள்ளாத ஒரு நோயாளிக்கும் அந்த மருந்து பலன் தரவே செய்கிறது அல்லவா! அதுபோலவேதான் தாய் மொழியிலே பூசனை செய்து ஓதுவார் நிலையும் ஆகும்.

ஆனால் யோகம் பயில்கிற ஒரு மாணவனின் நிலை அவ்வாறு இல்லை. அவன் வெறும் சொற்களை ஓதுகிறவன் இல்லை. அந்தச் சொற்கள் தாங்கி வருகிற செயல்களைப் புரிகிறவன் அவன். அவனுக்கு விநாயகர் அகவல் என்பது ஒரு செய்யுள் நூல் மட்டும் இல்லை. அது அவனுக்கு ஒரு ஞானயோகக் களஞ்சியமாகிய சித்தர்களின் பாடநூலேயாகும். இந்தக் கண்கொண்டு அவ்வையாரின் அகவலைப் பார்த்தோமானால், அது ஓர் சித்தர் இலக்கியம் என்பது புலனாகும். இது காரணம் பற்றியே இந்த நூல் எல்லா மக்களுக்கும் பெரிதும் பயன்படுகிற ஒரு சித்தர் நூலாகவும், ஞானகுருமார்கள் மாணவர்களுக்கு உபதேசம் செய்யும்போது கையாளுகிற ஒரு பாடநூலாகவும் திகழ்கிறது. சுருங்கச் சொல்லின், சித்தர் இலக்கியமாகிய ஞான உணவுக்கு அவ்வையாரின் விநாயகர் அகவல் ஒரு பதச்சோறு ஆகும். இதுவே இதன் முக்கியம். இதுவே இதன் சிறப்பும் ஆகும்.



# விநாயகர் அகவல்

சீதக் களபச் செந்தா மரைப்பூம்
பாதச் சிலம்பு பலஇசை பாடப்
பொன்னரை ஞாணும் பூந்துகில் ஆடையும்
வன்ன மருங்கில் வளர்ந்தழ(கு) எறிப்பப்
பேழை வயிறும் பெரும்பாரக் கோடும்
வேழ முகமும் விளங்குசிந் தூரமும்
அஞ்சு கரமும் அங்குச பாசமும்
நெஞ்சிற் குடிகொண்ட நீல மேனியும்
நான்ற வாயும் நாலிரு புயமும்
மூன்று கண்ணும் மும்மதச் சுவடும்
இரண்டு செவியும் இலங்குபொன் முடியும்
திரண்டமுப் புரிநூல் திகழ்ஒளி மார்பும்
சொற்பதம் கடந்த துரிய மெய்ஞ்ஞான
அற்புதன் ஈன்ற கற்பகக் களிறே!
முப்பழம் நுகரும் மூஷிக வாகன!
இப்பொழு(து) என்னை ஆட்கொள வேண்டித்
தாயாய் எனக்குத் தானெழுந் (து) அருளி
மாயப் பிறவி மயக்கம் அறுத்துத்
திருந்திய முதல்ஐந் தெழுத்தும் தெளிவாய்ப்
பொருந்தவே வந்தென் உளந்தனில் புகுந்து
குருவடி வாகிக் குவலயந் தன்னில்
திருவடி வைத்துத் திறம்இது பொருள்என
வாடா வகைதான் மகிழ்ந்தெனக் கருளிக்
கோடா யுதத்தால் கொடுவினை களைந்தே
உவட்டா உபதேசம் புகட்டிஎன் செவியில்
தெவிட்டாத ஞானத் தெளிவையுங் காட்டி
ஐம்புலன் தன்னை அடக்கும் உபாயம்
இன்புறு கருணையின் இனிதெனக் கருளிக்
கருவிகள் ஒடுங்கும் கருத்தினை அறிவித்(து)
இருவினை தன்னை அறுத்திருள் கடிந்து
தலமொரு நான்கும் தந்தெனக் கருளி
மலமொரு மூன்றின் மயக்கம் அறுத்தே
ஒன்பது வாயில் ஒருமந் திரத்தால்
ஐம்புலக் கதவை அடைப்பதுங் காட்டி
ஆறா தாரத் (து) அங்கிசை *நிலையும்
பேறா நிறுத்திப் பேச்சுரை அறுத்தே

---

★ *அங்கிசை என்பதற்கு அங்குச என்றும் ஒரு பாடம்.*

இடைபிங் கலையின் எழுத்தறி வித்துக்
கடையில் சுழுமுனைக் கபாலமும் காட்டி
மூன்று மண்டலத்தின் முட்டிய தூணின்
நான்றெழு பாம்பின் நாவில் உணர்த்திக்
குண்டலி அதனில் கூடிய அசபை
விண்டெழு மந்திரம் வெளிப்பட உரைத்து
மூலா தாரத்து மூண்டெழு கனலைக்
காலால் எழுப்பும் கருத்தறி வித்தே
அமுத நிலையும் ஆதித்தன் இயக்கமும்
குமுத சகாயன் குணத்தையும் கூறி
இடைச்சக் கரத்தின் ஈரெட்டு நிலையும்
உடற்சக் கரத்தின் உறுப்பையுங் காட்டிச்
சண்முக தூலமும் சதுர்முக சூக்கமும்
எண்முக மாக இனிதெனக் (கு) அருளிப்
புரியட்ட காயம் புலப்பட எனக்குத்
தெரிஎட்டு நிலையும் தெரிசனப் படுத்திக்
கருத்தினில் கபால வாயில் காட்டி
இருத்தி முத்தி இனிதெனக் (கு) அருளி
என்னை அறிவித்து எனக்கருள் செய்து
முன்னை வினையின் முதலைக் களைந்தே
வாக்கும் மனமும் இல்லா மனோலயம்
தேக்கியே என்றன் சிந்தை தெளிவித்(து)
இருள்வெளி இரண்டிற்கு ஒன்றிடம் என்ன
அருள்தரும் ஆனந்தத் (து) அழுத்திஎன் செவியில்
எல்லை இல்லா ஆனந்தம் அளித்(து)
அல்லல் களைந்தே அருள்வழி காட்டிச்
சத்தத்தின் உள்ளே சதாசிவம் காட்டிச்
சித்தத்தின் உள்ளே சிவலிங்கம் காட்டி
அணுவிற்கு அணுவாய் அப்பாலுக்(கு) அப்பாலாய்க்
கணுமுற்றி நின்ற கரும்புள்ளே காட்டி
வேடமும் நீறும் விளங்க நிறுத்திக்
கூடுமெய்த் தொண்டர் குழாத்துடன் கூட்டி
அஞ்சக் கரத்தின் அரும்பொருளு தன்னை
நெஞ்சக் கருத்தின் நிலையறி வித்துத்
தத்துவ நிலையைத் தந்தெனை ஆண்ட
வித்தக விநாயக விரைகழல் சரணே!

- அவ்வையார்



## 2. விநாயகர் வடிவங்கள் - வகையும் தொகையும்

விநாயகர் அகவலில் நாம் ஆராய்ந்த வழிபாட்டு முறைகள் எல்லாம் பெரும்பாலும் மனத்தின் எண்ணங்களில் நிகழ்கின்ற செயல்முறைகளைச் சார்ந்தவையாம். எனினும், இதே வழிபாட்டு முறைகள், உருவ நிலையில் நின்று வழிபடுகின்ற பெரியோர்களுக்கும் பொருந்தக்கூடியவையே. இந்த உண்மையை ஒட்டி விநாயகர் உருவங்களில் உள்ள வேறுபாடுகளை ஆராய்வது ஏற்புடைத்து ஆகும். ஏனென்றால், விநாயகர் அகவலின் துதி முறையானது இந்த வேறுபாடுகள் அனைத்திற்கும் ஒவ்வக் கூடியதே.

ஏற்கனவே பொது நோக்கிலே விநாயகரின் உருவங்களைத் தொகுப்பாகப் பார்த்தோம். இப்போது கணபதியின் வடிவங்களை ஆராய்ந்து கூறியுள்ள சில பெரியோர்கள்தம் குறிப்புக்களைக் கொண்டு விரிவாகவே பார்க்கலாம்.

சிவயோகி இரத்தினசபாபதியார் அவர்கள் அவ்வையின் குறளுக்கும் விநாயகர் அகவலுக்கும் சில அரிய குறிப்புக்கள் எழுதியது உண்டு. அவற்றின் ஒரு பகுதி 'காரிய சித்தி' என்ற பெயரிலே நூலாக வெளிவந்துள்ளது. இதனுடைய நோக்கம் விநாயகர் அகவலின் ஞானப் பொருளை விளக்குவதே என அமைந்ததால், அவர் எழுதிவைத்த குறிப்புகளில் உருவ வேறுபாடுகளைப் பற்றியன நூல்வடிவம் பெறவில்லை.

திருவாவடுதுறை ஆதீனத்திலிருந்து வெளிவந்துள்ள 'கணபதி' என்னும் ஓர் அரிய நூலிலே, பெரும்புலவர் ச. தண்டபாணி தேசிகர் அவர்கள் ஆழ்ந்து ஆராய்ந்து, கணபதியின் உருவ வகைகளைப் பற்றிய நுட்பமான விளக்கங்களை வழங்கி இருக்கிறார்கள்.

மாணிக்க யோகீசுவரர் போன்ற பெரியோர்களும் விநாயகரின் உருவங்களைப் பற்றிய பல செய்திகளை நமக்குத் தந்திருக்கிறார்கள்.

இந்தப் பெரியோர்களின் குறிப்புக்களை எல்லாம் ஆராய்ந்து பார்க்குமிடத்து, கணபதி வடிவின் வகைகளிலே முப்பத்திரண்டு உருவங்கள் முக்கியமாகப் பேசப்பெறுகின்றன. இந்த உருவ வகைகள் வருமாறு:

### 1. பால கணபதி

பெயருக்கு ஏற்ற முறையிலே பால கணபதியின் வடிவம் குழந்தையின் வடிவமாகும். பிள்ளையார் என்ற சொல்லுக்கு அடிப்படையான பொருள் குழந்தை என்று இருப்பினும், வணங்குகின்ற பக்தர்களின்

மனநிலைக்கு ஏற்ப விநாயகரின் வயதும் வளர்ந்து வந்துள்ளது, காலப் போக்கிலே! எனவே பிள்ளைப் பிள்ளையார் என்பதுபோல 'பால' என்ற அடைமொழியைத் தந்து, திருமேனியிலும் பிள்ளையாகக் கோலம் தருகிற உருவத்திற்குப் பால கணபதி என்று பெயரிட்டார்கள்.

இந்த உருவத்திற்குத் துதிக்கை தவிர நான்கு கரங்கள். ஐங்கரன் என்று அழைப்பதற்கு உரிய அழகிய உருவம். முகம் ஆனை முகமே. நிறம் காலையில் உதித்து வருகிற செங்கதிர்ச் செல்வனைப் போன்ற ஒளிவீசும் சிவப்பு நிறம். நான்கு கைகளிலே ஒரு வலக்கையில் வாழைப்பழம்; மற்றொரு வலக்கையில் பலாப்பழம். இடக் கைகளுள் ஒன்றிலே கரும்பு; மற்றொன்றிலே மாங்கனி. துதிக்கையில் மோதகம். அமர்ந்திருப்பது செந்தாமரை மலரிலே.

## 2. தருண கணபதி

விநாயகருடைய கைகள் ஐந்து என்ற ஒரு கணக்கு இருப்பது போலவே, எட்டு என்றும் பிறிதொரு கணக்கு உள்ளது. இந்தக் கணக்கிற்கு ஏற்ப இவை எட்டுத் திசைகளைக் குறிக்கின்ற கைகள் என்று சொல்வது ஒரு மரபு. யோகிகள் இந்த எட்டிற்கு வேறு சில விளக்கங்களைக் கூறி நுண் உடலின் நுட்பங்களை விளக்குவதும் உண்டு. இந்த விளக்கங்களுக்குரிய ஆதாரங்கள் விநாயகர் அகவலிலேயே வருகின்றன.

உருவ முறையிலே கைகள் எட்டாக இருப்பதால், இந்தக் கரங்களுக்கு உரிய பொருள்களும் எட்டாக அமைந்துள்ளன. அவை பாசம், அங்குசம், மோதகம், விளாம்பழம், நாவற்பழம், ஒடிந்த கொம்பு, நெற்கதிர், கரும்பின் துண்டு ஆகிய எட்டுமாம். இந்த எட்டிற்கும் உள்ள ஞானப்பொருள் அவ்வையார் பாடலிலே உட்கிடையாகப் பொதிந்துள்ளது. இந்தத் தருண கணபதியின் நிறம் நண்பகற் பொழுதில் சூரியனின் அனல்நிறம் என்று சித்தர்கள் கூறுகிறார்கள். இவருடைய கரங்களில் எட்டு, வலப்பக்கம் மூன்றும் இடப்பக்கம் நான்கும், நடுவில் உள்ள தும்பிக்கையோடு இணைந்த தொகையாகும்.

சில ஓவியங்களிலே இந்த உருவத்திற்குச் சில அணிபணிகள் புனைந்துள்ளதைக் காண்கிறோம்.

## 3. பக்தி கணபதி

கணபதியின் வடிவங்களிலே மிகவும் அழகுள்ள ஒரு வடிவம் இது. இந்தத் திருமேனியின் நிறம் வெண்மையாகும். இதனைச் சரத் காலத்துப் பௌர்ணமியில் தோன்றுகின்ற சந்திரன் என்று வடநூல்கள் பேசுகின்றன. இவருடைய கரங்கள் நான்கு. இந்தக் கைகளிலே மாம்பழம், வாழைப்பழம், தேங்காய், பாயசம் நிறைந்த சிறிய கலன் காணப்பெறுகின்றன. தும்பிக்கையானது பாயசப் பாத்திரத்தைத் தொடுகின்ற நிலையில் விளங்குகிறது. இந்தக் கையையும் சேர்த்தால் பக்தி கணபதி ஐங்கரனாகிறான். சில ஓவியங்களிலே இவருடைய காலில் தண்டை அணிந்து காணப்பெறுகிறது.

**4. வீர கணபதி**

இந்த உருவம் நின்ற திருக்கோலத்தில் காட்சி தருகிறது. இம் மூர்த்தி பதினாறு கைகள் உடையவர். நிறம் சிவப்பு, முகமும் சற்றே செம்மை படர்ந்தது. கைகளிலே வேதாளம், வேல், அம்பு, வில், சக்கரம், கத்தி, கேடயம், சம்மட்டி, கதை, அங்குசம், நாகம், பாசம், சூலம், குந்தாலி, மழு ஆகிய கலங்கள் காண்கின்றன. வீரகணபதி என்ற நிலைக்கு ஏற்ப இவை அமைந்துள்ளன. இந்த உருவத்தை இக்காலத்தில் வழிபடுவோர் அரியர்.

**5. சக்தி கணபதி**

விநாயகரின் வடிவங்களிலே இந்த உருவத்தின் வழிபாடு குறித்து எத்தனையோ சிறப்பு விதிகள் கூறப்பெறுகின்றன. தில்லியிலும் பம்பாயிலும் இந்த உருவத்தை வழிபடுகின்ற சில அன்பர்களைப் பார்த்திருக்கின்றேன். இந்த வழிபாட்டின் இல்லறப் பயன்களைப் பற்றி இவர்கள் மிக உயர்வாகக் கூறியதைக் கேட்டிருக்கிறேன். சில வடநூல்களில் இந்த உருவ அமைப்பின் இலக்கண முறைகள் விரிவாகக் காணப்பெறுகின்றன. இந்த மூர்த்தியின் நிறம் அந்தி வானத்தின் நிறம் என்று இந்த நூல்கள் குறிப்பிடுகின்றன.

செக்கர் மேனியரான இந்தக் கணபதி, பச்சை நிறம் கொண்ட தேவியைத் தழுவிய நிலையிலே காட்சி தருகிறார். நாயகனும் நாயகியும் இடுப்பில் கைகொடுத்துத் தழுவிக் கொண்டிருப்பதே தனிச்சிறப்பு ஆகும். இவ்விநாயகர் பாசம், பூமாலை ஆகியவற்றைத் தாங்கிய கரத்தினராய் அபயகரம் கொண்டு திகழ்கிறார்.

**6. துவிஜ கணபதி**

இந்த உருவம் ஓர் அபூர்வமான வடிவமாகும். ஏனென்றால் இவ்வடிவத்திற்கு நான்கு யானை முகங்கள். எதிரிலும், இருபுறமும், பின்புறமாக இவை காட்சி தருகின்றன. கைகள் நான்கு. அதாவது நான்கு முகத்திலுமுள்ள நான்கு தும்பிக்கைகள் தவிர நான்கு கைகள். இந்த நான்கிலும் வலக்கைகளில் ஒன்றில் தண்டம், மற்றொண்றில் அட்சமாலை; இடப்பக்கம் ஒன்றில் கமண்டலம், மற்றொன்றில் புத்தகம். மணிக்கட்டுகளிலே வளையல்கள் அணிந்து காண்கிறார் இந்த விநாயகர். இவற்றைக் காப்புக்கள் எனினும் ஒக்கும். இவருடைய நிறம் சந்திரனைப் போன்ற வெண்மை நிறம்.

இந்த விநாயகரைச் சித்திரிக்கின்ற சில பழைய ஓவியங்கள் இவருக்குச் சிவப்பு கலந்த மஞ்சள் நிற ஆடையை அணிவித்துள்ளன. இவருடைய இரண்டு கால்களிலும் தண்டைகளும் காணப்பெறுகின்றன. கழுத்தில் பதக்கம் தொங்குகிற மணிமாலை சுடர்விடுகிறது. உத்தரியம் சுற்றித் தொங்குகிறது. அமர்ந்த திருக்கோலத்தில் காட்சி தருகிற இந்த விநாயகர், தேவி இன்றித் தனிமைக் கோலத்திலேயே காட்சி தருகிறார்.

**7. சித்தி கணபதி**

இந்த விநாயக மூர்த்தியின் நிறம் பொன்கலந்த பசுமை நிறம். இடக்காலை மடித்து, வலக்காலைத் தொங்கவிட்டுக் கொண்டு அமர்ந்த

நிலையிலே காட்சி தருபவர். ஐந்து கரங்களிலும் மாம்பழம் பூங்கொத்து எள்ளுருண்டை, கரும்புத்துண்டு, பரசு ஆகிய ஐந்தும் தாங்கியவர். கிரீடம் அணிந்து காட்சி தருகிற இந்த விநாயக மூர்த்திக்கு, அணி பணிகள் புனைந்து கோலம் செய்வது மரபாகும்.

**8. உச்சிஷ்ட கணபதி**

இந்த விநாயக மூர்த்தியின் நிறம் வானத்தின் நீல நிறமாகும் நின்ற திருக்கோலத்தில் காட்சி தருபவர். நீலோற்பலம், மாதுளம்பழம், நெற்கதிர், அட்ச மாலை, வீணை ஆகியன தரித்தவர்.

இந்த அரிய உச்சிஷ்ட்ட விநாயகரை மந்திரவாதிகள் சில வேற்றுமைகளோடு உருவம் செய்து வழிபடுகிறார்கள். மாபெரும் சித்திகள் விளைவதற்கு இந்த வழிபாட்டை உறுதுணையாக கொள்கிற பக்தர்கள் பலராவர். இவர்கள் வழிபடுகி ற வடிவத்திலே, விநாயகர் தமது தும்பிக்கையைத் தேவியின் யோனி மீது வைத்துக் கொண்டிருக்கும் காம மூர்த்தியாக விளங்குகிறார்.

**9. விக்ன கணபதி**

இந்த விநாயகரின் நிறம் பொன்நிறமாகும். இவருடைய திருக்கரங்களிலே சங்கு, மலரம்பு, கரும்புவில், கோடரி, பாசம், சக்கரம், கொம்பு, மாலை, பூங்கொத்து, பானம் ஆகியவை காண பெறுகின்றன. திருமேனி முழுதும் ஆபரண மயமாக இருக்கிறது.

**10. க்ஷிப்ர கணபதி**

இந்த விநாயகரின் நிறம் அழுத்தமான சிவப்பு நிறம். இந்த நிறத்தை வட நூலார் செவ்வரத்தம் பூவுக்கு ஒப்பிடுகிறார்கள். இவர் தமது கைகளிலே ஏந்தி உள்ளவை தந்தம், பாசம், கற்பகக் கொடி, இரத்தின கும்பம், அங்குசம் ஆகிய ஐந்துமாம்.

**11. ஏரம்ப கணபதி**

இவருடைய நிறம் கரும்பச்சை அல்லது கருமை கலந்த பசுமையாகும். சிங்க வாகனத்தில் காட்சி தருகிறார். இவருக்கு நான்கு புறமும் நான்கு ஆனைமுகங்களும் முன் முகமாகிய ஆனை முகத்திற்கு மேல் இன்னுமொரு ஆனை முகமும் காண்கிறோம். இவர் அய்ம்முகக் கணபதி ஆவார். அபயம், வரதம் ஆகிய கரங்கள் முதன்மையாகக் காட்சி தருவதோடு மற்றக் கரங்களில் பாசம், தந்தம், அட்ச மாலை, மாலை, பரசு, சம்மட்டி, மோதகம், பழம் ஆகியவற்றைத் தாங்கி நிற்கிறார்.

**12. லட்சுமி கணபதி**

இவருடைய நிறம் வெண்மையானது. வடநூல்கள் இந்த வெண்மையை அமுதப் பிரவாகம் என்று அழைக்கின்றன. நீலத் தாமரைப் பூவை ஏந்திய இரண்டு தேவியர்களோடு காட்சி தருகிறார். இவருடைய கைகள் எட்டு. இவற்றில் கிளி, மாதுலம்பழம், கலசம், அங்குசம், பாசம், கற்பகக் கொடி, கடகம் ஆகியவற்றைத் தாங்கியிருக்கிறார்.

**13. மகா கணபதி**

இந்த விநாயகர் மூன்று கண்களை உடையவர். இவருடைய நிறம் சிவப்பு. செங்கதிர் போன்ற வண்ணம். மடியிலே தேவி அமர்ந்திருக்கிறார். இவருடைய கைகளில் மாதுளம்பழம், கதை, கரும்பு, வில், சக்கரம், தாமரை, பாசம், குமுதம், நெற்கதிர், தந்தம், இரத்தின கலசம் ஆகியவற்றைக் காண்கிறோம். மடியில் அமர்ந்திருக்கும் தேவி கையில் தாமரை மலரை ஏந்தியிருக்கிறாள். தழுவிய நிலையிலே அமர்ந்திருக்கிறார். முக்கண்ணராய் விளங்குகின்ற இந்த மூர்த்தி பிறைமுடியரும் ஆவார்.

**14. விஜய கணபதி**

இந்த விநாயகருடைய வாகனம் பெருச்சாளியாகும் நிறம் சிவப்பு. பாசம், அங்குசம், தண்டம், மாம்பழம் ஆகியன ஏந்தியவர்.

**15. நிருத்த கணபதி**

இந்த விநாயகர் கற்பக மரத்தின் அடியில் எழுந்தருளி இருக்கிறார். இவரை கூத்தாடும் பிள்ளையார் என்றும் அழைப்பர். இவருடைய விரல்களில் மோதிரங்களை காணுகிறோம். கைகளில் பாசம், அங்குசம், கோடரி, தந்தம், அபூபம் ஆகியன தாங்கியவர். மேனி பொன்நிறமானது. குதித்தாடும் நிலையிலே இவர் காட்சி தருகிறார்.

**16. ஊர்த்துவ கணபதி**

இவர் பொன்நிறமானவர். பச்சை நிறத்துத் தேவியைத் தழுவிக்கொண்டிருப்பவர். கைகளிலே நீலப் பூ, நெற்பயிர், தாமரை, கரும்பு, பானம், வில், தந்தம் ஆகியவற்றை உடையவர்.

**17. ஏகாஷர கணபதி**

இந்த விநாயகர் பெருச்சாளி வாகனத்திலே பதுமாசனத்தில் இருப்பவர். இவருடைய நிறம் சிவப்பு. சிவப்புப் பட்டாடை அணிந்து காட்சி தருகிறார். இவருடைய மாலையும் செம்மலர் மாலை. மூன்று கண்களை உடையவர். குறுங்கையும் குறுந்தாளும் உடையவர் மாதுளம் பழம், பாசம், அங்குசம், வரதம் ஆகியன கூடிய கையர்.

**18. வர கணபதி**

இவரும் பிறைமுடியரே. நிறம் சிவப்பு. மூன்று கண்கள் உடையவர். பாசம், அங்குசம் தாங்கியவர். ஒரே முகம். ஆனை முகம் உடையவர். மகுடம் அணிந்தவர்.

**19. திரயாக்ஷர கணபதி**

இவரைப் பற்றிய வடமொழிச் செய்யுளின் பொருள் வருமாறு :

அசைகின்ற காதுகளை உடையவரும், சாமரை அணிந்தவரும் ஆனவர். பொன்னிறமானவர். நான்கு கைகளை உடையவர். பாசம், அங்குசம், தந்தம், மாம்பழம் தாங்கியவர். துதிக்கை நுனியில் மோதகம் உடையவர்.

**20. க்ஷிப்ர பிரசாத கணபதி**

இந்த விநாயகரின் தனிப்பண்பு இவருடைய பேழை வயிறாகும். வகைவகையான ஆபரணங்கள் அணிந்தவர். வடமொழி நூல்களின்படி இவருடைய கரங்களில் உள்ள பொருள்கள் வருமாறு : பாசம், அங்குசம், கல்பலதை, மாதுளம் பழம், தாமரை, தருப்பை, விஷ்பரம் இவற்றை தரித்தவர். திருவாபரணங்களை அணிந்தர் பேழை வயிற்றை உடையவர்.

**21. ஹரித்திரா கணபதி**

மஞ்சள் நிறத்தில் காட்சி தருகிற இந்த விநாயகருக்கு நான்கு கைகள். அவற்றில் உள்ளவை பாசம், அங்குசம், தந்தம், மோதகம் ஆகியன.

**22. ஏகதந்த கணபதி**

இந்த விநாயகரின் நிறம் நீலம் ஆகும். இவருக்குப் பேழை வயிறு, கோடரி, அட்ச மாலை, வட்டு, தந்தம் இவற்றை உடையவர்.

**23. சிருஷ்டி கணபதி**

இந்த விநாயகரின் நிறம் சிவப்பு. வாகனம் பெருச்சாளி. பாசம், அங்குசம், தந்தம், மாம்பழம் ஆகியவற்றை தாங்கிய கைகளை உடையவர்.

**24. உத்தண்ட கணபதி**

இந்த விநாயகர் பத்துக் கைகளை உடையவர். பச்சை மேனி கொண்ட தேவியினால் தழுவப் பெற்றவர். தேவியின் கையிலே தாமரைப்பூ. இவருடைய கைகளிலே உள்ளவை நீலம், தாமரை, மாதுளம்பழம், கதை, தந்தம், கரும்புவில், இரத்தின கலசம், பாசம், நெற்கதிர், மாலை ஆகியன.

**25. ரண மோசன கணபதி**

இந்த விநாயகரின் நிறம் வெண் பவளம் போன்றது என வடநூலார் குறிப்பிடுகிறார்கள். இவர் உடுத்தியுள்ள ஆடை செந்நிறப் பட்டாகும். கைகளிலே இவர் தரித்திருப்பவை பாசம், அங்குசம், தந்தம் நாவற்பழம் ஆகியவை.

**26. துண்டி கணபதி**

மற்ற விநாயகர் உருவங்களைப் போலவே காட்சி தருகிற இந்த விநாயகர், அட்ச மாலை, கோடரி, இரத்தின கலசம், தந்தம் ஆகிய நான்கையும் தாங்கிய கைகளோடு கோலம் தருகிறார்.

**27. துவி முக கணபதி**

இந்த விநாயகருக்கு இரண்டு முகங்கள் உள்ளன. தலையிலே இரத்தின மகுடம். இவருடைய உடை செம்பட்டாடை. இவருடைய

மேனி பசலை நிறம், கைகளில் ஏந்தியிருப்பவை தந்தம், பாசம், அங்குசம், இரத்தின பாத்திரம் ஆகியன.

### 28. மும்முக கணபதி

இந்த விநாயகரின் நிறம் புரசம் பூவை ஒத்தது. சிவப்பு. வலக்கைகளில் கூர்மையான அங்குசம் காணப்படுவதோடு அட்சமாலையும் வரதமுமாகக் காட்சி தருகிறார். இடக்கைகளில் பாசம், அமுத கலசம், அபயம் ஆகியன காண்கிறோம். பொற்றாமரை ஆசனத்தில், மையமான பொகுட்டில் மூன்று முகங்களோடு எழுந்தருளியிருக்கிறார்.

### 29. சிங்க கணபதி

ஆனைமுகத்தோடு சிங்க வாகனத்தில் எழுந்தருளியிருக்கும் இந்த விநாயகர் தமது வலக்கைகளில் வீணை, கற்பகக்கொடி, சிங்கம், வரதம் ஆகியவற்றைத் தாங்கியிருக்கிறார். இடக்கைகளில் காணப்படுவன தாமரை, இரத்தின கலசம், பூங்கொத்து, அபயம் ஆகியன. இவருடைய நிறம் வெண்மையானது.

### 30. யோக கணபதி

பெயருக்கு ஏற்ப இவர் யோக நிலையில் காட்சி தருகிறார். தரித்திருப்பது யோகப்பட்டம். நிறம் இளஞ்சூரியன் போன்றது. இவர் உடுத்தியுள்ள ஆடையின் நிறம் இந்திர நீலம். இவர் ஏந்தியிருப்பவை பாசம், அட்சமாலை, யோகத்தண்டம், கரும்பு ஆகியன.

### 31. துர்கா கணபதி

இவருடைய நிறம் சுட்ட பசும்பொன்னின் நிறம். ஆடை செந்நிறமானது. இவருக்கு கைகள் எட்டு. மிகப் பெரிய மேனி. வலக்கைகளில் ஏந்தியிருப்பவை அங்குசம், பானம், அட்சமாலை, தந்தம் ஆகியன. இடக்கைகளில் பாசம், வில், கொடி, நாவற்பழம் ஆகியவற்றைக் காண்கிறோம்.

### 32. சங்கட ஹர கணபதி

இந்த விநாயகர் நீல நிறத்து ஆடையை அணிந்து கொண்டு இளஞ்சூரியன் போன்ற நிறத்தோடு செந்தாமரைப் பீடத்திலே நிற்கிறார். இவருடைய இடத் தொடையில் அம்மை காட்சித் தருகிறாள். அவளுடைய மேனி பசிய நிறம். கையில் நீலப் பூ. விநாயகரின் வலக்கையில் அங்குசம், வரதம்; இடக்கையில் பாசம், பாயச பாத்திரம்.

மேலே நாம் கண்ட முப்பதிரண்டு உருவ வேறுபாடுகளையும் அவற்றின் இலக்கணத்தை வரையறை செய்கின்ற வடமொழி செய்யுள்களையும் மகாவித்துவான் தண்டபாணி தேசிகர் போன்ற பெரும் புலவர்களும் சேங்காலிபுரம் அநந்தராம தீட்சிதர் போன்ற வடமொழி புலமை மிக்க பௌராணிகர்களும், இரத்தின சபாபதியார் போன்ற யோகிகளும், விரிவாக எழுதியும் பேசி விளக்கியும் உணர்த்தி

வந்துள்ளார்கள். இந்த உருவங்களை ஓவியங்களிலே தீட்டும்பொழுது வரையறை செய்யப்பெறுகிற நிறங்களை மைவண்ணங்களிலே எழுதிக்காட்ட இயலும். ஆனால் கற்சிலைகளிலும், உலோக படிமங்களிலும் இந்த வடிவங்களை உருவாக்கும், பொழுது நிறங்களைக் குறிப்பிடுவதற்குப் பெரும்பாலும் இந்த திருமேனிகளிலே புனையப் பெறுகிற அணிபணிகளையும், ஆடைகளையுமே பயன்படுத்துகிறோம். எது எவ்வாறாயினும், விநாயகருடைய திருமேனி பற்பல வடிவங்களிலே, பற்பல நிறங்கள் கொண்டு அமைந்திருக்கிறது என்பது தோற்றம்.

சித்தர்கள் இந்த உருவ வேறுபாடுகளையும், நிற வேறுபாடுகளையும் பருப்பொருள் நிலையிலே வகைப்படுத்திச் சொல்வதுபோல் தோன்றினாலும், இந்த நிறங்களும் வடிவங்களும் மனத்தின் நிறங்கள், எண்ணங்களின் வடிவங்கள் என்பதை நாம் மறந்துவிடக் கூடாது.

இன்றைய விஞ்ஞான ஆய்வுகளிலே இத்தன்மையான எண்ணங்களுக்கும், மனத்தின் நினைவுகளுக்கும், இதயத்தின் உணர்ச்சிகளுக்கும் நிறங்களும் உருவங்களும் பேசப்பெறுகின்றன. சாதாரண நிலையிலுள்ள மனிதர்களின் சீற்றம், பொறாமை, வஞ்சகம் போன்ற எண்ண உணர்ச்சிகளுக்கும் மேனாட்டு விஞ்ஞானிகள், இன்னின்ன உணர்ச்சி இன்னின்ன நிறமானது என்று வகைப்படுத்திச் சொல்லியிருக்கிறார்கள். அதனோடு கூடக் காதுகள், முகங்கள், கரங்கள் போன்ற உறுப்பின் வடிவங்களுக்கும் மனதின் எண்ண அலைகளுக்கும் தொடர்பு இருப்பதையும் இன்றைய அறிவியல் கண்டு சொல்லி வருகிறது. அன்பும் கருணையும் வெண்மை கலந்த செந்தாமரை நிறத்திலும், பொன் நிறத்திலும், வெண்மை கலந்த செந்நீலத்திலும் உறைந்துள்ளன என்று அண்மைக்காலத்து அறிவியற் சோதனைகள் நமக்குப் படம்பிடித்துக் காட்டுகின்றன.

சிங்கத்தின் முகம், யானையின் முகம், தாமரை மலர் ஆகிய வடிவங்களுக்குள்ள ஆன்மப் பொருளை 'க்ரீலியன்' படப்பிடிப்புக் கருவிகள் போன்ற அதிநுட்ப விஞ்ஞானக் கருவிகள், நம் கண்களுக்கு உணர்த்தக்கூடிய அளவில் அடுத்துவரும் ஆண்டுகளிலே பல புதிய கண்டுபிடிப்புகள் நிகழவிருக்கின்றன.

விஞ்ஞான அறிவியல் மேலும் மேலும் முன்னேறி வருகின்ற இந்தச் சூழ்நிலையிலே, மனத்தின் வடிவங்களையும், நிறங்களையும், ஆன்ம அதிர்வுகளையும் சீர் தூக்கிப் பார்த்து, இந்த இறைவடிவங்களை நாம் நோக்கி அந்த நோக்கினோடு இவற்றை அணுகவேண்டும். அப்படிச் செய்தால் அறிவுக்கு அறிவாக விளங்குகின்ற இத்தகைய உருவங்களை, சித்தர் இலக்கியம் நமக்கு எடுத்துச் சொல்வதன் நுட்பம் அறிவுத் தெளிவோடு நன்கு புலனாகும் என்பதில் ஐயம் இல்லை.

அதோடு இந்த உருவ வேறுபாடுகளில் பொதிந்துள்ள உருவகத்தின் தத்துவக் கோட்பாடுகளைச் சித்தர்கள் எங்ஙனம் வகுத்துள்ளார்கள் என்பது தெளிவாகும். அத்தகைய தெளிவுக்கு ஒரு பெருந்துணையாக நமக்கு உதவுகிற அரிய நூல் அவ்வையாரின் விநாயகர் அகவலாகும்.

# 3. சித்தர் கொள்கையும் சங்ககாலமும்

சில நாட்களுக்கு முன்பு ஒரு தமிழ் இதழில் ஒரு கட்டுரை படிக்க நேர்ந்தது. அதில் சங்க காலத்துத் தமிழர், இறைவழிபாடுகளில் நாட்டம் இல்லாதவர் என்றும், அவர்களுடைய சமுதாய வாழ்விலே கடவுட் கொள்கையானது கலந்திருக்கவில்லை என்றும் எழுதியிருக்கக் கண்டேன்.

அவ்வையாரின் அகவல் மிகவும் பிற்பட்ட நூல் என்று எண்ணுகிற ஓர் அறிஞர் தமது முடிவுக்குரிய காரணங்களில் ஒன்றாக ஒரு கருத்தைச் சொல்லியிருந்தார். அதாவது அவ்வை சங்க காலத்தவர்; அவருடைய கொள்கையிலே கடவுள் வழிபாட்டுக்கு, அதிலும் விநாயகர் வழிபாட்டுக்கு இடமே இல்லை என்பது!

அவ்வையார் காலத்தைப் பற்றிய ஆராய்ச்சி ஒருபுறமிருக்க, சங்க காலத்துக் கடவுட் கொள்கை என்ற ஒரு காரணத்தைக் காட்டி, வழிபாட்டு முறைகள் அந்தக் காலத்தில் இல்லை என்று சொல்லுவது எவ்வாறு பொருந்தும் என்பதை ஆராய்வது அவசியமாகும்.

நான் சிந்தித்துப் பார்த்த அளவில், தமிழர்கள் சங்ககாலத்துக்கு முன்பிருந்தே கடவுட் கொள்கையிலே ஆழ்ந்து தோய்ந்தவர்கள் என்றே எண்ணுகிறேன். அதனோடு வழிபாடுகளும் அந்தக் காலத்தில் பயின்று வந்தன என்பதும் பல சான்றுகளிலிருந்து நன்கு தெரியவருகிறது.

சித்தர்கள் 'அறிவர்கள்' என்று தமிழில் அந்தக் காலத்தில் அழைக்கப் பெற்றனர். இதற்கு ஒரு சான்று தொல் காப்பியத்திலேயே காண்கிறோம்.

மறுவில் செய்தி மூவகைக் காலமும்
நெறியின் ஆற்றிய அறிவன்

என்ற தொல்காப்பியச் சூத்திரத்துக்கு உரைகூறுகிற இளம்பூரணர், அறிவனை வானியலோடு கலந்து வருங்காலம் உணர்த்துகிற கணியன் என்று விளக்குகிறார்.

சித்தர்கள் மூன்று காலமும் உணர்ந்தவர் என்பதும், வானியல் என்பது இக்காலத்து வழங்குகிற வான சாஸ்திரம் மட்டுமல்லாது, சோதிடமும் அதையொட்டிய வேறு பலஆன்மக் கணக்குகளையும் உள்ளடக்கியது என்பதும், இங்கே நினைவு கூறவேண்டும். இது ஒருபுறமிருக்க, இதே சூத்திரத்துக்குப் பொருள் கூறுகிற நச்சினார்க்கினியர், 'அறிவன்' என்ற சொல்லுக்குத் தருகிற விளக்கமானது. 'சித்தன்' என்ற சொல்லுக்குரிய பொருளாகவே அமைகிறது.

நச்சினார்க்கினியர் 'அறிவன்' என்ற சொல்லுக்குத் தருகிற பொருள் விளக்கம் வருமாறு :

"காமம் வெகுளி மயக்கமில்லாத ஒழுகலாற்றினன். இறப்பும், நிகழ்வும், எதிர்வும் என்னும் மூவகைக் காலத்தினும் வழங்கும் நெறியான் அமைந்த முழுதுணர்வுடையோன்"

இது நச்சினார்க்கினியர் 'அறிவன்' என்ற சொல்லுக்குத் தருகிற விளக்கம். இந்த விளக்கத்தோடு நில்லாமல், அறிவர்க்குச் சான்றும் கூறுகிறார் நச்சினார்க்கினியர் :

"கலசயோனியாகிய அகத்தியன் முதலியோரும் அறிவரென்று உணர்க"

என்பது நச்சினார்க்கினியரின் சான்றுரையாகும்!

சித்தர்களுக்கெல்லாம் சித்தரும், திருமூலருடைய திருமந்திரத்தில் இடம் பெற்றவரும், திருமூலருடைய வாழ்க்கையிலேயே பெரும் பங்கு கொண்டவருமான அகத்தியர் ஓர் அறிவர் என்று நச்சினார்க்கினியரால் இங்கே அழைக்கப் பெறுவதை நன்கு சிந்திக்கவேண்டும்.

புறநானூறு என்னும் புகழ்மிக்க சங்க நூலிலே 'அவிர்சடை முனிவர்' பற்றிய விளக்கத்தைக் காணுகிறோம். சித்தர்களின் இயல்பைத் தாயுமானவர் தமது 'சித்தர்கணம்' பற்றிய பாடல்களிலே கூறுகிறார். அவற்றை ஒத்திருக்கின்றன இவ்வரிகள்.

வையத்திலே உள்ள மாந்தர்களின் துயரங்கள் தணிவதற்காக, சூரியன் முதலிய கோள்களின் வெப்பத்தை அமைதிப்படுத்தி, காற்றையே உணவாகக் கொண்டு, அதாவது வாசியோகத்தின் வாயிலாக வான மண்டலத்தில் இவர்ந்து செல்பவரும், வான மண்டலத்தை இயக்கும் அந்தப் பேரியக்கத்திலே தாங்கள் தங்களை ஒன்றவிட்டு சமாதி கூடுபவரும், அடர்ந்த சடைமுடி கொண்டவருமான முனிவர் என்னும் பொருளிலே, இடைக்காடர்கதையை நமக்கு நினைவூட்டும் பாங்கிலே வருகிற அந்தப் புறநானூற்று வரிகள் வருமாறு:

நிலமிசை வாழ்நர் அலமரல் தீரத்
தெறுகதிர்க் கனலி வெம்மை தாங்கிக்
கால் உண வாகச் சுடரொடு கொட்கும்
அவிர்சடை முனிவர்

என்று புறநானூறு கூறுகிற முனிவர் யார்? சித்தரே! நமது ஆய்வின் முதலாவது தொகுதியின் இறுதியில் வருகிற இடைக்காடர் என்னும் சித்தர் வரலாற்றுக் கதையை இந்த அடிகள் நம் கண்முன் நிறுத்துகின்றன!

சித்தர்கள் அந்தக் காலத்தில் தமிழகத்தில் எவ்வாறு மதிக்கப்பெற்று, எங்ஙனம் வாழ்ந்தார்கள் என்பதற்கு இவை போன்ற சான்றுகள் பல உண்டு.

சித்தர்களின் பயிற்சி முறைகளோடு சேர்ந்து, பத்தர்களின் உருவ வழிபாட்டு முறைகளும் சங்க காலத்துக்கு முன்பிருந்தே வழங்கி வந்துள்ளன.

'கடவுள்' என்ற சொல்லையே ஆய்ந்து பார்த்தால், கடந்து நிற்பது என்ற பரம்பொருட் தன்மை அதன் சொற்பொருளிலேயே அமைந்திருக்கிறது. அதனோடு தொனிப்பொருள் என்ற ஒன்றும் அந்தச் சொல்லின் ஒலியிலே ஓசை செய்கிறது. அதுவே 'உள்' என்பது! உறையுள், செய்யுள் என்பதிலுள்ள 'உள்' என்னும் ஒலி இங்கே ஒரு சிறப்புப் பொருள் பெறுகிறது! அதாவது கடந்தும் உள்ளடங்கியும் நிற்கிறது!

சங்க காலத் தமிழர்களுடைய கடவுட் கொள்கை சித்தர்களையும் அவர்தம் முறைகளையும் பின்பற்றுவதோடு நில்லாது, பொது மக்களுக்கு என்று பயில்கிற வழிபாட்டு நெறியையும் கடைப்பிடித்துள்ளது. எனவே, துதிப் பாடல்கள் பலவும், பல வழிபாட்டு முறைகளும் வழக்கத்தில் இருந்தன என்று தெளிவாகத் தெரிகிறது.

அதிகம் சொல்வானேன்? தொல்காப்பியத்தில் மனிதர்கள் வாழும் நிலங்களையும், வாழ்க்கை நெறிகளையும் வகைப்படுத்திக் கூறியுள்ள இலக்கணச் சூத்திரம் பலரும் அறிந்ததே. இச்சூத்திரத்தில் கருப்பொருள் பற்றிக் கூறுகிற தொல்காப்பியர், தெய்வத்திற்கே முதலிடம் தருகிறார்.

தெய்வம் உணாவே மாமரம் புள்பறை
செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ
இவ்வகை பிறவும் கருவென மொழிப

என்பது தொல்காப்பியர் சூத்திரம். உண்ணுகிற உணவைவிடக் கடவுளுக்கே முதலிடம் தருகிறது இந்த இலக்கணம்.

நிலத்திற்கு இலக்கணம் வகுக்கிற தொல்காப்பியம், அந்த நிலத்திற்குரிய சிறப்புகளில் எல்லாம் முதன்மையான சிறப்பைத் தெய்வத்திற்கே தருகிறது. இதிலிருந்து அந்த நிலத்தில் வாழ்கிற மக்கட் சமுதாயம், அந்தத் தெய்வத்தை ஆர்வத்தோடு வணங்கி வழிபட்டது என்பது தெளிவு.

சித்தர்கள் கூறுகிற அருவ வழிபாடு அக்காலத்தில் மேலோங்கி இருந்தமைக்குக் கடவுள் என்ற சொல்லே சான்று பகர்கிறது. அதனோடுகூட, உருவ வழிபாடும் சங்க காலத்திற்கு முன்பு இருந்தே தமிழகத்தில் மேன்மையுற்று விளங்கி வந்திருக்கிறது என்பதற்கு, நிலப்பகுதிகளின் தெய்வங்கள் சான்றாகின்றன.

குறிஞ்சி நில மக்கள் சேயோனை வணங்கினார்கள் என்றும், மருதநில மக்கள் வேந்தனை வணங்கினார்கள் என்றும், முல்லைநில மக்கள் மாயோனை வணங்கினார்கள் என்றும், நெய்தல் நிலமக்கள் வருணனை வணங்கினார்கள் என்றும் பார்க்கிறோம். இந்தத் தெய்வங்களைத் தவிர, வெற்றி தருவதற்குத் துணைசெய்யும் கொற்றவை வழிபாட்டையும் சங்க இலக்கியங்களில் காண்கிறோம். இவை தவிர, பூவும் நெல்லும் படைத்துப் பூசனை செய்கிற வழக்கம்

தமிழ்நாட்டில் இருந்தது என்பதையும், வெறியாட்டு முதலிய சடங்குகள் நடைபெற்றன என்பதையும் , மக்கள் மீது அமானுட ஆற்றல்கள் ஆராதனையாக வந்து விளையாடின என்பதையும், தெய்வ ஆற்றலினால் அகவன் மகள் போன்றோர் உற்றதையும் உறுவதையும் உரைத்தனர் என்பதனையும் சங்க நூல்களிலே விரிவாகக் காண்கிறோம்.

திருக்குறளிலே தெய்வம் என்ற சொல்லே பேசப்படுவதோடு கூட, ஆதிபகவன், எண்குணத்தான், வாலறிவன், மலர்மிசை ஏகினான், அறவாழி அந்தணன் முதலிய கடவுட் பெயர்களும் பயின்று வருகின்றன. 'தெய்வம் தொழுதலும்', 'இறைவனடி சேர்தலும்' திருக்குறளில் வருகிற சொற்றொடர்கள்.

நக்கீரர் நான்கு கடவுளர்களைப் பற்றிக் கூறி அவர்களுக்கு உரிய நிறம், வாகனம், கருவி, கொடி முதலியவற்றையும் பாடுகிறார்:

ஏற்றுவல னுயரிய எரிமருள் அவிர்சடை
மாற்றருங் கணிச்சி மணிமிடற் றோனும்,
கடல்வளர் புரிவளை புரையும் மேனி
அடல்வெந் நாஞ்சில் பனைக்கொடி யோனும்,
மண்ணுறு திருமணி புரையும் மேனி
விண்ணுயர் புட்கொடி விறல்வெய் யோனும்;
மணிமயில் உயரிய மாறா வென்றிப்
பிணிமுக ஊர்தி ஒண்செய் யோனும் என
ஞாலங் காக்கும் கால முன்பில்
தோலா நல்லிசை நால்வர்

என்பது நக்கீரர் கவிமொழி.

முருகனுக்குரிய கோவில்களையும், தலங்களையும் நக்கீரர் தமது திருமுருகாற்றுப்படையில் மிக விரிவாகக் கூறியுள்ளமை தமிழ் உலகு நன்கு தெரிந்த செய்தி ஆகும். பக்தர்கள் பலர் தங்களுடைய நித்திய வழிபாட்டிலே திருமுருகாற்றுப்படையை ஓதிவருவது சங்க காலத்தோடு பிணைப்புள்ள ஒரு வழிபாட்டு முறையே ஆகும்.

இவ்வாறுதான் விநாயகர் வழிபாடும் தொன்றுதொட்டு நமது தமிழகத்திலே பயின்று வந்துள்ள ஓர் வழிபாடு ஆகும். இந்தக் கடவுட் பின்னணியை மனத்திலே கொண்டு எழுந்த துதி நூலே, அவ்வையாரின் விநாயகர் அகவலும் ஆகும். நம்முடைய துதி நூல்களிலேயே பலவற்றிலும் பொதிந்துள்ள மரபும், சித்தர் ஞானமும் இந்த அகவலிலும் பொதிந்து உள்ளதற்கு இப்படி ஒரு நீண்ட நெடுந் தொடர்பு இலக்கிய முறையிலே பின்னியிருக்கிறது. இதைப் புரிந்து கொள்ளாமல் அவ்வையாரின் கால ஆராய்ச்சியிலே புகுந்து, தமிழர்களின் கடவுட் கொள்கையையும் அதனுடைய தொன்மையான மரபையும் மறந்துவிடலாகாது.

★ ★ ★

# 4. முருகன் வழிபாடு

விநாயகர் அகவலின் தொடர்பாக, விநாயகர் உருவங்களில் முக்கியமான முப்பத்திரண்டு வகைகளை ஆராய்ந்தோம். இதனை அடுத்துச் சித்தர் சுவடிகளில் காண்கிற முருகனுடைய வடிவ வேறுபாடுகளையும் இங்கே பார்ப்பது இயைபுடையதாகும்.

சங்க காலத்திற்கு முன்பிருந்தே குறிஞ்சிக் கடவுளான முருகன் தமிழ் மக்களை ஆண்டு வந்திருக்கிறான். மலைமீது கோவில் கொண்டுள்ள முருகன் தமிழர்களின் இதயத்தில் நீங்காத இடங்கொண்டு நிலைபெற்ற கடவுளாகும். தமிழகத்துச் சித்தர்கள் பலர் 'பரமகுரு' என்றும் 'குருநாதன்' என்றும் முருகனை வணங்கி வந்திருக்கிறார்கள்.

முருகனுண்டைய அருள்பெற்றுக் குமரகுருபரரைப் போல உய்வுநிலை கண்ட ஞானிகளும், முனிவர்களும் பலர் ஆவர். நக்கீரர் பாடிய திருமுருகாற்றுப்படையை நாம் நன்கறிவோம். முருகனைப் பற்றிய குமரகுருபரரின் பாடல்களும், பகழிக்கூத்தர் போன்ற பெரியோர்களின் பாடல்களும் புக்ழ்பெற்றவை. அவ்வையார் போன்ற தொன்மையான புலவர்களின் வாழ்விலே, முருகப் பெருமான் பல திருவிளையாடல்கள் புரிந்து இருக்கிறான் என்பதும், தமிழ் உலகுக்கு நன்கு தெரிந்த செய்தியே.

முருகனை வழிபடுவதற்குரிய பல நுட்பமான சக்கரங்களையும், மந்திரக் கட்டுக்கோப்புகளையும், தமிழகத்து ஞானிகள் பலர் வழங்கி இருக்கிறார்கள்.

நக்கீரர் காலம் முதலாக, அண்மையில் வாழ்ந்த பாம்பன் சுவாமிகள் வரை, பல ஞானியர்களின் வாழ்விலே முருகன் செய்த அற்புதங்கள் பல. இந்த அற்புதங்களைக் குறித்த செவிவழிச் செய்திகளும் பலவாம். இவை ஒருபுறமிருக்க, முருகனுடைய வழிபாடு தமிழகத்துக்கே உரிய பல தனிச்சட்டங்களோடு நெடுங்காலமாக நமது சித்தர் இலக்கியங்களிலே பயின்று வந்திருக்கின்றது. பழநியிலே கோவில் கொண்டிருக்கும் முருகன் போகர் என்ற சித்தரின் ஆசானும், குருவும், தெய்வமும் ஆவான். இவனுடைய சிலையின் அமைப்புமுறை இன்றளவும் புரிந்துகொள்ள முடியாத ஒரு சித்தரின் மர்ம மருந்துச் சேர்க்கை என்றும், அந்தச் சிலையே 'நவபாசாணம்' என்றும் தமிழ் உலகம் சொல்லி வருகின்றது. அதோடு கூட இந்தக் கோவிலின் ஆற்றல்களைப் போகர் என்ற சித்தரின் ஜீவ சமாதியோடு பிணைத்துக் கூறும் வரலாறுகளும் பலவாக வழங்கி வருகின்றன. இவ்வாறே அருணகிரி நாதரின் வாழ்விலும் முருகனுடைய திருவருள் பல அற்புதங்களை நிகழ்த்தி இருக்கிறது.

சித்தர்களின் ஞானப் பயிற்சியிலே ஈடுபட்டுள்ள தீவிரதரர்கள் பலருடைய கல்விமுறையிலே, முருகனோடு பின்னிப் பிணைந்த பல வழிபாடுகள் இன்றவும் நிலவிவருகின்றன.

மந்திரங்களும் எந்திரங்களும் சக்கரங்களும் தவிர, வேல் ஒன்றையே முருகனாக நிறுவி வழிபடுகிற முறைகளும், சித்தர் இலக்கியங்களிலே இடம்பெறுகின்றன.

உலகத்தின் பகுதிகளைப் புவியியல் முறையிலே பிரித்து இலக்கணம் கூறுகிற பல நூல்கள், முக்கியமாக நம்முடைய நாடி சோதிட ஏடுகள், தமிழ்நாட்டைச் சேய்கண்டம் என்று அழைத்து, தமிழ்நாடு முருகனுடைய நாடு என்றே இலக்கணம் கூறுகின்றன.

முருகனைத் தமிழ்க்கடவுள் என்றே அழைக்கும் மரபும் மிகவும் பழமையானதே.

எந்தக் கடவுளையும், அதாவது எத்தகைய தெய்வ உருவத்தையும், மனமண்டலத்திலேயே பதித்து அருவமாக வழிபடுவதே சித்தர்களுடைய ஆன்ம முறை எனினும், முருகக் கடவுளுக்குப் பற்பல வடிவ நிலைகளைத் தந்து, பூசனை செய்கிற முறைகளையும் சித்தர் இலக்கியம் எடுத்துக் கூறி இருக்கிறது.

'குழந்தையும் தெய்வமும் கொண்டாடும் இடத்தில்' என்பது மக்கள் மொழியாகும். முருகனோ குழந்தையும் தெய்வமும் இரண்டும் ஒன்று சேர்ந்த ஒரு மூர்த்தி. எனவே இந்தக் குழந்தைத் தெய்வத்தைத் தமிழ்மக்கள் தொன்மையான பழங்காலத்திலிருந்தே கொண்டாடி வந்து, இத்தெய்வம் தமிழ்த் தெய்வமாக இடம்பெற்றுவிட்டது.

தொல்காப்பியத்திலும், சங்க இலக்கியங்களிலும் கூறப்பெறுகிற 'வெறியாட்டு' என்பது வேலனை வேண்டிச்செய்யப்பெற்ற ஒரு பூசனை ஆகும். பெண்ணிற்குப் பிடித்து இருந்த பேய் நீங்குவதற்காகப் பழந்தமிழ் மக்கள், முருகனுக்கு இந்தப் பூசையைச் செய்தார்கள் என்று சொல்லப்படுகிறது. இதனையும், இதுபோன்ற வேறுசில வழிபாடுகளையும் பற்றிச் சித்தர் இலக்கியம் விதிமுறைகளை வகுத்துக் கூறியிருக்கிறது.

முருக்னுக்கு நிகழ்த்துகிற வழிபாடுகள் நான்கு வகைப்படும்.

அவை:
(1) அன்பால் நிகழ்த்தும் வழிபாடு; (2) ஆகம முறைப்படி நிகழ்த்துகிற வழிபாடு; (3) பயன்கருதி நிகழ்த்துகிற வழிபாடு; (4) யாதொரு பயனும் கருதாத ஆன்ம வழிபாடு.

குறிஞ்சிக்கலி போன்ற இலக்கியங்களில் வருகின்ற குறவர்களின் பூசை, அன்புப் பூசையின் இனத்தைச் சார்ந்தது. துடிகொட்டி மணியடித்துச் செய்கிற ஒரு குறவர் பூசை இது. இதனை 'விதியொடு படாத வழிபாடு' எனப் பெரியோர்கள் அழைத்தார்கள். இந்த வழிபாட்டிலே குறவர்கள் பாடுகிற துதிப்பாடல்கள், 'குறிஞ்சி' என்னும் பண்ணிலே பாடப்பெற்றதாகக் குறிப்பு வருகிறது.

திருவேரகத்தில் அந்தணர்கள் நாற்பத்தெட்டு ஆண்டுகள் பெண்ணாசை இல்லாது விரதம் காத்து, நேரமும் மந்திரமும் வகுத்து,

வழிபாடு செய்வதாகக் கூறப்பெறுகிற பூசனை, விதியொடு பட்ட பூசை எனப் பெயர் பெற்றது. இதுபோலவே திருவாவினன்குடியிலே (பழநி) முனிவர்கள் வழிபட்ட முறையும், விதிமுறைப்படி செய்யப்பெற்ற வழிபாடு ஆகும்.

இந்த இருவகையான பூசனைகளும், பயன்கருதியும், பயன்கருதாமலும் நிகழ்ந்துள்ளன. இவை தவிர, ஒரு குறிப்பிட்ட நோக்கம் நிறைவேறுவதற்கு என்றே, முருகனுக்கு நேர்த்திக் கடன்கள் செய்து, மக்கள் வழிபடுகிற முறைகளையும் விரிவாகக் காண்கிறோம்.

நான்காவது முறையான பயன்கருதா வழிபாடு, முற்றிலும் சித்தர் கல்வியின் பாற்பட்டது. இது 'ஞானப்பூசை' ஆகும்.

முருகனுடைய வழிபாடும், ஈடுபாடும் தமிழ்மக்களிடையே தொன்மைக்காலத்தில் இருந்து, சமுதாய வாழ்வோடு நன்கு கலந்து இருந்த காரணத்தால், சங்கத் தமிழர்கள் தங்களுடைய உண்மைக்கும், உறுதிக்கும் சான்றாக முருகன் மீது ஆணை இடுகிற பழக்கமும் இருந்து வந்துள்ளது.

தீங்குகளை விலக்கக் கூடியவன் முருகனே என்ற நம்பிக்கை, அந்தக் காலத்துத் தமிழர்களுக்கு உறுதியாக உள்ளத்தில் இடம்பெற்று இருந்தது என்பதற்கு, நம் இலக்கியங்களிலே பலநிகழ்ச்சிகள் வருகின்றன. வேங்கை மரத்தடியில கண்ணகி விமானம் ஏறிச் சென்றதைக் கண்ட வேடர்கள், 'இது ஏதோ ஒரு கேட்டின் அறிகுறி' என்று அஞ்சி முருகனுக்கு வழிபாடு செய்து சாந்தி கோரினார்கள் என்று காண்கிறோம்.

பெற்ற பெண்களுக்கு அணங்கு என்னும் பேய்க்கேடு தீண்டிய போது, அதனைத் தீர்த்துக்கொள்ள அன்னைமார்கள் முருகனை வழிபட்டார்கள் என்றும் காண்கிறோம். குறுந்தொகை, ஐங்குறுநூறு, அகநானூறு போன்ற இலக்கியங்களில் இத்தகைய வழிபாடுகளைக் காண்கிறோம்.

பரிபாடலிலே வீடு பேறு வேண்டி மோட்சத்தை நாடி வழிபடுகிற குறிப்பு, அக்காலத்து மக்கள் முருகனுடைய திருவடிக்கீழ் இருத்தல் வேண்டி இயற்றிய வழிபாடுகளுக்குச் சான்று பகர்கிறது.

முருகக் கடவுளின் தொடர்பாக மூன்று வகையான கூத்துக்கள் ஆடப்பெற்ற செய்தியும் இலக்கியங்களிலே பார்க்கிறோம். அவை : (1) வென்றிக் கூத்து: (2) வசைக்கூத்து: (3) வினோதக் கூத்து. இம்மூன்றையும் ஒட்டி முருகன் ஆடிய கூத்துக்களும் விரிவாகக் கூறப்பெறுகின்றன.

## 1. குடைக்கூத்து

இந்த ஆடல் வென்றிக் கூத்து என்னும் வகையைச் சேர்ந்தது. அவுணரோடு செய்த போரில், முருகன் தன் கையில் உள்ள குடையை முன்புறமாகச் சாய்த்து இந்த வென்றிக் கூத்தை ஆடினான். இதனைச் சிலப்பதிகாரம்,

படைவீழ்த் தவுணர் பையுள் எய்தக்
குடைவீழ்த் தவர்முன் ஆடிய குடையும்

என்று கூறுகிறது.

**2. துடிக்கூத்து**

துடி கொட்டி ஆடுகிற இந்தக் கூத்து பற்றியும் சிலப்பதிகாரம் பேசுகிறது.

முருகனுடைய போருக்கு ஆற்றாமல், சூரன், வஞ்சனை முறையால் மறைந்து சென்று கடல் நடுவில் மரமாக நின்றான். இந்த வஞ்சனையை அறிந்த முருகன், தன்னுடைய வேலினை வீசிக் கடலும், மலையும், சூரும், பொடியாகும்படி செய்தான். அந்த வெற்றிக் களிப்பிலே கடல் அலைகளையே அரங்கமாகக் கொண்டு, துடிகொட்டி வெற்றிக்கூத்து ஆடினான். இதனை,

நீர்த்திரை அரங்கத்து நிகர்த்து முன்நின்ற
சூர்த்திறம் கடந்தோன் ஆடிய துடியும்

என்று பாடுகிறது சிலப்பதிகாரம்.

**3. குரவைக்கூத்து**

இந்த ஆடல் முருகனுடைய அடியார்கள் ஆடும் கூத்து ஆகும். இடைச்சியர் கண்ணனை நோக்கி ஆடும் 'ஆய்ச்சியர் குரவை' என்னும் கூத்தைப் போலக் குறமகளிர் ஆகிய மலைப்பெண்கள், முருகனை நோக்கி ஆடுகிற கூத்து, 'குன்றக் குரவை' என்ற அழைக்கப்பெற்றது. இந்த இரண்டு கூத்துக்களையும் பற்றி அடியார்க்கு நல்லார் தமது உரை விளக்கத்திலே குறிப்பிடும் பொழுது, இந்த மக்கள் சில உற்பாதங்களைக் கண்டு தங்கள் சேரிக்குத் தீங்கு வருமோ என்று அஞ்சி, அதற்குச் சாந்தியாக இக்கூத்தை ஆடினார்கள் என்று விளக்குகிறார்.

**4. வெறிக்கூத்து**

இக்காலத்திலும் சிலர் சாமிவந்து ஆடுவதாகக் கூறுகிற காட்சியை நாம் பார்க்கிறோம். முருகனுக்குக் காவடி எடுக்கும் அடியார்களுக்கும் 'ஆராதனை' வந்து ஆடுவதைப் பாக்கிறோம். இந்த வகையைச் சார்ந்ததே வெறிக்கூத்து என்பது. மனிதர்கள் மீது தெய்வம் ஏறிநின்று ஆடுகிற ஆவேசக் கூத்து என்று இது விளக்கப்படுகிறது. அக்காலத்தில் வேலன் ஆகிய பூசாரி தன் கையிலே வேலை ஏந்தி, செம்பட்டு உடுத்தி, சிவப்புச்சந்தனம் பூசி, தொண்டகம் என்னும் பறை ஒலிக்க ஆடினான் என்று இலக்கியம் பேசுகிறது. இது அக்காலத்து வெறிக்கூத்தின் வகைப்பட்டது. தலைவிக்கு அணங்கு தீண்டியதனால் அதனை வெருட்டுவதற்காகச் செவிலித்தாய் அல்லது நற்றாய் பூசாரி ஆகிய வேலனை வேண்ட, அவன் இக்கூத்தை ஆடினான் என்று பண்டைய இலக்கியம் பகர்கிறது. இவ்வாடலைப் பற்றிய இலக்கணம் தொல்காப்பியத்திலும், புறப்பொருள் வெண்பாமாலை போன்ற நூல்களிலும் கூறப்பெற்றுள்ளது.

**5. வள்ளிக்கூத்து**

குறத்தி ஒருத்தி வள்ளியின் வேடத்தைப் புனைந்து கொண்டு, இக்கூத்து ஆடினாள் என்று கூறப்பெறுகிறது. இது முருகனை நோக்கி ஆடப்பெறுகிற கூத்து. இதைப் பற்றிய குறிப்பு, தொல்காப்பியம் உள்ளிட்ட பல நூல்களிலே காணப்படுகிறது.

முருகனுடைய பிறப்பு, வரலாறு, சூரன்கதை முதலியன பற்றிய பல செய்திகளையும், சங்க நூல்களில் இருந்து அண்மைக்காலத்து நூல்கள் வரை விரிவாகவே சொல்கின்றன. சங்க நூல்களில் முருகனுக்கரிய பல நாமங்கள் வருகின்றன. அவற்றில் முக்கியமானவை பிள்ளையார், சித்தன், சேய், செவ்வேள், முருகன், வேள், நெடுவேள், சேவற்கொடியோன், ஆலமர் செல்வன், சேய் முதலியன.

விநாயகருக்குப் பிள்ளையார் என்ற பெயர் வழங்குவது பலருக்கும் தெரியும் . ஆனால் முருகனுக்கும் அக்காலத்தில் பிள்ளையார் என்ற பெயர் வழங்கியதாக அறிகிறோம். நச்சினார்க்கினியர் உரையிலும், வேறு பல குறிப்புகளிலும் , சிவனுடைய பிள்ளை என்பதனால் முருகன் பிள்ளையார் என அக்காலத்தில் வழங்கப்பட்டதாக ஒரு குறிப்பு வருகிறது.

சித்தன் என்ற பெயர், முருகன் எல்லா வல்லமைகளும் பொருந்தி, எல்லாம் வல்ல சித்தனாக விளங்குவதால், அக்காலத்து மக்கள் அவனுக்குச் சூட்டிய பெயர் ஆகும். இது காரணம் பற்றியே பழநித்தலத்திற்குச் சித்தன்வாழ்வு என்ற பழம்பெயர், சித்தனாகிய முருகன் வாழகின்ற தலம் என்ற பொருளிலே வழங்கியுள்ளது.

முருகனுடைய சிவப்பு நிறத்தினாலும், அவனுடைய மாறாத என்றும் நிலைத்த இளமையினாலும், அவனுக்குச் சேய் என்றும், சேயோன் என்றும், அக்காலத்தில் பெயரிட்டார்கள்.

வேள் என்ற சொல் வேள்வி, வேட்கை, வேட்டல் முதலான பல பொருள் உள் அடக்கியமையால் யாகத்துக்கும் , ஆசைக்கும், மணக்கோலத்திற்கும் உரியவனான முருகன், வேள் என்று அழைக்கப்பெற்றான். வேலை ஏந்தி நிற்பதால் வேலன் என்ற பெயரும், ஆறுமுகங்கள் கொண்டதால் அறுமுகவன் என்ற பெயரும், மலையில் நிற்பதால் சிலம்பன் என்ற பெயரும், சிவப்பு நிறமானவன் என்பதால் சேந்தன் என்ற பெயரும், உப்பூரிக்குடிகிழார் மகனாய் உருத்திர சன்மனாய்த் தோன்றியதால் செட்டி என்ற பெயரும், மலைக்குகையில் வதிவதாலும் , உள்ளமாகிய இரகசிய அகத்தில் குடிகொண்டு இருப்பதாலும், குகன் என்ற பெயரும், நீண்ட நெடுங்காலமாக முருகனுக்கு வழங்கிவருகின்றன.

இளைஞனாகவும், வெற்றி வீரனாகவும் விளங்கி வருகின்ற முருகப் பெருமானுக்கு, ஆறுபடை வீடுகள் என்று தமிழ்மக்கள் வகுத்துக் கூறி உள்ளார்கள். சித்தர் இலக்கியங்களிலே ஆறு ஆதார நிலைகளைப் போன்று இந்த ஆறு படைவீடுகளைப் பற்றிய குறிப்பு காணப்பெறுகிறது. அகவுலகில் உள்ள ஆறு படைவீடுகளைப் போலவே, வெளி உலகில் அமைந்த முருகனுடைய ஆறு படை வீடுகள் வருமாறு:

**1. திருப்பரங்குன்றம்**

முருகன் இங்கே கடம்ப மரத்தின் அடியில் வீற்றிருப்பதாகச் சங்க நூல்களிலும் சிலப்பதிகாரத்திலும் காண்கிறோம்.

**2. திருச்சீரலைவாய்**

திருச்செந்தூர் என்று அழைக்கப்பெறும் கடற்கரைத்தலம் இதுவே. இங்கே முருகன் ஒரு திருமுகமும், நான்கு கைகளும் கொண்டு, கிழக்கு நோக்கியவாறு, நின்ற திருக்கோலத்திலே காட்சி தருகிறான். சங்க நூல்களிலும், சிலப்பதிகாரத்திலும், மிகவும் முக்கியமாகத் திருமுருகாற்றுப்படையிலும், இந்தத் தலத்தைப் பற்றிய தெளிவான ஓவியத்தைக் காண்கிறோம். கந்தமாதன பருவதத்தைக் குடைந்து இது கட்டப்பெற்றதாகத் தொன்மை இலக்கியம் பேசுகிறது.

**3. திருவாவினன்குடி**

பழநி என்று அழைக்கப்பெறும் தலம் இதுவே. கோலேந்திய ஆண்டி, நின்ற திருக்கோலத்தில் காட்சி தருகிறான். 'பொதினி' என்றும், 'சித்தன் வாழ்வு' என்றும் இத்தலத்திற்குப் பழம்பெயர்.

**4.. திருவேரகம்**

கும்பகோணத்திற்கு அருகே உள்ள சுவாமிமலை என்னும் தலத்திற்குப் பழைய பெயர் திருவேரகம். இங்கும் முருகன் தண்டபாணியாகவே, கோல்தாங்கிய கையோடு, நின்ற திருக்கோலத்தில் காட்சி தருகிறான்.

**5. பழமுதிர்சோலை**

இதுவே அழகர் மலை என்பது. இதற்குக் கள்ளழகர் கோவில் என்றும் ஒரு பெயர் வழங்கிவருகிறது.

**6. குன்றங்கள்**

நெல்லை மாவட்டத்தில் உள்ள திருமலையும், சிவகிரி, மயிலம், திருத்தணி, வள்ளிமலை போன்ற எல்லா முருகன் குன்றுகளும், இலங்கையில் உள்ள கதிர்காமம், நல்லூர், முதலிய தளங்களும் குன்றுதோறாடல் என்ற பிரிவல் அடங்கும்.

இந்தப் படைவீடுகள் ஆறோடு சேர்த்து, ஏழாவது இடமாக எண்ண வேண்டிய இடம், தமிழ் மக்களின் உள்ளமாகும். அந்த உள்ளத்திலே கோவில் கொண்ட மூர்த்திக்குக் கோவில்களும் பல. வடிவங்களும் பலவாம்.

விநாயகப் பெருமானுக்கு முப்பத்திரண்டு வடிவங்களை வகுத்துக் கூறியுள்ள பெரியோர்கள், முருகப் பெருமானுக்குப் பதினாறு முக்கியமான வடிவங்களை இயம்பி உள்ளார்கள். வடமொழியில் 'குமார தந்திரம்' 'ஸ்ரீதத்துவநிதி' முதலிய நூல்களில் , முருகனுடைய வடிவங்கள் விரிவாகக் கூறப்பெற்றிருப்பதைப் போலவே, சித்தர்கள் பதினாறு முக்கிய நிலைகளை முருகனுக்கு வகுத்துக் கூறியுள்ளார்கள்.

இந்தப் பதினாறு வடிவங்களுக்கும், பதினாறு வெவ்வேறு பெயர்கள் தந்து, இந்த் வடிவங்களின் அமைப்புகளையும் பதினாறு வகையான சிற்பங்களாக நமது சித்தர்கள் பேசுகிறார்கள்.இவற்றுக்குரிய யந்திரங்களும், மந்திர அமைப்பு கட்டுக்கோப்புக்களும், வெவ்வேறாகவே தரப்பெற்றுள்ளன.

ஞானிகள் வகுத்துள்ள முருகனுடைய பதினாறு வடிவ வேறுபாடுகள் வருமாறு :

**1. சக்திதரர் அல்லது வேலன்**

முருகனுடைய இந்த உருவம் ஒருமுகம் கொண்டது. கைகள் இரண்டு. அடைக்கலம் தருகிற கைதவிர, மற்றொன்றிலே வேல் தாங்கி நிற்கிறான், இந்தப் பெருமான். இவனுக்கு நான்கு கைகள் இருப்பதாகவும் சில சுவடிகள் இலக்கணம் கூறுகின்றன.

**2. கந்தன் அல்லது தண்டபாணி அல்லது தண்டாயுதபாணி**

முருகனுடைய இந்த உருவமே பழநியாண்டியின் திருவுருவமாகும். சித்தர் இலக்கியத்தில் இந்த மூர்த்தி வகிக்கின்ற இடம் மகத்தானது.

இவருக்கு முகம் ஒன்றே. கைகள் இரண்டு. ஒரு கையில் தண்டம் என்கிற கோல் தாங்கி நிற்கிறார். மற்றொரு கை வளைந்து இடுப்பைத் தொட்டுக்கொண்டு இருக்கின்றது. இவருடைய ஆடை கோவணமே. குறுகிய இடுப்புடன் நின்ற திருக்கோலத்தில் காட்சி தருகிறார், ஆண்டவன் என்றும் ஆண்டி என்றும் அழைக்கப்பெறுகிற இந்த முருகக்கடவுள் தனிமையில் நிற்கிற இந்த ஆண்டியே பழநியாண்டி.

இதே வடிவத்திற்கு ஓவிய முறையிலே நிறம் சொல்லப்பெற்றிருக்கிறது. செந்தாமரை மலரின் நிறத்தோடு கூடிய ஆண்டவன் என்றும், பெரியோர்கள் இந்த மூர்த்தியை வணங்குகிறார்கள். இந்த நிறம் முருகனுடைய வேறு பல வடிவங்களுக்கும் உரியதாகச் சுவடிகள் கூறுகின்றன. இதையொட்டியே, அண்மைக் காலத்தில் வாழ்ந்து மறைந்த ஒரு பெரிய சித்தர் ஆகிய தூத்துக்குடி சுப்பராய சுவாமிகள் என்ற ஞானி, தாம் இயற்றிய கிளிக்கண்ணியில் கீழ்கண்டவாறு பாடுகிறார். இந்த கிளிக்கண்ணி மதுரை மாரியப்ப சுவாமிகளால் தமிழ் உலகிலே நன்கு பரப்பப்பெற்று, வேறு பல இசைக்கலைஞர்களும் மேடைகளிலும், இசைத்தட்டுகளிலும், வானொலியிலும் பாடிப் புகழ்பெற்ற கண்ணி ஆகும்.

எங்கும் நிறைந்திருப்போன்
எட்டியும் எட்டா திருப்போன்
குங்கும வர்ணனடி -கிளியே
குமரப் பெருமானடி!

இந்தக் கிளிக்கண்ணியிலே வருகிற குங்கும வர்ணமும் இந்த நிறத்தையே குறிக்கின்றது.

இந்த முருகனுக்குச் சில சுவடிகள் நான்கு கைகள் தந்து பேசுகின்றன.

### 3. படைத்தலைவன் , வீரக்கடவுள் அல்லது தேவசேனாபதி

இந்த வடிவத்திற்கு முகங்கள் ஆறு. இவனையே அறுமுகவன் என்றும், ஆறுமுகக் கடவுள் என்றும், சண்முகப் பெருமான் என்றும், இன்னும் பல பெயர்களிலும் பெரியோர்கள் அழைக்கிறார்கள். திருச்செந்தூரில் உள்ள சண்முக விலாசம் இங்கே நினைவு கூரத்தக்கது.

ஆறுமுகங்களுக்கு ஏற்ப, இந்த வடிவத்திற்குக் கைகள் பன்னிரண்டு. இவனுடைய தேவி தாமரை தாங்கி இருப்பதாகவும், அவளை இந்த மூர்த்தி தமது தொடையின் மீது அமர்த்தியவாறு காட்சி தருவதாவும், சில ஞான நூல்கள் வருணிக்கின்றன. பன்னிரண்டு கைகளுக்கும் சிற்சில மாறுபாடுகளுடன் அணிகலன்களும், படைக்கலங்களும் கூறப்பெற்றுள்ளன.

### 4. சுப்பிரமணியன் அல்லது செவ்வேள்

சித்தர் இலக்கியத்தில் இந்த மூர்த்திக்குத் தருகிற கோலமும் வடநூலார் தருகிற கோலமும் ஒன்றாகவே உள்ளன. இவருடைய நிறம் குங்குமச் சிவப்பு. முகம் முழுநிலா போன்றது. கைகள் நான்கு. இவர் அணிந்துள்ள ஆடை செம்பட்டாகும்.

### 5. ஆனை இவர்வோன் அல்லது கஜவாகனன்

இந்த முருகனை ஆனைப்பாகன் என்றும், ஆனைமீது அமர்ந்த அருஞ்சேய் என்றும் அழைக்கிறார்கள். இவருடைய வாகனம் வீறு கொண்ட யானை . முகம் ஒன்று. கைகள் நான்கு. வலக்கைகளில் ஒன்று குக்குடம். மற்றொன்று வரதம், இடக்கைகளில் ஒன்று சக்தி, மற்றொன்று அபயம்.

திருச்செந்தூர் போன்ற மாபெரும் கோவில்களிலே முருகனை ஆனைவாகனத்தில் எழுந்தருளப் பண்ணுவது என்னும் எழுந்திருத்து முறையும், இதையொட்டி எழுந்த சடங்கே ஆகும்.

### 6. ஆறெழுத்தோன், ஆறெழுத்துக் கடவுள் அல்லது சரவணபவன்

இந்த மூர்த்திக்கு முகங்கள் ஆறு. கைகள் பன்னிரண்டு. கண்களும் பன்னிரண்டு.

சில பழைய சுவடிகளிலே சரவணபவன் என்ற இந்த மூர்த்திக்கு ஒரே முகம் என்றும், கைகள் ஆறு என்றும் , கண்கள் மூன்று என்றும் கூறப்பட்டுள்ளது. சில வடமொழி நூல்கள் இந்த மூர்த்திக்குரிய வாகனம் சிங்கம் என்று பேசுகின்றன.

### 7. கிருத்திகைக் கடவுள் அல்லது கார்த்திகேயன்

முருகனுடைய வரலாற்றில், கிருத்திகை மாதர் என்னும் ஆறு தாய்மார்களும் முக்கிய இடம் பெருகிறார்கள் அல்லவா? எனவே கிருத்திகை மாதரால் வளர்க்கப்பெற்ற குமரப்பெருமான் ஆகிய

கார்த்திகேயனுக்கு, இந்த வரலாற்றையொட்டியே ஆறுமுகங்கள் கூறப் பெறுகின்றன. தோள்கள் ஆறு, கைகள் ஆறு, இந்தப் பெருமானுடைய நிறம், நண்பகற்காலத்துக் கதிரவனின் ஒளிநிறம் என்று ஞானிகள் இலக்கணம் கூறுகிறார்கள். சில வடமொழி நூல்களிலே கார்த்திகேய மூர்த்திக்கு ஒரு முகமும், மூன்று கண்களும், பத்து கைகளும் இருப்பதாக இலக்கணம் கூறப்பெற்றிருக்கிறது. இந்தப் பெருமானுடைய வாகனம் மயில்.

### 8. சேயோன் அல்லது குமாரர்

முருகனுடைய இந்த வடிவம் இல்லறத்தோர்கள் பலரும் பூசனை செய்வதற்குரிய இலக்கணத்தோடு, பெரியோர்களால் வருணிக்கப் பெற்றுள்ளது. அமைதியும், ஆனந்தமும், இல்லற நலங்களும், அருளக் கூடிய பெருமான் என்று, ஞானிகள் இந்த மூர்த்தியைப் பொது மக்களுக்கு வருணித்துக் கூறி இருக்கிறார்கள். இவருடைய முகம் ஒன்று. கைகள் நான்கு. இவரே வள்ளியை மணம் புரிந்த மணவாளர் ஆவார்.

சில வடமொழி நூல்கள் இந்த மூர்த்திக்குக் குழந்தை வடிவு தந்து கூறுகின்றன.

### 9. மயில்வாகன அறுமுகவர் அல்லது மயிலேறும் பெருமாள்

மயில் ஏறு என்றும், மயிலேறிய மைந்தன் என்றும், தோகைவாகன் என்றும் அழைக்கப்பெறுகிற இந்த முருகன், சண்முகக் கடவுளின் வடிவத்தில் மற்றொரு உருவ வேறுபாடு. ஆறுமுகங்களும், பன்னிரண்டு கைகளும், பன்னிரண்டு கண்களும், குங்கும நிறத்தில் மயில் வாகனத்தில் காட்சி தரும் இந்த ஆறுமுகக் கடவுளுக்கு, சயை விசயை என்று இரண்டு தேவியர்கள் இருபுறமும் நிற்பதாகச் சில சுவடிகளில் காண்கிறோம்.

### 10. தாரகாரி

இந்த மூர்த்தி கோடி சூரியர்களின் ஒளியைக் கொண்டவர் என்றும், இவருடைய வாகனம் யானை என்றும், கண்கள் மூன்று என்றும் , கைகள் ஆறு என்றும் நூல்கள் கூறும். சில நூல்கள் பன்னிரண்டு கைகள் என்றும் கூறும்.

### 11. சேனானி

இந்த மூர்த்தியைப் பற்றிய குறிப்பு ஒரு சில நூல்களில் மட்டுமே காணக்கிடைக்கிறது. இவருக்கு முகங்கள் ஆறு. கண்கள் பன்னிரண்டு . கைகள் பன்னிரண்டு;

### 12. பிரமசாஸ்தா

இவருக்கு முகம் ஒன்று. கண்கள் இரண்டு. இவர் காட்சி தருவது வள்ளியுடன்.

**13. வள்ளிநாயகர் அல்லது வள்ளி கல்யாண சுந்தரர்**

வள்ளியப்பன் என்ற பெயரிலே பரவலாகக் காணப்பெறுகிற இந்த மூர்த்தி, வள்ளிதேவியோடு திருமணக் கோலத்திலே காட்சி தருகிறார்.

**14. குழந்தைசுவாமி அல்லது பாலசுவாமி**

இவருக்கு இரண்டு கைகள். ஒரே முகம்.

**15. குன்றுருவிய வேலர் அல்லது கிரவுஞ்ச பேதனர்**

இவருக்கு முகங்கள் ஆறு. கைகள் எட்டு.

சில நூல்களில் ஒரு முகமும், மூன்று கண்களும் சொல்லப்பெற்றுள்ளன. சில நூல்கள் இரண்டு கைகளிலும் வேல்கொண்டு, கிரவுஞ்ச மலையைத் துளைக்கின்ற கோலத்தில், இந்த மூர்த்தியைச் சித்திரிக்கின்றன.

**16. தோகையோன் அல்லது சிகிவாகனர்**

இந்த வடிவத்தில் பல வேறுபாடுகள் காண்கிறோம். ஒரு முகத்திலும், ஆறு முகத்திலும் ஏழு வகையான கோலங்கள் கூறப்பெற்றுள்ளன.

இந்தப்பதினாறு வகையான வடிவங்களைத் தவிர சில ஞானிகள் அக்கினிஜாதர், சௌரபேயர், காங்கேயர், குகர், பிரம்மசாரி, தேசிகர் என மேலும் ஆறு வடிவங்களைப் பற்றிக் கூறுகின்றனர்.

இந்த ஆறிலும் தேசிகர் என்ற வடிவம் குருநாதன் என்றும், குருபரன் என்றும் பல நூல்களிலே வர்ணிக்கப்பெறுகின்றது. சில நூல்கள் இந்த வடிவத்தை நாடகப் பண்போடு விளக்கம் செய்கின்றன. இதுவே சிவனுக்குப் பிரணவ உபதேசம் செய்த குருநாதனின் வடிவமாகும்.

தகப்பன் சாமி என்றும், தந்தைக்கு உபதேசித்த தனயன் என்றும் கூறப்பெறுகிற இந்த குருநாதன் ஒரு முகமும், ஆறு கைகளும் கொண்ட சின்முத்திரைக் கடவுள். இவருக்கு எதிரில் ஒரு மாணவனைப் போன்று தந்தை சிவனார் கைகட்டி நிற்க, குருநாதன் அவருக்குப் பிரணவத்தை உபதேசித்து அருள்கிறான். பல ஓவியர்கள் இந்த நிலையில் நிற்கும் குருபரனை, வண்ண வண்ண வடிவங்களிலே சித்திரித்திருக்கிறார்கள்.

முருகக் கடவுளின் வடிவங்களைப் பற்றிக் கூறுகிற ஞானியர்கள் முருகனுடைய இரண்டு தேவியர்களையும் பற்றிச் சுவையான இலக்கணங்களையும் பலவாறாகக் கூறி மகிழ்ந்து இருக்கிறார்கள்.

முருகனுடைய தேவியர் இருவருக்கும் இந்த வருணனைகளிலே அதிக வேறுபாடு இல்லை. வள்ளிக்கு முகம் ஒன்று. தெய்வானைக்கும் முகம் ஒன்றே. இருவருக்கும் கைகள் இரண்டே. இருவர் நிற்கும் நிலைகள் வருமாறு:

வள்ளி வலப்பக்கம். அவளுடைய கைகளிலே தாமரை. அவளுடைய நிறம் கறுப்பு.

தெய்வானை கருங்குவளை ஏந்திய கையோடு இடப்பக்கம் காட்சி தருகிறார்.

சில நூல்களிலே இந்த வர்ணனை மேலும் சில சுவையான செய்திகளைத் தருகின்றது. கருநிறம் கொண்ட வள்ளி வலக்காலை நேராக ஊன்றி, இடக்காலை வளைத்துக் காட்சி தருகிறார். இடக்கையில் தாமரை தாங்கி வலக்கையைத் தொங்கவிட்டு இருக்கிறார். தெய்வானையின் நிறம் நல்ல சிவப்பு. இடக்காலை ஊன்றி வலக்காலை வளைத்து, வலக்கையில் கருங்குவளை ஏந்தி, இடக்கையைத் தொங்கவிட்டிருக்கிறார்.

சித்தர் இலக்கியத்தில் இந்த வடிவங்களின் உறுப்புக்களுக்கும் கோலங்களுக்கும் உட்பொருள் கூறப்பட்டுள்ளது.

ஆறுமுகங்கள் நான்கு திசைகளையும், வானத்தையும், கீழ் நிலத்தையும் குறிப்பதாகவும், இது எங்கும் நிறைந்த பரம்பொருட் தன்மையின் உருவகம் என்றும் ஞானிகள் சொல்கிறார்கள். அதோடு சிவப்பு நிறம் வீரத்தைக் குறிப்பதாகும். வள்ளியின் மேனி கருணையை உணர்த்துவது ஆகவும், தெய்வானையின் மேனி ஆற்றலை அறிவிப்பது ஆகவும் சில ஞானிகளின் விளக்கம் கூறுகின்றது. முருகனுடைய இளமை ஞான ஆற்றலின் தன்மையையும், வேல் என்னும் ஆயுதம் மும்மலங்களை அழிக்கும் ஆற்றலையும் குறிக்கின்றன.

சித்தர்கள் கூறுகிற இன்னொரு உருவகம் மயிலை அழகின் உருவகம் என்றும், மலையை ஆன்ம ஆற்றலின் உயர்வு என்று உணர்த்துகிறது. இந்த உருவகத்தினால்தான் ஆன்மப் பயிற்சியில் ஈடுபடும் மாணவர்களுக்கு, ஓங்கார வடிவமான விநாயகரைப் போலவே, ஞானகுருவின் வடிவமான முருகப்பெருமானும் வழிபாடு தெய்வமாக விளங்கி வருகிறார். அதோடுகூட , விநாயகர் பிரணவத்தின் வடிவம் என்பதாலும், முருகன் பிரணவத்தை உபதேசிக்கிற குருவின் வடிவம் என்பதாலும், சித்தர் இலக்கியத்தில் இந்த இரண்டு கடவுட் கொள்கைகளும் முக்கியமான இடத்தைப் பெறுகின்றன.

★ ★ ★

## 5. சித்தர் இலக்கியம் உணர்த்தும் ஞானக் கல்வி

விநாயகர் அகவலில் துதிகளினூடே பொதிந்து தரப்பட்டுள்ள யோக ஞானப் பயிற்சி முறைகளை, மேலும் நன்கு புரிந்துகொள்வதற்கும், இவற்றை அநுபவத்தில் கொண்டுவருவதற்கும் பயன்படக்கூடிய முக்கியமான நூல்கள் மூன்று உண்டு. அவை,

சிவானந்த போதம்,
நிஜானந்த போதம்,
நெஞ்சறி விளக்கம்

ஆகிய மூன்றுமாம்.

இந்த மூன்று நூல்களும் எப்போது தோன்றின, யாரால் இயற்றப்பெற்றன என்பவை குறித்த ஆராய்ச்சிக்குரிய செய்திகள் முழுவடிவில், ஐயந்திரிபறக் காணப்படவில்லை. இந்தச் சான்றுகள் ஒருபுறம் இருக்க, இவை எப்போது தோன்றிய நூல்களாக இருப்பினும், பழம் பெரும் சித்தர் இலக்கியத்திற்கு இவை நன்கு துணைசெய்கிற மூன்று ஞான விளக்குகளாகச் சுடர்கின்றன. எனவே இவற்றின் உட்கிடைகளை இங்கே பார்ப்பது பயன்தருவதாகும்.

### 1. சிவானந்த போதம்

**காப்பு**

சிவானந்த போதமாஞ் சித்திமுத்தி தந்து
பவானந்த மானவினை பாழாம் - நவானந்த
ஈசனே தானாகும் என்வடிவுத் தாளிணையைப்
பாசமுடன் முன்றொழுவான் பார் 1

தியாகரருள் போதஞ் சிவசந் தரன் சொல்
தயாபரியென் றாய்வடிவந் தானும் - செயாவெனவே
பொய்யா வினாயகனும் பொற்குருவாஞ் சண்முகனும்
அய்யாவு மென்னுள்ளே யாம் 2

முத்திபெறு மென்னெஞ்சு மூர்க்கருட னேயிணங்கிச்
சித்தந் ததும்பிச் சிதறாமல் - முத்தனாம்
பட்டினத்தார் சாட்சி பகுத்தறித விந்நூலைத்
தொட்டவர்க்கு முண்டாஞ் சுகம் 3

பணியுறுத்த லாகப் பரபோகங் கொண்டு
துணிவுறுத்த நெஞ்சுக்குச் சொல்லின் - அணியாய்ப்
படபடென்னும் நெஞ்சம் பகரு சிவா னந்தத்
திடமுறுவார் தாமே சிவம். 4

சிங்கா தனமுடைய செல்வ அடியார்கள்
தங்காமற் சிரமேற் றரித்திட்டேன் - பொன்காலை
ஏற்றிப் புகழ்ந்தன்பா லிந்நூலென் புன்கவியால்
சாற்றத் துணிந்தேன் சரண் 5

**நூற்பயன்**

அறிவதனை மனங்கேட்கச் சிவானந்த
போததத்தை அறிய நன்றாய்
நெறியுடைய முத்தர்கள் தன் திருவடியிற்
பணியவருள் நிலைக்கக் காட்டிக்
குறியுடனே அனுபவித்து வழியடைந்து
கதிபெறவே கூற வென்றும்
பிரிவறவே வாழ்ந்துசிவப் பேரானந்
தம்பெருகப் பேசு மிந்நூல். 6

## துதிகள்

**மாணிக்க வாசக சுவாமிகள் துதி**

நிறைந்தபரி பூரணமாய் நிர்க்குணமாய்
நிர்மலமாய் நித்த னாகித்
துறந்தமன முடையோற்குந் துரியனுமா
யதீ தனுமாயச் சோதி யாகிக்
கறந்தமுலைப் பாலாகிப் பாலிலுள்ள
ருசிகாட்டுங் கர்த்த னாகிச்
சிறந்தகுரு மாணிக்கச் சுவாமிகளை
யெம்முளத்திற் றொழுதல் செய்வாம். 7

**சமயாசாரியர் மூவர் துதி**

இசைக்குருகிப் பரந்தானே யெழுந்தருளி
வேண்டியதோ ரின்பந் தந்து
மிசைக்குளவா யெதிர்த்தவரை மதித்திடாச்
சிவசமய மேலாய்ச் செய்து
திசைக்குளவோர் புகழ்ந்தேத்தச் சிவாலயத்திற்
றேவாரஞ் சிறக்க வோதிப்
பசைக்கருதி யருள்பெருகு மூவரிணை
மலரடியிற் பணிகின் றேனே. 8

**பசவண்ணர், அல்லமாப் பிரபு துதி**

பத்திநிலை த்வறாமல் கிருபையுமே
வழுவாமற் பாரின் மீதே
உத்திசிவ கணேசருக்குப் போதமுற்றுப்
பூசைசெய்தே யுகந்து ஞானத்

காகத்தின் கண்ணி ரண்டிற் காண்பதுங் கண்ணொன் றேபோல்
தேகத்தின் அறிவின் கண்ணைத் திடமுடன் அறிந்து கொண்டு
மோகத்தின் கனவிலி வீழா முனைசுழி வாசி வார்த்தால்
ஏகத்தால் நாகை நாத ரிணையடி சார்வாய் நெஞ்சே!
ஒட்டிலே பட்ட பட்சி உழல்கின்ற நெறிபோ லாசைக்
கட்டிலே மயங்கி மாறாக் கவலையுற் றலைந்தாய் நீதான்;
நெட்டிலே யோடு வாசி நிலைமையாய் நிறுத்தி மேரு
வடடிலே நாகை நாதர் வாழ்பதி அறிவாய் நெஞ்சே!
ஆனைவாய்க் கரும்பு போலும் அரவின்வாய்த் தேரை போலும்
பூனைவா யெலியைப் போலும் புவியில்நைந் தலைந்தாய் ஞானத்
தேனைவாய் அருந்தி முத்தி சேரந்திடச் சிவத்தை நோக்கி
ஊனுளே நாகை நாதர் உற்றிட மறிவாய் நெஞ்சே!

மித்திர குருக்கள் சொல்லை மெய்யொன்று கல்லை வைத்துப்
பத்திர புட்பஞ் சார்த்திப் பணிந்திடும் பாவை நீதான்;
சித்திரப் பதுமை போலுஞ் செய்தொழி லொடுங்கி நின்று
புத்தியாய் நாகை நாதர் பொன்னடி போற்று நெஞ்சே!

உப்போடு புளிப்பும் கைப்பும் உணர்வினால் அறிந்து நீதான்
எப்போது முனுக்குள் நாயன் இருப்பிடம் அறியா தென்னே?
முப்போதுங் குருவைப் போற்றி முனைசுழி வாசி பார்த்தால்
அப்போது நாகை நாதர் அடியிணை அறிவாய் நெஞ்சே!

படிக்கவும் நாவி ருக்கப் பணியவுஞ் சிரமி ருக்கப்
பிடிக்கவுங் கரமி ருக்கப் பேணவுங் குருவி ருக்க
நடிக்கவுந் தாளி ருக்க நாடவுங் கண்ணி ருக்க
இடுக்கமுற் றலைந்தாய் நாகை நாதரை இறைஞ்சு நெஞ்சே!

அருவுரு வில்லா நாயன் அணுவினுக் கணுவாய் நின்றும்
மருவுபல் லுயிர்கட் கெல்லாம் வடிவுவே றான தன்மை
ஒருவரு மறியார்; நல்லோர் உறுதியா லறிவார்; ஞான
குருபர நாகை நாதர் குறிப்பறிந் துணர்வாய் நெஞ்சே!

ஆண்டொரு நூறு கற்பம் ஔடத மூலி யுண்டு
நீண்டதோர் காய சித்தி நெடுநாளைக் கிருந்த பேரும்
மாண்டுதான் போவா ரல்லால் வையகத் திருப்பா ருண்டோ?
தீண்டொணா நாகை நாதர் சீர்ப்பதந் தேடு நெஞ்சே!

பொருள்தனைத் தேடிப் பாரிற் புதைக்கின்ற புத்தி போன்மெய்
அருள்தனை நிதமுந் தேடி அரனடி யதனில் வைத்தால்
இருள்தனை அகற்றுஞ் சோதி எம்பிரான் முன்னே வந்துன்
மருள்தனை மாற்றும் நாகை நாதரை வணங்கு நெஞ்சே!

ஆண்டியின் வேடந் தானும் அறிவுடன் எடுத்தி டாமல்
தூண்டிலில் மீனைப் போலத் துள்ளி வீழ்ந்தலைந்தாய் நீதான்
வேண்டிய போது நாயன் மெல்லடி வெளித்தாய்த் தோன்றும்;
தாண்டிய வாசி நாகை நாதரைத் தழுவாய் நெஞ்சே!

சேற்றிலே நுழைந்தி ருந்த சிறுபிள்ளைப் பூச்சிபோலும்
நீற்றிலே நுழைந்தி ருந்த நேர்மையாம் அழற்சி போலும்
மாற்றுபே ருலகில் நல்லோர் மருவிரி மருவார் சித்தத்
தேற்றியே நாகை நாதர் இணையடி வைப்பாய் நெஞ்சே!

நாடகப் பெண்ணை ஆட்டும் நட்டுவன் போலே யுன்றன்
கூடகச் சடத்தை யாட்டுங் குருவைநீ அறிந்தி டாமல்
மூடக மானாய் ஞான முதல்வனை அறிவால் தேடி
ஆடக நாகை நாதர் அடியிணை பணிவாய் நெஞ்சே!

சத்தியுஞ் சிவமு மாகித் தாண்டவ மாடும் வாசி
சுத்திய மூல நாடிச் சுழுமுனைக் கம்பத் துள்ளே
புத்தியைச் செலுத்தி மேலாம் பொருள்தனை யெடுக்க வல்லார்
பத்திசெய் நாகை நாதர் பதிதனைப் பார்ப்பாய் நெஞ்சே!

நாட்டமாய் அறிவின் கண்ணால் நாயனைப் பருகிப் பார்த்துத்
தேட்டமாங் கருணை பெற்ற சிவனடி யார்கள் தங்கள்
கூட்டமாம் பரத்திற் சென்று குருபணி விடையுஞ் செய்கொண்
டாட்டமா நாகை நாதர் அருள்தர வருவார் நெஞ்சே!

காலனை உதைத்த நாயன் காலெனும் வாசி தாளை
மூலநன் மனையிற் கண்டு முப்பதி முப்பாழ் தாண்டிப்
பாலமு தருந்த மேலாம் பராபரை பாதம் போற்றி
மாலயன் அறியா நாகை நாதரை வணங்கு நெஞ்சே!

கடுமையாம் பகட்டி லேறிக் கயிற்றொடு சூல மேந்திக்
கொடுமையாங் காலன் வந்து கொண்டுபோம் முன்னே நீதான்
அடிமையா நாதன் பாதம் அனுதினம் மறவா தேத்தில்
நெடுமையா நாகை நாதர் நிலைமைகண் டறிவாய் நெஞ்சே!

அரகரா சிவசி வாவென் றனுதினம் மறவா தேத்திச்
சிரகயி லாய வீட்டிற் சிவனைநீ அறிந்து தேடில்
மரகத வல்லி பங்கன் வந்துமுன் காட்சி நல்கிப்
பரகதி கொடுக்கும் நாகை நாதரைப் பணிவாய் நெஞ்சே!

நடக்கிலும் வாசி பாரு; நாட்டமும் வாசி பாரு;
முடக்கிலும் வாசி பாரு; முனிசுழி வாசி பாரு;
மடக்கிலும் வாசி பாரு; மறவிலும் வாசி பாரு;
திடக்குரு நாகை நாதர் திருநடஞ் செய்வார் நெஞ்சே!

போனநாள் வீணாய் போனாற் புதியநாள் கெடவி டாமல்
ஞானநாள் இதுதா னென்று நாடெங்கும் குருவைப் போற்றி
வானநா ளத்திற் சென்னி வழிகண்டு மதிப்பா லூறும்
தேனைநன் கருந்தி நாகை லிங்கரைத் தெரிசி நெஞ்சே!

தராதல மெல்லாந் தானாய்த் தாவர சங்க மங்கள்
நிராமய மாகக் கோத்து நின்றதோர் பொருளா மந்தப்
பராபர வடிவங் கண்டு பரத்துளே யடக்கி மேலாம்
புராதன மூர்த்தி நாகை லிங்கரைப் போற்று நெஞ்சே!

மாணிக்க வாச கர்க்கும் மகிழ்பரஞ் சுந்த ரர்க்கும்
ஆணிப்பொன் திருமூ லர்க்கும் அறுபத்து மூவ ருக்கும்
பேணிக்கொள் பெரியோ ருக்கும் பேறருள் சிவனை யுன்னுள்
தோணக்கண் டிருந்து நாகை லிங்கரைத் தொழுவாய் நெஞ்சே!

மகத்துவம் அடைந்த நெஞ்சே! மலமாயை கொண்ட நெஞ்சே!
பகுத்தறி வில்லா நெஞ்சே! பலநினை வான நெஞ்சே!
மிகுத்திடு காம நெஞ்சே! மெய்ப்பொருள் அறியா நெஞ்சே!
செகத்தினில் நாகை நாதர் சீர்பதந் தேடு நெஞ்சே!

காலது மேல தாகக் கனியுண்ணும் வௌவால் போல
மூலநல் வாசி யோடு முறைமையை அறிவாற் கண்டு
சீலமெஞ் ஞான போத சிவயோகந் தன்னைப் பார்த்து
ஞாலமேல் நாகை நாதர் நடனமுங் காண்பாய் நெஞ்சே!

உறக்கமும் விழிப்பும் போல உடல்பிறந் திறக்குந் தன்மை
சிறக்கவே அறிந்து மிந்தச் செகவாழ்வை மெய்யென் றெண்ணிக்
குறித்தலை குலாமர் சொல்லைக் குறிப்புடன் நம்ப லாமோ?
மறக்கொணா நாகை நாதர் மலரடி வணங்கு நெஞ்சே!

எத்தனை புத்தி சொல்லி எடுத்தெடுத் துரைத்தும் நீதான்
பித்தனைப் போலே யோடிப் பிறவிசா கரத்தில் வீழ்ந்தாய்;
முத்தமிழ் நாகை நாதர் முண்டக மலர்த்தாள் போற்றிச்
சத்தமுன் னுடலிற் றோற்றுந் தலந்தனைப் பார்ப்பாய் நெஞ்சே!

சுவர்த்தலைப் பூனை போலச் சுற்றிய பிறவி தீரத்
தவத்தினுக் குருவ மான சற்குரு தாளைப் போற்றிச்
சிவத்துடன் கலந்து மேவிச் சிதம்பர வழியே சென்றிங்
கெவர்க்குமே லான நாகை நாதரை வணங்கு நெஞ்சே!

அலைவாயிற் பூடு போலும் ஆனைவாய்க் கவளம் போலும்
வலைவாயில் மிருகம் போலும் மயங்கிநைந் தலைந்தாய் நீதான்;
உலைவாயில் மெழுகைப் போல உருகிமெய்ப் பொருளை
யுன்னிப்
பலகாலு மேத்தி நாகை லிங்கரைப் பணிவாய் நெஞ்சே!

மூலமாம் நகர மீதில் முளைத்தெழுஞ் சுடரைக் கண்டு
காலத்தீ மேலே யேற்றிக் கபாலத்தே னமுத ருந்திக்
கோலமா மதுவே யுண்டு குருபதந் தன்னிற் சேர்ந்து

வாலசுந் தரியால் நாகை லிங்கரை வணங்கு நெஞ்சே!
இறந்திடும் இருபத் தோரா யிரத்தறு நூறு பேரும்
இறந்திடிற் காயம் போனா லீசனைக் காண்ப தெந்நாள்?
மறந்திடா தறிவால் மூல வாசியை மேலே யேற்றிச்
சிறந்தசிற் பரத்து நாகை லிங்கரைத் தெரிசி நெஞ்சே!

## நூற் பயன்

கதிகரு மூலா தாரக் கணபதி தாசன் சொன்ன
நிதிமணி மாலை யான நெஞ்சறி விளக்கம் நூறும்
துதிசெயும் அறிவோர் ஞான சோதியின் வடிவ மாக
மதியணி நாகை நாதர் மலர்ப்பதம் பெற்று வாழ்வார்!

நித்தியப் பொருளதான நெஞ்சறி விளக்கம் நூறும்
பத்தியாய் மனத்தி லெண்ணிப் படித்ததன் பயன்காண் போர்கள்
முத்திமெய்ஞ் ஞானம் பெற்று மூவர்க்கும் முதல்வ ராகிச்
சத்தியுஞ் சிவமுந் தோன்றுந் தற்பர மதனுட் சார்வர்.

கனகமார் மணிசேர் மூல கணபதி தாச னாக
நினைவினா லறிகட் செப்பும் நெஞ்சறி விளக்கம் நூறும்
வினவியே படிப்போர் கேட்போர் வினையெலாம் அகன்று மெய்யுற்
பனமெனும் மோட்சம் நாலாம் பதம்பெற்றுப் பதத்துள் வாழ்வார்.

இவ்வாறு நூற்பயனோடு இந்நூல் முடிவுறுகின்றது. பல்வேறு ஞான நூல்களிலே கூறப்பெற்றுள்ள பல பேருண்மைகளும், சித்தர்களின் அறிவியலிலே உள்ள பல துறைகளின் இரகசியங்களும், இந்த மூன்று நூல்களிலும் தொகுத்துக் கூறியிருப்பது, சித்தர் இலக்கியத்தை ஆய்வாருக்கும், இந்தப் பயிற்சி முறைகளிலே ஈடுபடுவார்க்கும் ஒருங்கே பயன்தரும். முக்கியமாக நெஞ்சறி விளக்கத்தின் பாடல்கள் மனப்பாடம் செய்வதற்குரிய கவிநடையும், ஞானப் பொருட் செறிவும் இணைந்து இலங்குகின்றன!

# 6. அறிவிலே இரண்டு வகை

இறை அறிவு என்ற இயலிலே இரண்டு முக்கியமான பிரிவுகள் உண்டு. பிரிவுகள் முக்கியமானவை என்பதோடு கூட, அந்தப் பிரிவுகள் உணர்த்தும் பொருளும் முக்கியமானதாகும்.

நம் தமிழகத்தினில் பல நூறு ஆண்டுகளாக வழங்கிவருகிற இறைஞானம் பற்றிய நூல்கள் அனைத்தும், அடிப்படையிலே இந்த இரண்டு பிரிவுகளில் அடங்கிவிடும்.

இறைவன் ஒருவனே எனினும் அவனைப் பற்றிய நூல்கள் இரண்டாகப் பிரிகின்றன. ஒரே பொருளை இயம்புகின்ற நூல்களாக இருப்பினும், இந்த இரண்டும் தங்களுடைய அணுகுமுறையிலும், பொருளாட்சியிலும், விளக்கங்களிலும் வேறுபடுகின்றன.

பலநூறு அறிஞர்கள் இயற்றியுள்ள, பல நூறு நூல்களும் இந்த இரண்டு பிரிவுகளிலே அடங்கி, இரண்டு குரல்களிலே பேசுகின்றன. ஒரு குரல் கல்வியின் குரல்; மற்றொரு குரல் துய்ப்பின் குரல். ஒன்று மூளையின் பேச்சு; மற்றொன்று இதயத்தின் பேச்சு. ஒன்று படிப்பு; மற்றொன்று அநுபவம்.

தமிழ் மொழியிலும் வடமொழியிலும் ஏராளமான நூல்கள்இந்த இரண்டு பிரிவுகளிலும் தோன்றி வழங்கி வருகின்றன. இவற்றின் குறிக்கோள் இவற்றைக் கற்பவனுக்கு இறைஞானத்தை வழங்க வேண்டும் என்பதே ஆகும்.

நம்முடைய நாட்டு ஆகமங்களிலும் பூர்வ பக்கம் என்றும் உத்திர பக்கம் என்றும் இரண்டு வகை உள்ளன. இவற்றைக் கற்றுத் தேர்ந்த சமயவாதிகளைப் பூர்வபக்க சைவர்கள் என்றும் உத்திரபக்க சைவர்கள் என்றும் அழைக்கிறார்கள்.

இத்தகைய இரண்டு பிரிவுகள் ஏன் தோன்றின என்றால், சாதாரண நிலையில் உள்ள சாமானிய மக்களுக்கு, இறைவனைக் காணுவதற்கு வேண்டிய முறைகளை எளிமையாக்கிச் சொல்ல வேண்டிய அவசியம் உள்ளது. இவர்களால் நுட்பமான நெறிகளைக் கடைப்பிடித்து அரூப நிலையிலே நின்று அறிவுக்கு அறிவான இறைவனைக் காணுகின்ற நுண்ணிய முறைகள் எடுபடமாட்டா. எனவே, இத்தகைய நிலையிலுள்ள சாமானியர்களுக்கு நம்முடைய ஆகமங்கள், பூர்வ பக்கம் என்ற முறையிலே ஆலய வழிபாடு, விரதங்கள், சடங்குகள், கடவுட் தொண்டு, விழாக்கள், பொது வழிபாடு முதலான எளிய வகைகளை உணர்த்துகின்றன. சாமானிய மக்களின்

ஆற்றலுக்கு இசைந்த முறைகள் இவையே ஆம். யோக முறைகளும், ஞான வழிபாடுகளும் இந்த மக்களுக்குப் பயன்பட மாட்டா.

அறிவிலும் ஆர்வத்திலும் மேம்பட்ட மக்களுக்கு வெறும் சடங்குகளையும் விரதங்களையும் சொல்லிப் பயனில்லை. அவர்கள் தீவிர நிலையில் உள்ள மக்கள். அவர்களுக்கென்று இறைவனை உணர்த்துவதற்காக வேறு நெறிமுறைகளை ஆசிரியர்கள் கையாள வேண்டிய அவசியம் இருக்கிறது.

மக்களுடைய மனநிலையும் பண்பாடும் அறிவியலிலே இத்தகைய இரண்டு பிரிவை உண்டாக்கி, இரண்டு வகையான அறிவுறுத்து முறைகளைத் தோற்றுவித்துள்ளன.

வடமொழியில் முன்னைய நூல்களைப் 'புரோட்ச' நூல்கள் என்றும், பின்னைய நூல்களை 'அபரோட்ச' நூல்கள் என்றும் அழைக்கிறார்கள். இதையொட்டி ஞானத்தையும் இரண்டாகப் பிரித்து, 'புரோட்ச ஞானம்', 'அபரோட்ச ஞானம்' என்று அழைக்கிறார்கள்.

கண்ணால் காண முடியாத கடவுளைப் பற்றிப் பற்பல சிறப்புக்களை எடுத்துக் கூறி, கோவில் வழிபாடு, கோவிலிலே செய்கிற தொண்டு முதலியவற்றை இயம்பி, பலவிதமான கிரியைகளைச் சொல்லி இறைவனை அடைவதற்குரிய மார்க்கம் இது என்று அறிவுறுத்துவது 'புரோட்ச ஞானம்' எனப்படும்.

இந்த நூல்களில் இறைவனைப் பற்றிய ஆர்வத்தை வளர்க்கும் முறைகளைச் சொல்லி, வளர்க்க வேண்டியதன் அவசியத்தை உவமைகளாலும், தருக்க வாதங்களாலும் எடுத்துக் கூறுவது உண்டு. காணாததை இயம்புவதற்கு, கண்டவற்றை உவமை சொல்லி, கண்முன் தெரிகின்ற பொருள்களைக் கொண்டு கிரியைகளை வகுத்து எல்லா மக்களுக்கும் பயன்படக் கூடிய விதத்தில் இந்த வகையான 'புரோட்ச ஞான' நூல்கள் எழுந்துள்ளன.

தீவர நிலையிலுள்ள மக்களுக்கு இந்த நூல்கள் கவர்ச்சி தர மாட்டா. அவர்களுக்கு உபதேசம் செய்கிற பொருளை அநுபவத்திலே காட்டினால் ஒழிய, அவர்களுடைய மனம் அந்தப் பொருளிலே ஈடுபடமாட்டாது. அறிவுக்கு அறிவான பேரறிவை, அறிவுகொண்டு கற்பித்தால் மட்டும் போதாமல், அந்தப் பொருளை அவர்களுடைய அறிவுக்குள்ளே தேடும்படி பதிக்கவேண்டும். இத்தகைய தீவிர நிலையில் உள்ள மக்களுக்காக எழுந்த நூல்களே 'அபரோட்ச ஞான' நூல்கள்.

சித்தர் இலக்கியத்திலே இந்த இரண்டு வகையான நூல்களையும் காண்கிறோம். இறைவனைச் சாதாரண நிலையிலே வழிபட்டு, இறையுணர்வு வளரும்படி செய்கின்ற நூல்கள் பெரும்பாலும் புகழ் நூல் வடிவிலும், எளிய வழிபாட்டுச் சடங்கு நூல்கள் வடிவிலும் திகழ்கின்றன. இத்தகைய நூல்களும் சித்தர் இலக்கியத்தில் ஒரு

பகுதியாக அடங்கியுள்ளன. ஆனால் சித்தர் இலக்கியத்தின் செம்பகுதி, 'அபரோட்ச ஞான' நூல்களின் வடிவிலேயே விளங்குகின்றன.

'புரோட்ச ஞான'த்தை வழங்கி, எல்லா அறிவு நிலையிலுமுள்ள சாமானிய மக்களுக்கும் பயன்படக்கூடிய விதத்தில் எழுந்த நூல்களின் ஆசான்களுக்கு 'போதகுரு' என்று சித்தர் இலக்கியம் பெயர் சூட்டுகின்றது.

இங்ஙனமின்றி, தீவரமான வேட்கையுடைய சீடனுக்கு அவனுடைய அறிவிலேயே இறைமையைப் புலப்படுத்தி, எழுத்தில் உள்ளதை அநுபவத்திலே தரக்கூடிய குருவை நம்முடைய ஞானிகள் 'அவபோதகன்' என்று அழைத்தார்கள்.

முதலாவது நெறியை உணர்த்துகிற ஆசான், பாடல்கள் மூலமும் தர்க்கங்களின் வாயிலாகவும் சீடனுடைய உள்ளத்தில் இறையார்வத்தை வலிமையுறச் செய்து பற்பல கிரியைகள் வாயிலாக அவனுடைய வேட்கையைத் தணிக்க முனைகிறான். இரண்டாவது வகையான ஆசானோ என்றால், வெறும் நூலறிவைப் பேசுவதோடு நில்லாமல், தன்னுடைய சீடனின் உள்ளத்தில் உறங்கிக்கொண்டு இருக்கின்ற உள் ஆற்றல்களை விழிக்கச் செய்து, ஒளியின் அலைகளையும் ஒலியின் அலைகளையும் எழுப்பி, அவனுடைய அறிவுக்குள்ளே பேரறிவு கிளரச் செய்து, அவனுடைய அகவுணர்விலே இறைமையைப் பதிக்கிறான்.

சித்தர் இலக்கியத்தின் ஒண்மை மிக்க நூல்கள் பலவும் இரண்டாவது வகையிலான அநுபவ ஞானிகளின் வெளியீடுகள் என்பதை நாம் மறந்துவிடக் கூடாது. வடமொழியார் சொல்லுகிற, 'அபரோட்ச அநுபூதி' என்னும் நிலையே இத்தகைய நூல்களின் குறிக்கோளாகும். இதுவே அறிவுக்கு அறிவான பேரறிவை அறிவுக்கண்ணால் காணவும், உணர்வுக்கு உணர்வான பேருணர்வை உணர்வினால் துய்க்கவும், கைகொடுத்து உதவுகிறது. இதுவே சித்தர் இலக்கியத்தின் மாட்சி மிக்க சிறப்பாகும்.

இத்தகைய ஞான குரு ஒருவனுக்குக் கிட்டும்பொழுது அவன் சித்தர்கள் கூறுகிற ஒளியையும், சித்தர் இலக்கியத் பேசுகிற ஒலியையும் காணவும் கேட்கவும் தலைப்படுகிறான். தன்னுடைய பயிற்சியின் மூலம், சிவசூரியன் எனவும், சிவகுரு எனவும், அருட்பெரும்சோதி அல்லது ஆன்மசோதி எனவும் அழைக்கப்படுகிற அறிவுருவான இறைமைக் காட்சியைக் காணத் தொடங்குகின்றான். அவனுடைய உட்செவிகளிலே இறை ஒலிகள், கேட்கத் தொடங்குகின்றன. இத்தகைய இன்பத் துடிப்பே சித்தர் இலக்கியத்தின் குறிக்கோளும் பயனும் என்பதைத் தமிழகத்தில் மட்டுமல்லாமல் உலகெங்கிலும் உள்ள சித்தர் கணம் வற்புறுத்திக் கூறியுள்ளது. இந்த ஞானமே உலக நாடுகள் அனைத்துக்கும் பொதுவானதும், உலகச் சமயங்கள் அனைத்துக்கும் பொதுவுடைமையானதும் ஆகிய, சித்தர் ஞானம், இந்த ஞானத்தைப் பற்றி சிவயோகி இரத்தினசபாபதியார் மிக அருமையான ஒரு குறிப்புத் தருகிறார். அது வருமாறு:

"இத்தகைய ஞானம் கைவரப் பெற்றோர் உணர்த்தும் அறிவுக்கு 'அவபோத ரூபம்' என்று பெயர். அதாவது, சொற்களால் உணர்த்தாது, சீடனிடம் ஒரு அனுபவ அறிவைப் பதித்தல் என்று பொருள். குரு தனது பார்வையாலும் பரிசத்தாலும் சீடனிடம் அடங்கிக் கிடந்த ஓர் அகண்டாகார சத்தியை எழுப்புவர். அதனால் சீவனின் தேகத்திலும் சிரசிலும் ஒருவகையான உணர்வு உதித்து விடும். அது ஒரு இன்ப நிலையாகவும் விளங்கும். அதன் வழியே சாதனம் முதிர்ந்தால் அறிவில் தசநாதங்களுதிக்கும். இதை அறியும்போது நாத சம்மியம் என்பர். இதன் முடிவு நாதாந்தமாகும். சைவம் கூறும் உத்தர ஞானம் இதுவாகும்.

திபெத்திய லாமாக்கள் இந்நாத சம்மியத்தைச் 'சுரோதா பத்தி' என்பர். சுரோதாபத்தியால் நாதாந்தம் கைவரப் பெற்றவர். அணிமாதி சித்திகளுடன் கூடிய அவலோகீஸ்வரர் பதவியைப் பெற்றும் அழியாத நிலையைப் பெறுவர் என்பர். இது சைவ நூல்கள் கூறும் அணு சதாசிவர்கள் போன்ற பதமாகும். காஷ்மீர் சைவம் இதைப் 'பிரத்தய பிஞ்ஞை' என்று கூறிற்று. அதன் பொருள் தனி வியக்தியின் அறிவை உயர்த்துவதில் அகண்ட அறிவுடன் ஒன்றுதல் என்ற கருத்தேயாகும். சாத்த நூல்கள் இவ்வித்தையைச் 'சந்திரஞானம்' என்று பெயரிட்டன. சந்திரனே அஞ்ஞான தசையில் மனிதனின் வீரியமாகவும் தன்னை அறிந்த ஞானிக்குச் சிரசில் உள்ள சோம மண்டலமாகவும், அதீத நிலையில் சீவ சாட்சியான ஆத்ம சோதியாகவும் உள்ளான். சீவ சாட்சி நிலையைச் சைவ நூல் சிவசாதாக்கியம் என்று சதாசிவ ரூபத்தில் விளக்கிற்று. சித்தர் பரிபாஷையில் அகர கலை என்றனர். அகரம், சந்திரனை உணர்த்தும் குறியீடு. சித்பத்தி ஸ்பந்த ரூபமாக (ஒரு சிறு அசைவாக) மூளையில் தொழிற்படுகிறது. காரிய ரூபமான போது குண்டலினியாக மூலாதாரத்திலிருந்து கொண்டு தொழிற்படுகிறது. ஞானதேகப் பிரக்ஞையை விட்டவனாக விளங்கும்போது, குண்டலினியின் ஆற்றலும் சித்சத்தியின் ஆற்றலும் சமமாகப் பொருந்தியே சோம மண்டல ஒளியை உண்டாக்குகின்றது. ஒரு சத்தியே தொழில் வேறுபாட்டால் வேறு வேறு தன்மையைப் பெறுகின்றது என்பது ஞானிகளின் முடிவு. அதனால் உருவத்தால் விளக்கும் சத்திக்கும் உருவ மற்ற அறிவுக்கும் சமவாய விளக்கத்தைச் சிவசக்தி என்று காட்டினர். சூரியனை விட்ட ஒளி எவ்விதம் இருக்க முடியாதோ அவ்விதமே அறிவை விட்ட வேறு ஒரு சக்தி தனியாக இல்லை. அத்தகைய அகரம் எண்ணைக் குறிப்பிடும்போது எட்டு என்ற எண்ணைக் குறிக்கும். அது போலவே உகரம் இரண்டு என்ற எண்ணைக் குறிக்கும். இவைகள் பஞ்சபூதமான ஐந்தும் ஒவ்வொரு வகை அறிவாளியுடன் கூடியவை. தேகத்தில் உள்ள சூரிய ஒளி, சந்திர ஒளி, ஆத்ம வொளிகளிலும் ஒவ்வொரு வகையான ஆற்றலும்

அறிவும் பொருந்தியுள்ளது என்பதை அட்டமூர்த்தம் என்ற விளக்கினர். சமஷ்டி உருவம், வியஷ்டி உருவம் என்ற இரு சத்திகளையும் உகாரத்தில் அடக்கிக் காட்டினர். அதனால் நிராதார நிலையில் ஆகாய மண்டலத்தில் சர்வ வியாபகமான சிவசக்தியைச் சமஷ்டியாக்கி ஆத்மாவை வியட்டி நிலையை விட்டு மாற உபாயம் கூறினர். இவ்வித அகர உகர பாதங்களால் அமைவது ஓகாரம் என்ற பிரணவமாகும். பிரணவ ஞானமே உண்மையான ஞானம் என்று வேதங்கள் அறுதியிட்டுப் பிரணவத்தை வேத சிரசு என்று கூறிற்று. இத்தகைய பிரணவ உபாசனையைத் தோத்திரமுறையில் தமிழில் சிறப்புற விளக்குவது திருவாசகமும், சாத்திர முறையில் சிறப்புற விளக்குவது திருமந்திரமுமாகும்.

சிவயோகி அவர்களின் இந்த விளக்கம் சித்தர் இலக்கியத்தை ஆய்வார்க்கு மிகவும் துணை புரிகின்ற கருத்துரையாகும்.

சித்தர்களின் மொழியிலே காட்சி என்று பேசப்படுவது அனைத்தும் அகக் கண்ணுக்குப் புலப்படுகின்ற காட்சியையே ஆகும். வடநூலார் புறக்கண்ணுக்குப் புலப்படுகின்ற தோற்றத்தை 'ரூபம்' என்றும், அகக் கண்ணுக்குப் புலப்படுவதைச் 'சொரூபம்' என்றும் அழைப்பார்கள். இதை விளக்குகின்ற சிவயோகியார் மாணிக்கவாசகருடைய சிவபுராணத்திலிருந்து கீழ்கண்ட அடிகளை மேற்கோள் காட்டுகிறார்.

உய்யவென் னுள்ளத்துள் ஓங்காரமாய் நின்ற
மெய்யா விமலா விடைப்பாகா வேதங்கள்
ஐயா வெனவோங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே
வெய்யாய் தணியாய் இயமான னாம்விமலா
பொய்யா யினவெல்லாம் போயகல வந்தருளி
மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே
எஞ்ஞான மில்லாதேன் இன்பப் பெருமானே
அஞ்ஞானந் தன்னை அகல்விக்கும் நல்லறிவே.

சிவயோகியார் மேற்கோள் காட்டுகின்ற மாணிக்கவாசகரின் இந்த வரிகள், சித்தர் இலக்கியத்தில் உள்ள ஞான இரகசியத்தை உள்ளுறை பொருளாகப் பொதிந்து வைத்துள்ளன. மெய்ச்சுடர் என்று மாணிக்கவாசகர் குறிக்கின்ற இந்தச் சோதியே சித்தர் இலக்கியம் கூறுகிற மெய் விளக்காகும்.

மெய்விளக்கு என்ற சொல்லுக்கு இரண்டு பொருள் உண்டு. ஒன்று மெய்யான, நிலையான விளக்கு என்பது; மற்றது மெய்யின்கண் காண்கின்ற விளக்கு என்பதாகும்; அதாவது இந்த உடலுக்குள்ளே அகக்கண் கொண்டு காணுகின்ற ஒளியாகும். சமய இலக்கியங்கள் இந்த ஒளியைக் காணும் பேரறிவை யோகத்தின் மூலம் காணலாம் என்று கூறும். இந்த யோகத்தை விரிவுபடுத்திப் பேசுகின்ற சித்தர் நூல்கள், இப்பயிற்சி முறையை 'ஓங்காரப் பயிற்சி' என்றும், 'பிரணவ யோகம்' என்றும் அழைக்கின்றன. இதனையே மோன நிலையில்

கரணங்கள் ஒடுங்கிய அந்தப் பேரொடுக்கத்தில் காணக்கூடிய பெருஞ்சோதி என்று அழைத்து, இந்தக் காட்சி நிலையைச் 'சும்மா இருத்தல்' என்று தாயுமானவர் கூறுவார். அருணகிரியாரும் இதனையே,

சும்மா இருசொல் லறவென் றலுமே
அம்மா பொருளொன் றுமறிந் திலனே

என்கிறார்.

திருப்புகழிலும் இதனை அருணகிரியார் பாடுகிறார்.

காவி யுடுத்துந் தாழ்சடை வைத்துங்
காடுகள் புக்குந் தடுமாறிக்
காய்கனி துய்த்துங் காயமொறுத்துங்
காசினி முற்றுந் திரியாதே
சீவ வொடுக்கம் பூத வொடுக்கம்
தேற வுதிக்கும் பரஞான
தீப விளக்கங் காண எனக்குன்
சீதள பத்மம் தருவாயே.

விவேகானந்தருடைய வாழ்க்கையில் அவர் இராகிருஷ்ண பரமஹம்சரை நேரிலே சந்தித்தபோது நடந்த நிகழ்ச்சியை இங்கே நினைவு கூறலாம். குருநாதன் சீடனைத் தன் முன்னே எதிர்வைத்து, பரிச தீட்சை என்ற தொட்டுக்காட்டும் உத்தியைக் கையாண்டு ஞான ஒளியைத் தூண்டினார். அந்த ஒரு வினாடியில் விவேகானந்தர் ஞானியாக எழுந்துவிட்டார்.

இதுவே மோனத்தில் ஞானத்தின் ஒளிகாணும் வித்தையாகும். இது கைவரப் பெறாதவர்கள் வாய் பேசாமல் மௌனியாக இருப்பதாலும், தாடியும் சடையும் வளர்த்துப் புறக்கோலம் பூண்டு திரிவதாலும் எத்தகைய பயனும் இல்லை.

ஞானக் கும்மியிலே சித்தர் இதனை மிகுந்த வேகத்தோடு பாடுகிறார்.

தாடி வளர்த்துச் சடைவளர்த்து - நல்ல
சந்நியாசி என்றொரு வேடமிட்டு
ஓடித் திரிந்த புலையாட்டை - இங்கு
ஒப்புவ தாரடி ஞானப் பெண்ணே!

என்பது ஞானக் கும்மி. புலையாடு என்பது வெள்ளாட்டை. அதற்குத் தாடி போன்ற 'அதர்' என அழைக்கப்படும் சதை தொங்கும். இந்தச் சதையைத் தான் திருமூலரும் வேறோர் இடத்திலே 'ஆட்டின் கழுத்தில் அதர்' என்றார்.

உண்மையான ஒளி ஞானம் என்பது ஞானகுருவானவன் சீடனுக்குத் தொட்டுணர்த்த வேண்டிய மெய்க்கூற்றின் இரகசியமாகும். உயிரின் சிறப்பறிவு விழிப்படையும்போது அந்த ஒளி அகக்கண்ணுக்குப் புலனாகிறது. உடனே தலையினுள்ளே அதிர்வு போன்ற ஓர் உணர்வு

அறிவும் பொருந்தியுள்ளது என்பதை அட்டமூர்த்தம் என்ற விளக்கினர். சமஷ்டி உருவம், வியஷ்டி உருவம் என்ற இரு சத்திகளையும் உகாரத்தில் அடக்கிக் காட்டினர். அதனால் நிராதார நிலையில் ஆகாய மண்டலத்தில் சர்வ வியாபகமான சிவசக்தியைச் சமஷ்டியாக்கி ஆத்மாவை வியட்டி நிலையை விட்டு மாற உபாயம் கூறினர். இவ்வித அகர உகர பாதங்களால் அமைவது ஓகாரம் என்ற பிரணவமாகும். பிரணவ ஞானமே உண்மையான ஞானம் என்று வேதங்கள் அறுதியிட்டுப் பிரணவத்தை வேத சிரசு என்று கூறிற்று. இத்தகைய பிரணவ உபாசனையைத் தோத்திரமுறையில் தமிழில் சிறப்புற விளக்குவது திருவாசகமும், சாத்திர முறையில் சிறப்புற விளக்குவது திருமந்திரமுமாகும்.

சிவயோகி அவர்களின் இந்த விளக்கம் சித்தர் இலக்கியத்தை ஆய்வார்க்கு மிகவும் துணை புரிகின்ற கருத்துரையாகும்.

சித்தர்களின் மொழியிலே காட்சி என்று பேசப்படுவது அனைத்தும் அகக் கண்ணுக்குப் புலப்படுகின்ற காட்சியையே ஆகும். வடநூலார் புறக்கண்ணுக்குப் புலப்படுகின்ற தோற்றத்தை 'ரூபம்' என்றும், அகக் கண்ணுக்குப் புலப்படுவதைச் 'சொரூபம்' என்றும் அழைப்பார்கள். இதை விளக்குகின்ற சிவயோகியார் மாணிக்கவாசகருடைய சிவபுராணத்திலிருந்து கீழ்கண்ட அடிகளை மேற்கோள் காட்டுகிறார்.

உய்யவென் னுள்ளத்துள் ஓங்காரமாய் நின்ற
மெய்யா விமலா விடைப்பாகா வேதங்கள்
ஐயா வெனவோங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே
வெய்யாய் தணியாய் இயமான னாம்விமலா
பொய்யா யினவெல்லாம் போயகல வந்தருளி
மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே
எஞ்ஞான மில்லாதேன் இன்பப் பெருமானே
அஞ்ஞானந் தன்னை அகல்விக்கும் நல்லறிவே.

சிவயோகியார் மேற்கோள் காட்டுகின்ற மாணிக்கவாசகரின் இந்த வரிகள், சித்தர் இலக்கியத்தில் உள்ள ஞான இரகசியத்தை உள்ளுறை பொருளாகப் பொதிந்து வைத்துள்ளன. மெய்ச்சுடர் என்று மாணிக்கவாசகர் குறிக்கின்ற இந்தச் சோதியே சித்தர் இலக்கியம் கூறுகிற மெய் விளக்காகும்.

மெய்விளக்கு என்ற சொல்லுக்கு இரண்டு பொருள் உண்டு. ஒன்று மெய்யான, நிலையான விளக்கு என்பது; மற்றது மெய்யின்கண் காண்கின்ற விளக்கு என்பதாகும்; அதாவது இந்த உடலுக்குள்ளே அகக்கண் கொண்டு காணுகின்ற ஒளியாகும். சமய இலக்கியங்கள் இந்த ஒளியைக் காணும் பேரறிவை யோகத்தின் மூலம் காணலாம் என்று கூறும். இந்த யோகத்தை விரிவுபடுத்திப் பேசுகின்ற சித்தர் நூல்கள், இப்பயிற்சி முறையை 'ஓங்காரப் பயிற்சி' என்றும், 'பிரணவ யோகம்' என்றும் அழைக்கின்றன. இதனையே மோன நிலையில்

கரணங்கள் ஒடுங்கிய அந்தப் பேரொடுக்கத்தில் காணக்கூடிய பெருஞ்சோதி என்று அழைத்து, இந்தக் காட்சி நிலையைச் 'சும்மா இருத்தல்' என்று தாயுமானவர் கூறுவார். அருணகிரியாரும் இதனையே,

சும்மா இருசொல் லறவென் றலுமே
அம்மா பொருளொன் றுமறிந் திலனே

என்கிறார்.

திருப்புகழிலும் இதனை அருணகிரியார் பாடுகிறார்.

காவி யுடுத்துந் தாழ்சடை வைத்துங்
காடுகள் புக்குந் தடுமாறிக்
காய்கனி துய்த்துங் காயமொறுத்துங்
காசினி முற்றுந் திரியாதே
சீவ வொடுக்கம் பூத வொடுக்கம்
தேற வுதிக்கும் பரஞான
தீப விளக்கங் காண எனக்குன்
சீதள பத்மம் தருவாயே.

விவேகானந்தருடைய வாழ்க்கையில் அவர் இராகிருஷ்ண பரமஹம்சரை நேரிலே சந்தித்தபோது நடந்த நிகழ்ச்சியை இங்கே நினைவு கூறலாம். குருநாதன் சீடனைத் தன் முன்னே எதிர்வைத்து, பரிச தீட்சை என்ற தொட்டுக்காட்டும் உத்தியைக் கையாண்டு ஞான ஒளியைத் தூண்டினார். அந்த ஒரு வினாடியில் விவேகானந்தர் ஞானியாக எழுந்துவிட்டார்.

இதுவே மோனத்தில் ஞானத்தின் ஒளிகாணும் வித்தையாகும். இது கைவரப் பெறாதவர்கள் வாய் பேசாமல் மௌனியாக இருப்பதாலும், தாடியும் சடையும் வளர்த்துப் புறக்கோலம் பூண்டு திரிவதாலும் எத்தகைய பயனும் இல்லை.

ஞானக் கும்மியிலே சித்தர் இதனை மிகுந்த வேகத்தோடு பாடுகிறார்.

தாடி வளர்த்துச் சடைவளர்த்து - நல்ல
சந்நியாசி என்றொரு வேடமிட்டு
ஓடித் திரிந்த புலையாட்டை - இங்கு
ஒப்புவ தாரடி ஞானப் பெண்ணே!

என்பது ஞானக் கும்மி. புலையாடு என்பது வெள்ளாட்டை. அதற்குத் தாடி போன்ற 'அதர்' என அழைக்கப்படும் சதை தொங்கும். இந்தச் சதையைத் தான் திருமூலரும் வேறோர் இடத்திலே 'ஆட்டின் கழுத்தில் அதர்' என்றார்.

உண்மையான ஒளி ஞானம் என்பது ஞானகுருவானவன் சீடனுக்குத் தொட்டுணர்த்த வேண்டிய மெய்க்கூற்றின் இரகசியமாகும். உயிரின் சிறப்பறிவு விழிப்படையும்போது அந்த ஒளி அகக்கண்ணுக்குப் புலனாகிறது. உடனே தலையினுள்ளே அதிர்வு போன்ற ஓர் உணர்வு

நிகழ்கிறது. இதனைத்தான் வடநூலார் 'ஸ்பந்த ஞானம்' என்று அழைக்கிறார்கள்.

இந்த ஞானமானது ஏற்கனவே உடம்புக்குள் மறைந்து கிடந்த ஒன்றுதான். அது நீறுபூத்த நெருப்பாக இருந்தது. அதனைக் கிளறியவன் ஞானாசிரியனாவான். இந்த உணர்வுதான் மாணவனுடைய சிந்தனையிலே பெருகி வளர்ந்து பரநாதமாகவும் பரவிந்துவாகவும் கூடுகிறது. இந்தப் பேருபகாரத்தைச் செய்யும் குருவையே சித்தர் இலக்கியம் 'அவபோத குரு' என்று அழைக்கிறது. இந்த நிலைக்கு உரிய மாணவனைத் 'தீவிர தர சத்திநிபாதம்' என்றும், அவனுடைய நிலையைச் 'சத்தியோ நிர்வாணம்' என்றும் ஞானிகள் அழைக்கிறார்கள்.

சொற்களினால் சொல்லப் பெறாததும், தொட்டுணர்த்த உணரப் பெறுவதுமான இரகசியக் கல்விக்கு 'மூலமநு' என்றும், 'பிரணவ தீட்சை' என்றும் வடநூலார் பெயரிட்டு அழைக்கிறார்கள். இத்தகைய கல்வியைக் கற்பிப்பவனே 'ஞானகுரு' என்றும், இதனை உணர்த்தாமல் வெறும் சடங்குகளைக் கற்பிப்பவனைப் 'போதகுரு' என்றும் ஞான இலக்கியம் பேசுகிறது என்பதை ஏற்கனவே பார்த்தோம்.

வடமொழி ஞானநூல்களில் காணப்பெறுகின்ற ரிஷிகள் கற்பிக்கும் ஞானமும், சித்தர் இலக்கியத்தில் காணப்பெறுகின்ற சூக்கும ஞானமும், இரண்டும் ஒன்றே. இன்னும் சொல்லப்போனால் உலக மொழிகள் அனைத்திலும் பேசப் பெறுகின்ற மெய்யான ஞானம் இதுவே. எந்த நாட்டில் பிறந்தாலும், எந்த மொழியைப் பேசினாலும், மனிதர்கள் அனைவருடைய உடலமைப்பும் அதன் இயக்கமும் ஒரே படித்தானவை அல்லவா! அதற்குள் மறைந்து நிற்கின்ற ஞானப் பேரொளியும் ஒன்றே. இதை அகக்கண்ணால் காணும் நெறியும் ஒன்றேதான்.

தமிழ் மக்களுடைய பெரிய பேறு என்னவென்றால், ஞானத்தைப் புகட்டுகின்ற நூல்களிலே, எளிய தோத்திரப் பாடல்களால் ஆன நூல்கள் பலவாக உள்ளன. அவற்றிலும் முக்கியமாக ஞானிகள் வழங்கியுள்ள சித்தர் இலக்கியமான பாடல்களிலே பலவும், இத்தகைய புகழ்ப்பாவின் வடிவிலே அமைந்த ஞானப் பெருநூல்களாக விளங்குகின்றன.

தொகை நூல்களாக வழங்கி வருகின்ற பல்லோர் யாத்த பாடல்கள் ஒருபுறம் இருக்க, முழுநூல் வடிவிலே துதிப் பாடல்களுக்குள்ளே சித்தர்களின் ஞானப் பொருள் உபதேசம் அனைத்தையும் உள்ளடக்கித் திகழ்கின்ற அரிய இலக்கியங்களில், திருமந்திரம் ஒப்புயர்வு அற்ற பெருநூல், அந்த வரிசையிலேயே வைத்து எண்ண வேண்டிய பிற நூல்களிலே, காலத்தால் முற்பட்ட பனுவல்களில், அவ்வையாரின் அகவலும், மாணிக்கவாசகரின் திருவாசகமும் குறிப்பிடத்தக்கவை.

அவ்வையாரின் காலத்தைப் பற்றிய சர்ச்சை நமக்குத் தெரியும். இந்தச் சர்ச்சையின் உள்ளடங்கிய வினாவாக அவ்வையார் ஒருவரா, பலரா என்ற ஐயமும் எழுந்து வந்துள்ளது. இதை ஓரளவு பார்த்தோம். ஆனால் திருவாசகத்தைப் பற்றிய சர்ச்சையிலே மாணிக்கவாசகர் ஒருவரா, இருவரா என்ற கேள்விக்கு இடமில்லை. ஆனால் அவருடைய காலத்தைப் பற்றிய ஆய்வு இன்றளவும் தெளிவான முடிவுக்கு வராத ஓர் இலக்கிய வினாவாகவே இருக்கிறது. தேவார காலத்திற்கு மிகவும் முற்பட்டது என்றும், ஏன் சங்க காலத்தையே ஒட்டியது என்றும் சொல்லும் பேரறிஞர்கள் நமக்குத் தெரியும். அவ்வாறே தேவாரத்திற்குப் பிற்பட்டதே திருவாசகத்தின் காலம் என்று சொல்வாரும் உண்டு.

எனது இந்த ஆய்வுநூலுக்குரிய நோக்கம், இந்த நூல்களின் சித்தர் ஞான உட்கிடையைக் காணுவதே என்ற நிலையில், காலத்தைப் பற்றிய விரிவான நீண்ட சர்ச்சைக்குள்ளே நாம் புகுவதற்கு இது இடமன்று. அதோடு அதற்குரிய புறச்சான்றுகள் போதுமான அளவில் இடமில்லை. இந்நிலையிலே திருவாசகத்தைப் பற்றிய ஒரு பெரிய உண்மையை மட்டும் இங்கே குறிப்பிட வேண்டும்.

திருவாசகத்தில் வருகின்ற (1) சிவபுராணம், (2) கீர்த்தித் திருவகவல், (3) திருவண்டப் பகுதி, (4) போற்றித் திருவகவல் ஆகிய நான்கு பகுதிகளும் சித்தர் ஞானத்தின் உட்பொருளை விளக்கும் மிகச் சிறந்த பனுவல்களாம். இவையும் அவ்வையாரின் நூலைப் போன்று அகவல் யாப்பிலேயே அமைந்துள்ளன.

அகவல் என்ற யாப்பு ஞான அதிர்வுகளுக்கு உரிய ஒலி நுட்பம் கொண்டது என்பதை, விநாயகர் அகவலை ஆயும்போது கண்டோம் அல்லவா? எனவே மீண்டும் மாணிக்கவாசகரின் அகவல்களை ஆயும்போது யாப்பின் நுட்பத்தை இங்கே நினைவுபடுத்திக் கொள்ள வேண்டியது அவசியமாகும். கலிவெண்பாவுக்கும் அகவலுக்குரிய ஒலிஅதிர்வுச் சட்டம் பொருந்தும்.

சுந்தரமாணிக்க யோகீசுவரர், சித்தர் கண்ணப்ப சுவாமிகள் சிவயோகி இரத்தினசபாபதியார், மௌன சுவாமிகள், இன்னும் பல பெயர் தாங்கி உலவிய சித்தர் பெருமக்கள் ஆகிய பல பெரியோர்களும், தங்களுடைய மாணாக்கர்களுக்குக் கற்பிக்கும் ஞானக் கல்வியிலே, விநாயகர் அகவலோடு சேர்த்துத் திருமந்திரத்தின் சில பகுதிகளையும், திருவாசகத்தில் வருகின்ற மேற்கண்ட நான்கு அகவல்களையும் பேரறிவுப் பாடநூல்களாக நடத்தி ஞானவிளக்கம் கூறுவது உண்டு. இப்பெரியோர்களில் சிலர் எழுதிப் போந்த உரை விளக்கங்கள் சுவடி வடிவிலும் ஞானம் பயிலும் மாணவர்களிடையே வழங்கி வருகின்றன. இந்த உரைகளின் துணைகொண்டு, விநாயகர் அகவலை ஆராய்ந்த முறையிலேயே, மாணிக்கவாசகரின் பாடல்களையும் இங்கே ஆராயப் புகுவது பொருத்தமுடையதாகும்.

சிவபுராணத்தில் வருகின்ற நுட்பங்களையும், கீர்த்தித் திருவகவலில் வருகின்ற அஞ்சலி மொழிகளுக்குள்ளே காணுகின்ற உட்கிடை

களையும், திருவண்டப் பகுதியின் ஞானப் புதையலையும் போற்றித் திருவகவலுக்குள்ளே காண்கின்ற சூக்கும ஞான அநுபவங்களையும் ஆராய்ந்து பார்க்கும்போது, இந்த மாணிக்கவாசகரின் நூல் ஓதி வழிபடுனதற்குரிய தோத்திரப் பனுவல் மட்டமன்று, சித்தர்களின் மெய்ஞ் ஞானம் அனைத்தையும் தன்னுள் அடக்கித் திகழ்கின்ற ஒரு பெரிய ஞான இலக்கியமும் ஆகும் என்பதை உணர்வோம்.

இரண்டு வகையான அறிவுக்கும் ஒருசேர அமைந்த ஓர் இலக்கியமாக விநாயகர் அகவலும் மணிவாசகரின் அகவலும் அமைந்துள்ள இயைபு ஒருபுறமிருக்க, பூசனை செய்யும் சாமானியர்கள் பாடித்துதிக்கின்ற தோத்திர நூல்களிலே, தீவிரதர நிலையிலுள்ள ஞானப் பயிற்சியாளர்களும் பயன்பெற வேண்டிய ஞானக் கருவூலங்களை உள்ளடக்கி இந்த நூல்கள் விளக்குவது மேலும் ஒரு சிறப்பாகும்.

திருப்பெருந்துறையிலே மணிவாசகருக்கு ஞானகுரு வழங்கிய மெய்ஞ்ஞானத்தின் வெளியீடாக அமைந்த நான்கு அகவற்பனுவல்களையும், சித்தர்களின் ஞானத் துறையிலே நடந்துசென்று உட்பொருளைக் காணப் புகுவோமாக!

# 7. சிவ புராணம்

திருவாசகம் பல நூறு ஆண்டுகளாக நம்முடைய தமிழகத்திலே பக்தர்களின் பூசனைக்கு உரிய ஒரு துதிநூலாக வழங்கிவருகிறது. சைவத் திருமுறைகளில் எட்டாவது திருமுறையாக வைத்து வணங்கப்பெறுவதோடு, அதனுடைய உருக்கத்தைத் தமிழ்கூறும் நல்லுலகம் உணர்ந்து அநுபவித்துத் 'திருவாசகத்துக்கு உருகாதார் ஒருவாசகத்துக்கும் உருகார்' என்று வி''ந்து வந்திருக்கிறது.

இந்த நூலின் உருக்கமும், இதயத்தை நெகிழ்விக்கும் பக்திப் பாங்கும், தமிழ்மக்கள் நன்கு அறிந்த சிறப்புக்கள்; பக்தி உலகம் பாடி மகிழ்ந்த அநுபவங்கள். ஆனால் இந்த நூலில் உள்ள சித்தர் இலக்கியப் பாங்கும், ஞான இரகசியங்களும், தீவிரதர நிலையில் உள்ள ஞானப்பயிற்சி செய்யும் மாணவர்க்கே தெரிந்த உண்மைகளாம். முக்கியமாக, சிவபுராணம் முதலிய முன்னர்க் கூறிய நான்கு பனுவல்களும் சித்தர் இலக்கியத்தின் இலக்கணத்திற்கு அற்புதமான முறையிலே சான்று பகர்கின்றன.

திருவாசகம் ஒரு பக்தி நூலாகவும், சித்த நூலாகவும் ஒருங்கிணைந்து விளங்குவதால், இந்த நான்கு பனுவல்களுக்கும் பக்தர்கள் கூறுகின்ற சமய உரையையும், ஞானம் பயில்வோர் கூறுகின்ற சித்தர் உரையையும் ஒப்புநோக்குதல் இந்த ஆய்வுக்குப் பொருந்துவதாகும். இம்முறையிலே முதலில் சிவ புராணத்தைக் காண்போம்:

நமச்சிவாய வாழ்க நாதன்றாள் வாழ்க
இமைப்பொழுதும் என்னெஞ்சின் நீங்காதான் தாள்வாழ்க
கோகழி யாண்ட குருமணிதன் தாள்வாழ்க
ஆகம மாகிநின் றண்ணிப்பான் தாள்வாழ்க
ஏகன் அநேகன் இறைவன் அடிவாழ்க
வேகம் கெடுத்தாண்ட வேந்தனடி வெல்க
பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்றன் பூங்கழல்கள் வெல்க
புறத்தார்க்குச் சேயோன்றன் பூங்கழல்கள் வெல்க
கரங்குவிவார் உண்மகிழுங் கோன்கழல்கள் வெல்க
சிரங்குவிவார் ஓங்குவிக்குஞ் சீரோன் கழல்வெல்க
ஈசன் அடிபோற்றி எந்தை யடிபோற்றி
தேசனடி போற்றி சிவன்சே வடிபோற்றி
நேயத்தே நின்ற நிமலன் அடிபோற்றி
மாயப் பிறப்பறுக்கும் மன்ன னடிபோற்றி
சீரார் பெருந்துறைநந் தேவன் அடிபோற்றி
ஆராத வின்பம் அருளுமலை போற்றி

சிவனவ னென்சிந்தை யுள்நின்ற அதனால்
அவனரு ளாலே அவன்றாள் வணங்கிச்
சிந்தை மகிழச் சிவபுரா ணந்தன்னை
முந்தை வினைமுழுதும் ஓய வுரைப்பனியான்
கண்ணுதலான் றன்கருணைக் கண்காட்ட வந்தெய்தி
எண்ணுதற் கெட்டா எழிலாக் கழலிறைஞ்சி
விண்ணிறைந்து மண்ணிறைந்து மிக்காய் விளங்கொளியா
யெண்ணிறைந் தெல்லை யிலாதானே நின்பெருஞ்சீர்
பொல்லா வினையேன் புகழுமா றொன்றறியேன்
புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லரசு ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லா அ நின்ற இத் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்
மெய்யேயுன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்
உய்யவென் னுள்ளத்துள் ஓங்கார மாய்நின்ற
மெய்யா விமலா விடைப்பாகா வேதங்கள்
ஐயா எனவோங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே
வெய்யாய் தணியாய் இயமானனாம் விமலா
பொய்யா யினவெல்லாம் போயகல வந்தருளி
மெஞ்ஞான மாகி மிளர்கின்ற மெய்ச்சுடரே
எஞ்ஞான மில்லாதேன் இன்பப் பெருமானே
அஞ்ஞானந் தன்னை யகல்விக்கும் நல்லறிவே
ஆக்கம் அளவிறுதி யில்லாய் அனைத்துலகும்
ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருள்தருவாய்
போக்குவாய் என்னைப் புகுவிப்பாய் நின்றொழும்பின்
நாற்றத்தின் நேரியாய் சேயாய் நணியானே
மாற்றம் மனங்கழிய நின்ற மறையோனே
கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தாற் போலச்
சிறந்தடியார் சிந்தனையுள் தேனூறி நின்று
பிறந்த பிறப்பறுக்கும் எங்கள் பெருமான்
நிறங்களோ ரைந்துடையாய் விண்ணோர்கள் ஏத்த
மறைந்திருந்தாய் எம்பெருமான் வல்வினையேன் தன்னை
மறைந்திட மூடிய மாய விருளை
அறம்பாவ மென்னும் அருங்கயிற்றாற் கட்டிப்
புறத்தோல் போர்த்தெங்கும் புழு அழுக்கு மூடி
மலஞ்சோரும் ஒன்பது வாயிற் குடிலை
மலங்கப் புலனைந்தும்வஞ்சனையைச் செய்ய
விலங்கு மனத்தால் விமலா வுனக்குக்
கலந்த அன்பாகிக் கசிந்துள் ளுருகும்
நலந்தான் இலாத சிறியேற்கு நல்கி
நிலந்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காஅட்டி
நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்குத்
தாயிற் சிறந்த தயாவான தத்துவனே

மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே
தேசனே தேனா ரமுதே சிவபுரனே
பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனே
நேச அருள்புரிந்து நெஞ்சில் வஞ்சங்கெடப்
பேராது நின்ற பெருங்கருணைப் பேராறே
ஆரா வமுதே யளவிலாப் பெம்மானே
ஓராதார் உள்ளத் தொளிக்கும் ஒளியானே
நீராய் உருக்கிஎன் ஆருயிராய் நின்றானே
இன்பமும் துன்பமும் இல்லானே உள்ளானே
அன்பருக் கன்பனே யாவையுமாய் அல்லையுமாஞ்
சோதியனே துன்னிருளே தோன்றாப் பெருமையனே
ஆதியனே அந்தம் நடுவாகி அல்லானே
ஈர்த்தென்னை ஆட்கொண்ட எந்தை பெருமானே
கூர்த்தமெய் ஞானத்தாற் கொண்டுணர்வார் தங்கருத்தின்
நோக்கிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே
போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே
காக்கும்எம் காவலனே காண்பரிய பேரொளியே
ஆற்றின்ப வெள்ளமே யத்தாமிக் காய்நின்ற
தோற்றச் சுடரொளியாய்ச் சொல்லாத நுண்ணுணர்வாய்
மாற்றம் வையகத்தின் வெவ்வேறே வந்தறிவாந்
தேற்றனே தேற்றத் தெளிவேஎன் சிந்தனையுள்
ஊறான வுண்ணா ரமுதே யுடையானே
வேற்று விகார விடக்குடம்பி னுட்கிடப்ப
ஆற்றேனெம் ஐயா அரனேயோ என்றென்று
போற்றிப் புகழ்ந்திருந்து பொய்கெட்டு மெய்யானார்
மீட்டிங்கு வந்து வினைப்பிறவி சாராமே
கள்ளப் புலக்குரம்பைக் கட்டழிக்க வல்லானே
நள்ளிருளில் நட்டம் பயின்றாடும் நாதனே
தில்லையுட் கூத்தனே தென்பாண்டி நாட்டானே
அல்லற் பிறவி அறுப்பானே யோவென்று
சொல்லற் கரியானைச் சொல்லித் திருவடிக்கீழ்ச்
சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தி னுள்ளார் சிவனடிக்கீழ்ப்
பல்லோரும் ஏத்தப் பணிந்து.

*இந்தப் பனுவல் சமய மரபுவழி உரைக்கும், சித்தர் மரபு வழி உரைக்கும்விரிவான இடம் தந்து இரண்டு உரைகளுக்கும் இருவேறு இயல்பைத் தருவதாக அமைந்துள்ளது.*

*திருப்பெருந்துறை என்பது இன்று ஆவுடையார் கோவில் என வழங்கும் சிவத்தலம் என்பது சமயிகள் கூற்று. ஆனால் சித்தர் மரபோ என்றால், திருப்பெருந்துறை என்பது மனித உடலிலே உள்ள 'சகஸ்ரதளம்' என்கிறது. இவ்வாவறே சொற்களுக்கு உரிய பொருள் கோளில் மாறுபடுவதோடு கருத்தின் உட்கருத்தாக விளங்கும் பொருண்மையிலும் இரண்டும் வேறுபடுகின்றன. இந்த வேறுபாடுகளை விரிவாக காண்போம்.*

சிவபுராணம் என்ற இந்தக் கலிவெண்பா எழுந்த சூழ்நிலையை விளக்கும் மரபு உரை வருமாறு: இது தருமை ஆதீனத்துத் திருவாசக வெளியீட்டின்கண் காணப் பெறுகின்ற அறிமுக உரை.

"திருப்பெருந்துறையில் குருந்த மரத்தடியில் குருவடிவாக எழுந்தருளி, அருளாரமுதத்தை வழங்கிய சிவபெருமான், மாணிக்கவாசகப் பெருந்தகையாருக்கு அருட்கண் பாலித்து, 'சிதம்பரத்தில் ஆன்மாக்களுய்ய அனவரதமும் ஆனந்த தாண்டவம் புரிந்தருளுகின்றோம்; ஆண்டு வருக" என்று ஆணை தந்து மறைந்தருளினார். வாதவூரடிகள், திடுக்கிட்டுக் குருவின் திருமேனி காணும் இணையிலாப் போகத்தையும் இழந்தோமே என்று இரங்கி, அன்பரொடு மருவுதலாகிய சிவநெறியில் தலைநிற்பாராய், அடியார்கள் கூட்டத்தை அடைந்தார். அங்கு அடியார்களும் தாமுமாகக் குருந்த மரத்தடியில் தெய்வப் பீடிகை ஒன்று செய்து அதல் குருநாதனுடைய திருவடித் தாமரைகளை அமைத்து வணங்கி வந்தார். ஒருநாள் இவர் உள்ளத்து 'இறைவன் அடியடைந்தார் அன்பிலாதாராயிருப்பினும், பாடிப் பரவுவார்க்கு இரங்கியருள்புரிவன்' என்ற எண்ணம் திருவருள் விளக்கத்தால் உதயமாயிற்று. உடனே மங்கலச்சொல் யாவற்றிற்கும் தலையாயதும், தான் மங்கலமாதலேயன்றித் தன்னைச் செபிப்பார்க்கும் தியானிப்பார்க்கும் பெருமங்கலத்தைத் தரவல்லதும், வேதவிருக்ஷத்து வித்தாயுள்ளதும், ஞான சம்பந்தப் பெருந்தகையாரால், 'வேத நான்கினும் மெய்ப்பொருளாவ' தென்றும், 'செந்தழல் ஓம்பிய செம்மை வேதியர்க்கு அந்தியுள் மந்திர' மென்றும், திருநாவுக்கரசு சுவாமிகளால், 'கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும் நற்றுணையாவ' தென்றும், 'நாவினுக் கருங்கலம்' என்றும், 'நல்லக விளக்கு' என்றும் பாராட்டப் பெறுவதும், தூலம் சூக்குமம் அதிசூக்குமம் என்ற மூன்று முறைகளால் ஓதப் பெறுவதும் ஆகிய திருவைந்தெழுத்தை முதலாக வைத்து 'நமச்சிவாய வாழ்க' என இக் கலிவெண்பாவை அருளிச் செய்தார்".

மேற்கண்ட உரை சமய மரபு தோய்ந்த புராண முறையிலே உள்ள பின்னணியில் எழுந்த உரையாகும். ஆன்ம நோக்கிலே பார்க்கும் பெரியோர்கள், இந்தச் சிவபுராணம் எழுந்ததன் நுட்பத்தை வேறு விதமாக விளக்குகிறார்கள். சான்றாகச் சிவயோகிகள், குண்டலினியை அகஉடம்பின் உள்ளிருந்து மேலெழுப்புகிற ஆன்மக் கல்வியே நெஞ்சில் நீங்காத நாதன் தாள் என்று விளக்கம் கூறி, அத்தகைய சகஸ்ரதள ஆன்மக் கல்வியிலிருந்து இந்த நூல் எழுந்ததாகக் கூறுவர். இதை ஒட்டிச் சிவயோகியார் தருகிற முகப்பு வருவாறு:

"சிவபுராணம் என்றால் சிவத்தைப் பற்றிய பழங்கதை எனப் பொருள்படும். சிவம் பிறவாதது. தோற்றக் கேடுகள் அற்றது. தோற்றக் கேடுகளுள்ள சீவர்களுக்கும் சிவத்திற்கும்

> உள்ள தொடர்பையும், அத்தகைய தொடர்பை அறிவதில் உள்ள நன்மையையும், அறியாமையால் உள்ள தீமையையும் பற்றிச் சுருக்கமாக இத்தலைப்பில் கூறப்படுகிறது. ஆதலின் இத்தலைப்பு சிவபுராணம் என்று பெயர் பெற்றுள்ளது".

இனி, மூல நூலுக்கு வருவோம். இதற்குரிய உரைகளைக் கொண்டு சமயச் சார்புள்ள பண்டிதர்களின் விளக்கத்திற்கும் ஆன்மச் சார்புள்ள யோகிகளின் விளக்கத்திற்கும் எத்தனை வேறுபாடு உள்ளது என்பதை ஆயுவதானது, திருவாசகத்தில் உள்ள இந்த நான்கு பனுவல்களும் சித்தர் இலக்கியமாகவே ஞானிகளால் கருதப்படவதன் இயைபை நன்கு உணர்த்தும்.

நமச்சிவாய வாழ்க நாதன்றாள் வாழ்க

இந்த வரிக்குச் சைவ சமயிகள் சொல்லுகிற பொருள் தமிழ் உலகு நன்கு அறிந்த பொருளாகும். நமசிவாய என்பது திரு ஐந்தெழுத்து. இதனைத் தூலபஞ்சாக்கரம் என்பர். இதனை மீண்டும் மீண்டும் உச்சரிப்பதனால் இதுவே 'சிவாய நம' என்று ஆகிறது.

ஐந்தெழுத்தின் மகிமை குறித்துச் சைவ நூல்கள் மிக விரிவாக ஓதுகின்றன. சைவ சமயத்தில் தனிப் பெருங்கடவுளாகிய சிவனை 'நமசிவாய' வடிவத்தில் வணங்குவதே பக்தர்களின் அடிப்படைக் கல்வியாகும்.

சரியை, கிரியை வழியிலே சிவதீட்சை பெறுபவர்களுக்குச் சமய குருமார்கள் இந்த ஐந்தெழுத்தையே சொல் வடிவில் உபதேசம் செய்கிறார்கள், செவி வழியாக இந்தத் தீட்சை பெற்ற பின் சரியையிலே தோய்ந்த பக்தர்கள் இந்த ஐந்தெழுத்தை ஓதுகிற ஜப முறையை மேற்கொள்ளுகிறார்கள். அக்கமாலை அணிவதும், அதனைக் கையில் தாங்கி இந்த மந்திரத்தை உருவேற்றுவதும், சரியையிலும் கிரியையிலும் ஈடுபட்டார் செய்கின்ற பூசையின்பாற்படும். இதற்கு ஐந்தெழுத்து மந்திரத்தை ஓதுமுறை என்று சொல்லி அவருடைய பக்குவத்திற்கு ஏற்ற வகையிலே, இருக்கைகள் அல்லது ஆதனங்கள் கற்பித்துச் சமய குருமார்கள், சமய தீட்சை தருகிறார்கள். இந்த முறையிலே 'நமசிவாய வாழ்க' என்பதற்கும், நாதன் தாள் வாழ்க என்பதற்கும் இந்தச் சொற்களின் அடிப்படையிலேயே பொருள் கூறுகிறது சமய உலகம்.

இதனையே சித்தர் வழி நிற்பார் காணுகிறபோது முறை வேறு. எதனால் இது மாறுபடுகிறது என்றால் சரியை வழியில் நிற்பவர்கள், 'நமசிவாய'ப் பொருளான இறைவன் பற்பல சிவத்தலங்களில் அமர்ந்திருக்கிறான் என்று கண்டு, அந்தந்தத் தலங்களுக்கே சென்று, அவனை வணங்குவதன் வாயிலாக ஆன்மா கடைத்தேறுகிறது என்கிறார்கள். அவ்வாறு, அவனை வணங்குவதற்கு உரிய மந்திரம் 'நமசிவாய' என்று கொள்கிறார்கள். கிரியை வழியில் நிற்பவர்கள் சிவபெருமானை இந்தத் தலங்களிலே காணுவதோடு கூட, அவரவர் தம் இல்லங்களிலும், வேறு இடங்களிலும், சிவலிங்க வடிவத்தை வழி

படுகிற பூசனை முறையையும் மேற்கொள்கிறார்கள். இவர்களுக்கு உரிய மந்திரமும் இதே ஐந்தெழுத்தாகும்.

யோகநெறி பயில்வார்களோ என்றால் இறைவனைத் தங்கள் உடம்புக்குள்ளே கண்டு ஆன்ம லிங்கத்தை வழிபடுவதால் உயிர் கடைத்தேறுகிறது என்பார்கள்.

ஞானநெறி பயில்வார்களோ என்றால், இறைவன் அறிவின் உருவானவனானதால் ஆன்மா தனது சிற்றறிவை விட்டுச் சிவலிங்கமாகிய பேரறிவைப் பற்றவேண்டும் என்பார். ஆகையினால் சைவ சமயிகளுக்குரிய நமசிவாய என்ற மந்திரம் சம்பந்தப்பட்டவரை, இந்த நான்கு வழிச் செல்வோரும் நான்கு வகையான கருத்துடன் இந்த மந்திரத்தை அணுகுகிறார்கள். எனவே நாதன் தாள் என்பது அவரவர்களுடைய பக்குவத்திற்கு ஏற்ப வெவ்வேறு பொருள் பெறுகிறது.

இந்த அடிப்படை உண்மையை மனத்திற்கொண்டு பார்த்தால் கீழ்கண்ட திருமந்திரப் பாடலின் பொருள் - மெய்ப்பொருள் துலங்கும்.

இவனில்ல மல்ல தவனுக்கங் கில்லை
அவனுக்கும் வேறில்லம் உண்டா அறியின்
அவனுக் கிவனில்ல மென்றன் றறிந்தும்
அவனைப் புறம்பென் றரற்றுகின் றாரே.

ஐந்தெழுத்தை மனத்தில் வாங்கி, அதற்குரிய சிவபரம்பொருளை வணங்குகின்ற இந்த நான்கு வகையான வழிகளிலே எது சிறந்தது என்ற கேள்வியும் உடன் எழுகிறது. இந்த நான்கு வழியைப் பின்பற்றுவோரும் வீடுபேறு அடைகிறார்கள் என்ற ஆதார உண்மை உறுதியாக இருப்பினும், இக்கருத்தை ஒட்டி யோக முறையிலே ஈடுபட்டோர் மேற்கோள் சொல்லுகிற ஒரு பாடல் பிரபுலிங்க லீலையில் வருகிறது. அது;

உரைசெயிற் பரம ஞான மொன்றுமே முத்திக் கேது
சரியைநற் கிரியை யோகந் தாமொரு மூன்றும் ஞானம்
மருவுதற் கேது வென்றே மறைபுகன் றுரைக்கு மிந்தக்
கருவியைப் பொருளென் றெண்ணிக் களிப்பவர் கயவ ரன்றே.

இந்தச் சர்ச்சை இவ்வாறு இருக்க, இந்த வேறுபாடு எந்த அடிப்படையில் தோன்றுகிறது என்ற நுட்பத்தை உய்த்துக் காண வேண்டும்.

சமயிகள் சிவபெருமானைச் சிவலிங்க உருவிலே கண்டு அவனே ஐந்தெழுத்தாகிய ஒலிவடிவிலும் உள்ளான் என்பதை உணர்ந்து இந்த மந்திரத்தை ஓதுகிறார்கள். எனவே, இவர்களுடைய பார்வையும் அணுகுமுறையும் புற உலகின் பாற்பட்டவை. யோகியரும்

ஞானியருமோ என்றால் சிவலிங்கத்தையே இந்த ஐந்தெழுத்தின் ஒலி வடிவிலே கொண்டு, இந்த ஒலி அதிர்வினால் ஏற்படக்கூடிய அக உடலின் ஒளியிலே, சிவலிங்கத்தை ஆன்ம சோதியாகக் கண்டு வழிபடுகிறார்கள். இதுவே இந்த வேறுபாட்டுக்கு உரிய அடிப்படைக் காரணமாகும்.

இத்தகைய காரணங்களினாலேயே, கூத்தப்பெருமானுடைய நடனத்தின் ஒலி வடிவம் ஞானியர்களுடைய இலக்கணத்திலே எழுந்தது. ஐந்தெழுத்தின் வடிவமாகிய, சிவமூர்த்தி தனது கூத்தை இயற்றும்பொழுது, இந்த ஐந்து எழுத்துக்களும் எந்தெந்த உறுப்பிலே எவ்வாறு நின்று ஒலி செய்கின்றன என்பதனை, 'உண்மை விளக்கம்' நமக்கு எடுத்துக் காட்டுகிறது. அந்த வெண்பா இங்கே நினைவுகூரத் தக்கதாகும்.

ஐந்து எழுத்துக்களும் அவற்றுக்குரிய நிலைகளும் இந்த வெண்பாவிலே விளக்கம் பெறுகின்றன;

ஆடும் படிகேள்நல் லம்பலத்தான் ஐயனே
நாடுந் திருவடியி லேநகரம் - கூடும்
மகரம் உதரம் வளர்தோள் சிகரம்
பகர்முகம் வாமுடியப் பார்.

நமசிவாய மூர்த்தியைப் புறவடிவங்களிலே கண்டு வணங்குவார்க்கு, ஐந்தெழுத்தின் உச்சாடனம் மனம் குவிகிற மார்க்கமாகக் கைகொடுத்து உதவுகிறது. இது சித்தர்களின் மொழியிலே சொல்வதாக இருந்தால் 'பொறிவழிப் பூசனை' முறையாகும். ஞானிகள் இந்த வழியையும் மோட்ச சாதனங்கள் பலவற்றுள் ஒன்று என்று ஒப்புக் கொண்ட போதும், இறைவனைக் கண்ணாரக் கண்டு துய்ப்பதற்கு இதுவன்று வழி என்று உதறிப் பேசுகிறார்கள். சித்தர் இலக்கியம் கற்பிக்கிற ஆன்ம வழிபாடு ஒன்றே உடம்பிலிருந்தவாறே இறைவனைக் காணுகிற ஒரே வழி என்று, உறுதியோடு சித்தர்கள் பேசுகிறார்கள். அறிவதற்கு ஒண்ணாத பேரறி வாகிய இறைவனைப் புலன்வழி சென்று காண முயல்வது வீண் என்பது, சித்தர் கொள்கை. திருமூலரும் இதையே வற்புறுத்துகிறார்:

அறிவுரு ஞானத் தெவரும் அறியார்
பொறிவழி தேடிப் புலம்புகின் றார்கள்
நெறிமனை யுள்ளே நிலைபெற நோக்கில்
எறிமணி யுள்ளே இருக்கலு மாமே.

இந்த முறையிலே வழிபடுவார்க்கு ஐந்தெழுத்தானது, எறிமணியான நடராசச் சோதிப் பிழம்பாக, ஐந்தெழுத்தையும் அந்தந்த நிலையிலே ஒலி செய்துகொண்டு கூத்தாடுகிறது.

இனி, அடுத்த வரிக்கு வருவோம்:

இமைப்பொழுதும் என்னெஞ்சின் நீங்காதான் தாள்வாழ்க

இந்த வரிக்குப் பொருள் கூறுகிற சமயவாதிகள், இரவும் பகலும் இடைவிடாமல் என் நினைவிலே திருவடியைப் பதித்து நிற்கும்

எம்பெருமானுடைய திருவடிகள் வாழ்க, என்று பொருள் கூறுகிறார்கள். ஞான யோகியர்களோ, மறப்பு இருந்தால் அல்லவோ நினைப்புக்கு இடமுண்டு என்று கூறி, நினைப்பும் மறப்பும் அற்ற நிலையிலே அக உடலில் நிற்கின்ற திருவடிகள் என்று விளக்கம் கூறுவார்கள்.

சித்தர்கள் கூறுகிற இந்த ஆன்மப் பொருளுக்கு ஞானப்பயிற்சி மாணவர்களிடையே ஒரு விளக்கம் நிலவுகிறது. அதன்படி ஞானம் பயில்கிற மாணவன், ஈசான முகத்தை அறிந்துகொண்டால் அவனுடைய உள்ளம் இறைவனுடைய கோயிலாக மேம்படுகிறது என்பதாகும். சில சித்தர்கள் இதனையே சீவனைச் சிவனாக வழிபடுகிற முறை என்று அழைக்கிறார்கள். இதனையே சித்தர் இலக்கியம் சிவ வழிபாடு என்று கூறுகிறது.

ஞான வழிபாட்டிலே முன்னேறி நிற்கும் பெரியோர்களுக்கு, ஆன்ம வழிபாட்டுக்குரிய மூர்த்தி என்பது சதாசிவரின் மேல்நோக்கிய ஈசான முகமேயாகும். இது மின்னல் ஒளியின் வடிவம். இந்த ஒளி வடிவத்தை வணங்கும்போது, மின்னல் ஒளியுடன் கூடிய ஐங்கலை ஆற்றல்கள் எழுகின்றன. இவற்றை வடமொழியார் 'பஞ்சகலா சக்திகள்' என்று அழைப்பர். இந்த வழிபாடுதான் சித்தர்களின் ஐந்தெழுத்து வழிபாடு. இந்த வழிபாட்டிலேதான் இறைவனுடைய தாள் நெஞ்சத்திலே நீங்காது நிலைபெறுகிறது என்பது சித்தர்களுடைய கொள்கை.

ஈசான முகம் என்பது ஒளிவடிவமானது என்ற காரணத்தினால், ஒளிவழிபாடு இயற்றுகின்ற ஞானிகள், தங்கள் அகத்திலே இந்த ஒளியைக் காணுகின்ற நிலைபேறான காட்சியைப் பெற்று, அந்த ஆனந்தத்தை இமைப்பொழுதும் நீங்காத பேரின்பம் என்று, களிப்போடு கூறுகின்றார்கள்.

சரியையிலும் கிரியையிலும் ஈடுபட்டுள்ள பக்தர்கள், தங்களுடைய புறவழிபாட்டிற்குரிய கருவிக்ளிற் சில, தங்கள் உடலோடு ஒட்டிவிட்ட காரணத்தினாலும், தங்களுடைய சிவ சிந்தனை இடையீடின்று நிக்ழ்வதாலும், இறைவனுடைய தாள் தங்கள் நெஞ்சில் இருந்து இமைப்பொழுதும் நீங்குவதில்லை என்கிறார்கள்.

சிவபுராணத்தின் மூன்றாவது அடி வருமாறு;
கோகழி யாண்ட குருமணிதன் தாள்வாழ்க

திருப்பெருந்துறையிலே மாணிக்கவாசகரை ஆண்டுகொண்டு அருளிய குருமணியாகிய தெய்வத்திற்கு, இந்த வரி அஞ்சலி செலுத்துகிறது. என்பதே சமயிகளின் விளக்கமாகும். 'கோகழி' என்பது திருப்பெருந்துறைக்கு இன்னொரு பெயராகும்.

சிவயோகி இரத்தினசபாபதியாரும், வேறு சில யோகிகளும், திருப்பெருந்துறை என்பது சிரசிலுள்ள ஆயிரம் தாமரையாகிய சகஸ்ர தளம் என்று உட்பொருள் கூறுகிறார்கள்.

மேலே கண்ட பொருளுக்கு இசைய, 'கோகழி' என்ற சொல்லுக்க முதுகந்தண்டு என்று சில ஞானிகள் பொருள் சொல்லுகிறார்கள்.

குண்டலினி என்னும் ஞான ஆற்றலை, கீழிருந்து மேலே செல்லுவதற்குரிய முறையிலே எழுப்புகிற ஞானப் பயிற்சிக்கு, உறுதுணையாக நிற்பது 'வெர்ட்டிபிரல் காலம்' **(Vertebral Column)** என்னும் முதுகெலும்பே யாகும். இது மூங்கிற்கழி போன்று அமைந்தது. இதைத்தான் தண்டு என்றும், பேரறிவு அல்லது ஞானத்தண்டு என்றும், சித்தர் இலக்கியம் அழைக்கிறது. இதனை ஞானவழியிலே ஆள்கின்ற முறையில் ஆள்வதே, கையாள்வதே, ஆன்ம ஆற்றலை எழுப்புகிற பயிற்சியாகும். இந்தப் பயிற்சியானது நூல்களின் வாயிலாகப் பெறமுடியாத அரியதொரு அநுபவப் பயிற்சியாகும். குருநாதன் எதிரில் இருந்து சீடனின் உடம்பைத் தொட்டு, முதுகெலும்பின் கீழிருந்து மேல்நோக்கி அதனை உராய்ந்து, சிரசிலே கொண்டு அந்த ஆற்றலைச் சேர்ப்பிக்க வேண்டும். இது ஞானக் கல்வியின் அடிப்படைப் பாடம். இதுவே மூங்கிற்கழியை ஆளுகின்ற முறை என்றும், இதனைக் கற்பிக்கும் ஆசானே ஞானகுரு அல்லது குருமணி என்றும், சித்தர் இலக்கியம் இயம்புகின்றது. கழிகளில் எல்லாம் உயர்ந்த கழியாகிய மாட்சிமை தங்கிய கோகழியான முதுகந்தண்டை ஆண்டு அருளிய தமது ஞானகுருவாகிய இறைவனை, இந்த அடியிலே மாணிக்கவாசகர் வணங்குகிறார் என்பது சித்தர்கள் கூறுகிற பொருளாகும்.

சிவயோகியார் தமது சிவபுராண உரையிலே இந்த வரிக்குச் சொல்கிற மிக நீண்ட விளக்கத்திலிருந்து சில பகுதிகளை இங்கே ஒப்பு நோக்கலாம்:-

"கோ - அரசன்; கழி - கோல்; குருமணி - ஒளிவிட்டு நிற்பவன்.

தேகத்தின் அரசன் ஆன்மா. ஆன்மாவின் தலைவன் இறைவன். இறைவன் ஆன்மாக்களைச் செலுத்தும் கோல் என்பது, மூலாதாரத்தையும் சகஸ்ரதளத்தையும் இணைத்து நிற்கும் முதுகந் தண்டாகும். இந்த முதுகந் தண்டின் அடிப்பாகத்தில் மூலாதாரச் சக்கரம் உள்ளது. மேல் பாகத்தில் சகஸ்ரதளம் உள்ளது. இதில் இடகலை பிங்கலை சுழுமுனை என்ற மூன்று நாடிகளும் உள்ளன. அறியாமையில் உள்ள போது உயிர்களை இடாநாடி பிங்கலநாடி என்ற அவனது திருவடியால் சிவன் நடத்துகிறான். ஞானியானபோது இருநாடிகளின் தன்மையும் மாறிச் சுழுமுனை நாடி பிரகாசத்தை அடைகிறது. சுழுமுனைக்கு அடியில் மூலாதாரத்தில் உள்ளவர் ஈசானராகப் பிரகாசிக்கிறார். மூலாதாரத்தில் இருந்த ஈசானரை மணிவாசகர் ஆரூரன் என்று குறிப்பிட்டுள்ளார். திருமந்திரத்தில் 'அதோமுக தரிசனம்' என்ற தலைப்பில் திருமூலர் இதை விளக்கியுள்ளார். இந்த இரு பகுதியையும் அறிதல் நலமென இங்கு ஆரூர் விளக்கம் கூறுகிறேன்.

ஆர் கூர்மை ஆத்தி தேரின் அகத்துறு கதிரும் ஆகும்
- சூடாமணி நிகண்டு

அகத்துறு கதிர் என்பது சிவாதித்தனைக் குறிக்கும். சிவாதித்தனே தான் கீழ்த்துருவ நிலையில் அதோமுக சக்கரமான மூலாதாரத்தில் உருத்திர சோதியாக உள்ளார். அவரேதான் மேல் துருவத்தில் ஈசானானகிறார். மூலாதாரத்தில் அவர் சீவர்களுக்கு இன்பம் பெருக்கிக் காம வாழ்வளித்தவர் அவரே ஈசானராக வெளிப்படும் போது காமத்தை அழித்து ஞானத்தைக் கொடுப்பவர். அதனாலே ஈசான மூர்த்தியே காமேசுவரன் காமேசுவரியாக மூலாதாரத்தில் விளங்குபவர்.

மூலாதாரத்திலுள்ள காமேசுவரன் காமசுவரியைத் திருவாசகத்தில் ஆரூரன் என்ற பேரால் குறிப்பிடப்பட்டுள்ளது".

மேலே கண்ட சிவயோகியாரின் விளக்கத்தை ஒட்டி நாம் இங்கே கருத்தில் கொள்ளவேண்டிய ஞானச் செயலாவது, ஆரூரிலிருந்து திருப்பெருந்துறை செல்கிற வழி நடையே யாகும். ஆரூர் என்பது மூலாதாரம், திருப்பெருந்துறை என்பது சகஸ்ரதளம். எனவே சித்தர்களின் மொழியிலே ஆரூரிலிருந்து திருப்பெருந்துறைக்குச் செல்லும் வழி முதுகந்தண்டே யாகும். இது அகஉடலின் அகப்பயணமாகிய ஞானச் செலவு. இதைக் கற்பிக்கின்ற ஞானகுருவே இறைவன் என்பது சித்தர் வாக்கு. எல்லா உயிர்கட்கும், எல்லாச் சீவர்களுக்கும் சிவமே குரு. விஞ்ஞானகலர்களுக்கு அவர் காரணமாகவும் காரியமாகவும் அமைகிறார்.

இந்தக் குருநுட்ப உண்மையைத்தான் சிவஞானபோதம் பாடுகிறது. "அவனே தானே யாகிய வந்நெறி யேக னாகி யிறைபணி நிற்க; மலமாயை தன்னொடு வல்வினை யின்றே" என்று!

இனி, சிவபுராணத்தின் அடுத்த அடி வருமாறு:

ஆகம மாகிநின் றண்ணிப்பான் தாள் வாழ்க

இந்த வரிக்கு உரை சொல்லுகிற சமயிகள் ஆகம வடிவே நின்று உயிர்களுக்கு அருள்செய்பவனின் கழல் வாழ்க என்பர். ஆகமம் என்பது உயிர்களுக்கு மலநாசம் செய்து ஞானத்தை விளக்குவது என்று மரபுவழி உரை கூறுகிறது. அண்ணித்தல் என்றால் அணுகி அருள் வழங்குதல் என்ற பொருள் வெளிப்படை.

இனி, சித்தர் வழியிலே இதற்கு வழங்குகிற பொருள், ஆகமம் என்ற சொல்லுக்கு வெவ்வேறு வகையான விளக்கங்களைத் தருகின்றது. சான்றாக, ஆகமம் என்ற சொல்லை ஆ+கமம் என்று பிரித்தும்கூடப் பொருள் கூறப்பெறுகிறது. இந்த விரிவான சர்ச்சைகளுக்கு அவசியமில்லாத முறையிலே, வேலியாக நின்று என்னைக் காத்து அருள்பவன் என்று பொருள் கூறும் பெரியோர்களும் உண்டு. இந்தப் பொருளைக் கூறுவதற்காக ஆகமம் என்ற சொல்லை இரண்டு கூறாகப் பிரிக்க வேண்டிய அவசியம் இல்லை. குருவானவர் அருகிலேயே நின்று வழிகாட்டியாகவும், காத்துப்புரக்கும் திருவருளாகவும் துணைசெய்வதால் அவனை ஆகமமாகிய வழிகாட்டியாகவும், அண்மையில் நின்று அருளும் 'அண்ணிக்கும் துணை' யாகவும் பொருள் கொள்வதே சாலும்.

இனி, அடுத்த வரி வருமாறு:

ஏகன் அநேகன் இறைவனடி வாழ்க

இந்த வரி சிவபுராணத்தில் மிகவும் புகழ்பெற்ற அடியாகும். இதற்குச் சமயிகள் வழக்கம்போல் இறைவன் ஒருவனாகவும் பல தோற்றங்களிலும் காட்சி தருகிறான் என்று பொருள் கூறுவர். சித்தர்கள் கூறும் ஞானப் பொருளிலும் அதிக் வேறுபாடு இல்லை. விளக்கும் முறையிலே ஞானிகள் விரிவான சில உவமைகளை எடுத்தாள்கிறார்கள்.

கீதையிலும், உபநிடதத்திலும் வேறு பல நூல்களிலும் குடத்தில் தண்ணீர் பற்றியும், குடத்துத் தண்ணீரில் காணுகிற கதிரவன் நிழல் பற்றியும் பற்பல வடிவங்களிலே உவமைகள் கூறப் பெற்றுள்ளன. திருமூலரும் இந்த உவமையைக் கையாளுகிறார்.

சூரியன் வானத்திலே ஒருவனாக, ஏகனாக நம் கண்முன் தோன்றுகிறான். பல சிறிய குடங்களிலே தண்ணீர் ஏந்திச் சூரியன் எதிரில் வைக்கும்பொழுது, ஒவ்வொரு குடத்துத் தண்ணீரிலும் சூரியனைக் காணுகின்றோம். அப்போது சூரியன் ஒருவனாகவும், பலராகவும் நின்றவனாகின்றான். இறைவனுடைய தன்மையும் இதுவே. தான் அநாதியான மூலப்பொருளாய் ஏகனாய் நிற்கிறான். அதே சமயம் உயிர்களிடத்தும் அவன் உறைகிறான். இந்த உவமையை எடுத்துக்காட்டுகிற திருமூலர், குடத்திற்குள் சூரியன் அடங்கி விடுவதில்லை என்ற பேருண்மையையும் தமது திருமந்திரத்தில் அழுத்தம் கொடுத்துப் பாடுகிறார்.

கடங்கடந் தோறுங் கதிரவன் தோன்றில்
அடங்கிட மூடில் அவற்றில் அடங்கான்
விடங்கொண்ட கண்டனும் மேவிய காயத்
தடங்கிட நின்றதும் அப்பரி சாமே.

என்பது அத்திருமந்திரம்.

மட்குடத்துக்குள்ளே தோன்றுகின்ற சூரியன், பேருருவாகிய பெருஞ் சூரியனே அல்லன் என்பது ஒருபுறம் இருக்க, தண்ணீரில் நிழல் விடுகிற கதிரவன், குடத்துக்குள் நின்ற போதிலும் அதனுள் அடங்காது நிற்கிறான். அதோடுகூடக் குடத்துக்கு உள்ளும் புறமுமாக அவன் விளங்குகிறான். திருமூலருடைய திருமந்திரத்தின் உவமை இத்தனை பொருளோடு விரிகிறது என்பதை உய்த்துணரவேண்டும்.

இனி, சிவபுராணத்தின் அடுத்த அடிக்கு வருவோம்.

வேகங் கெடுத்தாண்ட வேந்தனடி வெல்க

இந்த வரிக்கு மரபைஒட்டிப் பொருள் கூறுகிற சிவ சமயிகள், வேகம் என்பதை, மனத்தின் ஐம்புலன் வழியே இயங்குகிற செயல்களின் வேகம் என்று பொருள் கூறுவர். இந்த வேகத்தைக் கெடுத்து ஆள்வது என்பது, "உலக இச்சைகளிலே ஈடுபட்டு உழல்கின்ற மனத்தை, அவற்றினின்று காப்பாற்றுவதன் பொருட்டு, அந்த மன

வேகங்களை கெடுத்து இறைவன் அருள்புரிகிறான்; இந்த அருளைச் செய்வது அவனுடைய கருணையே ஆகும்; அந்தக் க்ருணையின் சின்னமே திருவடி; வேகத்தைக் கெடுக்கின்ற இந்த அருட் செயலிலே, அந்தத் திருவடி வெற்றி பெறுமாக!" என்பது மரபுவழிப் பொருளாகும்.

இதற்கு உரை கூறுகிற ஞானியர்கள், வேகம் என்பதை மனத்தின் கீழ்நோக்கிச் செல்லும் விரைவு என்று பொருள் கொள்வர். காமமாதி மும்மலமும், அபக்குவிகளிடம் வேகத்தோடு தொழிற்படுவது கண்கூடு. இந்த வேகம் கெடுவதற்குரிய வழியே, மனமானது சிற்றம்பலமாகிய சிதாகாயப் பெருவெளியில் ஒன்றி நின்று, சிவ ஒளியிலே பூரிப்பதாகும். இப்படிப் பூரிக்கின்ற பக்குவனுக்கு, உள்ளமானது சிவத்தோடு பொருந்தித் துரியமாகிய உயர்களத்திலே இயங்குவதனால், மலவேகங்கள் கெட்டழிகின்றன. இந்த மலநீக்கத்திற்கு உறுதுணையாக அமைவது, உள்ளமாகிய பெருங்கோயிலிலே ஆன்ம வழிபாட்டின் முறையிலே யோகியர்கள் செய்கின்ற திருவடிப் பூசனையாகிய ஒளிவழிபாடு. திருவடியாகிய ஒளி, மும்மலமாகிய இருளை கெடுத்துப் பேரின்பப் பெருவாழ்வை நல்குகிறது. இதுவே வேகங் கெடுத்தாளும் திருவடியின் தொழில். இந்தத் தொழிலிலே அந்தத் திருவடி எத்துணைக்கு வெற்றி பெறுகிறதோ, அத்துணைக்கு ஞானக்கல்வி பயிலும் மாணவன் கடைத்தேறுகிறான். எனவே அந்தத் திருவடி வெல்க என்றார்.

இனி, அடுத்த வரி,

பிறப்பறுக்கும் பஞ்ஞகன்றன் பெய்கழல்கள் வெல்க

பிஞ்ஞகன் என்பதற்குத் தலைக்கோலத்தை உடையவன் என்பது சொற்பொருளாகும். பெய்கழல்கள் என்பதற்கு, அருளைப் பொழிகின்ற திருவடிகள் என்ற பொருளோடு மரபுவழி உரை அமைகிறது.

இந்த வரிக்கு உரை கூறுகிற சிவயோகியார் ஒரு நீண்ட விளக்கத்தை மேற்கோள்களுடன் கூறுகிறார். அது வருமாறு:

"பிஞ்ஞகம் - தலைக்கோளம்: பிஞ்ஞகன் - தலைக்கோலத்தை உடையவன். சீவர்களது சிரசின் மேலுள்ள சிதாகாயத்தில், தன்னை இருள் எனக் கண்டதே ஆன்மரூபம் என்று, சித்தாந்த சாத்திரம் கூறும். இந்த இருளை அகற்றச் சிவத்தின் ஒளி புகுவதை அருள் வீழ்ச்சி (சத்தி நிபாதம்) என்பர். இது யோகியின் சிரசை அழகு படுத்துவதாக உள்ளது. அதனால் சீவனின் பிறப்பறுகை அமைகிறது. அத்தகைய அருளைப் பெய்யும் பிஞ்ஞகனது திருவடி வெற்றி பெறுக.

இப்பொருளே ஞானதரி சனந்தான்என் றிங்கு
எக்கருவி யும் நீக்கி இலங்குயிரின் செயல்கள்
அப்பொருளன் யென்றேயா வையுங் கூ டாமல்
அவற்றை அகன் றவைவசமற் றவத்தையிற்கூ டாமல்

தப்பாமல் நெதிபண்ணத் தர்ப்பணத்தைத்
தான்விளங்க வருமொளிபோல் தலைப்படுமே ஞானம்
ஒப்பறவே இப்பொருளின் உறநிற்பை யாயின்
உன்செயலற் றொளிஞானம் உனைக்கவருங்காணே.
(தத்துவ பிரகாசம்)

*தேகத்தைச் சூழ உள்ள ஆகாய வெளியே சீவனது வடிவாகும். இது கோடிக்கணக்கான ஒளி அணுக்களால் ஆயது. இவ்வணுக்கள் இருளாயிருப்பது அஞ்ஞானம். ஒளியாய் மாறுவதே ஞானம். இவ்வொளியுள் சிவமுமுள்ளது.*

மேவிய சீவன் வடிவது சொல்லிடில்
கோவின் மயிரொன்று நூறுடன் கூறிட்டு
மேவிய கூறது ஆயிர மாயினால்
ஆவியின் கூறுநூ றாயிரத் தொன்றே -(திருமந்திரம்)

ஏனோர் பெருமைய னாயினும் எம்மிறை
ஊனே சிறுமையின் உட்கலந் தங்குளன்
வானோர் அறியு மளவல்லன் மாதேவன்
தானே யறியுந் தவத்தின் அளவே -(திருமந்திரம்)

*இனி, அடுத்த அடி வருமாறு:*

புறத்தார்க்குச் சேயோன்றன் பூங்கழல்கள் வெல்க —

*இந்த வரிக்குப் பொருள் சொல்லும் சைவர்கள், புறத்தார்க்கு என்ற சொல்லுக்குப் புறச்சமயிகள் என்று பொருள் சொல்கிறார்கள். சைவமில்லாத பிற சமயிகளுக்குச் சிவன் சேயோனாக நிற்கிறான் என்பது வெளிப்படை. இதுவே மரபுவழிப் பொருள். ஆனால் யோகியரும் ஞானியரும் கூறுகிற பொருள் வேறு.*

*யோகியர்கள் புறத்தார் என்பதற்குப் பொருள் கூறும்போது, புற உலகிலே சிவனை வழிபடுகிறவர்கள் என்று உரைக்கிறார்கள். அதாவது சரியையிலும் கிரியையிலும் தோய்ந்த பக்தர்கள் என்பது பொருள்.*

*சரியை என்கிற தொண்டு நெறியிலே ஈடுபடுகிற மக்கள், சிவன் அமர்ந்துள்ள பற்பல த்லங்களுக்குச் சென்று அவனை வழிபடுகிறார்கள். அவன் தங்களிடத்தே இருந்து நீண்ட தொலைவில் இருப்பதாக எண்ணி இத்தகைய தல யாத்திரைகளை இவர்கள் மேற்கொள்கிறார்கள். இவ்வகையிலே அவன் இவர்களுக்குத் தொலைவிலுள்ளவனாக, சேயோனாக விளங்குகிறான்.*

*கிரியை ஆகிய நன்மகவு நெறியிலே ஈடுபடுவோர்கள், எம்பெருமானுக்குப் பற்பல வடிவங்களைத் தந்து, பல்வகையான யந்திரங்கள் மந்திரங்கள், பூசனை முறைகள் கொண்டு வழிபாடு இயற்றுகிறார்கள். இவர்களுடைய சடங்குகளும் செய்முறைகளும் பற்பலவாக விரிவதால், இவர்களுக்கும் எம்பெருமான் சேயோனாகிறான்.*

இந்த இருவகையான பொருள்கோளும் யோகியரும் ஞானியரும் விளக்குகிற முறையாகும்.

யோகியர்கள் இறைவனைச் சேய்மையாயிருக்கும் பொருளாகக் கருதாமல், உள்ளமாகிய பெருங்கோயிலிலே அமர்த்துவதால் அவன் அவர்களுக்கு அணியன் ஆகிறான். அவர்கள் கையாளுகிற யோகப் பயிற்சி முறைகளும், சேய்மைக்கண் சென்று நிகழ்த்துபவையாக இல்லாமல், அவரவர் உடம்புக்குள்ளேயே நிகழ்கின்றனவாக அமைவது இங்கே சிந்தித்தற்கு உரியது.

ஞானியர்கள் ஆன்ம வழிபாட்டிலோ என்றால், சீவனே சிவலிங்கமாக அமைவதோடல்லாமல், அவர்களுடைய தவம் முழுவதும், அறிவுக்கு அறிவான பேரறிவை அறிவுகொண்டு அருவ நிலையிலே இயற்றுகின்ற வழிபாடாகும். எனவே இங்கே பரம்பொருள் அண்மையிலும் அண்மையாகி விடுகிறது.

இந்த விளக்கத்தை மனத்திற்கொண்டு, சித்தர்களின் நோக்கிலே சேய்மையையும் அண்மையையும் பார்த்தோமானால், கீழ்க்கண்ட திருமந்திரப் பாடல் இனிது விளங்கும்:

காஹுறு கோடி கடிகமழ் சந்தனம்
வானுற மாமல ரிட்டு வணங்கினும்
ஊனினை நீக்கி உணர்பவர்க் கல்லது
தேனமர் பூங்கழல் சேரவொண் ணாதே.

இனி, சிவபுராணத்தின் அடுத்த வரிக்கு வருவோம்.

கரங்குவிவா ருண்மகிழுங் கோன்கழல்கள் வெல்க

இந்த வரிக்குப் பொருள் கொள்ளுகிற சமயவாதிகள், இரண்டு கைகளையும் குவித்து வணங்குகிற முறையைக் கூறுகிறார்கள். யோகியரும் ஞானியரும், கரம் என்பதை நாடிக்கும் மூச்சுக்குமாகக் கொண்டு, யோகப் பயிற்சியையும் ஞானப் பயிற்சியையும் விளக்குகிறார்கள்.

இனி, அடுத்த வரி.

சிரங்குவிவா ரோங்குவிக்குஞ் சீரோன் கழல்வெல்க

சரியை கிரியை வழிகளிலே செல்வோர் சிரங்குவித்தல் என்பதற்கு, வழிபாட்டு முறையிலே உள்ள தலைவணக்கத்தைக் குறிப்பிடுகிறார்கள். யோகஞானப் பயிற்சிகளிலே ஈடுபடுவோரோ என்றால், சிவன்கண் உள்ள உயர்மண்டலத்திலே உள்ளம் ஒடுங்குதலாகிய மெய்வழிபாடு என்கிறார்கள்.

அருவ வழிபாட்டை இந்த வரிக்குப் பொருளாகக் கொள்ளுகிற பெரியோர்கள், சிரங்குவிதல் என்பதற்குச் சிந்தனையால் வழிபடுதல் என்று பொருள்கொண்டு, சிந்தனையால் தன்னை வழிபடுகின்ற தீவிரதரர்களுக்குச் சிவபெருமான், வருகையை ஒலியால் உணர்த்துகின்றான் என்று பொருள் கூறுகிறார்கள். இங்ஙனம் பொருள் கூறுவ

தற்குத் துணையாக சீர் என்ற சொல்லுக்கு ஒலி என்னும் பொருள் இருப்பதைச் சான்று கூறுவர். "சீரோன்" என்பதற்கு ஒலிக்குத் தலைவன் என்று பொருள்கொண்டு, இச்சொல் சதாசிவனைக் குறிப்பதாகச் சிவயோகியார் பொருள் கொள்கிறார். சப்தம் ஆகாய பூதத்தின் இயல்பாகலின், ஒலிக்குத் தலைவன் என்பதை நாதத்தின் அதிபதியாக சதாசிவன் என்பது, ஞானியர் சொல்லும் உரையாகும். 'சத்தத்தினுள்ளே சதாசிவம் காட்டி' ஏற்கனவே விநாயகர் அகவலில் நாம் பார்த்திருக்கிறோம். ஆன்ம வழிபாடு இயற்றும் சித்தர்களின் பூசனை முறையிலே, பரம்பொருளின் வரவு ஒலியோடு நிகழ்கிறது. இதனைச் சிவனுடைய கழல்களின் சிலம் பொலி என்று சித்தர் இலக்கியம் பேசுகிறது.

இனி, அடுத்த வரிக்கு வருவோம்.

ஈசனடி போற்றி எந்தை யடிபோற்றி

மரபுவழிச் சமயிகள் இந்த வரிக்குப் பொருள் கொள்ளும் பொழுது, ஈசனாகிய எந்தை என்று விளக்குவர். சித்தர்கள் ஈசன் எந்தையாவது புறப்பொருள் அகப்பொருளாகிற பரிணாம நிலையிலே என்பர்.

இனி, அடுத்த வரி,

தேசனடி போற்றி சிவன்சே வடிபோற்றி

தேசன் என்பதற்கு, ஒளி உள்ளவன் என்று பொருள் கூறுகிறது சமய உலகம், ஞானிகள் கூறுகிற விளக்கம், தேசன் என்பது பொதுத் தன்மையையும், சிவன் என்பது தனித்தன்மையையும் குறிப்பதாக வருகிறது.

உயிரினுடைய ஒளியானது நிலைபெறுவதற்காக, பரம்பொருள் ஒளி உயிர்கள் தோறும் கலந்துள்ளது. உயிரின் இருளைப் போக்கி, அதனை ஒளிமயமாக்குவது இந்தப் பொருளாகிய பேரொளியே ஆகும். அப்போது அந்தப் பொது ஒளியைத் தனி ஒளியாக வணங்கிப் போற்றுகிறோம். இதுவே இரண்டு பிரிவாகத் தேசனடி என்றும், சிவன் சேவடி என்றும் இரண்டாகப் பிரித்துக் கூறப்பட்டுள்ளது. அகண்டத்தில் பேரொளியாக விளங்குகிற பரம்பொருளே, உடம்புக்குள் உயிரொளியாகச் செயற்படுகிறது என்பது குறிப்பாகும்.

இனி, அடுத்த வரி.

நேயத்தே நின்ற நிமல னடிபோற்றி

பக்தர்கள் தங்கள் அன்புக்கும் வழிபாட்டிற்கும் உரிய மாசமற்ற இறைவனை இந்த வரி விளக்குவதாகப் பொருள் கூறுவர். ஞானியர்கள் இதே பொருளைக் கொண்டபோதிலும், ஒரு சிறு மாறுபாடு கூறுவர். அன்பினால் தோய்ந்து நம் அகத்திலே வதிந்த போதிலும், சிவனை மாசுகள் தீண்டுவதில்லை. அவன் நிமலனே! இதுவே ஞானச் செம்பொருள் ஆகும்.

திருவள்ளுவர் தம்முடைய அரிய குறல் ஒன்றிலே,

அன்போ டியைந்த வழக்கென்ப ஆருயிர்க்கு
என்போ டியைந்த தொடர்பு

என்கிறார்.

எலும்புக் கூட்டுக்குள்ளே உயிர் புகுந்த வரலாறு அன்பின் வரலாறாகும். பிணம் மனிதனாகுவது இந்த அன்பின் இயக்கத்தினால்தான். உயிர் உடலோடு பொருந்துவது, இந்த அன்பின் பிணைப்பேயாகும். பேருயிராகிய பரம்பொருள். உயிருக்குயிராகப் புகுந்து தொழிற்படுவதும் இதே அன்பின் இயக்கம்தான். இதுதான் 'நேயத்தே நின்ற நிமலன்' நிலையாகும்.

இனி, அடுத்த வரி.

மாயப் பிறப்பறுக்கும் மன்ன னடிபோற்றி

பிறவித் துன்பங்களைக் கடப்பதற்கு எம்பெருமானுடைய திருவடிகளே துணை என்பதே இந்த வரிக்குரிய சமயப் பொருள். இதற்கு யோகியர் கூறுகிற பொருள் "சிவ ஒளி கண்டு அதில் நிலை பெற்றவர்க்குத் தத்துவங்களின் செயல் விடுபடும்" என்பதாகும்.

இனி,

சீரார் பெருந்துறைநந் தேவ னடிபோற்றி

மரபுவழிப் பொருள் வெளிப்படையானது. திருப்பெருந்துறையில் எழுந்தருளியுள்ள எம்பெருமானை வணங்குகிறேன் என்ற அளவில் இந்தப் பொருள் அமைகிறது.

இதற்குச் சிவயோகி இரத்தினசபாபதியார் பல சித்தர்களின் தத்துவங்களை உள்ளடக்கிய முறையிலே மிக நீண்டதொரு விளக்கம் தருகிறார். திருப்பெருந்துறை என்பது மனித உடம்பிலுள்ள 'சகஸ்ரதளம்' என யோகியர் பொருள் கொள்வதால், இந்த நீண்ட விளக்கத்தைக் கீழே தருகிறேன். அது வருமாறு:

"சீர் - ஒலி; ஆர் - அகத்தில் உள்ள ஒளி. நாத மயமாகவும் தூல சூக்கும தேகங்களுக்கு ஒளியாகவும் விளங்கும், சிரசில் உள்ள சகஸ்ரதளத்தில் - உறையும் ஒளிவடிவான நம்முடைய சிவத்தின் திருவடியைப் போற்றுகின்றேன்.

விளக்கம் ஆத்ம தத்துவம் 24 - ம் தேகத்துடன் முடிவுறும். வித்தியா தத்துவம் ஒளியுடன் முடிவுறும். சிவதத்துவம் சமாதியுடன் முடிவுறும். அதனால் 36 தத்துவங்களும் பெருந்துறைச் சிவனிடம் லயமடையும்.

இக்கருத்தை நன்கறிந்துகொள்ளச் சித்தாந்த சாரம் என்ற ஒரு நூல் இங்கு ஆதாரமாகக் கீழே தரப்பட்டுள்ளது. சிவத்தைப் பெற சிவமுயற்சி வேண்டும். சிவமுயற்சி பூர்த்தியாகச் சிவத்தின் அருள் வேண்டும். இந்த இருநிலைகளும் அமையச் சைவ சமயம் பல

படிகளைக் கண்டு விளக்கியுள்ளது. இந்த நுட்ப விசாரணை சரியை கிரியை, யோக முயற்சிகளில் உள்ளவர்க்குத் தேவைப்படாத விஷயம். அவர்களுக்கு எடுத்துக் கூறினாலும் அறிந்துகொள்ளும் மனப்பக்குவமும் இல்லாதவர் ஆவர்.

1. பூதப்பழிப்பு
2. பொறியற நின்றுணர்தல்
3. அந்தக்கரண சுத்தி
4. கலாதிஞான நிராகரணம்
5. சுத்த தத்துவ தூடணம்
6. பிராணவாயு நீக்கம்
7. தத்துவ ரூபம்
8. தத்துவ தரிசனம்
9. தத்துவ சுத்தி
10. கேவலம்
11. கேவல தரிசனம்
12. கேவலாதீதம்
13. ஆன்ம ரூபம்
14. ஆன்ம தரிசனம்
15. ஞான தரிசனம்
16. ஞானாதீதம்
17. பரை தரிசனம்
18. பரை யோகம்
19. பரை போகம்
20. பரையில் அதீதம்
21. சிவ தரிசனம்
22. சாக்கிராதீதம்

**சுத்தாவத்தை**

23. சுகரூபம்
24. சுகாதீதம்
25. சிவப்பேறு
26. ஆன்ம சுத்தி
27. பரமானந்த தரிசனம்
28. பரமானந்த யோகம்
29. பரமானந்த போகம்
30. ஆன்ம லாபம், ஆனந்த மேலீடு

திருப்பெருந்துறை விஷயத்தை உணர்ந்துகொள்வதற்குச் சில பகுதிகள் கீழே கொடுக்கப்படுகின்றன.

என்றும் அருள் ஆன்மாவை நடத்தல் கேளாய்
இந்திரியங் களையும் அந்தக்கரணங்கள் தமையும்
நின்றறிய உயிருணர்த்த அறிந்து உடனாய் நிற்கும்
நெறிபோல வுயிர்ப்போதம் அறிவிக்க வறிதல்
அன்றியே சிவபோத மூடனாய்நின்ற உணர்தல்
ஆதலால் அருளன்றி நமக்கோர்செய லிலையாம்
இன்றளவும் நமதுதொழில் என்றதெல்லாம் அருளே
என்றுருகி அவ்வருளைப் பிரியாமல் இருநீ.

அறிவுபற்றி நீ யிருந்தால் விடியற் காலத்
தருணவுதயம் போலஅரவு கதிர்வி ழுங்கில்
பிறியுமா வொளிபோல மெல்ல மெல்லப்
பெருகுங்காண் மனக்கவலை அற்றுக் காண.

வுறுதிரோ தாயிமறைத் துனக்குக் காட்டும்
ஒளிஞானம் தரிசனமாம் அசபைவிந்து ஞானம்
பெறுமாதாரங்கள் பிராசாத வேதாக மங்கள்
பின்யோகத்தால் ஒளிகள் பெறின் பிறப்பாய் விடுமே.
உலவிய ஞானாதீதம் சிவஞா னத்தின்
உள்ளொ டுங்கிஅதன் வசமாய் உன்விவகாரம்
பலவுமற இருத்தலாம் பரைதரி சனங்கேள்
பகர்ஞானம் மிகுந்தத னுட்புக்க வொளியெங்கும்
நிலவியே பொதுவாக நிறைந்துசெழுங் கதிரோன்
நீடொளிஉச் சிக்காலத்து எங்குநிரந் தரமாய்க்
குலவுதல் போல்புரை யறநின்றி டுதலாகும்
கூறியஇப் பரைவியாத்தம் புகலக் கேளே.
சாற்றுபரை திரோதைமுதல் அனேகம் அருவுருவாஞ்
சத்திகளாய்ச் சிவனுக்கு வடிவமாகிக் கரணம
தேற்றுகுணம் இந்திரியத் தொழிலக ளாகிச்
சேர்ந்தாங்கோ பாங்கமாகி யிருப்பிடமாய்ப்
போற்றரிய சரீரிக் கிவ்வுலகமாய் அளிக்கும்
பொருளாகிப் பீடலிங்க மாதல்பரை வியாத்தம்
மாற்றரிய பரையில் உரையாது நெகிழாமல்
வசமாகத் தனைமறைய நிற்றல் பரையோகம்.
கண்டயோகப் பயனும் விளைந்த மணியோசை
கடலோசை யாழோசை செயகண்டி யோசை
வண்டோசை மதயானை பிளிறோசை நாத
வகையோசை கொம்போசை வந்து தோன்றில்
உண்டான பரையோகம்; பரையில் அதீதந்தான்
ஓசையெல்லாம் அழியஅதில் உருகியிருப் பதுவாம்
மண்டுசிவ தரிசனம்இக் கேடுபடா விமல
வளரொளிக்குள் ஒளியாகச் சிவத்தைக் காண்பதுவே.

இந்தத் தத்துவத்தை உலகினர் அறிந்து உய்யவே திருப்பெருந்துறை நிறுவப்பட்டுள்ளது. இதற்கு அத்தல விளக்கம் அறிதல் நலம் எனக் கருதி விளக்குகின்றேன். தலவிருக்ஷம் குருந்தமரம், குருந்து என்றால் காட்டு எலுமிச்சை, காட்டு நாரத்தை, குருந்து, குழந்தை என்ற பொருள்கள் உள்ளன. முதுகந்தண்டின் மேல் கோடிக்கு முகுளம் என்று பெயர். அதைப் பிடரிக்கண் என்று கூறுவர். அங்கிருந்தே அறிவுருவாக ஆன்மா ஐம்புலனறிவையும் அறிந்து கொள்ளுகிறது. இது குருத்து போன்ற பிரதேசத்தில் இருப்பதை உணர்த்த அந்தப் பெயருடைய ஒரு மரத்தைத் தலவிருக்ஷமாக்கி உள்ளனர்.

உருவம் பற்றாத அறிவொளியினால் வழிபாடு செய்யவேண்டும் என்றே சிவ பீடமும் சத்தி பீடமும் அமைத்துளனர். எவ்வித உருவமும் அங்கு வைக்கவில்லை. ஆகாயத்தினிடம் ஒரு சூக்கும ஓசை இயல்பாக உண்டு. கைலாயம் சென்றுவந்தவர்கள் அங்கு ஒரு மெல்லிய நாதம் இருப்பதைக் கூறுகின்றனர். மாணிக்கவாசகர்,

பொலிதரு புலியூர்ப் புக்கினி தருளினன்
ஒலிதரு கைலையுயர் கிழவோனே -(கீர்த்தித் திருவகவல்)

என்று பாடியுள்ளார்.

ஒளிவடிவமான சுழுமுனை நாடியிலே ஒலிக்கின்ற அடையாளமான சங்கொலி அல்லாமல், மற்ற வாத்திய ஓசைகள் ஒன்றும் திருப்பெருந்துறையில் கிடையாது. பரவெளியில் உமை காண நடிப்பதாக அவ்வூர்ப் புராணமும் கூறுகின்றது.

அண்டபிண்டம் என்று உலகத்திலே இரண்டு பொருள்கள் உண்டு. இவை இரண்டிலும் தத்துவங்கள் சமமாக விளங்கும். அண்டமாகிய இந்த உடம்பிலே, மூலாதாரத்திலிருந்து எழுந்த சுழுமுனை நாடி நிறைந்து மின்னல்போலப் பிரகாசிக்கிற ஒளியாகி, அந்த ஒளியிலே திருவைந்தெழுத்துக்களால் உணர்த்தப்படும் ஐந்துவகை ஒளிகளுள் ஒன்றிலொன்று அடங்குமுறையாலே முடிவிலே ஒன்றாக நிற்கக் குழலோசையாக நிற்கின்ற அவ்வோசை, தானும் அடங்கி நின்ற இடம் எதுவோ, அதுவே இறைவன் திருநடனம் செய்யும் சிதம்பரம் என்ற ஆகாயக் குறிப்புத் தலமாகும். அதுபோலவே திருப்பெருந்துறையும் ஆகாயக் குறிப்புத் தலமாகும். சிதம்பரம் உருவத்தால் உணர்த்தப்பட்டது.. இது உருவமற்று உணர்த்தப்பட்டுள்ளது. யோகம் என்ற சொல் சேர்க்கை என்ற பொருளையுடையது. இங்க சீவனும் சிவனும் சேருவதை யோகமாக்கப்பட்டது. சீவன் சிற்றொளியுடன் கூடியது. இறைவன் பேரொளி. இரண்டும் ஒன்றாவதில் சிவயோகம்.அவ்வொளி அணுக்களும் சிந்தனையால் அகண்டமும் அண்டமும் உரசுவதால் இந்த நாதம் இயல்பாக உண்டாகிறது. மற்ற ஓசை செய்கையினால் அமைவது பற்றி அதற்கு அநாகதம் என்று பெயர் வைத்துள்ளனர். ஆகதம் என்றால் அடித்தல். அன்+ஆகதம் = அடிக்காமல் எழுப்பும் ஓசை என்று பொருள். மனிதனின் தூல உடலில் ஒரு ஓசை இயல்பாக இருப்பதை அநாகதம் என்று புறநிலையில் உள்ளவர் கொண்டனர். யோகிகள், ஆகாயத்தினிடம் ஒரு நுண்ணோசை உள்ளது என்ற அறிவதில், ஆகாயபூத நாயகரான சதாசிவரை அறியலாம் என்று, தியானத்தில் நாதத்தை கண்டனர். இதுவேதான் தியானயோகம். இது எவ்வித மூச்சுப் பயிற்சியும் இல்லாதது என்பதை அறியவும். தியானம் என்ற தலைப்பில் திருமந்திரத்தில் உருவாய சத்தித் தியானம் என்றும், உருவமற்ற அருவத் தியானத்திற்குக் குரு மண்டலத்தியானம் என்றும் விளக்கியுள்ளார். இதை "பரத்தியான முன்னூல் குருவார் சிவத்தியானம் யோகத்தின் கூறே" என்றார்.

கண்ணாக்கு மூக்குச் செவிஞானக் கூட்டத்துட்
பண்ணாக்கி நின்ற பழம்பொருள் ஒன்றுண்டு
அண்ணாக்கின் உள்ளே அகண்ட ஒளிகாயட்டிப்
புண்ணாக்கி நம்மைப் பிழைப்பித்த வாறே.

ஒண்ணா நயனத்தில் உற்ற ஒளிதன்னைக்
கண்ணாரப் பார்த்துக் கலந்தங் கிருந்திடில்
விண்ணாறு வந்த வெளிகண் டிடவோடிப்
பண்ணாமல் நின்றது பார்க்கலு மாமே.

எண்ணாயிரத் தாண்டு யோகம் இருக்கினும்
கண்ணார் அமுதினைக் கண்டறி வாரில்லை
உள்நாடி உள்ளே ஒளிபெற நோக்கினாற்
கண்ணாடி போலக் கலந்துநின் றானே.

நாட்டம் இரண்டும் நடுமூக்கில் வைத்திடில்
வாட்டமும் இல்லை மனைக்கும் அழிவில்லை
ஓட்டமும் இல்லை உணர்வில்லை தானில்லை
தேட்டமும் இல்லை சிவனவ னாமே.

மணிகடல் யானை வார்குழல் மேகம்
அணிவண்டு தும்பி வுளையே ரிகையாழ்
தணிந்தெழு நாதங்கள் தாமிவை பத்தும்
பணிந்தவர்க் கல்லது பார்க்கவொண் ணாதே.

கடலொடு மேகங் களிறொடும் ஓசை
அடவெழும் வீணை அண்டரண் டத்துச்
சுடர்மன்னு வேணுச் சுரிசங்கின் ஓசை
திடமறி யோகிக்கல் லாற்றெரி யாதே.

இந்த நாதம் உண்டாவதற்கு நீண்ட காலச் சாதகம்தான் காரணம். காணாத திருவுருவுக்குத் திருவடி ஏது என்பர். அவனது ஒளிக்கிரணமும் அணுக்களின் உரசலில் உண்டாகும் நாதமும்தான் அவனது திருவடிகள். அத்தகைய ஒளியும் நாதமும்தான் காணப்படும் உலகத்தைப் படைப்பதும், கருதப்படும் சிந்தனையில் வெளிப்படுவதுமாகும். இந்தப் பூசை முறையை அறிவதில் உண்மை ஞானம் உள்ளது. திருமூலர் குருபூசை என்ற தலைப்புக் கொடுத்து விளக்கியுள்ளார்.

ஆகின்ற நந்தி யடித்தா மரை பற்றிப்
போகின் றுபதேசம் பூசிக்கும் பூசையும்
ஆகின்ற ஆதார மாறா றதனின்மேற்
போகின்ற பொற்பையும் போற்றுவன் யானே.

கானுறு கோடி கடிகமழ் சந்தனம்
வானுறு மாமல ரிட்டு வணங்கினும்
ஊனினை நீக்கி யுணர்பவர்க் கல்லது
தேனமர் பூங்குழல் சேர வொண்ணாதே.

மேவிய ஞானத்தின் மிக்கிடின் மெய்ப்பரன்
ஆவியின் ஞானநெறி நிற்றல் அருச்சனை
ஓவற வுட்பூச னைசெய்யில் உத்தமஞ்
சேவடி சேரல் செயலறல் தானே.

உச்சிருங் காலையும் மாலையும் ஈசனை
நச்சுமின் நச்சி நமவென்று நாமத்தை
விச்சுமின் விச்சி விரிசுடர் மூன்றினும்
நச்சுமின் பேர்நந்தி நாயக னாமே.

புண்ணிய மண்டலம் பூசைநூ றாகுமாம்
பண்ணிய மேனியும் பத்துநூ றாகமாம்
எண்ணிலிக் கையமிடிற் கோடி யாகிமாற்
பண்ணிடில் ஞானியன் பார்க்கில் விசேடமே

இந்துவும் பானுவும் இலங்குந் தலத்திடை
வந்தித்த தெல்லாம் அசுரர்க்கு வாரியாம்
இந்துவும் பானுவும் இலங்காத் தலத்திடை
வந்தித்தல் நந்திக்கு மாபூசை யாமே.

இந்துவும் பானுவு மென்றெழு கின்றதோர்
விந்துவும் நாதமு மாகிமீதா னத்தே
சிந்தனை சாக்கிரா தீதத்தே சென்றிட்டு
நந்தியைப் பூசிக்க நற்பூசை யாமே.

மனபவ னங்களை மூலத்தான் மாற்றி
அனித வுடற்பூத மாக்கி யகற்றிப்
புனிதன் அருள் தன்னிற் புக்கிருந் தின்பத்
தனியுறு பூசை சதாசிவற் காமே.

பகலும் இரவும் பயில்கின்ற பூசை
இயல்புடை யீசர்க் கிணைமல ராகப்
பகலும் இரவும் பயிலாத பூசை
சகலுமுந் தான்கொள்வன் தாழ்சடை யோனே.

இராப்பகல் அற்ற இடத்தே யிருந்து
பராக் கறஆனந்தத் தேறல் பருகி
இராப்பக லற்ற இறையடி யின்பத்
திராப்பகல் மாயை இரண்டிடத் தேனே.

*மூலாதாரத்தில் ஒளிகாணும்போது திருவாரூர் என்றும், இருதயத்தில் ஒளிகாணும்போது சிதம்பரம் என்றும், சிரசில் ஒளி காணும்போது திருப்பெருந்துறை என்றும் உருவகிக்கப்பட்டுள்ளது. இவை மூன்றும் உண்மையில் ஞானகுருவினிடம் சீடன் பெறும் மூன்று தீக்கையின் பரிபாஷைப் பெயராகும். இருதயம் சூரியன் ஒளியைக் கொண்டது. மூலாதாரம் அக்கினி கண்ட ஒளியையுடையது. சிரசு சந்திர கண்ட ஒளியையுடையது. இவ்வொளியே சிரசைக் கடந்தும் விளங்குவது. இவ்வறிவே சாக்கிராதீதம் சென்று மேல் உள்ள நிலைகளை அறிய உதவுவது. சித்தாந்தம் உணர்த்தும் 21 நிலை சிவதரிசனம் என்பதை இங்கு அறிந்துகொள்ளவும், நம்தேவன் என்ற சிவம் உலகில் வாழும் சகல மக்களுக்கும் உரிமையுடையவராவர்.*

எல்லோரும் இறைஞ்சு தில்லை
அம்பலத்தே கண்டேனே -*(கண்ட பத்து, திருவாசகம்)*

*இவ்வாறு நீண்ட விளக்கம் கூறி மூலதாரம் என்றும் திருவாரூரையும், இதயம் என்றும் சிதம்பரத்தையும், சிரசு என்னும் திருப்*

பெருந்துறையையும் சித்தர்களின் தத்துவ முறையிலே ஞான நுட்பத்தோடு எத்துக் காட்டுகிறார் சிவயோகியார்.

இனி, சிவபுராணத்தின் அடுத்த அடிக்கு வருவோம்.

ஆராத இன்பம் அருளுமலை போற்றி

இந்த வரிக்கு எல்லையில்லாத இன்பம் தருகின்ற மலைபோன்ற எம்பெருமான் என்பதே மரபுப்பொருள். ஞானிகள் ஆராத அமுதம் என்பதற்குப் பருப்பொருள் இணைப்பு இல்லாத, நினைத்த உடனேயே பொங்கிப் பெருகுகிற அமுத உணர்வு என்று பொருள் கூறுகிறார்கள். கண்ணுக்குப் புலப்படும் பொருள்களில் மிகப் பெரியதாக உள்ள மலையை எல்லையற்ற பரம்பொருளுக்கு உருவ நிலையிலே ஓர் உவமையாகக் கூறுகிற தமிழ்மரபை ஒட்டி 'மலை' என்ற ஆட்சி இங்கு வந்திருக்கின்றது. இனி, இந்தச் சிவபுராணத்தின் ஆக்கச் செயலிலே விளைகிற அகஉணர்வுகளைச் சொல்லி நூலைத் தொடங்க முனைகிறார்.

சிவனவனென் சிந்தையுள் நின்ற அதனால்
அவனரு ளாலே அவன்றாள் வணங்கிச்
சிந்தை மகிழச் சிவபுரா ணந்தன்னை
முந்தை வினைமுழுதும் ஓய உரைப்பனியான்

இந்த வரிகளுக்கு மரபுவழி உரையிலும் ஞானியர் உரையிலும் அதிக வேறுபாடு காணப்படவில்லை. 'அவன் அருளால் அவன் தாள் வணங்குதல்' என்ற வரிக்குச் சமயிகள் கடவுளிடம் பக்தி கொள்வதற்கும் அவனுடைய திருவருளே தூண்டவேண்டியிருக்கிறது என்பர். குண்டலினியின் நாதனாக விளங்குபவன் சிவனே ஆதலாலும், சிவதத்துவம் ஓங்கி நிற்பதற்கு இந்தக் குண்டலினியே சிரசை அடைய வேண்டியிருப்பதாலும், 'அவனருளாலே அவன் தாள் வணங்குதல்' அமைகிறது என்கிறார்கள் ஞானிகள்.

கண்ணுதலான் தன்கருணைக் கண்காட்ட வந்தெய்தி
எண்ணுதற் கெட்டா எழிலாற் கழலிறைஞ்சி
விண்ணிறைந்து மண்ணிறைந்து மிக்காய் விளங்கொளியாய்
எண்ணிறந் தெல்லை யிலாதானே நின்பெருஞ்சீர்
பொல்லா வினையேன் புகழுமா றொன்றறியேன்

இந்த வரிகளின் பொருள் வெளிப்படையே. ஞானிகள் மட்டும் விண், மண் என்ற சொற்களுக்குச் சிறப்புப் பொருள் கூறுகிறார்கள். நம்முடைய தலைக்கு மேல் உள்ள நுண்வெளியிலும், தலைக்குக் கீழுள்ள உடம்பிலும் ஒரே ஒளியாய் விளங்குபவன் என்று பொருள் கூறுகிறார்கள். மண் என்றது பருவுடலையும் விண் என்றது நுண் உடலையும் குறிப்பிடுவதாகவும் சித்தர் மரபு கூறுகிறது.

இனி, மேலுள்ள வரிகள் உயிர் இனத்தின் வரலாற்றைக் கூறத் தொடங்குகின்றன.

புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லரசு ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றவித் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்
மெய்யேயுன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்.

இந்த வரிகளின் பொருளுக்குள் புகுவதற்கு முன்பு, தமிழ் மக்களின் ஆழ்ந்து அகன்ற விஞ்ஞான அறிவை நாம் இங்கே நினைவு படுத்திக்கொள்ளல் அவசியமாகும்.

நிற்பனவும் நடப்பனவுமாகிய உயிரினங்களைப் பகுத்தறிவு கொண்டு விஞ்ஞான முறையிலே நன்கு ஆராய்ந்து கண்டவர்கள் தமிழர்கள். இன்றைய அறிவியலில் தாவர இயல், பறவை இயல், விலங்கியல், மனித இயல் என்று பற்பல பெயர்களிலே ஆங்கில நூல்களிலிருந்து கிடைக்கிற அறிவை நாம் குறிப்பிடுகிறோம். ஆனால், சித்தர் இலக்கியத்தின் பல துறைகளையும் பார்க்கும்பொழுது, இன்று நாம் கூறுகிற இத்தனை இயல்களிலும் நம் முன்னோர்கள் எத்துணை வல்லவர்களாக இருந்திருக்கிறார்கள் என்பது நம்மைப் பெருவியப்பில் ஆழ்த்துகிறது.

இந்த அறிவியல் கல்வியை நன்கு தேர்ந்த தமிழர்கள் இதையும் தாண்டிய உள இயலையும், உயிரியலையும், ஆன்ம இயலையும் எத்துணை ஆழ்ந்து கற்றுத் தேர்ந்துள்ளார்கள் என்பது மேலும் நம்மை மாபெரும் வியப்பில் ஆழ்த்துகிறது.

பரிணாம தத்துவம் என்று நாம் அழைக்கிற இவல்யூஷன் **(Evolution)** என்னும் ஆய்விலே சித்தர் இலக்கியம் தனிப்பெரும் இடம் வகிக்கிறது என்றால் புகழ்ச்சியில்லை.

சித்தர் இலக்கியத்தில் காணுகின்ற இத்தனை அறிவியலும் பொதுமக்களினமான தமிழ்ச் சமுதாயத்தில் பரவி வேரூன்றி, அதுவே நமது மொழியிலும், அன்றாடத் தமிழ் வழக்கிலும், நம்முடைய தமிழ் இலக்கணத்திலும் நிலைத்து நிற்கிறது.

உயிரின் பாகுபாடு சொல்கிற தொல்காப்பியம் மொழி இலக்கணமா, அல்லது அறிவியலைக் கூறும் விஞ்ஞான இலக்கியமா என்று நாம் வியக்கும் வகையிலே சூத்திரம் வகுக்கிறது. உயிர்களின் பாகுபாடு கீழ்கண்டவாறு தொல்காப்பியரால் வரையறை செய்யப்பெறுகிறது.

ஒன்றறி வதுவே உற்றறி வதுவே
இண்டறி வதுவே அதனொடு நாவே
மூன்றறி வதுவே அவற்றொடு மூக்கே
நான்கறி வதுவே அவற்றொடு கண்ணே
ஐந்தறி வதுவே அவற்றொடு செவியே
ஆறறி வதுவே அவற்றொடு மனனே
நேரிதன் உணர்ந்தோர் நெறிப்படுத் தினரே

உயிர்களின் வளர்ச்சி நிலையிலே அறிவு என்ற நுகர்ச்சி பொதுவானது. ஆனால், அது புகுகின்ற வாயில் அந்தந்த உயிருக்கு ஒன்றிலிருந்து ஆறுவரை விரிகிறது. எல்லாம் அறிவுதான். ஆனால், அந்த அறிவு உட்புகும் வாயில் மனிதனுக்கு ஐந்தும் ஒன்றுமாக ஆறாகிறது. தொட்டு அறிதல், சுவைத்து அறிதல், மணந்து அறிதல், கண்டு அறிதல், கேட்டு அறிதல் என்ற ஐம்புல அறிவுக்கும், ஐந்து வாசல்கள் உள்ளன. இவை புல்லிலிருந்து விலங்கு வரை உள்ள உயிர்களுக்கு உரிய வாயில்கள். மனிதனுக்கு அறிவை அறிவினால் அறியக்கூடிய ஒரு வாசல் இருக்கிறது. இது கண்ணுக்குப் புலப்படாத நுண்ணிய வாசல். மற்ற ஐந்தும் பருவுடலின் வாயில்கள். இந்த ஆறாவது வாயில் நுண் உடலின் நுட்பமான வாயில்.

தாவரங்கள் உற்றறிகின்ற வாயிலை மட்டும் கொண்டவை. அவை தொட்டறிவு என்கின்ற பரிசத்தினாலேயே ஐம்புல அறிவையும் துய்க்கின்றன. தொட்டால் சிலிர்த்தல், தண்ணீரைப் பருகுதல், உரத்தை உண்ணுதல், சைபர்நெட்டிக்ஸ் (Cybernetics) என்கிற அடையாள உணர்வு, இசைகேட்டுச் செழிக்கும் செவியுணர்வு, இத்தனைக்கும் தனித்தனியே புலன்கள் தாவரத்திற்கு இல்லாமல் உற்றறிவு ஒன்றன் துணைகொண்டே இத்தனையையும் அவை துய்க்கின்றன. பரிணாம வளர்ச்சியிலே இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து என்ற விரிவடைகின்ற அறிவுகள் அனைத்தும் இவ்வாறு ஒரு புலனை, ஒன்றுக்கு மேற்பட்ட புலன் நுகர்ச்சிக்குப் பயன்படுத்துகிற பான்மை கொண்டவை. சான்றாக, கண்ணும் செவியும் ஒன்றாய் இருப்பதால் பாம்பைக் கட்செவி என்கிறோம். இவ்வாறுதான் மற்றைய உயிர்களும். மனிதன் ஒருவனுக்கே விலங்குகளைப் போல ஐந்து பொறிகள் தனித்தனியே உள்ளதோடு, நுண் உணர்வுகளை நுண் உடலிலே துய்க்கக்கூடிய ஆறாவது வாயிலும் அமைந்துள்ளது. இந்த உண்மையை மனத்திற்கொண்டு தொல்காப்பியர் கூறுகிற பாகுபாட்டையும், மேற்கண்ட சூத்திரத்தையும் இனி வருகிற இப்பாகுபாட்டின் விரிவுச் சூத்திரங்களையும் நாம் காணவேண்டும்.

### அவற்றுள் ஓரறிவுடையன

புல்லும் மரனும் ஓரறி வினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே

### ஈரறிவுடையன

நந்தும் முரளும் ஈரறி வினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே

### மூவறிவுடையன

சிதலும் எறும்பும் மூவறி வினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே

**நாலறிவுடையன**

நண்டும் தும்பியும் நான்கறி வினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே

**ஐயறிவுடையன**

மாவும் மாக்களும் ஐயறி வினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே

**ஆறறிவுடையன**

மக்கள் தாமே ஆறறி வுயிரே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே

இந்தச் சூத்திரங்களின் நுட்பம் என்னவென்றால், மனிதப் பிறப்புக்கு மட்டுமே ஆறாவது என்று எண்ணப்படுகிற மற்றொரு நுகர்ச்சி உள்ளது. ஐந்து புலன் அறிவுக்கும் மனம் இல்லாமல் முடியாது. தொட்டு அறிவது என்றாலும், தொடுவதை அறிவதற்கு மனம் வேண்டுமல்லவா! அவ்வாறே சுவையை அறிகின்ற உயிருக்கும் மனம் இல்லாவிட்டால் அந்தச் சுவையை எது அறிகிறது? மற்ற ஐம்புலனுக்கும் இதுவே பொருந்தும். ஆனால், நம் முன்னோர்கள், புலன் நுகர்ச்சியை அறிகின்ற ஆற்றலை மனம் என்று அழைக்கவில்லை. மனத்திற்கு உள்ளம் என்ற ஒரு சிறப்பைத் தந்து, ஐம்புல அறிவையும் தாண்டிய மற்றொரு நுண்ணிய அறிவையும் உணர்கின்ற ஆற்றல் பெற்ற ஆறாவது அறிவையே மனம் என்று அழைத்தார்கள்.

சித்தர்கள் மொழி வழக்கிலே மனம் என்பதற்குப் பற்பல பொருளமைதி இருப்பதால் ஏற்படும் குழப்பத்தை உணர்ந்த நிலையிலே, மனித மனத்தை, முக்கியமாக ஆறாவது அறிவைக் குறிப்பிடும் போதெல்லாம் அகஉணர்வு என்றும், உள்ளறிவு என்றும், தன்உணர்வு என்றும் அழைத்து, இந்த ஆற்றல்கள் அனைத்தும் அடங்கிய பேராற்றலை உள்ளம் என்றும் தங்கள் இலக்கியத்திலே பேசினார்கள். எனவே, அறிவு, ஐந்தறிவு, ஆறறிவு என்பதையும் மனம் என்ற சொல்லையும் ஒன்று சேர்த்துக் குழப்ப வேண்டியதில்லை. ஐம்புலன்கள் வாயிலாக அறிகிற அறிவு புல்லிலிருந்து விலங்குவரை எல்லா உயிர்களுக்கும் பொதுவானதே. ஆனால், ஐம்புலனுடைய உதவியும் இன்றி, இந்த ஐம்புலக் கதவுகளையும் தாழிட்டுவிட்டு, தனக்குள்ளே அறிகின்ற ஓரறிவு மனிதனுக்கே அவனுடைய பரிணாம வளர்ச்சியில் அமைந்திருப்பதால், அந்த ஆறாவது அறிவுக்கே மனம் என்ற சிறப்புப் பெயர் பொருந்தும். இந்த ஆற்றல் மனிதனுக்கே உரிய ஆற்றலாக இருப்பதனால்தான்,

ஐந்துபே ரறிவும் கண்களே கொள்ள

என்று சேக்கிழார் பெருமான் பாடியவாறு, ஐம்புல அறிவையும் ஒரே புலனின் வாயிலாகத் துய்க்கும் ஆற்றலும், ஐந்து புலனுமே இன்றி, ஆறாவதாகிய ஒரு நுண்புலன் வாயிலாக ஐந்தையும், ஐந்துக்கு

உயிர்களின் வளர்ச்சி நிலையிலே அறிவு என்ற நுகர்ச்சி பொதுவானது. ஆனால், அது புகுகின்ற வாயில் அந்தந்த உயிருக்கு ஒன்றிலிருந்து ஆறுவரை விரிகிறது. எல்லாம் அறிவுதான். ஆனால், அந்த அறிவு உட்புகும் வாயில் மனிதனுக்கு ஐந்தும் ஒன்றுமாக ஆறாகிறது. தொட்டு அறிதல், சுவைத்து அறிதல், மணந்து அறிதல், கண்டு அறிதல், கேட்டு அறிதல் என்ற ஐம்புல அறிவுக்கும், ஐந்து வாசல்கள் உள்ளன. இவை புல்லிலிருந்து விலங்கு வரை உள்ள உயிர்களுக்கு உரிய வாயில்கள். மனிதனுக்கு அறிவை அறிவினால் அறியக்கூடிய ஒரு வாசல் இருக்கிறது. இது கண்ணுக்குப் புலப்படாத நுண்ணிய வாசல். மற்ற ஐந்தும் பருவுடலின் வாயில்கள். இந்த ஆறாவது வாயில் நுண் உடலின் நுட்பமான வாயில்.

தாவரங்கள் உற்றறிகின்ற வாயிலை மட்டும் கொண்டவை. அவை தொட்டறிவு என்கின்ற பரிசத்தினாலேயே ஐம்புல அறிவையும் துய்க்கின்றன. தொட்டால் சிலிர்த்தல், தண்ணீரைப் பருகுதல், உரத்தை உண்ணுதல், சைபர்நெட்டிக்ஸ் (Cybernetics) என்கிற அடையாள உணர்வு, இசைகேட்டுச் செழிக்கும் செவியுணர்வு, இத்தனைக்கும் தனித்தனியே புலன்கள் தாவரத்திற்கு இல்லாமல் உற்றறிவு ஒன்றன் துணைகொண்டே இத்தனையையும் அவை துய்க்கின்றன. பரிணாம வளர்ச்சியிலே இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து என்ற விரிவடைகின்ற அறிவுகள் அனைத்தும் இவ்வாறு ஒரு புலனை, ஒன்றுக்கு மேற்பட்ட புலன் நுகர்ச்சிக்குப் பயன்படுத்துகிற பான்மை கொண்டவை. சான்றாக, கண்ணும் செவியும் ஒன்றாய் இருப்பதால் பாம்பைக் கட்செவி என்கிறோம். இவ்வாறுதான் மற்றைய உயிர்களும். மனிதன் ஒருவனுக்கே விலங்குகளைப் போல ஐந்து பொறிகள் தனித்தனியே உள்ளதோடு, நுண் உணர்வுகளை நுண் உடலிலே துய்க்கக்கூடிய ஆறாவது வாயிலும் அமைந்துள்ளது. இந்த உண்மையை மனத்திற்கொண்டு தொல்காப்பியர் கூறுகிற பாகுபாட்டையும், மேற்கண்ட சூத்திரத்தையும் இனி வருகிற இப்பாகுபாட்டின் விரிவுச் சூத்திரங்களையும் நாம் காணவேண்டும்.

### அவற்றுள் ஓரறிவுடையன

புல்லும் மரனும் ஓரறி வினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே

### ஈரறிவுடையன

நந்தும் முரளும் ஈரறி வினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே

### மூவறிவுடையன

சிதலும் எறும்பும் மூவறி வினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே

**நாலறிவுடையன**

நண்டும் தும்பியும் நான்கறி வினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே

**ஐயறிவுடையன**

மாவும் மாக்களும் ஐயறி வினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே

**ஆறறிவுடையன**

மக்கள் தாமே ஆறறி வுயிரே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே

இந்தச் சூத்திரங்களின் நுட்பம் என்னவென்றால், மனிதப் பிறப்புக்கு மட்டுமே ஆறாவது என்று எண்ணப்படுகிற மற்றொரு நுகர்ச்சி உள்ளது. ஐந்து புலன் அறிவுக்கும் மனம் இல்லாமல் முடியாது. தொட்டு அறிவது என்றாலும், தொடுவதை அறிவதற்கு மனம் வேண்டுமல்லவா! அவ்வாறே சுவையை அறிகின்ற உயிருக்கும் மனம் இல்லாவிட்டால் அந்தச் சுவையை எது அறிகிறது? மற்ற ஐம்புலனுக்கும் இதுவே பொருந்தும். ஆனால், நம் முன்னோர்கள், புலன் நுகர்ச்சியை அறிகின்ற ஆற்றலை மனம் என்று அழைக்கவில்லை. மனத்திற்கு உள்ளம் என்ற ஒரு சிறப்பைத் தந்து, ஐம்புல அறிவையும் தாண்டிய மற்றொரு நுண்ணிய அறிவையும் உணர்கின்ற ஆற்றல் பெற்ற ஆறாவது அறிவையே மனம் என்று அழைத்தார்கள்.

சித்தர்கள் மொழி வழக்கிலே மனம் என்பதற்குப் பற்பல பொருளமைதி இருப்பதால் ஏற்படும் குழப்பத்தை உணர்ந்த நிலையிலே, மனித மனத்தை, முக்கியமாக ஆறாவது அறிவைக் குறிப்பிடும் போதெல்லாம் அகஉணர்வு என்றும், உள்ளறிவு என்றும், தன்உணர்வு என்றும் அழைத்து, இந்த ஆற்றல்கள் அனைத்தும் அடங்கிய பேராற்றலை உள்ளம் என்றும் தங்கள் இலக்கியத்திலே பேசினார்கள். எனவே, அறிவு, ஐந்தறிவு, ஆறறிவு என்பதையும் மனம் என்ற சொல்லையும் ஒன்று சேர்த்துக் குழப்ப வேண்டியதில்லை. ஐம்புலன்கள் வாயிலாக அறிகிற அறிவு புல்லிலிருந்து விலங்குவரை எல்லா உயிர்களுக்கும் பொதுவானதே. ஆனால், ஐம்புலனுடைய உதவியும் இன்றி, இந்த ஐம்புலக் கதவுகளையும் தாழிட்டுவிட்டு, தனக்குள்ளே அறிகின்ற ஓரறிவு மனிதனுக்கே அவனுடைய பரிணாம வளர்ச்சியில் அமைந்திருப்பதால், அந்த ஆறாவது அறிவுக்கே மனம் என்ற சிறப்புப் பெயர் பொருந்தும். இந்த ஆற்றல் மனிதனுக்கே உரிய ஆற்றலாக இருப்பதனால்தான்,

ஐந்துபே ரறிவும் கண்களே கொள்ள

என்று சேக்கிழார் பெருமான் பாடியவாறு, ஐம்புல அறிவையும் ஒரே புலனின் வாயிலாகத் துய்க்கும் ஆற்றலும், ஐந்து புலனுமே இன்றி, ஆறாவதாகிய ஒரு நுண்புலன் வாயிலாக ஐந்தையும், ஐந்துக்கு

அப்பாலையும் அறிந்துகொள்ளுகிற பேரறிவையும் மனித மனமாகிய உள்ளம் பெற்றுள்ளது. இந்த ஒரு காரணம் பற்றியே மனம் என்ற சொல்லின் அடியாகப் பிறந்த மனிதன் என்ற சொல் எழுந்தது. இப்படிப்பட்ட பேராற்றலுக்கு உரிய இடமாகிய மனித மனத்தை, விலங்குகளைப் போன்று ஐம்புல அறிவின்பாற்பட்ட புலன் நுகர்ச்சிகளிலேயே வீணாக்குவது மடைமை என்று, மீண்டும் மீண்டும் சித்தர் இலக்கியம் வற்புறுத்துகிறது. இது காரணம் பற்றியே, புல்லிலிருந்து விலங்குவரை நாம் எடுக்கும் பிறவி வீணாகிறது என்று ஞானிகள் பாடுகிறார்கள். அதனால்தான் திருமூலர் குறிப்பிடுகிற,

கண்ணின்றிக் காண்பதும்
செவியின்றிக் கேட்பதும்

ஆகிய ஞான அனுபவங்களை நோக்கிச் சித்தர் இலக்கியம் மனித குலத்தை அழைக்கிறது. மாணிக்கவாசகருக்கும் தமக்கு ஞான உணர்வைத்தந்த பரம்பொருளைப் பாடுகிற சிவபுரணாத்திலே, தம்முடைய முற்பிறவிகளின் வரலாற்றையும் நினைவுகூர்ந்து, அந்த துயரங்களிலிருந்து தம்மை ஈடேற்றிய குருநாதனை ஆனந்த பரவசத்தோடு வணங்கித் துதிக்கிறார். அந்தத் துதியையே மேற்கண்ட ஏழு வரிகளும் கவியழகோடு இயம்புகின்றன.

நுட்பம் என்னவென்றால் மனிதப்பிறவி ஒன்றே பிறவியிலிருந்து உய்வதற்குரிய பிறவியாகும். இதற்குக் காரணம் அறிவின் விரிவும் சிறப்புமே. எல்லா வகையான உயிரினங்களிலும் அறிவின் ஆற்றல் ஒன்று போல் இல்லை. எல்லா உயிர்களிலும் மேலானவாகக் கருதப்படும் மனிதன் தனது ஆற்றலை உணர்ந்து, பேரறிவுப் பொருளான சிவத்துடன் ஒன்றுபட வேண்டும். இதையே அடுத்து வரும் வரிகளிலே சிவபுராணம் தொடர்கிறது.

உய்யஎன் னுள்ளத்துள் ஓங்கார மாய்நின்ற
மெய்யா விமலா விடைப்பாகா வேதங்கள்
ஐயா எனவோங்கி யாழ்ந்தகன்ற நுண்ணியனே
வெய்யாய் தணியாய் இயமான னாம்விமலா
பொய்ய யினவெல்லாம் போயகல வந்தருளி
மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்சுடரே

இந்த வரிகளுக்கு மரபு வழியிலே சொல்லப்படுகிற பொருள் ஓங்காரத்திற்கு ஆதி ஒலி என்று கூறுகிறது. அதாவது ஒலிகட்கு முதலாய் எங்கும் நிறைந்திருக்கும் ஓசை என்கிறது. அதோடு, 'வெய்யாய் தணியாய் இயமானனாம்' என்ற வரிக்கு எட்டு உருவங்களுள் 'சூரியன், சந்திரன், இயமானன்' என்ற மூன்றையும் கூறியவாறு என்று தருமையாதீனப் பதிப்பு மரபு வழியிலே பொருள் கூறுகிறது.

சித்தர் வழியிலே இந்த வரிகளுக்குரிய பொருள் நீளமும் விரிவும் கொண்டதாகும். சிவயோகியாருடைய இந்தத் தத்துவ விளக்கத்திலிருந்து சில பகுதிகள் இங்கே உய்த்துக் காண்பதற்கு உரியனவாம். அவை வருமாறு:

"இந்த மேலே கண்ட வாக்கியங்களின் உண்மை அறிந்தவர் திருவாசகத்தைப் படித்து அநுபவம் அறிவர். அல்லாதவர் சொல்நயம் கொண்டு மகிழ்வதுதான் நடைபெறக் கூடும். இந்த உண்மையை வாய்ஞானம் பேசுபவர் யாரும் பிறர்க்கு உணர்த்த முடியாது. திருவாசகத்தின் முதலும் முடிவும் இதை அறிவதில் தானுள்ளது.

நாபிக்குக் கீழ் உள்ள பன்னிரண்டு விரற்கடைப் பிரதேசத்தில் ஓங்காரம் உள்ளது. இதுவே உயிரைக் காப்பாற்றும் நல்ல ஓரெழுத்து. பாவிகள் அதன் பயனைப் பெற்று அனுபவிக்குமாறில்லை. ஆனால், இந்த உண்மையை மிக மேதாவியானாலும் அறிந்துகொள்ள முடியாது. அந்த ஓங்காரம் உள்ள நிலையிலே சிவமும் சக்தியும் உள்ளது.

இதை அறிந்து சாதனம் செய்தால் இம்மந்திரகதி கீழ்மேல் பக்கம் என்று எல்லாத் திசைகளிலும் பரவி, மேல்முகங் கொண்டு செல்லும். இது ஹம்ச என்ற உயிரால் குறிக்கப்படும் மந்திரம்.

பிரணவம் மேலே சென்றால் ஆகாயத்தில் உருவங்கடந்த சிதாகாயத்தில் நாதம் உதிக்கும். அந்த நாதத்தினூடே விந்து மண்டலமும் விளங்கும். அகரகலை என்ற சோமகலை, விந்து மண்டலத்தில் விளங்கும். இவ்விதம் சென்று சென்று மோதுதில் பிரணவம் வளர்ச்சியை அடையும்.

இவைகளுக்கு மேல் மாயாதத்துவம், சுத்த வித்தியா தத்துவம், மகேஸ்வர தத்துவம், சதாசிவ தத்துவம் என்றவைகளைச் சேர்க்கப் பத்து ஆதாரங்களாகி விடும். இவைகளைத் துரியகண்டம் என்று கூறுவர். இவ்வகையாகப் பத்து ஆதாரங்களையும் சேர்ப்பதற்கு மகாவேதா என்று பெயர்.

பிரணவம் என்பது ஆறு ஆதாரத்திற்கு உரிய ஆறு எழுத்துக்களும் ஒன்றாவதில் உள்ளது. ஆறெழுத்து ஆகக் கொள்ளாது, ஓரெழுத்தையே கொண்டு, சாதனம் செய்வாருக்கு அவர்களுடைய உயிரை நிலைநிறுத்திக் கொள்ளலாம்.

பிரணவ உச்சாடணத்தினால் அதன் தொடர்பான பதினைந்து எழுத்துக்களும் அமைகின்றன. அந்தப் பிரணவ உறுப்பான அகரமே ஐம்பத்தோரக்கர மாயிற்று. பிரணவத்தில் விந்து நிலையில் பதின்மூன்று நிலைகள் உள்ளன. நாதவெழுத்தாகிய மகாரத் தொனியால் இவைகளைக் கண்டறிந்து கொள்ளவும்.

தேகத்திற்கு உரிய சகல அறிவும் இடை பிங்கலை சுழுமுனை இவைகளை மூலமாகக் கொண்டுள்ளது. இயல்பாக நடுநாடி யாவருக்கும் சிறந்து தொழிற்படுவதில்லை. அதைச் சிறப்புறும் முறையில் தொழிற்படுத்தி, சிரசில் சேரச் செய்வதால் அமையும் விந்துநாதமாகிய திருவடிகளை நல்லோர் பொருந்தி நிற்பர்.

பரம்பொருளைத் தரிசிப்பதென்றால் நாம் கண்டு கேட்டு அறிந்தனவற்றை ஆதாரமாகக் கொண்டு நம்மனோர் கற்பனையில் உருவான ஒரு தோற்றத்தையோ, ரூபமற்ற அருவத்தையோ தரிசிப்

பதோ, உணர்வதோ அன்று. தரிசிப்பதென்றால் ஞானக்கண் கொண்டு பார்ப்பதும், அதனால் அமையும் ஒரு ஆத்மானுபவமும் வேண்டும். அது அகண்டமாய், ஏகமாய், சர்வ வியாபியாய், சர்வாந்தரியாமியாய் அனைத்திற்கும் ஆதாரமும் ஆதேயமுமாய், நாமரூப பேதங்களற்றதாய், குணங் கடந்ததாய், நித்தியமாய், நிரந்தரமாய், உயிர்த்துடிப்புடையதாய், இடைவிடாது ஓமெனும் இன்பப் பரவச இன்னொலியுடன் கூடியதாய், வித்தில் மரம்போன்று சத்து சித்து ஆனந்த உணர்வுகளைத் தன்னகத்தே அடக்கிக் கொண்டுள்ளதாய் உள்ள ஒரு உணர்வுப் பொருளை, நிலையான சத்துப் பொருளைக் கண்கூடாகக் காண்பது, நிதர்சனமாக உணர்வது - அதுவே தான் என உணர்த்த ஆனந்த பரவச நிலையில் என்றுமாய்த் தங்குவது. அப்பேருணர்வே பேருவகையில் தன்னுள்ளும் வெளியிலும், வலுவுடன் சத்தியுடன் மகிழ்ச்சியுடன் தெய்வீகமாகச் செயலாற்றத் தான் என்பது அற்ற பெருநிலை.

இந்த அடிகளுக்குரிய தத்துவப் பொருளே சிவபுராணத்தின் உட்கிடையாகிய சித்தர் ஞானத்தின் செம்பொருளாகும் என்று கூறப்பெறுகிறது. இதனை அடுத்து வருகின்ற பனுவலின் அடிகள் மரபு வழிப் பொருளிலும், சித்தர் வழிப் பொருளிலும் சொல்லளவிலே அதிகம் மாறுபடுவதில்லை. ஆனால் சொல்லுக்குள்ளே உட்பொருளாகப் பொதிந்துள்ள மெய்ஞ்ஞானப் பயிற்சிப் பொருள் சற்று விரிவானதாகும். எனவே, இந்த வரிகளுக்கு உள்ள சமயப் பொருளை முதலில் காண்போம்.

எஞ்ஞான மில்லாதேன் இன்பப் பெருமானே
அஞ்ஞானந் தன்னை யகல்விக்கும் நல்லறிவே
ஆக்கம் அளவிருதி இல்லாய் அனைத்துலகும்
ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருள்தருவாய்
போக்குவாய் என்னைப் புகுவிப்பாய் நின்றொழும்பின்
நாற்றத்தி னேரியாய் சேயாய் நணியானே
மாற்றவும் மனங்கழிய நின்ற மறையோனே

இந்த வரிகளிலே உள்ள சொல்லமைதி எளிதில் பொருள் கொள்ளக் கூடியதே ஆகும். எனவே சமய உலகில் சில சொற்களுக்கு மட்டும் உள்ள சிறப்புப் பொருளை இங்கே காண்போம். அளவு என்ற சொல்லுக்குத் திதி அல்லது இருப்பு என்று சமயிகள் பொருள் கொள்கிறார்கள். இவ்வாறே தொழும்பு என்ற சொல்லுக்கு அடிமை என்ற பொதுப்பொருள் வழியாக, பக்தி உலகிலே இறைவனுக்கும் உயிருக்கும் உள்ள ஆண்டான் அடிமை உறவு சிறப்பாகக் குறிக்கப்பெறுகிறது. இவ்வாறே நேரியாய் என்ற சொல்லுக்குப் பொருந்தியிருப்பவனே என்று பொருள் கொள்ளும்பொழுது, பதியைப் போல் பசு அநாதி என்ற கொள்கை வற்புறுத்தப் பெறுகிறது. மாற்றம் மனம் கழிய என்ற சொற்றொடருக்குப் பொருள் கொள்ளும்பொழுது சமயிகள் பரம்பொருளின் 'மனம் வாக்கினில் தட்டாமல் நின்ற' தன்மையை நினைவபடுத்துகிறார்கள். நிறங்கள் ஐந்து என்னும் பொழுது சமயிகள் கூறுகிற பொருளுக்கும் சித்தர்வழிப் பொருளுக்கும் கருத்தாழம் விரிவுபடுகிறது. சமயிகள் சொல்லுகிற பொருள் 'ஐம்

பூதங்களில் இறைவன் கலந்திருத்தலின் அவற்றுக்குரிய ஐந்து நிறங்களும் இறைவனுக்கும் உரியவாயின' என்று கூறுகிறார்கள். சித்தர்கள் இதற்குக் கூறுகிற பொருள் ஆன்மப் பயிற்சியோடு கூடிய ஒளி அனுபவங்களின் நிறவேறுபாடாகும்.

மேலே கண்ட வரிகளுக்கு ஞானிகள் கூறுகிற பொருளின் தத்துவங்களில் மிகவும் முக்கியமானவை வருமாறு:

பிரணவத்தில் உள்ள அ உ ம என்ற மூன்று எழுத்துக்களும் அயனையும் திருமாலையும் உருத்திரனையும் குறிப்பவையாகும். அந்த ஒலியிலே உள்ள உள்ளொளி விந்து நாதங்களைத் தன்னகத்தே கொண்டது.

பூவின் மணம் வெளியிலிருந்து இதழுக்குள் புகுந்து செல்கிற தத்துவமில்லை. அரும்பு மொட்டாகி மலர்ந்து விரியும்போது, அதனுடைய பக்குவத்திற்கு ஏற்ப அதனுள் இருந்து மணம் கமழ்கிறது. அதுபோலவே மனிதரின் உள்ளத்திற்குள் நிற்கின்ற பிரணவமும் பக்குவமான ஆன்ம நிலையிலே அறியப்படுகிறது. இதைத் 'தொழும்பின் முதிர்ச்சி' என்று சித்தர்கள் அழைக்கிறார்கள். இதனையே 'நாற்றத்தின் நேரியாய் சேயாய்' என்ற சொற்கள் குறிப்பதாகச் சித்தர்கள் அழுத்தம் கொடுத்து விளக்குகிறார்கள்.

இனி, சிவபுராணத்தில் மேல் வரிகளுக்கு வருவோம்:

கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தாற் போலச்
சிறந்தடியார் சிந்தனையுள் தேனூறிநின்று
பிறந்த பிறப்பறுக்கும் எங்கள் பெருமான்

இந்த அடிகளுக்கு பொருள் கூறுகிற ஞானியர்கள் சமயவாதிகளின் உரைகளுக்கு மேல் மற்றொரு சிறப்புரை கூறுகிறார்கள். அது ஞானப் பயிற்சியின்பாற்பட்ட ஓர் அனுபவ விளக்கமாகும். அதன்படி, ஆத்ம ஞானிகளுக்கு அவர்களுடைய ஒடுக்க நிலையிலே தொண்டைக்குள் ஒருவகையான இனிப்புச்சுவை சுரக்கிறது. அது கறந்த பாலையும் சர்க்கரையும் சிந்தனையில் கொண்டு வருகிற ஓர் அரிய சுவையாகும். இந்தச் சுவையின் அநுபவம் முன்னேற முன்னேற மரணமிலாப் பெருவாழ்வு கிட்டுகிறது. அதுவே 'பிறந்த பிறப்பறுக்கும்' பெற்றிமையாம்.

நிறங்களோ ரைந்துடையாய் விண்ணோர்க ளேத்த
மறைந்திருந்தா யெம்பொருமான் வல்வினையேன் றன்னை
மறைந்திட மூடிய மாய இருளை
அறம்பாவம் என்னும் அருங்கயிற்றாற் கட்டிப்
புறந்தோல்போர்த் தெங்கும் புழுவழுக்கு மூடி
மலஞ்சோரும் ஒன்பது வாயிற் குடிலை
மலங்கப் புலனைந்தும் வஞ்சனையைச் செய்ய
விலங்கு மனத்தால் விமலா வுனக்குக்
கலந்தஅன் பாகிக் கசிந்துள் ளுருகும்
நலந்தா னிலாத சிறியேற்கு நல்கி

ஐந்து நிறங்களைப் பற்றிய ஞான விளக்கத்தைக் கூறும் சித்தர்கள் ஒரு நுட்பமான இரகசியத்தை எடுத்துக் கூறியுள்ளார்கள். பக்தர்கள் தங்களுடைய தியான முறைக்கு ஏற்ப ஓர் உருவத்தை மனக்கண் முன் நிறுத்திக் கொள்கிறார்கள். ஆனால், ஞானியோ சிவதரிசனம் என்பதைத் தன்னுள்ளேயே ஆன்ம தரிசனமாகக் காண்கிறான். அந்தத் தரிசனம் நிறங்களையும் ஒளி வண்ணங்களையும் தன்னுள் அடக்கியுள்ளதோடு ஓசையாகவும் ஒலி செய்கிறது. இந்த ஒளியும் நிறங்களும், இந்த ஓசையும் ஒலிகளும், வெளியிலிருந்து வருவன அல்ல. சிந்தையினுள்ளே நிகழ்கின்ற சிவதரிசனம் இது. இதைப் பாடுகிற திருமூலர் தம்முடைய சிவதரிசனம் என்ற பகுதியிலே ஓர் அரிய மந்திரமாக வழங்குகிறார்:

சிந்தையி தென்னச் சிவனென்ன வேறில்லை
சிந்தையி னுள்ளே சிவனும் வெளிப்படும்
சிந்தை தெளியத் தெளியவல் லார்கட்குச்
சிந்தையி னுள்ளே சிவனுரு தானே

இத்தகைய சிவனது காட்சியைக் கண்டு கண்டு அநுபவித்துப் பாடியுள்ள திருமந்திரப் பாடல்கள் ஏராளமாக உள்ளன.

சிவனுக்கு ஐந்து நிறங்கள் என்று கூறியுள்ள இந்த அடிகளுக்கு ஞானிகள் சொல்லுகிற பொருள், மனிதனுடைய நுண்உடலில் ஏற்படுகின்ற ஐம்பூத நிறங்களின் வண்ணக்கோலமும், அந்தக் கோலத்திலே நின்று விளையாடுகிற கூத்தனுடைய ஆடல்களும் என்பதாம்.

ஞானிகள் வகுத்துக் கூறியுள்ள ஐந்து அடிப்படையான நிறங்கள் ஆவன:

1. மண்ணுக்குரிய நிறம் பொன்னிறமாம்.
2. தண்ணீருக்கு வெண்மை நிறம்.
3. நெருப்புக்குச் செந்நிறம்.
4. காற்றுக்குக் கருமை.
5. வானுக்குரிய நிறம் புகைநிறம்.

மணிவாசகர் இந்த வரிகளிலே இந்த உடம்பின் இயக்கத்தை எத்தகைய தொல்லைதரும் இயக்கம் என்று வருணனை செய்கிறார். யோகிகள் இந்த உடம்பின் இயல்பை இச்சைகளை நோக்கிக் குண்டலினி ஆற்றலைக் கீழே இழுக்கின்ற ஈர்ப்பு என்கிறார்கள். இத்தகைய பருவுடலின் தொல்லைகளிலிருந்து பரமகுருவானவன் இந்த உடம்பை மீட்கிறான். இந்திரிய மயமாக மயங்கித் தொழிற்படுகிற உயிரை மேல்நிலை நோக்கி உயர்த்துகிறான் ஞானாசிரியன். மணிவாசகருக்கு இந்த ஞான அநுபவத்தைப் பரம்பொருளே பரமகுருவாக வந்து அருளுகிறான்.

நிலத்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காட்டி
நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்குத்
தாயிற் சிறந்த தயாவான தத்துவனே

இந்த அடிகளுக்கு ஞானிகள் கூறுகிற உரை, ஞானாசிரியனுடைய நல்லருளானது குழந்தையை வளர்க்கும் தாயின் அன்பைப் போன்று தொழிற்படுகிறது என்பதாகும். ஞானாசிரியன் தனது சீடனின் மனத்திலும் உடம்பிலும் வளர்ச்சியினை ஏற்படுத்துகிறான். அதனால் மாணவனுடைய உடம்பிலும் உள்ளத்திலும் சிவமானது தனது கலைகளை வீசிப் படரத் தொடங்குகிறது.

சித்தர்கள் கூறியுள்ள சிவகலைகள் பத்தாகும். அவை:

1. இந்திகை : இந்த ஆற்றல் மாணவனுடைய மாசுகளையெல்லாம் நீக்கவல்லது.
2. தீபிகை: இந்த ஆற்றல் இடையிடின்றி ஒளியைக் கொடுத்துக் கொண்டே இருப்பது.
3. ரோசிகை : இது இறையெழிலைத் தருகின்ற ஒளியாற்றலாகும்.
4. மோசிகை : இது எல்லாப் பிணைப்புகளிலிருந்தும் விடுதலை தருவது.
5. ஊர்த்துவ காமினி : இதுவே கீழே அழுத்தும் ஆற்றலை மேலே செலுத்துகிறது.
6. வியாபினி : எங்கும் விரிந்து பரவுகிற ஆற்றல் இது.
7. வியோம ரூபினி : சிவனுடைய சக்திகளிலே இதுவே விண்வடிவாய் நிற்கும் ஆற்றல்.
8. அநந்தை : நிலைத்து நிற்கும் நிலைபேறு இதுவே.
9. அநாதை : மாணவன் தன்னை நடத்த மற்றொரு நாதனோ, தலைவனோ இன்றி, தன்னைத் தானே நடத்திக்கொள்கிற சுதந்திர சக்தியைத்தருகிற ஆற்றல்.
10. அநாசிருதை : தத்துவங்களைப் பற்றிநில்லாத நிலை.

இந்தப் பத்துவிதமான கலைகளும் சீடனுடைய இயக்கத்திலே முழுமை பெற வேண்டுமானால், ஞானாசிரியனுடைய திருவடி ஞானமும் நல்லருளும் துணை செய்ய வேண்டும். இதைத்தான் நிலந்தன் மேல் வந்தருளி நீள்கழல்கள் காட்டி என்று மணிவாசகர் பாடுகிறார். இத்தகைய திருவடிப்பேற்றை அருளிய குருநாதர் தாயைப்போல் சீடனின் மனப் பக்குவத்தை வளர்க்கவும் செய்கிறார்.

மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே
தேசனே தேனார் அமுதே சிவபுரனே
பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனே
நேச அருள்புரிந்து நெஞ்சில்வஞ் சங்கெடப்
பேராது நின்ற பெருங்கருணைப் பேராறே

இந்த வரிகளுக்குப் பொருள் சொல்லும்பொழுது, 'மலர்ந்த மலர்ச் சுடரே' என்பதை, விரிந்து விளங்குகின்ற ஆயிரமிதழ்த் தாமரையாகிய சகஸ்ரதளத்தில் சுடரும் ஒளியே என்று ஞானிகள் கூறுகிறார்கள்.

சித்தர்களுடைய மொழியிலே ஆரியன் என்ற சொல்லுக்குக் குருநாதன் என்று பொருள். இந்தப் பொருளை உள்ளத்திற் கொண்டே குள்ளச்சாமி போன்ற சில சித்தர்களோடு தொடர்பு கொண்டிருந்த தேசிய மகாகவி சுப்பிரமணிய பாரதியார், ஆரியர் என்பவர் யார் என்பதற்கு ஓர் அருமையான இலக்கணம் கூறியுள்ளார்:

பொய்யுறு மாயையைப் பொய்யெனக் கொண்டு
புலன்களை வெட்டிப் புறத்தில் எறிந்தே
ஐயுற வின்றிக் களித்திருப் பாரவர்
ஆரிய ராமென்றிங் கூதடா சங்கம்.

இனி, மணிவாசகருடைய அடிகளிலே வரும் ஆறு என்பதற்கு ஞானநதி என்ற நுண்பொருளை ஞானிகள் கூறுகிறார்கள்.

ஆரா வமுதே அளவிலாப் பெம்மானே
ஓராதார் உள்ளத் தொளிக்கும் ஒளியானே

அண்டத்திலும் பிண்டத்திலும் கலந்தும் அவற்றைக் கடந்தும் நிற்கிற பரம்பொருள்; ஒளிபெறாதவர்களுக்குப் புலப்படுவதில்லை. அவர்களுடைய உடம்புக்குள் உறைந்தும், அவர்களுடைய புலனுக்குப் புலனாகாதவாறு ஒளிக்கும் ஒளியாக அது நிற்கிறது.

நீரா யுருக்கியென் ஆருயிராய் நின்றானே

மணிவாசகரின் இந்த வரியை ஆழ்ந்து சிந்தித்தோமானால் கீழ்க்கண்ட திருமந்திரப் பாடலின் உட்கருத்தே நினைவுக்கு வரும்.

உள்ளத்தின் உள்ளே உளபல தீர்த்தங்கள்
மெள்ளக் குடைந்து நின்றாடார் வினைகெடப்
பள்ளமும் மேடும் பரந்து திரிவரே
கள்ள மனமுடைக் கல்வியில் லோரே

இங்கே திருமூலர் குறிப்பிடுகிற கல்வி, சித்தர்களின் ஞானக் கல்வியாகும். அது ஞானாசிரியன் நேரில் தோன்றிக் கற்பிக்க வேண்டிய ஆன்மக் கல்வியே. இந்தக் கல்வி அனுபவத்தைப் பெற்ற மணிவாசகரின் வெளியீடே மேற்கண்ட சிவபுராண வரியாகும்.

இன்பமும் துன்பமும் இல்லானே யுள்ளானே
அன்பருக் கன்பனே யாவையுமாய் அல்லையுமாம்
சோதியனே துன்னிருளே தோன்றாப் பெருமையனே
ஆதியனே அந்தம் நடுவாகி யல்லானே
ஈர்த்தென்னை யாட்கொண்ட எந்தை பெருமானே
கூர்த்தமெய்ஞ் ஞானத்தாற் கொண்டுணர்வார் தங்கருத்தின்
நோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே
போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே

இந்த அடிகளுக்குப் பொருள் கூறுகிற ஞானியர்கள், பருவுடலையும் தொடர்புபடுத்தி இயக்குகின்ற இறையாற்றலின் தத்துவத்தை எடுத்துக் கூறுகிறார்கள்.

காக்குமெங் காவலனே காண்பரிய பேரொளியே
ஆற்றின்ப வெள்ளமே அத்தாமிக் காய்நின்ற
தோற்றச் சுடரொளியாய்ச் சொல்லாத நுண்ணுணர்வாய்
மாற்றமாம் வையகத்தின் வெவ்வேறே வந்தறிவாம்
தேற்றனே தேற்றத் தெளிவேயென் சிந்தனையுள்
ஊற்றான வுண்ணா ரமுதே யுடையானே

வெளியே செல்லுதல், உட்புகுதல் ஆகிய மூச்சின் இயக்கத்திலிருந்து இந்த உடம்பின் எல்லா இயக்கங்களையும், ஒரு சட்டப்படி நடைபெறுமாறு செய்வது ஆன்ம ஆற்றலே ஆகும். அந்த ஆற்றலுக்குக் காவல் புரிவதும், அதனை வழிப்படுத்துவதும் ஞானாசிரியனாகிய காவலனேயாம்.

உயிரணுக்கள் நொடிதோறும் மாறிக்கொண்டே இருப்பவை. இந்த மாற்றத்தின் நடுவே தேற்றமாக அறிவுத் தெளிவே ஆன்மஞானம். அந்த ஞானத்தை அருளி உள்ளத்திலே அமுதம் ஊறும்படியாகச் செய்தவன் பரமகுருவாகிய பரம்பொருளே.

வேற்று விகார விடக்குடம்பி னுட்கிடப்ப
ஆற்றேனெம் மையா அரனேயோ என்றென்று
போற்றிப் புகழ்ந்திருந்து பொய்கெட்டு மெய்யானார்
மீட்டிங்கு வந்து வினைப்பிறவி சாராமே
கள்ளப் புலக்குரம்பை கட்டழிக்க வல்லானே

பொய்கெட்டு மெய்யாதல் என்பது சிவதத்துவத்தில் அழுந்தி அறிவின் உருவிலே நிலையாக நிற்றல் என்பதாகும். யோகிகளும் ஞானிகளும் குண்டலினி கொண்டு மகேசர் நிலையான ஒளியையும் சதாசிவ நிலையான ஒலியையும் தாண்டி, பேரொடுக்கத்திலே நிற்றல் என்று கூறுவார்கள்.

இத்தகைய மெய்யர்களும் இரண்டு வகையில் அடங்குவர். ஒருவகையினர் உயிரையும், உயிருக்கு உயிரையும் உணர்ந்து ஒடுங்கி விடுபவர்கள். இரண்டாவது வகையினர் ஒடுக்கம் அமையாமல் மெய்ப் பொருளோடு அறிவுநிலையில் தோய்ந்து இயங்குகிற ஞானிகள். இவ்விருவகையினரும் புலன்களை வென்றவர்களே. எனினும், முன்வகையினருக்கு மறுபிறவி இல்லை. பின்வகையினர் பிறவிக்கும் வரலாம்; அல்லது, சூக்கும உலகிலும் இயங்கலாம். இவ்விரு ஞானிகளையும் மீண்டும் பிறவிக்கு வராமல் தன்னொடுக்கத்தில் நிற்கச் செய்பவன் பரமகுருவேயாவான்.

நள்ளிருளில் நட்டம் பயின்றாடு நாதனே
தில்லையுட் கூத்தனே தென்பாண்டி நாட்டானே

நள்ளிருள் என்பதற்கு அண்டத்தினுள்ளும் பிண்டத்தினுள்ளும் படர்ந்துள்ள மாயை இருள், புற இருள், அக இருள் என்பது ஞானியர்

பொருள். தில்லை என்பதற்கு உடம்பாகிய இதயக்கோயில் என்றும், தெற்கு என்பதற்குத் தலையின் தென்புறமாகிய ஆட்சிநிலை என்றும் யோகியர்கள் பொருள் கூறுகிறார்கள்.

அல்லற் பிறவி அறுப்பானே ஓவென்று
சொல்லற் கரியானைச் சொல்லித் திருவடிக்கீழ்ச்
சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தி னுள்ளார் சிவனடிக்கீழ்ப்
பல்லோரும் ஏத்தப் பணிந்து

வாக்கினால் உணரவோ, சொல்லவோ, அல்லது மாணவர்க்கு உணர்த்தவோ, இயலாத மெய்ப்பொருளே சிவமாகும். அத்தகைய சொல்கடந்த பொருளைச் சிவபுராணம் பாட்டாகச் சொல்லியுள்ளது. எனவே அதனுடைய பொருளை மெய்யாக உணர்வதற்கு ஞானாசிரியனுடைய திருவருளே கூட்டுவிக்க வேண்டும். ஏனென்றால் மணிவாசகர் குறிப்பிட்டவாறு, அவன் தாளை வணங்குவதற்கும் அவன் அருளே வேண்டியுள்ளது. அவன் அருளின்றி அவனை நாம் அறிவதற்கில்லை. இதனையே திருமூலரும்,

சிந்தையி னுள்ளே எந்தை திருவடி
சிந்தையும் எந்தை திருவடிக் கீழது
எந்தையும் என்னை அறிய கிலனாகில்
எந்தையை யானும் அறியி கிலேனே

என்ற எழிலோடு பாடியுள்ளார். மணிவாசகர் கூறுகின்ற இந்த மெய்ப்பொருளை உணர்ந்தவர்கள் சிவன் திருவடிக்கீழ் நிலையாக நிற்பார்கள்; பிறவித் துயரை வென்றவர்களாவார்கள் என்பது கருத்து. அதாவது உயிர் வளர்ந்து பக்குவமாகி, உடம்பு இல்லாத நிலையிலே அமரவாழ்வு பெற்று, நிலைபெறக் கூடும் என்பதே இந்தச் சிவபுராணத்தின் அடிப்படைக் கருத்தாகும். இத்தகைய நிலை பேறான வாழ்வையே, இறைவன் திருவடிக்கீழ் நிற்றல் என்று சமயிகள் கூறுகிறார்கள்.

துவைதம், அத்துவைதம், விசிஷ்டாத்துவைதம், சைவ சித்தாந்தம் என்னும் சமயக் கொள்கைகளிலே, வீடுபேறு என்னும் நிலையைப் பற்றிய சர்ச்சைகள் பற்பல வேறுபாடுகளுடன் நிகழ்கின்றன. இந்நிலையிலே உயிரின் வளர்ச்சியைச் சொல்லி, அறிவினாற்றல்களிலே புல்லிலிருந்து மனிதன்வரை எப்படி முன்னேற்ற நிலைகள் அமைந்துள்ளன என்பதை நினைவுகூர்ந்து, மெய்யறிவின் துணைகொண்டு சிவபுரத்து வாழ்வாகிய அமர நிலையை, உடம்பின்றியே உயிர் எய்தக்கூடுமென்பதையும் உணர்த்துவதே, சிவபுராணத்தின் தனிச்சிறப்பாகும். இதுகாரணம் பற்றியே, மரணமிலாப் பெருவாழ்வு நோக்கி மனிதகுலத்தை அழைத்துச் செல்கிற சித்தர்மரபு, சிவபுராணத்தை ஒப்புநூலாகக் கொண்டு போற்றிவந்திருக்கின்றது. இந்த நோக்கிலே பார்தால் சிவபுரணாத்தின் சித்தரிலக்கியப் பண்பும், அதிலுள்ள ஞான ஒண் பொருளின் தனிச்சிறப்பு எத்தகையது என்பதும், நமக்குப் புலனாகும்!

# 8. கீர்த்தித் திருவகவல்

## (சிவனது திருவருட் புகழ்ச்சி முறைமை)

## திருத்தில்லையில் அருளியது.

(புலியூரையடைந்த அடிகளார் "கண்ட பத்தை" உரைத்த பின் ஆனந்த கூத்தருடைய திருமேனியிலீடுபட்டு அநுபூதிமிக்கு அசைவற்று நின்றார் இந்நிலையறியாத மெய்க்காவலாளர்கள் 'கனகசபையை விட்டுக் கீழேயிறங்கு' என்று கடிந்து கூறினார்கள். அவ்வுரை அடிகளார் செவிகளிற் புகுந்திலது. இவர் சிதானந்தப் பெருவெளியில் ஓங்காது குறையாது விளங்குகின்ற சிவானந்தப் பிரகாசத்தில் திளைத்துத் தம்பம்போல் நின்றார். இதுகண்ட காவலர்கள் என்ன இவர்; போமென்றும் போகார்; இரையும் ஆடார்; பித்துக் கொண்டார் போலும் என்று இரங்கிநின்ற போது 'சிவசிவ' என்று இவர் வாயசைந்தது. கைகள் சிரமேற் குவிந்தன. குஞ்சித பாதத்தை மீண்டும் தலையால் வணங்கித் திருப்புலீச்சரம் சார்ந்தார். அங்கிருந்து அனந்தேச்சரத்தை வணங்கிக்கொண்டு திருவீதி வலமா வரும்போது கீர்த்தித் திருவகவல், திருவண்டப் பகுதி, போற்றித் திருவகவல் ஆகிய மூன்று திருவகவல்களையும் சொல்லிக்கொண்டே வந்தார்.

இதனாலேயே இன்றும் சைவத் தமிழுலகம் திருக்கோயில் வலம் வருகின்ற காலத்து வீண்பேச்சும் சழக்குரையும் பேசாது இவ்வகவல்களைப் பாராயணம் செய்துகொண்டே வருகின்றது. கூட்டமாக வழிபடுபவர்களும் இதனைச் சொல்லிக்கொண்டே வலம்வருதல் மரபாம்).

**திருச்சிற்றம்பலம்**

தில்லை மூதூர் ஆடிய திருவடி
பல்லுயி ரெல்லாம் பயின்றன னாகி
எண்ணில் பல்குணம் எழில்பெற விளங்கி
மண்ணும் விண்ணும் வானோ ருலகும்
துன்னிய கல்வி தோற்றியும் அழித்தும்

என்னுடைய யிருளை யேறத் துரந்தும்
அடியா ருள்ளத் தன்புமீ தூரக்
குடியாக் கொண்ட கொள்கையும் சிறப்பும்
மன்னு மாமலை மகேந்திர மதனிற்
சொன்ன ஆகமம் தோற்றுவித் தருளியும்

கல்லா டத்துக் கலந்தினி தருளி
நல்லா ளோடு நயப்புற வெய்தியும்
பஞ்சப் பள்ளியிற் பான்மொழி தன்னொடும்
எஞ்சா தீண்டும் இன்னருள் விளைத்தும்
கிராத வேடமொடு கிஞ்சுக வாயவள்

விராவு கொங்கை நற்றடம் படிந்தும்
கேவேட ராகிக் கெளிறது படுத்தும்
மாவேட் டாகிய ஆகமம் வாங்கியும்
மற்றவை தம்மை மகேந்திர ரத்திருந்
துற்றவைம் முகங்க ளாற்பணித் தருளியும்

நந்தம் பாடியின் நான்மறை யோனாய்
அந்தமில் அரிய னாயமர்ந் தருளியும்
வேறுவே றுருவும் வேறுவே றியற்கையும்
நூறுநூ றாயிரம் இயல்பின தாகி
ஏறுடை யீசனிப் புவனியை யுய்யக்

கூறுடை மங்கையும் தானும்வந் தருளிக்
குதிரையைக் கொண்டு குடநா டதன்மிசைச்
சதுர்படச் சாத்தாய் தானெழுந் தருளியும்
வேலம் புத்தூர் விட்டே றருளிக்
கோலம் பொலிவு காட்டிய கொள்கையும்

தர்ப்பண மதனிற் சாந்தம் புத்தூர்
விற்பொருள் வேடற் கீந்த விளைவும்
மொக்கணி யருளிய முழுத்தழல் மேனி
சொக்க தாகக் காட்டிய தொன்மையும்
அரியொடு பிரமற் களவறி யொண்ணான்

நரியைக் குதிரை யாக்கிய நன்மையும்
ஆண்டுகொண் டருள அழகுறு திருவடி
பாண்டி யன்றனக் குப்பரி மாவிற்
றீண்டு கனகம் இசையப் பெறாஅ
தாண்டான் எங்கோன் அருள்வழி யிருப்பத்

தூண்டு சோதி தோற்றிய தொன்மையும்
அந்தண னாகி யாண்டுகொண் டருளி
இந்திர ஞாலங் காட்டிய இயல்பும்
மதுரைப் பெருநன் மாநக ரிருந்து
குதிரைச் சேவக னாகிய கொள்கையும்

ஆங்கது தன்னில் அடியவட் காகப்
பாங்காய் மண்சுமந் தருளிய பரிசும்
உத்தர கோச மங்கையு ளிருந்து
வித்தக வேடங் காட்டிய இயல்பும்
பூவண மதனிற் பொலிந்திருந் தருளித்

தூவண மேனி காட்டிய தொன்மையும்
வாத வூரினில் வந்தினி தருளிப்
பாதச் சிலம்பொலி காட்டிய பண்பும்
திருவளர் பெருந்துறைச் செல்வ னாகிக்
கருவார் சோதியிற் கரந்த கள்ளமும்

பூவல மதனிற் பொலிந்தினி தருளிப்
பாவ நாச மாக்கிய பரிசும்
தண்ணீர்ப் பந்தர் சயம்பெற வைத்து
நன்னீர்ச் சேவக னாகிய நன்மையும்
விருந்தின னாகி வெண்கா டதனிற்

குருந்தின் கீழன் றிருந்த கொள்கையும்
பட்ட மங்கையிற் பாங்கா யிருந்தங்
கட்டமா சித்தி யருளிய வதுவும்
வேடுவ னாகி வேண்டுருக் கொண்டு
காடது தன்னிற் கரந்த கள்ளமும்

மெய்க்காட் டிட்டு வேண்டுருக் கொண்டு
தக்கா னொருவ னாகிய தன்மையும்
ஓரி யூரின் உகந்தினி தருளிப்
பாரிரும் பாலக னாகிய பரிசும்
பாண்டூர் தன்னில் ஈண்ட விருந்தும்

தேவூர்த் தென்பாற் றிகழ்தரு தீவிற்
கோவார் கோலங் கொண்ட கொள்கையும்
தேனமர் சோலைத் திருவா ரூரின்
ஞானந் தன்னை நல்கிய நன்மையும்
இடைமரு ததனில் ஈண்ட இருந்து

படிமப் பாதம் வைத்தவப் பரிசும்
ஏகம் பத்தி னியல்பா யிருந்து
பாகம் பெண்ணோ டாயின பரிசும்
திருவாஞ் சியத்திற் சீர்பெற இருந்து
மருவார் குழலியோடு மகிழ்ந்த வண்ணமும்

சேவக னாகித் திண்சிலை யேந்திப்
பாவகம் பலபல காட்டிய பரிசும்
கடம்பூர் தன்னில் இடம்பெற இருந்தும்
ஈங்கோய் மலையில் எழிலது காட்டியும்
ஐயா றதனில் சைவ னாகியும்

துருத்தி தன்னில் அருத்தியோ டிருந்தும்
திருப்பனை யூரில் விருப்ப னாகியும்
கழுமல மதனிற் காட்சி கொடுத்தும்
கழுக்குன் றதனில் வழுக்கா திருந்தும்
புறம்புய மதனில் அறம்பல அருளியும்

குற்றா லத்துக் குறியா யிருந்தும்
அந்தமில் பெருமை அழலுருக் கரந்து
சுந்தர வேடத் தொருமுத லுருவுகொண்
டிந்திர ஞாலம் போலவந் தருளி
எவ்வெவர் தன்மையுந் தன்வயிற் படுத்துத்

தானே யாகிய தயாபரன் எம்மிறை
சந்திர தீபத்துச் சாத்திர னாகி
அந்தரத் திழிந்துவந் தழகமர் பாலையுள்
சுந்தரத் தன்மையொடு துதைத்திருந் தருளியும்
மந்திர மாமலை மகேந்திர வெற்பன்

அந்தமில் பெருமை யருளுடை யண்ணல்
எந்தமை யாண்ட பரிசது பகரின்
ஆற்ற லதுவுடை அழகமர் திருவுரு
நீற்றுக் கோடி நிமிர்ந்து காட்டியும்
ஊனந் தன்னை யொருங்குடன் அறுக்கும்

ஆனந் தம்மே யாறா அருளியும்
மாதிற் கூறுடை மாப்பெருங் கருணையன்
நாதப் பெரும்பறை நவின்று கறங்கவும்
அழுக்கடை யாமல் ஆண்டுகொண் டருள்பவன்
கழுக்கடை தன்னைக் கைக்கொண் டருளியும்

மூல மாகிய மும்மல மறுக்குந்
தூய மேனிச் சுடர்விடு சோதி
காதல னாகிக் கழுநீர் மாலை
ஏலுடைத் தாக எழில்பெற அணிந்தும்
அரியொடு பிரமற் களவறி யாதவன்

பரிமா வின்மிசைப் பயின்ற வண்ணமும்
மீண்டும வாரா வழியருள் புரிபவன்
பாண்டி நாடே பழம்பதி யாகவும்
பத்திசெய் யடியரைப் பரம்பரத் துய்ப்பவன்
உத்தர கோச மங்கையூ ராகவும்

ஆதி மூர்த்திகட் கருள்புரிந் தருளிய
தேவ தேவன் திருப்பெய ராகவும்
இருள்கடிந் தருளிய இன்ப வூர்தி
அருளிய பெருமை அருண்மலை யாகவும்
எப்பெருந் தன்மையும் எவ்வெவர் திறமும்

அப்பரி சதனால் ஆண்டுகொண் டருளி
நாயி னேனை நலமலி தில்லையுட்
கோல மார்தரு பொதுவினில் வருகென
ஏல என்னை யீங்கொழித் தருளி
அன்றுடன் சென்ற அருள்பெறும் அடியவர்

ஒன்ற வொன்ற வுடன்கலந் தருளியும்
எய்தவந் திலாதார் எரியிற் பாயவும்
மாலது வாகி மயக்க மெய்தியும்
பூதல மதனிற் புரண்டுவீழ்ந் தலறியும்
கால்விசைத் தோடிக் கடல்புக மண்டி

நாத நாத என்றழு தரற்றிப்
பாதம் எய்தினர் பாதம் எய்தவும்
பதஞ்சலிக் கருளிய பரமநா டகவென்
றிதஞ்சலிப் பெய்தநின் றேங்கின ரேங்கவும்
எழில்பெறும் இமயத் தியல்புடை யம்பொற்

பொலிதரு புலியூர்ப் பொதுவினில் நடநவில்
கனிதரு செவ்வா யுமையொடு காளிக்
கருளிய திருமுகத் தழகுறு சிறுநகை
இறைவன் ஈண்டிய அடியவ ரோடும்
பொலிதரு புலியூர்ப் புக்கினி தருளினன்.
ஒலிதரு கைலை யுயர்கிழ வோனே.

## திருச்சிற்றம்பலம்

*சிவபுராணத்தைப் போலவே இந்தப் பனுவலும் ஞானியர்களுடைய பேருண்மைகளின் நிலைக்களனாகத் திகழ்கிறது. சித்தர்களின் தத்துவங்களை ஆராய்கிறவர்களுக்கு இந்தக் கீர்த்தித் திருவகவலும் ஒரு மிக முக்கியமான ஒப்புநூலாக அமைகிறது.*

சமயவாதிகளின் மரபுரைக்கும் சித்தரவழி ஞான உரைக்கும் கருத்துரையிலே மிகுந்த வேறுபாடு காணப்பெறுகிறது. இந்நூலில் வருகிற தலங்களின் பெயர்களுக்குக் கூட ஞானிகள் உட்பொருள் கூறுகிறார்கள்.

கீர்த்தித் திருவகவலின் மரபுவழி உரையானது வெளிப்படையான கருத்துரையே ஆகும். ஆனால் சித்தர்களின் உரை முழுமையும் இந்த உடம்பாகிய கோவிலை மையங்கொண்டு அமைகிறது. அத்தகைய உரையில் இருந்து மிகவும் நுட்பமான சில பகுதிகளை மட்டும் கீழே தருகின்றேன். இந்தப் பகுதிகள் கீர்த்தித் திருவகவலின் சில சொற்றொடர்களுக்கு ஆழமான உட்பொருளை வழங்குகின்றன.

சிவயோகியார் 'திருவாசகமும் சிவராஜயோகமும்' என்ற பெயரில் எழுதியுள்ள ஞான ஆய்வில் இருந்து சில பகுதிகள் வருமாறு:

மானிடர் தேகத்தில் இது அநாகதம் என்ற இருதயத்தைக் குறிக்கும். அங்கிருந்து அசைவினைச் செய்து கொண்டிருப்பவரும் ஈசானரேதான். அவர் தொழில் மயமாகச் சீவர்களை இயக்கும் போது ஐந்து நிலையிலிருந்து இயக்குவதாக ஆகமம் வரையறை செய்துள்ளது. அவைகள் சந்திரசேகரர், சோமாஸ்கந்தர், நடராசர், இடபாரூடர், கல்யாண சுந்தரர் என்பனவாகும்.

**சந்திரசேகரர்**

சந்திரனை முடியில் தரித்து விளங்குபவர். சேகரம் - தலை, முடி, கூட்டம். சந்திரன் சுவாதிஷ்டானத்தில் விளங்கும்போது ஒரு கலையாக விளங்கும். சிரசின் நாதமாக விளங்கும்போது ஏழாவது கலையாக விளங்கிச் சக்தி பொருந்துமிடமாகும். இதன்மேல் பரையோகம், பரை போகம், பரையில் அதீதம் உள்ளன. இவ்வகையாகச் சந்திரன் 16 நிலைகளைத் தேகத்தில் வகிக்கிறான்.

**சோமாஸ்கந்தர்**

ஸக - உமா, ஸ்கந்தர் என்ற மூன்று உருவும் ஓர் உருவாகத் தியானிக்கும் முறை. இது கந்தபுராண தத்துவ விளக்கம். இவ்வுலகில் அறிவான சிவமும், ஆற்றலான சத்தியும் எல்லா மண்டலங்களிலும் நிறைந்துள்ளன. தூல உடலில் ஐம்முகச் சிவனார் அதோமுக சத்தியுடன் ஒன்றுபட்ட மேலெழும் சோதியில் சிவம் சத்தி ஸ்கந்தர் மூன்றும் பிரிப்பின்றி உள்ளது என்ற கொள்கை.

இது காலத்தாற் பிற்பட்ட சமய எழுச்சி நிலை. இதன் வழிபாடும் இல்லற நெறியைத் தழுவியதே. திருவாரூர்த் தியாகராசர் சோமாஸ் கந்தர் மூர்த்தமேதான். எவ்விதம் சிதம்பர ரகசியம் அமைத்துள்ளார்களோ அவ்விதமே இங்கும் சில இரகசியங்கள் வைத்துள்ளனர்.

**நடராசர்**

கூத்தப் பெருமான் நடனஞ்செய்வது அசைவனவற்றுள்ளும் அசையா தனவற்றுள்ளுமாகும். அத்தகைய ஆகாயமே ஆதிப்பிரானது

திருவடியாகும். அவ்வாகாயம் பிராண சத்தியான நீரையும் ஒளியையும் கொண்ட மண்டலமாகும். இந்த ஆகாய விளக்கமே பஞ்சாக்கரமாகும். இவ்வகையாக விளங்கும் கூத்தப்பெருமான் பஞ்சாக்கரமாகும். இவ்வகையாக விளங்கும் கூத்தப்பெருமான் விளக்கமே இங்கு அறியத் தக்கது.

*இடபாரூடர்*

சைவத்தில் இடபத்தை உயிர் என்பர். வேதத்தில் வாக்கு கம்பீரமாக ரிஷப கர்ஜனம் போல் உள்ளதால் வாக்கை ரிஷபமாகக் கூறப்பட்டுள்ளது. உயிரின் வெளிப்பாடும், வாக்கின் வெளிப்பாடும் சிரசின் மேலுள்ள ஆகாய மண்டலந்தான். இது ரிஷப வாகனத்தையுடைய சிவபெருமானைக் குறிக்கும். இதன் தத்துவமும் சிரசில் வெளிப்படுவதுதான்.

*கலியாணசுந்தரர்*

இது சிவசக்தி மணக்கோலத்தைக் குறிப்பிடும் அவசரம். மூலாதாரத்திலுள்ள குண்டலினி சத்தி சூரிய மண்டலத்தைக் கடந்த பிறகு தருணி என்றும், சகஸ்ரதளத்தை அடைந்தபோது பதிவிரதை என்றும் கூறப்படுவாள். இவ்விதமான மணக்கோலத்தைக் நடத்தி வைப்பவர் பிரமனும், மணப்பெண்ணைக் கொடுப்பவர் திருமாலும் ஆவர். இது துவாதசாந்த வெளியாகும். இவ் வைபவத்தை அமைத்துக் காட்டும் தலம் மதுரை ஆகும். துறவி வழிபடும் ஆனந்தக் கூத்தனும் இல்வாழ்வான் வழிபடும் கால்மாறி ஆடிய கூத்தப்பெருமானும் அங்கு இடம் பெற்றுள்ளனர். மதுரை சத்திப் பிரபாவம் பொருந்திய தலமாகும். பிரணவ கலைகள் 64க்காக 64 புராணக்கதைகள் அமைத்துள்ளனர். திருமணக் கோலவழிபாடு சாக்த மத தத்துவத்தைக் கொண்ட சமய மதத்தினர் வழிபாடு. சாக்த சமயத்தில் இதைத் துவாதசாந்த வெளி என்பர். திருவிளையாடற் புராணமும் அவ்விதமே கூறுகிறது. இவ்விதம் வேறுவேறு பெயர்களால் பெயர்களும் வழிபாடும் இருந்தாலும், இவை எல்லாம் சிரசின் மேலுள்ள ஈசானரை வழிபடும் முறைகளேயாகும்.

மீனின் கண் மற்ற எந்த ஜந்துக்களின் கண் போன்றும் உறங்கும் போது மூடிக்கொள்வதில்லை. எப்போதும் விழித்த கண்ணுடையவள் என்ற கருத்தை மீனாட்சி என்னும் பெயர் விளக்குவதாகும். அக்ஷிமார் கத்தினர் எப்போதும் அகநோக்கம் உடையவராக இருப்பதே இதன் கருத்தாகும்.

தில்லை - சிதாகாய இருள் மண்டலம். மூதூர் - பழமையான ஊர். அதுவே பிறப்புக்கும் இறந்த பின்னடையும் இடமான சீவவொளி பொருந்திய அண்டாகாயம். இதுவே தில்லை என்றறிக. அதாவது அண்ட கோச இருளே தில்லையால் குறிக்கப்பட்டுள்ளது என்று அறிக.

மாமலை என்பது பெருமையுடைய பிரணவ மேருவாகும். அதுவே கீழ்முதல் மேல்வரையில் வியாபித்துள்ள மலைபோன்ற தத்துவமாகும். அதுவேதான் இருட்டையும் ஒளியையும் உள்ளடக்கி நிற்பது. அதனால் மகேந்திர மாமலை.

பஞ்சப் பள்ளியிற் பான்மொழி தன்னொடும்
எஞ்சா தீண்டு மின்னருள் விளைத்தும்

என்ற வரிகளிலே பள்ளி என்பது கோவிலுக்குப் பெயர். ஆத்மா அன்னமய கோசம், பிராணமய கோசம், மனோமய கோசம், விஞ்ஞானமய கோசம், ஆனந்தமய கோசம் என்ற ஐந்து கோசங்களைக் கொண்டு வாழ்கிறது. ஆத்மாவை விட்டு நீங்காத சிவமும் சத்தியும், அவ்விதமே ஐந்து தேகத்திலும் பான்மொழி என்ற நாத சத்தியுடன், குறைவில்லாது பொருந்திச் சீவனது விருப்பத்திற்கு ஆற்றலை அளிக்கும்.

இந்திர ஜாலம் என்றால் ஒரு பொருளை மற்றோர் பொருளாகக் காட்டுதலோ, ஒன்றுமில்லாத இடத்தில் ஒன்றை உண்டாக்கிக் காட்டுதலோ செய்தல். அதுபோலவே ஸ்திரீயுடன் பொருந்திக் காமசெயம் செய்வதில் காமம் பொருந்தும் உடற்கூறுகளையெல்லாம் மாற்றிக் கொண்டு இன்ப வடிவினனாக எழுந்தருளினன்.

இமயத் தியல்புடை அம்பொற் பொலிதரு புலியூர் - இமயம் போன்று உயர்ந்து விளங்குவதும், பொன்னொளியுடன் கூடினதும், தன்னை யடைந்தாரை மீளத் திரும்பாதவாறு செய்வதும், பிரணவ சமாதியாகும். பிரணவத் தலைவன் பசுக்களுக்குத் தலைவரான சதாசிவர் ஆவர்.

புலியூர் - புலிக்குகையை அடைந்தவர் மீளாது போவர்; அது போலப் பிரணவ சமாதி யுறுவோர் மீண்டும் பிறவிக்கு வாரார்.

உமை - சித்சத்தி.
காளி - குண்டலினி சத்தி.

இங்கு காலரூபமான சத்தி காளி எனப்பட்டது. இவள் வாயு பூதத் தலைவி.

சமாதி நிலையில் கால செயமும், அறிவின் விருத்தியும் உள்ள படியால் 'உமையொடு காளிக் கருளிய சிறுநகை' என்று கூறப்பட்டது.

தோற்றம் எங்கு உள்ளதோ அங்குதான் லயமும் சென்று முடிய வேண்டும்.

கீர்த்தித் திருவகவல் 'தில்லை மூதூராடிய திருவடி' என்று தொடங்கி, 'பொலி தரு புலியூர்ப் புக்கினி தருளினன், ஒலிதரு கயிலை யுயர்கிழ வோனே' என்று முடிகிறது. தோற்றமும் முடிவும் ஒரே இடம் என்ற உண்மையைப் புலப்படுத்தும் நயம் கண்டு மகிழ்க.

★ ★ ★

# 9. திருவண்டப் பகுதி

## (சிவனது தூல சூக்குமத்தை வியந்தது)

### திருச்சிற்றம்பலம்

அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்
அளப்பருந் தன்மை வளப்பெருங் காட்சி
ஒன்றனுக் கொன்று நின்றெழில் பகரின்
நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன
இன்னுழை கதிரின் துன்னணுப் புரையச்

சிறிய வாகப் பெரியோன் றெரியின்
வேதியன் றொகையொடு மாலவன் மிகுதியும்
தோற்றமும் சிறப்பும் ஈற்றொடு புணரிய
மாப்பே ரூழியும் நீக்கமும் நிலையும்
சூக்கமொடு தூலத்துச் சூறை மாருதத்

தெறியது வளியிற்
கொட்கப் பெயர்க்குங் குழகன் முழுவதும்
படைப்போற் படைக்கும் பழையோன் படைத்தவை
காப்போற் காக்குங் கடவுள் காப்பவை
கரப்போன் கரப்பவை கருதாக்

கருத்துடைக் கடவுள் திருத்தகும்
அறுவகைச் சமயத் தறுவகை யோர்க்கும்
வீடுபே றாய்நின்ற விண்ணோர் பகுதி
கீடம் புரையுங் கிழவோன் நாடொறும்
சுருக்கினிற் சோதி அமைத்தோன் திருத்தகு

மதியிற் றண்மை வைத்தோன் திண்டிறல்
தீயின் வெம்மை செய்தோன் பொய்தீர்
வானிற் கலப்பு வைத்தோன் மேதகு
காலின் ஊக்கங் கண்டோன் நிழல்திகழ்
நீரில் இன்சுவை நிகழ்ந்தோன் வெளிப்பட

மண்ணிற் றிண்மை வைத்தோன் என்றென்
றெனைப்பல கோடி யெனைப்பல பிறவும்
அனைத்தனைத் தவ்வயின் அடைத்தோன் அஃதான்று
முன்னோன் காண்க முழுதோன் காண்க
தன்னே ரில்லோன் தானே காண்க

ஏனத் தொல்லெயி றணிந்தோன் காண்க
கானப் புலியுரி யரையோன் காண்க
நீற்றோன் காண்க நினைதொறும் நினைதொறும்
ஆற்றேன் காண்க அந்தோ கெடுவேன்
இன்னிசை வீணையில் இசைந்தோன் காண்க

அன்னதொன் றவ்வயின் அறிந்தோன் காண்க
பிரமன் காண்க பழையோன் காண்க
பிரமன்கால் காணாப் பெரியோன் காண்க
அற்புதன் காண்க அநேகன் காண்க
சொற்பதங் கடந்த தொல்லோன் காண்க

சித்தமுஞ் செல்லாச் சேட்சியன் காண்க
பத்தி வலையிற் படுவோன் காண்க
ஒருவன் என்னும் ஒருவன் காண்க
வரிபொழின் முழுதாய் விரிந்தோன் காண்க
அணுந்தருந் தன்மையி லையோன் காண்க

இணைப்பரும் பெருமையில் ஈசன் காண்க
அரியதில் அரிய அரியோன் காண்க
மருவியெப் பொருளும் வளர்ப்போன் காண்க
நூலுணர் புணரா நுண்ணியோன் காண்க
மேலொடு கீழாய் விரிந்தோன் காண்க

அந்தமும் ஆதியும் அகன்றோன் காண்க
பந்தமும் வீடும் படைப்போன் காண்க
நிற்பதும் செல்வதும் ஆனோன் காண்க
கற்பமும் இறுதியும் கண்டோன் காண்க
யாவரும் பெறவுறும் ஈசன் காண்க

தேவரும் அறியாச் சிவனே காண்க
பெண் ஆண் அலியெனும் பெற்றியன் காண்க
கண்ணா லியானும் கண்டேன் காண்க
அருணனி சுரக்கும் அமுதே காண்க
கருணையின் பெருமை கண்டேன் காண்க

புவனியிற் சேவடி தீண்டினன் காண்க
சிவனென யானுந் தேறினன் காண்க
அவனெனை யாட்கொண் டருளினன் காண்க
குவளைக் கண்ணி கூறன் காண்க
அவளும் தானும் உடனே காண்க

பரமா னந்தப் பழங்கட லதுவே
கருமா முகிலிற் றோன்றித்
திருவார் பெருந்துறை வரையி லேறித்
திருத்தகு மின்னொளி திசைதிசை விரிய
ஐம்புலப் பந்தனை வாளர விரிய

வெந்துயர்க் கோடை மாத்தலை கரப்ப
நீடெழிற் றோன்றி வாளொளி மிளிர
எந்தம் பிறவியிற் கோப மிகுத்து
முரசறிந்து மாப்பெருங் கருணையின் முழங்கிப்
பூப்பரை யஞ்சலி காந்தள் காட்ட

எஞ்சா இன்னருள் நுண்டுளி கொள்ளச்
செஞ்சுடர் வெள்ளந் திசைதிசை தெவிட்ட, வரையுறக்
கேதக் குட்டங் கையற வோங்கி
இருமுச் சமயத் தொருபேய்த் தேரினை
நீர்நசை தரவரு நெடுங்கண் மான்கணம்

தவப்பெரு வாயிடைப் பருகித் தளர்வொடும்
அவப்பெருந் தாப நீங்கா தசைந்தன
ஆயிடை வானப் பேரியாற் றகவயின்
பாய்ந்தெழுந் தின்பப் பெருஞ்சுழி கொழித்துச்
சுழித்தெம் பந்தமாகக் கரைபொரு தலைத்திடித்

தூழூ ழோங்கிய நங்கள்
இருவினை மாமரம் வேர்பறித் தெழுந்
துருவ அருணீர் ஒட்டா அருவரைச்
சந்தின் வான்சிறை கட்டி மட்டவிழ்
வெறிமலர்க் குளவாய் கோலி நிறையகில்

மாப்புகைக் கரைசேர் வண்டுடைக் குளத்தின்
மீக்கொள் மேன்மேன் மகிழ்தலி னோக்கி
அருச்சனை வயலுள் அன்புவித் திட்டுத்
தொண்ட வுழவர் ஆரத் தந்த
அண்டத் தரும்பெறன் மேகன் வாழ்க

கரும்பணக் கச்சைக் கடவுள் வாழ்க
அருந்தவர்க் கருளும் ஆதி வாழ்க
அச்சந் தவிர்த்த சேவகன் வாழ்க
நிச்சலும் ஈர்த்தாட் கொள்வோன் வாழ்க
சூழிருந் துன்பந் துடைப்போன் வாழ்க

எய்தினர்க் காரமு தளிப்போன் வாழ்க
கூரிருட் கூத்தொடு குனிப்போன் வாழ்க
பேரமைத் தோளி காதலன் வாழ்க
ஏதிலர்க் கேதில்எம் இறைவன் வாழ்க
காதலர்க் கெய்ப்பினில் வைப்பு வாழ்க

நச்சர வாட்டிய நம்பன் போற்றி
பிச்செமை யேற்றிய பெரியோன் போற்றி
நீற்றொடு தோற்ற வல்லோன் போற்றி, நாற்றிசை
நடப்பன நடா அய்க் கிடப்பன கிடாஅய்
நிற்பன நிறீஇச்

சொற்பதங் கடந்த தொல்லோன்
உள்ளத் துணர்ச்சியிற் கொள்ளவும் படாஅன்
கண்முதற் புலனாற் காட்சியு மில்லோன்
விண்முதற் பூதம் வெளிப்பட வகுத்தோன்
பூவி னாற்றம் போன்றுயர்ந் தெங்கும்

ஒழிவற நிறைந்து மேவிய பெருமை
இன்றெனக் கெளிவந் தருளி
அழிதரும் ஆக்கை யொழியச் செய்த ஒண்பொருள்
இன்றெனக் கெளிவந் திருந்தனன் போற்றி
அளிதரும் ஆக்கை செய்தோன் போற்றி

ஊற்றிருந் துள்ளங் களிப்போன் போற்றி
ஆற்றா இன்பம் அலர்ந்தலை செய்யப்
போற்றா ஆக்கையைப் பொறுத்தல் புகலேன்
மரகதக் குவாஅன் மாமணிப் பிறக்கம்
மின்னொளி கொண்ட பொன்னொளி திகழத்

திசைமுகன் சென்று தேடினர்க் கொளித்தும்
முறையுளி யொற்றி முயன்றவர்க் கொளித்தும்
ஒற்றுமை கொண்டு நோக்கு முள்ளத்
துற்றவர் வருந்த வுறைப்பவர்க் கொளித்தும்
மறைத்திறன் நோக்கி வருந்தினர்க் கொளித்தும்

இந்தத் திரத்திற் காண்டுமென் றிருந்தோர்க்
கத்தந் திரத்தின் அவ்வயின் ஒளித்தும்
முனிவற நோக்கி நனிவரக் கௌவி
ஆணெனத் தோன்றி அலியெனப் பெயர்ந்து
வாணுதற் பெண்ணென வொளித்துஞ் சேண்வயின்

ஐம்புலன் செலவிடுத் தருவரை தொறும்போய்த்
துற்றவை துறந்த வெற்றுயி ராக்கை
அருந்தவர் காட்சியுட் டிருந்த வொளித்தும்
ஒன்றுண் டில்லை யென்றறி வொளித்தும்
பண்டே பயிறொறும் இன்றே பயிறொறும்

ஒளிக்குஞ் சோரனைக் கண்டனம்
ஆர்மின் ஆர்மின் நாண்மலர்ப் பிணையலின்
தாள்தளை யிடுமின்
சுற்றுமின் சூழ்மின் தொடர்மின் விடேன்மின்
பற்றுமின் என்றவர் பற்றுமுற் றொளித்தும்

தன்னே ரில்லோன் தானே யானதன்மை
என்னே ரனையோர் கேட்கவந் தியம்பி
அறைகூவி யாட்கொண் டருளி
மறையோர் கோலங் காட்டி யருளலும்
உளையா அன்பெண் புருக வோலமிட்

டலைகடற் றிரையின் ஆர்த்தார்த் தோங்கித்
தலைதடு மாறா வீழ்ந்துபுரண் டலறிப்
பித்தரின் மயங்கி மத்தரின் மதித்து
நாட்டவர் மருளவும் கேட்டவர் வியப்பும்
கடக்களி றேற்றாத் தடப்பெரு மதத்தின்

ஆற்றே னாக அவயவஞ் சுவைதரு
கோற்றேன் கொண்டு செய்தனன்
ஏற்றார் மூதூர் எழிலகை யெரியின்
வீழ்வித் தாங்கன்
றருட்பெருந் தீயின் அடியோம் அடிக்குடில்

ஒருத்தரும் வழாமை யொடுக்கினன்
கடக்கையின் நெல்லிக் கனியெனக் காயினன்
சொல்லுவ தறியேன் வாழி முறையோ
தரியேன் நாயேன் தானெனைச் செய்தது
தெரியேன் ஆவா செத்தேன் அடியேற்

கருளிய தறியேன் பருகியும் ஆரேன்
விழுங்கியும் ஒல்ல கில்லேன்
செழுந்தண் பாற்கடற் றிரைபுரைவித்
துவாக்கட னள்ளுநீர் உள்ளகந் ததும்ப
வாக்கிற்ந் தமுதம் மயிர்க்கால் தோறும்

தேக்கிடச் செய்தனன் கொடியேன் ஊன்றழை
குரம்பை தோறும் நாயுட லகத்தே
குரம்பைகொண் டின்றேன் பாய்த்தி நிரம்பிய
அற்புத மான அமுத தாரைகள்
எற்புத் துளைதொறும் ஏற்றினன் உருகுவ

துள்ளங் கொண்டோர் உருச்செய் தாங்கெனக்
கள்ளூ றாக்கை யமைத்தனன் ஒள்ளிய
கன்னற் கனிதேர் களிறெனக் கடைமுறை
என்னையும் இருப்ப தாக்கினன் என்னிற்
கருணை வான்றென் கலக்க

அருளொடு பராவமு தாக்கினன்
பிரமன்மால் அறியாப் பெற்றி யோனே.

திருச்சிற்றம்பலம்

திருவாசகத்தின் இந்தப் பகுதி சித்தர்களின் தத்துவ இலக்கியத்திற்கு ஒரு கவிச்சான்றாக அமைந்துள்ளது.

என்னுடைய ஞானாசிரியர்களான சிக்கனம்பாறை தவத்திரு கண்ணப்ப சுவாமிகளும், சிவயோகி இரத்தின சபாபதியாரும், சித்தர்களின் ஞானப் பயிற்சிகளுக்கு உரிய பாடங்களை நடத்தும் பொழுதெல்லாம், திருவண்டப் பகுதியிலிருந்து பல மேற்கோள்களை எடுத்துக் கூறுவதுண்டு. மரபு வழியிலே இந்தப் பாடலுக்கு நாம் கொள்கிற பொருளில் பிசகொன்றும் இல்லை. ஆனால் இந்தச் செய்யுளின் கருத்துக்களிலே உள்ள தத்துவங்கள், எத்தனை ஆழமானவை என்பதை அறிந்து கொள்வதற்குரிய பூட்டின் திறவுகோல், ஞானிகளிடமே உள்ளது. அதிலும் திருவண்டப் பகுதியிலே பல ஞானப் பூட்டுக்கள் 'சிக்கென'ப் பிடித்துக் கொண்டுள்ளன. இவற்றைத் திறப்பதற்குரிய திறவுகோல்கள் குருவின் நேர்முக வாயிலாகவே பெறவியலும். எனினும் ஆய்வு முறையிலே உரைவிளக்கமாகச் சிவயோகியாரின் குறிப்புகளிலிருந்து சில பகுதிகளை இங்கே தருகிறேன். திருவண்டப் பகுதியைச் சித்தர்களின் கண்கொண்டு பார்ப்பதற்கு முன்பாக, இந்த விளக்கங்களை மனத்தில் வாங்கிக் கொண்டால், மணிவாசகர் நமக்குக் காட்டுகிற உலகம் எத்தனை பெரிய அகஉலகம் என்பது புலப்படும். அந்தச் சில பகுதிகளைத் திருவண்டப் பகுதிக்கு ஒரு முகமன் உரையாகக் கொள்ளலாம். அந்த முகமன் வருமாறு:-

"உயிர் வாழும் ஜந்துக்களுக்குக் காணும் பகுதி தூல உடலாகும். புறக்கண்ணுக்குக் காணமுடியாத சூக்கும உடல் உள்ளது. சூக்குமம் காரணமாயும், தூலம் காரியமாகவும் உள்ளது. தூல உடலைப் படைக்கும் தேவர்களும், குணத்தைப் படைக்கும் தேவ வர்க்கமும், படைத்தவைகளை அழிப்பதைச் செய்யும் தேவ வர்க்கமும் உள்ளனர். படைப்பில் செயல்படுவது பிரமனைத் தலைவனாகக் கொண்ட தேவ வர்க்கமாகும். இவர்கள் பூதாகாயத்தில் தொழிற்படுவர். குணம் பற்றிய திருமால் குணமாகிய ஆகாயத்தில் தனது தேவர் கூட்டத்தில் தொழிற்படுவர். உருத்திரர் குணரகித ஆகாயத்தில் தனது தேவர் கூட்டத்துடன் தொழிற்படுவர். இவைஅல்லாத சூரியாகாயம் சித்தாகாயம் ஆகிய ஆகாயக் கூற்றிற்கு மகேசனும் சதாசிவரும் உள்ளனர். இவர்கள் எல்லாம் ஆகாயத்திலுள்ள அணுக்களினூடே சங்கல்பத்தால் தொழிற்படுத்துபவர்கள். அண்டம் என்றால் ஆகாயம் என்று பொருள். ஆகாய அணுக்களின் பரிமாணம் சூரிய கிரணத்தைப் போல நுண்ணியவை என்று குறிப்பிட்டுள்ளார் திருமூலர். ஒரு பசுவின் உரோமத்தை ஒரு கோடியாகப் பிளந்தால், ஜீவாணுவின் பிரமாணம் என்றார். இத்தலைப்பு ஆகாயக் கூற்றை விளக்கும் பகுதியாகும். ஆகாயத்திலே தேவர்கள் இருந்து உயிர்களைத் தொழிற்படுத்துவதால் இத்தலைப்பு 'திருவண்டப் பகுதி' எனப் பெயர் கொடுக்கப்பட்டுள்ளது. தூல உடலைத் தாங்கும் சூக்கும ஆகாயத்தைப் பற்றிய விளக்கம் இத்தலைப்பில் விளக்கப்படுகிறது.

ஆராயுமிடத்து மனிதரின் ஆகாயக் கூறாலாகிய அண்டாகாய அணுக்கள் அளவிட்டுச் சொல்ல முடியாதனவாகும். அவை குவிந்துள்ள நிலைமையையும், அழகிய ஒளித்தோற்றத்தையும் ஒன்றுக் கொன்று தொடர்ந்து நின்ற அழகைச் சொல்லுமிடத்து, அவை நூற்றொரு முடிபுகளைக் கொண்டு செல்வனவாகவும், கீழும் மேலும் சென்றுகொண்டிருப்பனவாகவும் இருக்கின்றன.

வீட்டில் நுழைகின்ற சூரிய கிரணத்தைப் போன்ற நெருங்கிய அணுக்களில் நுண்ணியனாய்ப் பெரியோனான சிவம் அறிவுருவாய் விளங்கினன்.

பிரமனைத் தலைவனாகக் கொண்ட பூதாகாய இயக்குநர் ஆகிய தேவர்களையும், திருமாலைத் தலைவனாகக் கொண்ட மிகுந்த கூட்டத்தோடு கூடிய குணமய ஆகாயத் தேவர்களையும், உலகிற்கு உற்பத்தியையும் நிலைபெறுதலையும் செய்யும் தேவர் கூட்டத்துடன் இறுதியைச் செய்யும் உருத்திர கணத் தேவர்களையும், இறுதியை அடையச் செய்யும் மிகப்பெரிய ஊழிக் காலமும், அவ்வழியினின்றும் மீளப்படைப்பவனும், மீள முன்போல் பூமியில் நிலைபெறச் செய்பவனும், சூக்கும தேகத்தையும் தூல தேகத்தையும் வீசுகிற சூறைக் காற்றால் வீசப்படுவதில் அகப்பட்ட பொருள்போல, அவைகளின் நிலையைச் சுழலச் செய்பவனும் ஆகிய அழகன்.

உலகம் பல வேறுபட்ட யோனிகளாய் உள்ளது. ஒவ்வொரு பிரமனும் ஒவ்வொருவகை சிருஷ்டியில் ஈடுபடுகின்றனன். அவ்விதமாகப் பலவேறுபட்ட பிரமர்களைத் தகுதிநோக்கி அவ்வப்பதவியில்

வைத்தது சிவமேயாகும். சிருஷ்டித்தவைகளைப் பாதுகாக்கப் பல காப்புக் கடவுளார் தேவைப்படும். அவ்வகையான காப்புக் கடவுள்களைப் பதவியில் அமைத்தது சிவமேயாகும்.

காத்தவைகளை அழிக்கும் நியதியால் தொழிற்படுத்த, அநேக உருத்திரர்கள் தேவைப்படும். அவ்வாறான அநேக உருத்திரர்களைப் படைத்தவன் சிவமேயாகும். இவ்விதமான முத்தொழில் நியமனம் செய்பவன் சிவமேயாயினும், அவன் இவ்வாறு என்று சங்கற்பம் செய்து அமைக்கவில்லை. சந்நிதான மாத்திரத்தில், அவரவர் பக்குவத்திற்கேற்ப, அவை அவை நடைபெறுகின்றன.

சிறப்புப் பொருந்திய அறுவகைச்சமயத்தைச்சார்ந்த அறுவகைச் சமயம் பற்றியவர்க்கும், வீடுபேற்றை அளிப்பவன் சிவபெருமான் ஒருவனே ஆவர். ஏனெனில், சமயம் படைத்த பெரியோர்களின் ஆற்றலையும் சிவத்தையும் ஒப்புநோக்கும்போது, சமயங்கண்ட பெரியோரகள் பேரறிவுப் பொருளான சிவத்தின்முன் புழுப் போலாவர்.

இருமுச் சமயத் தொருபேய்த் தேரினை
நீர்நசை தரவரும் நெடுங்கண் மான்கணம்
தவப்பெரு வாயிடைப் பருகித் தளர்வொடும்
அவப்பெருந் தாபம் நீங்கா தசைந்தன

திருமூலர் இக்கருத்தை மிகத் தெளிவாகப் புறச்சமய தூஷணம், நிராகாரம், உட்சமயம் என்ற தலைப்புக்களில் விளக்கியுள்ளார். சமயம் சாமானியர்க்கு வேண்டப்படுவதே. ஆன்ம ஞானிக்குச் சமய மில்லை என்ற முடிவேதான்.

எல்லாச் சமய முடிவையும் வகுத்தவர்கள் அமரத்துவம் பெறாதவர்களேதான். தேகத்தில் உள்ள தலைவனை எங்கு சென்று தேடி அறிவது? அறிந்தவர்க்கு அவரவர் பக்குவத்தில் வெளிப்பட்டுருளுவன். எல்லா உருவமும், அகண்டத்தின் முன் ஒரு புழுப்போலச் சிறியனவாகவே கருதப்படும்.

காண்டற்கு அரிய சிவாதித்தருக்கு நாள்தோறும் ஒளிபெருகச் செய்தோன்; மனிதர்களிடம் இருந்தவேண்டிய பண்புகள் அமைய வேண்டும்; அவ்விதம் திருத்தும் முறையில் சந்திரமண்டலம் அறிவு பெற்றுச் சாந்தி பெருகும்படி செய்தோன்; வலிமையுடைய அக்கினிக் கூறில் வெப்பு மண்டலத்தை அமைத்தோன்.

காணப்படும் எவ்வுயிரும் மாயையின் தன்மையை யுடையவை என்றறிய, ஆகாயத்தில் சூக்கும ஒளி உருவை அமைத்தோன், மேன்மை பொருந்திய மனிதரிடத்து இனிய சுவையைப் படைத்தோன், மாயையினின்றும் வெளிப்பட்ட மண்ணிடத்து வலிமையை அமைத்தவன், இவ்வாறாக எந்த நாளிலும் எவ்வளவு பல கோடியாகியவைகளிலும், எவ்வளவோ பல பொருள்களிலும், அவ்வவற்றின் தன்மையை அவ்வப் பொருள்களிலும், அமைத்து வைத்தவன்.

புறத்தே உள்ள பௌதிகச் சூரியனிடம் ஒளி இயல்பாக உள்ளது. அது நாள்தோறும் ஒப்படைக்கப்படுவதில்லை. மனிதனின் ஆன்ம சூரியனேதான் தினந்தினம் ஒளி பெருகச் செலுத்தப்படுவது. அது போலவே மனிதனிடம் உள்ள நற்பண்புகள் பெருக்கமுறும் வகையில் செலுத்தப்படுவதைத்தான் 'திருத்தகு மதி' என்று கூறப்பட்டுள்ளது. பக்குவம் பெறாதுள்ள நிலையில் கீழுள்ள அக்கினி மண்டலம் தகிப்பதைத் 'திண்திறல் தீயில் வெம்மை செய்தோன்' என்று கூறப்பட்டுள்ளது. சீவனுக்கு ஆகாயப்பற்று மிகுந்தபோது, புறத்தே செல்லும் அறிவுகளை ஆகாயத்தில் கலக்குமாறு செய்தவன். சீவன் புறநோக்கம் உள்ளபோது பிராண கதியை ஒருவிதமாகவும், அகநோக்குக் கொண்டபோது வேறுவிதமாகவும் சலிக்கச் செய்தவன்.

ஆகாயக் கூறில் விளங்கும் சீவனை அறிய, சீவனின் பூமிக்கூறு புறநோக்குதலில் சலிக்காது திண்மையாய் இருக்குமாறு செய்தவன். அதாவது ஜெயத்தை அறிந்தவன்.

இவ்வாறாக எவ்வளவோ சீவகோடிகளுக்கும், அவை அவைகளிலும் பொருந்தி, அவை அவை வளருமாறு, இயல்பினை அமைத்துக் கொடுத்தவன் சிவமேயாகும். இவ்விதமான இயல்பினை மனிதனுக்கு உண்டாக்கிக் கொள்ள இயலாது.

ஆகாயம் பூதாகாயம், குணமய ஆகாயம், குணரகித ஆகாயம், சூரியாகாயம், சித்தாகாயம் என்று ஐவகையாக உள்ளது. சீவனுக்குத் தகுதிநோக்கி எவை எவைகளுடன் பொருத்தவேண்டுமோ அவ்விதம் பொருத்தும் நியதிக்குத் தலைவன் சிவமேயாகும்.

கற்பகம் என்பது ஒரு பெருங்கால அளவு. நானூற்றுமுப்பத்தி இரண்டு கோடி வருடம் கொண்டது பிரமனது ஒரு நாள். அவ்விதம் நூறாண்டு கொண்டது ஒரு பிரமன் ஆயுசு என்பர். அநேகம் பிரமர்களைக் கொண்ட சிவம் என்னும்போது, அவன் கற்பத்தால் கணக்கிடும் முதல் சிருஷ்டியையும் முடிவான இறுதியையும் கண்டு கொண்டிருப்பவன் என்பது தெளிவாம்.

இந்திரிய மயக்கம் உள்ளவரையில் பிறவியின் சங்கிலிப் பிணைப்பு உண்டு. இந்திரியங்கள் தொழிலற்றபோது பிறவியின் எல்லையும் முடிவுறும். அதனால் 'எந்தம் பிறவியில் கோபம் மிகுத்து' என்றார். 'நீ பிறந்தது போதும்; பல பிறவி எடுத்து வருந்தி விட்டாய்; இனிமேல் பிறக்கவேண்டாம்' என்றபடி!

இந்திரியங்களின் வழிச்செல்லும் மனத்தைக் கட்டும் இடம் ஒன்று வேண்டும். அதுவே 'மாப்பெருங் கருணையின் முழங்கி முரசு எறிந்து' எனப்பட்டது. இதைத் திருவடி பற்றல், நாத சம்மியம், திருச்சிலம்போசை வழிநிற்றல் எனப் பலவாறாகக் கூறுவர். இதைப் பரையோகம், பரைபோகம், பரையில் அதீதம் என்றும் கூறுவர். நாதசம்மியத்தால் அகப்பார்வையில் மனம் பதிவதைப் பக்தர்கள் சிவபூசையில் சிரசின் மேல் கையை விரித்தும் குவித்தும் துவாதசாந்த வெளியில் வைப்பதுபோல் விளங்குவதில் அங்கு ஒரு பச்சை ஒளி தோன்றும்.

காந்தள் - கார்த்திகை பூ. இது மஞ்சளும் பச்சையும் கலந்த ஒளியாக விளங்கும்.

இந்த நிலையில் கடைக்கண்களில் நீர் துளிக்கும். இது அன்பின் அறிகுறி. இவ்விதம் பொருந்தும்போது மூலாதாரத்தில் காம வாயுவான செவ்வொளி சிரசைச் சூழ்ந்தும், அதன் மேலும், சென்று விளங்குவதில் ஆறு ஆதார பத்மங்களில் பிரவாகமெல்லாம் சுழுமுனா நாடியில் பொருந்தி ஏகவெளியாய் விளங்கிற்று.

ஆடியகால் என்பது கூத்தப்பெருமானின் இடது பாதமாகும். ஊன்றிய கால் வலது பாதமாகும்.ஓசையுண்டாவது தூக்கிய காலினால்தான். இடக்கண் பார்வையை வலப்புறமாக மேலேற்றி நில் என்பதே திருவடியின் பொருள். இதனால் பெறப்படுவதைக் கைகளின் குறிகளால் உணர்த்தப்பட்டது காண்போம். இடக்கையில் கீழுள்ளது தூக்கிய இடக்காலையே சுட்டி நிற்பதாக உள்ளது. இது யானைத் துதிக்கை போன்று உள்ளதால் கஜ ஹஸ்தம் என்பர். மற்றொருவகை இந்த நிலையில் நிற்பதை அறிந்தால் நீ காப்பாற்றப்படுவை என்ற பொருளுடைய அபய ஹஸ்தமாகும். இதன்மேல் உள்ள இடக்கை அக்கினியை ஏந்தியுள்ளது. முன்னர் , இடநாடிக் காமக் கலையாகத் தொழிற்பட்டபோதுமூல வாயுவாக இருந்தது. காமத்துக்குக் கீழப்பார்வை இயல்பு. கண்பார்வை மேனோக்கிய போது, காமமும் செயலற்றுக் காமாக்கினியே ஆன்ம தேஜஸாக மாறியது என்று பொருள். இதையே விந்து மண்டலம் என்ற பேரால் கூறுவர். இதனுடன் தொடர்பாகவே முன்னோ பின்னோ சிரசில் நாதம் உதிக்கும். நாதம் சிவஞானத்தால் அமைவது பிங்கலா நாடியில் உணர்த்தப்பட்டது. கூத்தப்பெருமான் திருக்கையில் உள்ளது உடுக்கையாகும். கூத்தன் திருமுடியில் உள்ளது ஆகாய கங்கை. இந்த அருளில் சாதகன் திளைப்பான் என்ற கருத்து. இவ்வகையாக அகர கலை, உகரகலை என்ற இரு நாடிகளால் அமைந்த பிரணவமே திருவாசி; இது சீவனின் அண்டகோசமாகும். இதுவே எட்டும் இரண்டும் உருவான இலிங்கமாகும். குண்டலினி மேலேறுவதில் வாயு ஊறுவது போன்ற ஒரு உணர்விருப்பதால், தேகமெங்கும் பாம்பை ஆபரணமாகக் காட்டப்பட்டுள்ளது. சந்திர மண்டல உதிப்பு தோளுக்கு மேல் அமைவது. இதைச் சோமவட்டம் என்பர். சந்திர தீபம் என்ற பேரால் கூறப்பட்டது. சந்திர தீபத்தின் அறிவை உணர்த்துபவன் சிவமேயாகும். பலர் குப்த வித்தை என்ற விஷயத்தை வெளிப்படையாகக் கூறவில்லை. தெளிவாகக் கூறினாலும் உணர்த்ததினாலன்றி உணரப்படாத விஷயமாகும்.

சீவவொளி உருவம் பற்றியபோது ஒளியற்று இருள் போலவே விளங்கியது. அமூர்த்தி சாதாக்கியம் விளங்கியபோது, தானே ஆகாய மயனாய்த் தேகம் தன்னிலும் வேறு என்ற அறிவு உதித்துவிடும். சீவவொளிக்கு அகண்டத்தன்மை அருளியது சிவம். அதில் விளங்கியது சிவசக்தியாதல் பற்றித் 'தன்னேரில்லோன் தானேயான தன்மை' என்று கூறப்பட்டது.

நாத தத்துவம் என்பது எவ்விதம் தொழிற்படுகிறது என்பதை நேர்முகமாகவும் மறைமுகமாகவும் விளக்கியுள்ளார்.

1. ஒரு கம்மியன் தனக்கு வேண்டியவாறு ஒரு உலோகத்தைச் செய்ய அளவிட்டுக் காய்ச்சி, பட்டறையில் அடித்து, கம்பி இழுத்துத் தொழிலுக்கேற்ற முறையில் செய்து கொள்ளுகிறான். இதற்கு முதல் நிலை உலைக்கள அக்கினியாகும். அதுபோலச் சித்தாக்கினி குண்டம் என்ற சிரசில் ஞானாக்கினியால் உண்டாவது நாத்வொளியாகும்.

2. அவ்வொளியையுடையவன் சீவனாயும் எழுப்புவோன் சிவமாயும் உள்ளது. அதனால் சீவன் பெண்தன்மை பெற்று ஆணுடன் அணைய விரும்பும் வேட்கைபோல் சீவன் விரும்பினபோதெல்லாம் சிவம் புணர்கிறது.

3. புணர்ச்சியில் ஈடுபட்டிருக்கும்போது, அவ்வின்பத்தில், சூழ் நிலையை மறத்தல் இயல்பு. அதுபோல் சிதாகாயத்தில் ஓயாது அலைமோதுதலைப் போன்ற கோஷம் அமைவதில் மூலாக்கினி சிரசை நோக்கிப் பாய்ந்து கொண்டிருக்கிறபடியால் கீழுள்ள இன்பசுகம்போல மேலேயும் ஒரு சுகநிலை அமைவதில் தாவுநிலை உடைய மனம் ஒருருவப் பற்றும் இல்லாதபடியால் இந்திரியங்களின் தலைவனான மனம் நிலைகுலைந்ததுடன் தனது இருப்பையும் மறந்தது.

முன்னர்க் கூறியபடி எனக்கு எளிவந்த கருணையின் பெருமையை யான் சொல்லுமாறு அறியேன். அவனை வழுத்தும் முறைமையையும் அறியேன். நாய்போன்ற இழிகுணமுடைய என்னைத் தானாக மாற்றி அமைத்தது என்ன காரணம் என்பதையும் நான் அறிய மாட்டேன். என்ன ஆச்சரியம்! உடலைக் கடந்து விட்டேன். அது எவ்விதம் செய்தனன் என்பதையும் அறியமாட்டேன்.

அந்த ஆனந்தத்தைப் பருகியும் நிறைவு பெற்றிலேன். முழுதுமாய் விழுங்கவும் முடிந்திலேன். செழுமையான குளிர்ச்சி பொருந்திய பாற்கடலின் அலைகலைபோல, சிதாகாயத்தில் சந்திர மண்டல ஒளியை அசைத்துக் கொண்டிருந்தன. நிறைமதி நாளில் பெருகும் கடலின் நீர் போல எனது சிதாகாய உள்ளம் மகிழ்ச்சியால் பொங்கிக் கொண்டிருந்தது. மனம் எண்ணுவதைவிட்டு நின்றது. தேகத்தையும் தேகத்தைச் சூழவும் அமுதமய ஒளி நிரம்பியது. அது என் ஒவ்வொரு ரோம கூபத்தினின்றும் பாய்வதைக் கண்டேன். நாயினேனது உடலில், எனது தேகத்தையே இருக்கையாகக் கொண்டு கொடியேனுடைய மாமிசம் தழைத்த இவ்வுடலில் முற்றிலும் இனிமையான தேனைப் பாய்ச்சினன்.

நிறைந்த ஆச்சரியம் மிக்க ஒளிக்கிரணங்களால் எலும்பை ஊடுருவும்படி செய்தனன். அவன்பால் அன்புகொண்டு உருகும் ஆனந்த மய கோசத்தை அமைத்து, அவ்விடத்து எனக்கு நித்தியானந்தத்தை அனுபவிக்குமாறு நித்திய தேகத்தைக் கொடுத்தருளினன். அது எது போலும் எனில், சிறந்த விளாங்கனியில் வேழம் என்ற பூச்சி பழத்தை உண்டு ஒட்டினை நிலைகுலையாது வைத்திருப்பது போன்று, எனது காரண தேகத்தை நிலைநிறுத்திக் காரியமான தேகத்தை அழித்து, உலகம் உள்ளளவும் என்னையும் அவனடியாக்கி இருப்பதாக்கினன்.

விளங்கனியை உண்ணும் புழுவை யானையின் பரியாய்ப் பேரால் 'வேழம்' என்று கூறுவர். 'ஒள்ளிய கன்னல் கனிதேர் களிறு' - சிறந்த சுவைமிக்க விளாங்கனியை வேழம் என்ற பூச்சி உள்ளுள்ள சதைப் பகுதியை உண்டுவிடடு ஓட்டை மாத்திரம் உருக்குலையாமல் வைத்திருக்கும்.

எனது ஆகாயக் கூறான சீவனில், கருணை மிக்க அவனது ஆகாய விருப்பம் கலக்க, அவனது சத்தியுடன் மேலான ஒளிமயமாகப் பிரமன் மாலறியாத பரமன் செய்தருளினன்.

செத்தேன் - என்றால் உடலைக் கடந்து அறிவுடன் பிரிந்து விட்டேன் என்றபடி. திருவாசகம் 'செத்திலாப்பத்து' அறிக.

பௌதிக சந்திரனுக்கும் கடலுக்கும் சம்பந்தம் உள்ளதுபோல் ஆன்மீக சந்திர மண்ட ஒளிக்கும் சீவனுக்கும் சம்பந்தம் உண்டு. வாக்கிறந்து எண்ணுவதை நீக்கி, எண்ணமே செயலாகும்போது வாக்காக மாறுகிறது. எண்ணற்ற அன்பில் வாக்குத் தொழில் இல்லை.

★ ★ ★

# 10. போற்றித் திருவகவல்

## (சகத்தின் உற்பத்தி)

திருச்சிற்றம்பலம்

நான்முகன் முதலா வானவர் தொழுதெழ
ஈரடி யாலே மூவுல களந்து
நாற்றிசை முனிவரும் ஐம்புலன் மலரப்
போற்றிசெய் கதிர்முடித் திருநெடு மாலன்
றடிமுடி யறியும் ஆதர வதனிற்

கடுமுரண் ஏன மாகி முன்கலந்
தேழ்தலம் உருவ இடந்து பின்னெய்த்
தூழி முதல்வ சயசய என்று
வழுத்தியுங் காணா மலரடி யிணைகள்
வழுத்துதற் கெளிதாய் வார்கட லுலகினில்

யானை முதலா எறும்பீ றாய
ஊனமி லியோனியின் உள்வினை பிழைத்தும்
மானுடப் பிறப்பினுள் மாதா வுதரத்
தீனமில் கிருமிச் செருவினிற் பிழைத்தும்
ஒருமதித் தான்றியின் இருமையிற் பிழைத்தும்

இருமதி விளைவின் ஒருமையிற் பிழைத்தும்
மும்மதி தன்னுள் அம்மதம் பிழைத்தும்
ஈரிரு திங்களிற் பேரிருள் பிழைத்தும்
அஞ்சு திங்களின் முஞ்சுதல் பிழைத்தும்
ஆறு திங்களின் ஊறலர் பிழைத்தும்

ஏழு திங்களிற் றாழ்புவி பிழைத்தும்
எட்டுத் திங்களிற் கட்டமும் பிழைத்தும்
ஒன்பதில் வருதரு துன்பமும் பிழைத்தும்
தங்க தசமதி தாயொடு தான்படுந்
துக்க சாகரத் துயரிடைப் பிழைத்தும்

ஆண்டுக டோறும் அடைந்தவக் காலை
ஈண்டியும் இருத்தியும் எனைப்பல பிழைத்தும்
காலை மலமொடு கடும்பகற் பசிநிசி
வேலை நித்திரை யாத்திரை பிழைத்தும்
கருங்குழற் செவ்வாய் வெண்ணகைக் கார்மயில்

ஒருங்கிய சாயல் நெருங்கியுண் மதர்த்துக்
கச்சற நிமிர்ந்து கதிர்த்து முன்பணைத்
தெய்த்திடை வருந்த எழுந்து புடைபரந்
தீர்க்கிடை போகா இளமுலை மாதர்தம்
கூர்த்த நயனக் கொள்ளையிற் பிழைத்தும்

பித்த வுலகர் பெருந்துறைப் பரப்பினுள்
மத்தக் களிறெனும் அவாவிடைப் பிழைத்தும்
கல்வி யென்னும் பல்கடற் பிழைத்தும்
செல்வ மென்னும் அல்லலிற் பிழைத்தும்
நல்குர வென்னுந் தொல்விடம் பிழைத்தும்

புல்வரம் பாய பலதுறை பிழைத்தும்
தெய்வம் என்பதோர் சித்தமுண் டாகி
முனிவி லாததொர் பொருளது கருதலும்
ஆறு கோடி மாயா சத்திகள்
வேறு வேறுதம் மாயைகள் தொடங்கின

ஆத்த மானார் அயலவர் கூடி
நாத்திகம் பேசி நாத்தழும் பேறினர்
சுற்றம் என்னுந் தொல்பசுங் குழாங்கள்
பற்றி யழைத்துப் பதறினர் பெருகவும்
விரத மேபர மாகவே தியரும்

சரத மாகவே சாத்திரங் காட்டினர்
சமய வாதிகள் தத்தம் மதங்களே
அமைவ தாக அரற்றி மலைந்தனர்
மிண்டிய மாயா வாதம் என்னும்
சண்ட மாருதஞ் சுழித்தடித் தாஅர்த்

துலோகா யதனெனும் ஒண்டிறற் பாம்பின்
காலாபே தத்த கடுவிடம் எய்தி
அதிற்பெரு மாயை யெனைப்பல சூழவும்
தப்பா மேதாம் பிடித்தது சலியாத்
தழலது கண்ட மெழுகது போலத்

தொழுதுளம் உருகி யழுதுடல் கம்பித்து
ஆடியும் அலறியும் பாடியும் பரவியும்
கொடிறும் பேதையும் கொண்டது விடாதெனும்
படியே யாகிநில் லிடையறா அன்பிற்
பசுமரத் தாணி யறைந்தாற் போலக்

கசிவது பெருகிக் கடலென் மறுகி
அகங்குழைந் தனுகுல மாய்மெய் விதிர்த்துச்
சகம்பே யென்று தம்மைச் சிரிப்ப
நாணது வொழிந்து நாடவர் பழித்துரை
பூணது வாகக் கோணுத லின்றிச்

சதுரிழந் தறியாமல் கொண்டு சாருங்
கதியது பரமா அதிசய மாகக்
கற்றா மனமெனக் கதறியும் பதறியும்
மற்றோர் தெய்வம் கனவிலும் நினையா
தருபரத் தொருவன் அவனியில் வந்து

குருபர னாகி யருளிய பெருமையைச்
சிறுமையென் றிகழாதே திருவடி யிணையைப்
பிறிவினை யறியா நிழலது போல
முன்பின் னாகி முனியா தத்திசை
என்புநைந் துருகி நெக்குநெக் கேங்கி

அன்பெனும் ஆறு கரையது புரள
நன்புல னொன்றி நாதவென் றரற்றி
உரைதடு மாறி உரோமஞ் சிலிர்ப்பக்
கரமலர் மொட்டித் திருதய மலரக்
கண்களி கூர நுண்டுளி யரும்பச்

சாயா அன்பினை நாடொறுந் தழைப்பவர்
தாயே யாகி வளர்த்தனை போற்றி
மெய்தரு வேதிய னாகி வினைகெடக்
கைதர வல்ல கடவுள் போற்றி
ஆடக மதுரை அரசே போற்றி

கூட விலங்கு குருமணி போற்றி
தென்றில்லை மன்றினு ளாடி போற்றி
இன்றெனக் காரமு தானாய் போற்றி
மூவா நான்மறை முதல்வா போற்றி
சேவார் வெல்கொடிச் சிவனே போற்றி

மின்னா ருருவ விகிர்தா போற்றி
கன்னா ருரித்த கனியே போற்றி
காவாய் கனகக் குன்றே போற்றி
ஆவா என்றனக் கருள்வாய் போற்றி
படைப்பாய் காப்பாய் துடைப்பாய் போற்றி

இடரைக் களையும் எந்தாய் போற்றி
ஈச போற்றி இறைவ போற்றி
தேசப் பளிங்கின் திரளே போற்றி
அரைசே போற்றி அமுதே போற்றி
விரைசேர் சரண விகிர்தா போற்றி

வேதி போற்றி விமலா போற்றி
ஆதி போற்றி அறிவே போற்றி
கதியே போற்றி கனியே போற்றி
நதிசேர் செஞ்சடை நம்பா போற்றி
உடையாய் போற்றி உணர்வே போற்றி

கடையே னடிமை கண்டாய் போற்றி
ஐயா போற்றி அணுவே போற்றி
சைவா போற்றி தலைவா போற்றி
குறியே போற்றி குணமே போற்றி
நெறியே போற்றி நினைவே போற்றி

வானோர்க் கரிய மருந்தே போற்றி
ஏனோர்க் கெளிய இறைவா போற்றி
மூவேழ் சுற்ற முரணுறு நரகிடை
ஆழா மேயருள் அரசே போற்றி
தோழா போற்றி துணைவா போற்றி

வாழ்வே போற்றியென் வைப்பே போற்றி
முத்தா போற்றி முதல்வா போற்றி
அத்தா போற்றி அரனே போற்றி
உரையுணர் விறந்த வொருவ போற்றி
விரிகட லுலகின் விளைவே போற்றி

அருமையி லெளிய அழகே போற்றி
கருமுகி லாகிய கண்ணே போற்றி
மன்னிய திருவருண் மலையே போற்றி
என்னையு மொருவ னாக்கி யிருங்கழற்
சென்னியில் வைத்த சேவக போற்றி

தொழுதகை துன்பந் துடைப்பாய் போற்றி
அழிவிலா வானந்த வாரி போற்றி.
அழிவது மாவதுங் கடந்தாய் போற்றி
முழுவது மிறந்த முதல்வா போற்றி
மானேர் நோக்கி மணாளா போற்றி

வானகத் தமரர் தாயே போற்றி
பாரிடை யைந்தாய்ப் பரந்தாய் போற்றி
நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி
தீயிடை மூன்றாய்த் திகழ்ந்தாய் போற்றி
வளியிடை இரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி

வெளியிடை யொன்றாய் விளைந்தாய் போற்றி
அளிபவ ருள்ளத் தமுதே போற்றி
கனவிலுந் தேவர்க் கரியாய் போற்றி
நனவிலு நாயேற் கருளினை போற்றி
இடைமரு துறையும் எந்தாய் போற்றி

சடையிடைக் கங்கை தரித்தாய் போற்றி
ஆரு ரமர்ந்த அரசே போற்றி
சீரார் திருவை யாறா போற்றி
அண்ணா மலையெம் அண்ணா போற்றி
கண்ணா ரமுதக் கடலே போற்றி

ஏகம் பத்துறை யெந்தாய் போற்றி
பாகம் பெண்ணுரு வானாய் போற்றி
பராய்த்துறை மேவிய பரனே போற்றி
சிராப்பள்ளி மேவிய சிவனே போற்றி
மற்றோர் பற்றிங் கறியேன் போற்றி

குற்றா லத்தெங் கூத்தா போற்றி
கோகழி மேவிய கோவே போற்றி
ஈங்கோய் மலையெம் எந்தாய் போற்றி
பாங்கார் பழனத் தழகா போற்றி
கடம்பூர் மேவிய விடங்கா போற்றி

அடைந்தவர்க் கருளும் அப்பா போற்றி
இத்தி தன்னின் கீழிடு மூவர்க்
கத்திக் கருளிய அரசே போற்றி
தென்னா டுடைய சிவனே போற்றி
எந்நாட் டவர்க்கும் இறைவா போற்றி

ஏனக் குருளைக் கருளினை போற்றி
மானக் கயிலை மலையாய் போற்றி
அருளிட வேண்டும் அம்மான் போற்றி
இருள்கெட அருளும் இறைவா போற்றி
தளர்ந்தேன் அடியேன் தமியேன் போற்றி

களங்கொளக் கருத அருளாய் போற்றி
அஞ்சே லென்றிங் கருளாய் போற்றி
நஞ்சே யமுதா நயந்தாய் போற்றி
அத்தா போற்றி ஐயா போற்றி
நித்தா போற்றி நிமலா போற்றி

பத்தா போற்றி பவனே போற்றி
பெரியாய் போற்றி பிரானே போற்றி
அரியாய் போற்றி அமலா போற்றி
மறையோர் கோல நெறியே போற்றி
முறையோ தரியேன் முதல்வா போற்றி

உறவே போற்றி உயிரே போற்றி
சிறவே போற்றி சிவமே போற்றி
மஞ்சா போற்றி மணாளா போற்றி
பஞ்சே ரடியாள் பங்கா போற்றி
அலந்தேன் நாயேன் அடியேன் போற்றி

இலங்கு சுடரெம் ஈசா போற்றி
கவைத்தலை மேவிய கண்ணே போற்றி
குவைப்பதி மலிந்த கோவே போற்றி
மலைநா டுடைய மன்னே போற்றி
கலையா ரரிகே சரியாய் போற்றி

திருக்கழுக் குன்றிற் செல்வா போற்றி
பொருப்பமர் பூவணத் தரனே போற்றி
அருவமும் உருவமும் ஆனாய் போற்றி
மருவிய கருணை மலையே போற்றி
துரியமும் இறந்த சுடரே போற்றி

தெரிவரி தாகிய தெளிவே போற்றி
தோளா முத்தச் சுடரே போற்றி
ஆளா னவர்கட் கன்பா போற்றி
ஆரா வமுதே அருளே போற்றி
பேரா யிரமுடைப் பெம்மான் போற்றி

தாளி யறுகின் தாராய் போற்றி
நீளொளி யாகிய நிருத்தா போற்றி
சந்தனச் சாந்தின் சுந்தர போற்றி
சிந்தனைக் கரிய சிவமே போற்றி
மந்திர மாமலை மேயாய் போற்றி

எந்தமை யுய்யக் கொள்வாய்போற்றி
புலிமுலை புல்வாய்க் கருளினை போற்றி
அலைகடன் மீமிசை நடந்தாய் போற்றி
கருங்குரு விக்கன் றருளினை போற்றி
இரும்புலன் புலர இசைந்தனை போற்றி

படியுறப் பயின்ற பாவக போற்றி
அடியொடு நடுவீ றானாய் போற்றி
நரகொடு சுவர்க்க நானிலம் புகாமற்
பரகதி பாண்டியற் கருளினை போற்றி
ஒழிவற நிறைந்த வொருப போற்றி

செழுமலர்ச் சிவபுரத் தரசே போற்றி
கழுநீர் மாலைக் கடவுள் போற்றி
தொழுவார் மையல் துணிப்பாய் போற்றி
பிழைப்பு வாய்ப்பொன் றறியா நாயேன்
குழைத்த சொன்மாலை கொண்டருள் போற்றி

புரம்பல எரித்த புராண போற்றி
பரம்பரஞ் சோதிப் பரனே போற்றி
போற்றி போற்றி புயங்கப் பெருமான்
போற்றி போற்றி புராண காரண
போற்றி போற்றி சயசய போற்றி.

திருச்சிற்றம்பலம்

இந்தப் பாடலிலே நாம் காணுகிற சித்தர் ஞானத்தின் உட்கருத்துக்களைப் புரிந்துகொள்ளச் சிவயோகியாரின் விளக்கங்களிலிருந்து கீழ்கண்ட பகுதிகள் ஆய்வு முறையிலே துணைசெய்யும் என்று கருதுகிறேன்:-

"விஷ்ணு திதி நிலையைப் பற்றித் தூண்டுபவர். விஷயாதிகளை அநுபவித்து அவைகளின் எல்லையைக் காணமுடியாது" என்பது கருத்து.

ஒரு பிராண சத்தி தேகத்தில் மண்ணீரல் (Spleen) வழியாகப் புகுந்து பிராணன், அபானன், சமானன், உதானன், வியானன் என ஐந்தாகித் தேக தர்மத்தை நடத்துகின்றது. அவை ஐந்து நிறங்களாக

ஆறு ஆதாரங்களிலும் தொழிற்படுகின்றன. இவைகளில் கீழ்முகங்கொண்டு செல்லுவதைப் பொதுவாய் அபானன் என்றும், மேல்முகங் கொண்டு செல்வதைப் பிராணன் என்றும் கூறுவர். கீழ்முகங்கொண்டு செல்லும் கவர்ச்சி மனம் செயல்படாத யோகியர்க்கு அதுவே மேல்முகங்கொண்டு சிரசுக்குமேல் பொருந்தித் தேக தர்மத்தைச் செயலினின்றும் நிறுத்திவிடும். மனிதனின் மூலதாரத்தில் குண்டலினியும் சீவ சத்தியும் நுழைகிறது. குண்டலினி உயர்ந்து மண்ணீரலை அடைந்து பிராண சத்தியை ஏற்று அதை ஐந்து பிரிவாகப் பிரித்து விடுகிறது.

| வாயு | நிறம் | மண்ணிரலிலிருந்து நோக்கிச் செல்லும் சக்கரம் | வேலை |
|---|---|---|---|
| 1. பிராணன் | மஞ்சள் | இதயம் | இரத்தோட்டம், சுவாசம் |
| 2. அபானன் | கிச்சிலிச் சிவப்பு | குதம், குய்யம் | மலம், ஜலம், விந்து பாகம் பண்ணுதல் |
| 3. சமானன் | பச்சை | நாபி | ஜீரணம் |
| 4. உதானன் | கருநீலம் | கழுத்து | குரல், பேச்சு |
| 5. வியானன் | இளஞ் சிவப்பு | மண்ணீரல் | நரம்பு, மூளை பண்படுதல் |

வெளியில் உள்ள சத்தி குளிர்ந்தது. உள்ளிருந்து வெளிப்போவது உஷ்ணமானதால் வெளியிலிருந்து பாயும் சத்தியை அபானன் (சந்திரன்) என்றும், உள்ளிருந்து வெளிப்பாய்வதைப் பிராணன் (சூரியன் ) என்றும் கூறுவர். இவ்விதமாக இரு சத்திகளும் மூலாதாரம் ஒழிந்த ஐந்து ஆதாரங்களிலும் புணர்ந்து புணர்ந்தே சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி ஆக்ஞையை அடைகிறது. யோகி நிராதாரமான சிரசுக்கு மேல் நினைவு கொண்டபோது சிரசின் பிர்மரந்திரத்தின் மேல் நோக்கிப் பிராணன் பாய்வதையும், அபானன் மேலிருந்து பிராணனுடன் கலப்பதில் தேகதர்மம் கெட்டு, மனம் ஓய்வைப்பெற்றுச் சிரசில் உள்ள ஆன்ம தேஜஸில் மனம்பொருந்தி உபசாந்த பதமடைகிறான். இதெல்லாம் ஒரு குரு சகாயத்தாலும் தெய்வீக அருளாலும் நடைபெறுகிறது. பாண்டியத்தியத்தால் தாங்களே அறிந்து கொள்ளும் திறமன்று.

நெருப்பினைக் கண்ட மெழுகு உருகுவது போன்று தத்துவச் சார்புடைய உள்ளம் (மனமண்டலம்) தேகத்தைக் கடந்து சிகாதாயத்தில் விளங்கவும், சிதாகாயத்தை வணங்கி அதையே கூர்ந்து நோக்குவதில் அதன் இருட்டுத் தன்மை மாறியும், கண்களில் ஆனந்தக் கண்ணீர் வடியவும், உடலில் ஒருவித நடுக்கம் கொண்டு ஆடியும், உரக்கத் தோத்திரங்களைக் கூறியும், இசையுடன் பாடித் தோத்திரம் செய்தும், குறடும் அறிவிலியும் பற்றினவற்றை விடாமைபோல நானும் அந்நிலையினனாகித் தொடர்ந்து நின்ற நல்லன்பினால் பச்சை மரத்தில் இரும்பு ஆணியடித்தால் பதிவதுபோல், என்னுள்ளத்தில் தெய்வ சிந்தனை பதிவுற்று அன்புக்கசிவு ஏற்படச் சிதாகாயக் கடலில் சுழன்றது. உள்ளத்தில் இறைவனுடன் இணையும் விருப்பம்

மேலோங்கவும் அதன் உடன்கூட்டமான மெய் விதிர்த்து, உலகினர் பேய்கொண்டவன் என்று என்னைக் கூறவும், எனது செய்கைகளைக் கண்டு சிரிக்கவும், எனது வெட்கத்தை விட்டு உலகினர் கூறுவதை மனம் கோணாமல் ஏற்றுக்கொண்டு, எனது சுபாவத்திறன் கெட்டுப் பித்துக் கொண்டவனைப் போல் நடந்து கொண்டேன். இந்த நிலையிற் கன்றினைப் பிரிய மனம் இல்லாத தாய்ப்பசுப் போல், நான் இறைவனின் பிரிவை ஆற்றாதவனாய் உரக்க அழுதும் பதறியும் மற்றோர் தெய்வத்தை மறந்தும் நினையாதவனானேன்.

இதுகாறும் கூறியவை சீடனின் பக்குவ முதிர்ச்சியைப் பற்றியது.

இந்நிலையில் கிடைத்தற்கரிய சிவம் பூமியில் மானிடக் கோலத்தில் வந்து உபதேசித்தருளினன்.

பஞ்சப்பிர்மத்தில் தெற்குமுகங் கொண்டது அகோரர் ஆவர். இவரே இதயத்திற்கு அதிபர். 'அகோர ஹருதயாய நம' என்பது இவர் மந்திரம். இப்பகுதியில் உள்ள ஒளியே தேகதர்மத்தைச் செவ்வையாக நடக்கும்படி ஹருதயத்துடிப்பை உடலிலும் தென்புற மூளையில் அறிவிலுமாக இருந்து ஆகாயமாக நடித்துக் கொண்டுள்ளது. அவ்வாறு நடிப்பவனைப் போற்றுகிறேன்.

வானோர் என்பவர் ஆகாய மண்டலவாசிகள். அவர்களில் தேவர் அசுரர் போன்றவர் விகாச முறையில் மனித ஜன்மம் எடுக்கக் கீழ்நோக்கி வருபவர்கள். இவர்கள் மனித தேகம் எடுத்துச் செய்யும் கருமத்தினால் ஏறுமுறையில் சிவத்தை அறிந்து உய்ய வேண்டும். வானோர் விருப்பமெல்லாம் சுகபோகம் ஆகையால் சிவத்தை அறிய மாட்டார்கள். வானவர்கள் அறிவுக்குப் புலப்படாத அமுதமே உன்னை வணங்குகிறேன்.

சிரசின்மேல் கருமேகம் போன்ற ஒளி ஆன்மாவின் இருள் நிலையாகும். அதில் விளங்கும் வெண்ணிற ஒளியே அருள் என்று சித்தாந்த சாத்திரம் கூறும். நிலைபெற்ற திருவருளில் மலை போன்றவனே போற்றி; என்னையும் அவனது அடியார்களுள் ஒருவனாக்கி அவனது திருப்பாதத்தை, எனது முடியில் வைத்தருளின வீரனே போற்றி.

பூமியில், ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் என்னும் ஐந்து தன்மைகளுள் பரவியிருப்பவனே போற்றி. நீரில் ஓசை, ஊறு, ஒளி சுவை என்ற நான்கு தன்மைகளுடன் நிறைந்திருப்பவனே போற்றி. நெருப்பில் ஓசை, ஊறு, ஒளி என்ற மூன்று தன்மைகளுடன் விளங்குபவனே போற்றி.

காற்றிடை ஓசை, ஊறு என இரண்டு தன்மைகளுடன் மிகுந்து விளங்குபவனே போற்றி. ஆகாயத்திடை ஓசையாக மட்டும் தோன்றியுள்ளவனே போற்றி.

அன்பினால் கனிபவருடைய மனமண்டலத்தில் அமுதமயமான ஒளியாக விளங்குபவனே போற்றி.

இத்தி என்பது, மூலாதாரத்தை உணர்த்தும் இகரச்சுட்டு, தீ என்ற சொல்லும் சேர்ந்து இத்தி ஆயிற்று. தீ என்பது கடைக்குறைந்து

தி ஆயிற்று. மூலாதாரம் முதலான ஆறு ஆதாரங்களும் கீழ்முகங்கொண்டு விளங்குபவையாகும். சீவனின் புறநோக்கமே உள்ளவரையில் அவைகளிடம் மேனோக்கும் ஆற்றல் இல்லை. அத்தகைய ஆறு ஆதாரங்களில் மேனோக்கும் தன்மை அமைந்தே ஊர்த்துவ சகஸ்ரதளம் உருவாகிறது. அதனால் அ-திக்கு என்பது தூரத்திலுள்ள சிவாதித்தனையோ சோம மண்டலத்தையோ குறிப்பதாகக் கொள்ள வேண்டும். அப்படியாகும்போது ஆறாதாரங்களின் செய்கைகளையும் ஊர்த்துவ முகமாகச் செய்த அரசே போற்றி. சிவகலையில் இந்த நிலைக்கு ஊர்த்துவ காமினி எனப்பெயர்.

இருதய சக்கரத்தை ஊர்த்துவ முகமாகத் தொழில்பட இயக்கில் தேகதர்மம் நிலைகெட்டுச் சீவனின் தேகத்தை விட்டுப் பிரிந்து எல்லாத் தத்துவங்களையும் தனது ஆளுகைக்குள்ளாக்கிவிடும். இது துரியாதீத நிலையாகும். தேகத்தைச் செயல்படுத்துவதும் அகோரரேதான். செயலை நிறுத்தி ஈசானனின் ஆளுகைக்கு விடுவதும் இவரேதான். தேகத்தை இயக்கும்போது தென்னாடுடைய சிவமாகவும், எல்லாத் தத்துவங்களையும் இயக்கி நடத்தும்போது எந்நாட்டிறைவனாகவும் உள்ள சிவமே போற்றி.

வெண்மேகம் போன்ற ஒளியில் விளங்குபவனே வணக்கம். தேகத்தில் பல சத்திகள் உள. அவை யாவும் ஆன்மாவினியக்கத்தினாலேயே இயங்குகின்றன. ஆன்மாவையே செலுத்துபவன் இறைவனான படியால், எல்லாச் சத்திகளின் தலைவா உனக்கு வணக்கம்.

ஊர்த்துவ சகஸ்ரதள ஒளி இந்திரநீல ஒளியுடன் கூடியது. அதுவே சகல பாவங்களையும் கழுவுவது. இந்திர நீலம் என்பது நீலமும் சிவப்பும் கலந்த வண்ணமாகும். இது சிரசுக்குமேல் காணக் கூடியதுதான். அவ்வொளியில் விளங்கிச் சீவனின் மலக்குற்றத்தைப் போக்குபவனே போற்றுகின்றேன்.

எனது தவறுகளையும், பொருத்தங்களையும் அறிந்து கொள்ளும் திறனற்ற நாயேன் உன்னை வணங்கமுற்பட்டு, அன்பின் மேலீட்டால் அடுக்கிச் செல்லத் தோத்திரங்களை ஏற்றுக் கொண்டருள்பவனே வணக்கம்.

குண்டலினி சத்தியை ஆட்டிப்படைப்பவனே வணக்கம், வணக்கம். பழமையானவனே வணக்கம், வணக்கம். உலகமுதற் காரணனே வணக்கம், வணக்கம். உன்னருளால் நாங்கள் வெற்றியடையச் செய்வாயாக, வணக்கம், வணக்கம்.

போற்றி போற்றி புயங்கப் பெருமான்
போற்றி போற்றி புராண காரண
போற்றி போற்றி சயசய போற்றி

திருச்சிற்றம்பலம்

*


சகஸ்ரதளம்
(ஆயிரத்து எட்டு இதழ்)
ஆக்ஞை
(இரண்டு இதழ்)
விசுத்தி
(பதினாறு இதழ்)
அநாகதம்
(பன்னிரெண்டு இதழ்)
மணிபூரகம்
(பத்து இதழ்)
சுவாதிஷ்டானம்
(ஆறு இதழ்)
(Negative)
சுவாதிஷ்டானம்
(ஆறு இதழ்)
(Positive)
மூலாதாரம்
(நான்கு இதழ்)
அண்டகோச எல்லை
அண்டகோச எல்லை
படக்குறிப்பு.
→ - பாயும் வழி
கு - குண்டலினி சக்தி
அ - அபானன்
பி - பிராண சக்தி

# 11. சித்தர் இலக்கியத்தின் ஆதாரமான அறிவியல் இரகசியங்கள்

இந்த நூற்றாண்டில் ஆங்கில அறிவு நமக்குப் பல அறிவியல் உண்மைகளைத் தந்திருக்கிறது.

மேனாடுகளில் நவீன விஞ்ஞானம் மிகவும் முன்னேறியதன் விளைவாக உடலமைப்பும், அதன் கூறுவகைகளும், தன்மைகளும் பற்றிய பல உண்மைகள் நமக்குத் தெரியவந்திருக்கின்றன.

கம்யூனிச நாடுகளில் இப்போது உடம்பையும் மனத்தையும் மேலும் நுட்பமாக ஆராய்ந்து, வியக்கத்தக்க பல புதிய இரகசியங்களைக் கண்டு சொல்லி வருகிறார்கள்.

கருவிகளும், ஆய்வுக்குரிய நவீன சாதனங்களும் வளர்ந்தோங்கியுள்ள இந்த இருபதாம் நூற்றாண்டின் விஞ்ஞான அறிவியலோடு ஒப்பிடும்போது, சித்தர்கள் எப்படி மாபெரும் உடலமைப்பு இரகசியங்களை இத்தனை துல்லியத்தோடு கண்டு சொன்னார்கள் என்ற வியப்படைகிறோம். ஆராய்ந்து பார்த்தால் சித்தர் இலக்கியத்திலுள்ள பல இரகசியங்களைப் புரிந்து கொள்வதற்கு இன்னும் நாம் முன்னேறி, நவீன விஞ்ஞான அறிவு மேலும் வளர வேண்டும் என்றே சொல்லத் தோன்றுகிறது. காரணம், சித்தர்களின் கண்டுபிடிப்புக்கள் அத்தனை ஆழமாகவும், அத்தனை விரிவாகவும் பகுத்தறிவிற்குப் பொருந்துவனவாகவும் உள்ளன!

இந்தப் பேருண்மைகளையும், இரகசியங்களையும் என் ஆய்விலே ஆங்காங்கே பொருள் இயைபுக்கு ஒத்த முறையிலே கொடுத்திருக்கிறேன். எனினும் இவைகளை முழுமையாக ஒரு தொகுப்பாகப் பார்ப்பதும் அவசியம் அல்லவா? எனவே, திருவாடுதுறை ஆதீனம் வெளியிட்டுள்ள திருமந்திர நூலில் திருவிடைமருதூர் பொன். சுப்பிரமணிய பிள்ளை என்னும் நல்லறிஞரின் முகப்புரையிலிருந்து சில பகுதிகளைக் கீழே தருகிறேன். சித்தர் இலக்கியத்தில் காண்கிற உடலும் உள்ளமும் பற்றிய பல ஞானச் செய்திகளின் தொகுப்பாக இதைக் கொள்ளலாம்.

இந்த உடலானது அவரவர்கள் கையினால் எண்சாண் நீளமும், நான்கு சாண் பருமனும், அல்லது தொண்ணூற்று ஆறு விரற்கடை பிரமாணமும் உள்ளது. இதற்குள் தொண்ணூற்று ஆறு தத்துவங்கள் அடங்கியிருக்கின்றன. அவை வருமாறு:

(1) வாசல்கள் ஒன்பது, (2) பொறி பத்து, (3) புலன் பத்து, (4) ஆதாரம் ஆறு, (5) மண்டலம் மூன்று, (6) நாடி பத்து, (7) வாயு பத்து, (8) தாது ஏழு, (9) இராகம் எட்டு, (10) கோசம் ஐந்து, (11) கரணம் நான்கு, (12) அவஸ்தை ஐந்து, (13) குணம் மூன்று, (14) மலம் மூன்று, (15) வியாதி மூன்று, ஆக தொண்ணூற்று ஆறு.

## இவைகளின் விளக்கம்

### வாசல்கள்

காதுகள் இரண்டு, கண்கள் இரண்டு, மூக்குள் இரண்டு, வாய் ஒன்று, குய்யம் ஒன்று, குதம் ஒன்று ஆக ஒன்பது.

### பொறிகள்

சுரோத்திரம் ஒன்று, தொக்கு ஒன்று, சட்சு ஒன்று, சிங்குவை ஒன்று, ஆக்ராணம் ஒன்று, ஆக ஐந்து.

### இவைகளின் இயற்கையாவன :

சுரோத்திரம் என்பதுகாது. இது ஆகாசத்தினிடமாய் நின்று ஒலியினை அறியும்; தொக்கு என்பது உடம்பு. இது வாயுவினிடமாய் நின்று பரிசத்தை அறியும்; சட்சு என்பது கண்; இது தேயுவினிடமாய் நின்று ரூபத்தை அறியும்; சிங்குவை என்பது நாக்கு. இது அப்புவினிடமாய் நின்று ரஸத்தை அறியும். ஆக்ராணம் என்பது மூக்கு. இது பிருதிவியினிடமாக நின்று கந்தத்தை அறியும். இவைகளே ஞானேந்திரிய மெனப்படும்.

### கன்மேந்திரியம்

வாக்கு, பாதம், பாணி, பாயுறு, உபத்தம் ஆக ஐந்து.

இவைகள் முறையே வசனம், கமனம், தானம், விசர்க்கம், ஆனந்தம் ஆகியவைகளாம்.

ஆகாசத்தினிடமாக நின்று வசனிப்பது வாக்கு. வாயுவினிடமாக நின்று கவனிப்பது பாதம். தேயுவினிடமாக நின்று இடல் ஏற்றலானது பாணி. அப்புவினிடமாக நின்று சலமலாதிகளைக் களைதல் பாயுரு. பிருத்வியினிடமாக நின்று ஆனந்திருப்பது உபஸ்தம். இவைகள் கன்மேந்திரியங்களாம்.

### தன் மாத்திரைகளாவன

சத்தம், பரிசம், ரூபம், கந்தம், ரஸம் ஆக 5.
சத்தமானது - ஆகாசத்திலும், செவியிலும் ஒடுங்கும்
பரிசம் - வாயுவிலும், உடம்பிலும் ஒடுங்கும்
ரூபம் - தேயுவிலும், கண்ணிலும் ஒடுங்கம்.
ரசம் - நீரிலும், நாவிலும் ஒடுங்கும்
கந்தம் - பிருதிவியிலும், மூக்கிலும் ஒடுங்கும்.

வசனம் - வாக்கிலும், ஆகாயத்திலும் ஒடுங்கும்.
கமனம் - வாயுவிலும், காலிலும் ஒடுங்கும்
தானம் - தேயுவிலும், கையிலும் ஒடுங்கும்.
விசர்க்கம் - அப்புவிலும், மூலத்திலும் ஒடுங்கும்.
ஆனந்தம் - பிருதிவியிலும், குய்யத்திலும் ஒடுங்கும்.
ஆக பொறி பத்திற்கும் புலன்கள் பத்திற்கும் விளக்கம் இதுவாம்.

**ஆதாரமாவன**

மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அனாகதம், விசுத்தி, ஆக்ஞை இவைகளாம்.

**இவைகளின் விவரம்**

**மூலாதாரமாவன :**

கால் எலும்பு 2ம், கதிரெலும்பும் கூடிய குய்யம். குய்யத்துக்கும் குதத்துக்கும் நடுவே குண்டலி வட்டமாய் அந்த வட்டத்துக்கு நடுவே திரிகோணமாய் அந்தத் திரிகோணத்திற்கு நடுவே நாலிதழுடைய ஒரு புட்பவட்டமாய் கடப்பம் பூப்போன்று இருக்கும். அந்தப் புட்பத்துக்கு நடுவில் ஓங்காரவெழுத்து நிற்கும். அந்த ஓங்காரத்திற்கு நடுவில் விநாயகரும், வல்லபை சக்தியும் எழுந்தருளி இருப்பார்கள் பச்சை நிறமுள்ளது. அந்த நாலிதழிலும் நிற்கும் அட்சரங்களாவன: ஓம், வ, ஶ, ஷ, ஸ. இது முக்கோண வடிவமானது. நாலிதழ்க் கமலம். மாணிக்க நிறம். கணபதி, குண்டலி சக்தி, ஓங்காரம் இவை யாவும் அவ்விடத்தில் தோன்றுவது போல இருக்கும்.

இதற்கு இரண்டு விரற்கடைக்கு மேலிருப்பது சுவாதிஷ்டானமாம்.

இது நாற்சதுரமும், அச்சதுரத்தினடுவே ஆறு இதழ்களையுடைய ஒரு புட்ப வட்டமும், அதன் நடுவிலே லிங்கபீடமும், வீணாத்தண்டின் அடியுமாயிலங்கி அதன் நடுமத்தியிலே நகார எழுத்து நிற்கும்.

அந்த நகாரத்தினடுவில் பிரம்மாவும், சரஸ்வதியும் வீற்றிருப்பார்கள்.

இது பிருதிவியின் கூறாகும். பொன்னிறமாம். அந்தப் புட்பத்தின் ஆறு இதழிலுமுள்ள அட்சரங்களாவன :

# ந, ய, ஓ, ம, ஃ

செம்பொன்நிறம், பிரம்மா, சரஸ்வதி, நகாரம் இவையெல்லாம் அவ்விடத்தில் தோன்றுவனபோல் இருக்கும்.

இதற்கு எட்டு விரல் பிரமாணத்துக்கு மேல் இருப்பது மணிபூரகமாம். இது கோழிமுட்டை போல் 1008 நரம்பு நாடிகளும் சூழ நாடிக்கெல்லாம் வேராயுள்ளது. இதை உள்ளறிவுள்ளோர் உந்திக்

கமலம் என்று சொல்வார்கள். இது தொப்புளுக்கு நேரில் அப்பு ஸ்தானத்தில் ஏழாம் பிறைக்கிணங்கி இருக்குமாம். இதன் நடுவே பத்து இதழையுடைய ஒரு புட்பம் வட்டமாய் இருக்கும். அந்தப் புட்பத்தின் நடுவில் மகார எழுத்து நிற்கும். அந்த மகாரத்திற்கு நடுவில் மகா விஷ்ணுவும் மகாலட்சுமியும் எழுந்தருளி இருப்பார்கள். பளிங்கு நிறமுள்ளது. அந்தப் பத்திதழிலும் நிற்கின்ற அட்சரங்களாவன :

ம, ஒ, ஓ, ண, த, ய, உ

ய, ங, வ, ஹ,

இதற்கு மேல் பத்து விரற்கடை பிரமாணமுள்ள இடத்துக்கு மேலுள்ளது அனாதகமாகும். இது இருதய கமலமாம் தேயு ஸ்நானத்தில் முக்கோண மாயிருக்கும். அந்த முக்கோணத்தின் நடுவில் பன்னிரண்டு இதழையுயை ஒரு புட்பவட்டம் இருக்கும். அந்தப் புட்பத்தின் நடுவில் சிகாரவெழுத்து நிற்கும். அந்தச் சிகாரத்தின் நடுவில் ருத்திரனும், பார்வதியும் அமர்ந்திருப்பார்கள். அக்கினி நிறத்தையுடையது. அப் பன்னிரண்டிதழிலுள்ள அட்சரங்களாவன:

சி, க, வ, ழ, ஓ, ஐ, வ, ஹ

ஜ, க, கு, கூ, ட, ஂ,

இதற்குப் பத்து விரற்கடை பிரமாணமுள்ள இடத்துக்கு மேலுள்ளது விசுத்தியாம். இது கண்ட ஸ்தானத்திலே வாயு ஸ்தானத்தில் உள்ளது. அறுகோண மாயிருக்கும். அந்த அறுகோணத்தினடுவில் பதினாளிதழையுடைய ஒரு புட்பம் வட்டமாய் இருக்கும். அந்தப் புட்பத்தினடுவே வகார எழுத்து நிற்கும். அந்த வகாரத்தின் நடுவில் மகேஸ்வரனும், மகேஸ்வரியும் எழுந்தருளி இருப்பார்கள். கரு நிறத்தை உடையது. அந்தப் பதினாறிதழிலும் உள்ள அட்சரங்கள் ஆவன:

வ, க, க்ஷ, ஐ, ஂ ரு ஂ, உ,

ஊ, ஶ்ரீ, ஶ்ரீ, ள, ளூ, வள,

வெள, ஓ, ஔ, கஂ, கஃ

இதற்குப் பன்னிரண்டு விரற்கடை பிரமாணமற்ற ஸ்தானத்திற்கு மேல் ஆஞ்ஞை லலாட பீடத்தில் இருக்கின்றது. வீணா தண்டின் முடியுமாய் ஊடுருவிப் பொன் போன்ற வடிவமுற்று நிற்கும். நெற்றிப்

புருவத்தின் வெளியாய் ஆகாசஸ்தானத்தில் மூன்றிதழையுடைய ஒரு புட்பத்தினடுவே யகார வெழுத்தோடு இணங்கி நிற்கும். அந்த யகாரத்திற்கு நடுவில் சதாசிவரும் ம்னோன்மணியும் எழுந்தருளியிருப்பார்கள். மேக நிறத்தை உடையது. இதிலுள்ள அட்சரங்களாவன :

ய, ஹ, ஊ,

## ஆறாதார விபரம்

மூல காரணமாய் இருக்கும் இந்த விளக்கங்களில் ஐயம் நேரிடுமேயானால் அகமும் புறமும் ஆராய்ந்து பார்த்ததால் தெரிய வரலாம்.

**மூலாதாரம்**
1. குதத்திற்கும் லிங்கத்திற்கும் நடு.

**சுவாதிஷ்டானம்**
2. லிங்கத்திற்கும் நாபிக்கும் நடு.

**மணிபூரகம்**
3. நாபிக்கமலம்

**அனாகதம்**
4. இருதயகமலம்

**விசுத்தி**
5. கண்டத்தானம்

**ஆக்ஞை**
6. லலாடத்தானம்

இதுவே ஆறாதார விவரமாம்.

**இனி மண்டலங்களாவன :**
அக்கினி மண்டலம், ஆதித்த மண்டலம், சந்திர மண்டலம் ஆக 3.

**சந்திர மண்டலம்**
7. மூலாதாரந் தொடங்கி ஒவ்வோரெழுத்தை முன்னிட்டுக் கொண்டு சிரசு நடுவே கோடி சூரியர் உதயமானாற் போலப் பிரகாசிக்கும். இந்த அமிர்தகலை அக்கினி மண்டலத்தை நோக்கி ஜோதியாய் நிற்கும்.

**ஆதித்த மண்டலம்**
8. இருதயக் கமலத்தில் அறுகோணமாய் எட்டிதழுடைய ஒரு புட்பமாயிருக்கும். இது வாழைப்பூப்போல் கீழ்நோக்கி இருக்கும்.

**அக்கினி மண்டலம்**
9. பிரிதிவியும் அப்பும் கூடின விடத்தில் நான்கு சதுரமாய் நடுவே முக்கோணமாய் நாலிதழுடைய ஒரு புட்பமாய் இருக்கும்.

இதில் அக்கினி மண்டலமாவது, மூலாதாரத்திற்கு இரு விரற்கடைக்கு மேல் இருக்கின்றது.

ஆதித்த மண்டலம் உந்திக்கு நாலு விரற்கடைக்கு மேலிருக்கின்றது.

சந்திர மண்டலம் கோடி சந்திர சூரியர்கள் உதயமானதுபோல் சிரத்தினடுவில் நிலையாய் நிற்கும். இதை அமிர்தகலையென்று சொல்வதுண்டு. அமிர்தம் மேல்நோக்கி அக்கினி கீழ்நோக்கிச் சரியாய் நிற்கும். இதற்கு நடுவில் பராசக்தி எழுந்தருளியிருப்பாள்.

## இனி நாடி 10க்கும் விவரம்

இடைகலை, பிங்கலை, சுழுமுனை, சிகுவை, புருடன், காந்தாரி, அத்தி, அலம்புடை, சங்கினி, குகு ஆக நாடி பத்து.

இவைகளில் இடைகலை, பிங்கலை, சுழுமுனை இம்மூன்றும் மூலாதாரத்தைத் தொட்டு ஆறாதாரம் ஆறிலும், மண்டலம் மூன்றிலும் ஊடுருவி முட்டி நின்று இடைகலை, பிங்கலை இரண்டும் சுழுமுனையிலே இணங்கிக் கத்திரிக்கோல் போல மாறி வீணாத் தண்டுக்கு வில்லு நாணிட்டாற் போலக் கபாலத்தை முட்டிக் குதிரை முகமற்று நாசியளவும் பற்றி நிற்கும்.

சிகுவை என்னும் நாடியானது மூலதாரத்தைத் தொடங்கி உண்ணாக்கிலே நின்று சோறும் தண்ணீரும் இவைகளை விழுங்கச் செய்யும்.

புருடன் என்னும் நாடியானது மூலாதாரந் தொடங்கி வலது கண்ணளவாய் வந்து நிற்கும்.

காந்தாரி என்னும் நாடியானது மூலாதாரத் தொடங்கி இடது கண்ணளவாய் வந்து நிற்கும்.

அத்தி என்னும் நாடியானது மூலாதாரந் தொடங்கி வலது காதளவாய் வந்து நிற்கும்.

அலம்புடை என்னும் நாடியானது மூலாதாரந் தொடங்கி இடது காதளவாய் வந்து நிற்கும்.

சங்கினி என்னும் நாடியானது மூலாதாரம் தொடங்கிக் குறியின் அளவாய் வந்து நிற்கும்.

குகு என்னும் நாடியானது மூலாதாரந் தொடங்கி அபானத்தின் அளவாய் வந்து நிற்கும்.

இந்த நாடிகளானவை உடலினைப் பாதுகாக்குமாறு அன்னபானாதிகள் செல்லும் மார்க்கமாகவும், இரத்தம், நீர் இவைகள் ஓடுவதற்குத் தாரையாகவும், தேகத்தை வளைக்கவும், நிமிர்க்கவும் குறுக்கவும், பெருக்கவும், கத்திரிக்கோல்போல் ஒன்றுக்கொன்று மாறலாகவும், கம்பிக்கயிற்றைப் போல் இழுத்துப் பிடித்திருக்கின்றன.

**இனி வாயுக்களாவன**

பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன், நாகன், கூர்மன், கிரிகரன், தேவதத்தன், தனஞ்சயன் ஆக வாயு பத்து.

இவற்றுடன் வயிரவன், முக்கியன், அந்தரியாமி, பிரபஞ்சனன் ஆகிய நான்கும் சேர வாயுக்கள் பதினான்கு.

*பிராண வாயுக்களாவன* - பிராண வாயுவானது லலாடத்தின் நடுவிலே தோன்றிச் சந்திர நாடியிலே விழுந்து மூலாதாரத்திலே ஓம் என்று உதித்து, நாபி சக்கரத்திலே ரீம் என்று முட்டி, இடைகலை பிங்கலைகளிலே ஓடி, கபாலத்தைச் சுற்றி, நாசியின் வழியாய்ப் புறப்பட்டு, நான்கு விரற்கடை பிரமாணம் கழிந்துபோய் எட்டு விரற்கடை பிரமாணமீந்து தானின்ற ஸ்தானத்திலேயே தாக்குகிறது.

இப்படித் தாக்குவது உத்தம தேகிக்கு நாழிகை ஒன்றுக்கு முந்நூற்றறுபது சுவாசமாகக் கொல்லன் துருத்திக்குள் காற்று ஏறுவதுபோல் ஏறும்.

இப்படி ஏறுகின்ற சுவாசமானது இராப்பகலாகிய அறுபது நாழிகையுள்ள நாள் ஒன்றுக்கு இருபத்தோராயிரத்து அறுநூறு சுவாசமாயிற்று. இவ்விதமாயிணங்கி அவற்றுள் ஏழாயிரத்து இருநூறு சுவாசம் வெளிப்படும்: மற்றவை உள்ளடங்குமென்று அறிக.

*அபான வாயு* - அபான வாயுவானது, குதத்தையும் குய்யத்தையும் பற்றி மல மூத்திராதிகளைக் கழித்துவிடும்.

*வியானன்* - தோளிலே நின்று பரிசங்களை அறிவித்துக் கலைகளை நிறைவிக்கும்.

*உதானன்* - உதராக்கினியை எழுப்பி உண்ட அன்னசாரத்தை நாடிகளிலே செலுத்தி உடம்பினை வளர்க்கும்.

*சமானன்* - இவையாவையும் சமப்படுத்திப் பேதமில்லாமல் நிரவலாகி வைக்கும்.

*கூர்மன்* - நகைப்பும், முகலட்சணமும், கண்களிப்பும், புளகமும், மயிர்க்கூச்சலும், கொட்டாவியும் உண்டாக்கும்.

*நாகன்* - முக்கலும், சோம்பலும், திமிறலும், விக்கலும், வீங்கலும் உண்டாக்கும் .

**கிரிகரன்** - புருவமேற்றுவித்தும், தும்முவித்தும், அழுவித்தும் திரியும்.

**தேவதத்தன்** - விழிக்கும்போது வஞ்சித்து ஓட, உலாவ யுத்தஞ் செய்யத் தலைப்படும்.

*தனஞ்சயன்* - பிராணன் உடலைவிட்டு வெளிப்பட்ட போதிலும் தான் பிரியாது நின்று உடம்பை வீங்கவைத்தும், விரிவித்தும், புழுவித்தும், கொய்தும் கபாலத்தைப் பிளந்து போம்.

வயிரவன் - காலெலும்பும் கதிரெலும்பும் கூடியவிடத்திலே நின்று உடம்பில் அவஸ்தை உண்டாக்கி, ஈளை, இருமல் முதலான நோய்களை உண்டாக்கும்.

முக்கியன் - கையெலும்பு இரண்டும் கதிரெலும்புங் கூடிய இடத்திலே நின்று உடலின் உறுப்புகளைச் சிறக்க நிறுத்தும்.

அந்தரியாமி - புருஷனுக்கு வாகனமாய் நின்று பிராண வாயுவைத் தோற்றுவிக்கும்.

பிரவஞ்சனன் - பிரணவத்திற்கு இருப்பிடமாயிருந்து பிரவஞ்சனும் அந்தரியாமியும் சரீரத்திற்கு அடையாணியாகவும் அச்சாணியாகவுமிருப்பார்கள்.

**தாதுக்களாவன**

ரசம், உதிரம், மாமிசம், மேதை, அஸ்தி, மச்சை, சுக்கிலம் ஆக ஏழு.

**இராகங்களாவன**

காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாச்சரியம், இடும்பை, அகங்காரம் ஆக எட்டு.

இவைகளில் காமமாவது - ஆசை, குரோதமாவது - கோபம். லோபமானது - உள்ளதை யொளித்தல். பொச்சரிப்புக் கொள்கை. மோகமாவது - தான் அல்லாதார் மரித்தால் தான் மரித்தாற் போலிருக்கை. மதமாவது - கர்வமுற்றுத் தானதர்ம பரோபகாராதிகளை விளக்குதல். மாச்சரியமாவது - ஒன்றைக் கண்டு மகிழ்தல். இடும்பையாவது - தானே சர்வாதிகாரி என்று நினைத்து யாவரையும் இகழ்தல். அகங்காரமாவது - தன் குற்றங்களை அறியாது பிறர் சொல்லைக் கேட்டுக் கோபித்தல்.

**கோசமாவன**

அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆனந்தமயம் ஆக ஐந்து.

இவைகளில் தாதுக்களாலெடுத்தது அன்னமய கோசம்.

அன்ன சாரத்தினாலே பிராணனும் பலனும் அடங்கியது பிராணமய கோசம்.

பலத்தினாலே வந்து தோற்றப்பட்டது மனோமய கோசம்.

அம்மனத்தின் கண்ணே தோற்றப்பட்டது விஞ்ஞானமாதலால் அது விஞ்ஞானமய கோசம்.

ஆனந்த மயமானது - வித்தையால் அல்லது கல்வியால் ஞானம் வந்து தோற்றும். அது ஆனந்தமய கோசம்.

அந்தக்கரணங்களாவன

மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆக நான்கு.

இவைகளில் மனம் - நினைக்கும்; புத்தி - நிச்சயிக்கும்; அகங்காரம் - கொண்டெழுப்பும்; சித்தம் - மூன்றுக்கும் காரணமாயிருக்கும்.

அவத்தைகளாவன

சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம் துரியாதீதம் ஆக ஐந்து.

இவ்வைந்தனுள் சாக்கிரமானது புருவமத்தியில் நின்று ராஜ ஓலக்கம் போலச் சதுரங்கள் பலத்துடனேயிருந்து, சத்த, பரிச, ரூப, ரச, கந்தம் இவ்வைந்துடனும், வசன, கமன, தான, விசர்க்க, ஆனந்த மென்னும் அவ்வைந்துடனும், மனம், புத்தி, சித்தம், அகங்காரம் இந்த நாலும் சேர்ந்து கருவிகளுடன் சந்நிதியில் சேவிக்கத் தான் பராசக்தி யருளினாலே வியக்தனாய் சுகதுக்கங்களை அறிந்து நின்றபோது சாக்கிரமாயின.

சொப்பனமாவது கருவி, கரணாதி பதினான்கில் கருவி பத்தும் கண்டத்தில் நிற்கும்.

மற்றக் கரணாதி நான்கும் சுழுத்தியோடு சீவாத்துமாவைக் கூடிச் சுவாச இருதயத்திலே நின்றபோது கண்டவை, கேட்டவை ஒன்றும் பிறர்க்குச் சொல்லப் புலப்படாதபோது சுழுத்தியாம்.

கருவி கரணாதிகள் பதினாலும் பற்றற்றுச் சீவாத்துமா தானே மூலாதாரத்தி சென்றோங்கி மலம், மத்தம், மாய்கை, பரிசங்களை அறியாமல் நின்றபோது துரியாதீதமென்று பேராம்.

கேவலாவத்தையாவன

அதீதத்தை முதலாகக் கொண்டு ஒருவனை முன்னொரு காலத்தில் நாமறிந்திருக்க அவன் சிறிது நாளைக்குப் பிறகு நமது முன்வந்து என்னை அறிவீராவென்ன, நானறியேனென்று நின்றவிடம் அதீதம். அதைக்குறித்து நிதானித்துணருமிடம் துரியம். ஆமோ அல்லவோ வெனறு சந்தேக்குமிடம் சுழுத்தி; மனத்தோற்றமது சொப்பனம்; நீ இன்னானென்று நிச்சயத்துரைப்பது சாக்கிரமாம்.

மத்தியாவத்தை

சாக்கிரத்திற் சாக்கிரம், சாக்கிரத்திற் சொப்பனம், சாக்கிரத்திந் சுழுத்தி, சாக்கிரத்திற் துரியம், சாக்கிரத்திற் துரியாதீதம்.

இவற்றுள் சாக்கிரத்துள் சாக்கிரமானது, கருவி கரணங்கள் பிரியாமல் ஒத்து நிற்பதாம்.

சாக்கிரத்திற் சொப்பனமானது, தான் நிச்சயம் போல் கண்டது கேட்டது சொல்லறியாததுவாம்.

சாக்கிரத்திற் சுழுத்தியாவது, நினைவு மாத்திரம் பொய்யாப் பிறருக்குச் சொல்லவொண்ணாதிருக்கை. இது உச்சுவாச நிச்சுவாசமாக இருத்தலாம்.

சாக்கிரத்தில் துரியமானது, சகல கருவி கரணாதிகட்கும் அடங்கிப் படுமிருக்கையும், நித்திரை வருகையும், அவசமாய் விழுகையும், புருவமத்தியிலே நடுச்சக்கரத்திலே உள்ளது.

**மேலாலவத்தையாவன**

புருவ மத்தியில் நடுக் சக்கரத்தில் இரண்டங்குலப் பிரணமாத்திலே உள்ளது சொப்பனம்.

இதற்குமேல் இரண்டங்குலப் பிரமாணத்தில் உள்ளது சுழுத்தி.
இதற்குமேல் இரண்டுங்குலப் பிரமாணத்தில் உள்ளது துரியம்.
இதற்குமேல் இரண்டங்குலப் பிரமாணத்திலுள்ளது துரியா தீதமாம்.

**அவத்தைகளாவன**

சகலாவத்தை, கேவலாவத்தை, சுத்தாவத்தை.

சகலாவத்தையானது, சாக்கிரத்தில் கருவி கரணாதிகளுடன் கூடி அந்தக்கரணங்களுக்கு நினைவாயிருக்கும்.

கேவலாவத்தையோவெனில், மூலாதாரத்தைப் பற்றி ஆணவம் மேலிட்டு ஒன்றும் தெரியாமல் கிடக்கை.

சுத்தாவத்தையோ, சகலாவத்தையில் கருவி கரணாதிகளுடன் கூடிநின்று அலைச்சல் பிறவாமை. கேவலாவத்தையில் ஆணவக்கிடையில் அறியாமை பிறவாமலும், ஆசாரியர் அனுக்கிரகத்தினாலே இவை இரண்டிலும் பற்றாமல் சுற்றத்தோடெ கூடி நிற்கை.

**குணங்களாவன**

ராஜஸம், தாமஸம், ஸாத்வீகம் ஆக மூன்று.

ராஜஸமானது - அத்தி, களிப்புற்றிருத்தல், அகங்காரம், போகம், அத்தசேதம், இடும்பை, கீர்த்தி, கொடைதருதலாம்.

தாமஸமானது - நித்திரை, களவு, கள்ளுண்ணல், சோம்பு, வெட்டி, சிரிப்பு இவைகளாம்.

ஸாத்வீகமோ வெனில் - கொல்லாமை, பொய்யாமை, அருவருக்கை, பொறையுடைமை, விரதமுடைமை, அடக்கமுடைமை யாவரையும் இகழாதொழித்தலாம்.

இவைகளில் ஒவ்வொன்றுக்கும் மும்மூன்று குணங்கள் காண்க.
தாமஸ ராஜஸம், தாமஸ தாமஸம், தாமஸ ஸாத்வீகம், தாமஸ குணவிரிவே, ஸாத்வீக தாமஸம், ஸாத்வீக ராஜஸம், ஸாத்வீக ஸாத்வீகம், ஸாத்வீகக் குணவிரிவே, ராஜஸ தாமஸம், ராஜஸ ஸாத்வீகம், ராஜஸ ராஜஸம், ராஜஸகுணவிரிவே.

மலங்களாவன

ஆணவம், மாயை, காமியம் ஆக மூன்று.

இவைகளில் ஆணவமானது, ஆத்துமாவின் அறிவை மறந்து யான் எனதென்னும் அறியாமையெனவும் பிறப்பிப்பது. தன்னுடைமையும், புத்திர மித்திர களத்திராதிகளும், பிரியமாய் இதில் நாம் மயங்குகிறோம் என்று இவனுக்குத் தெரியாமல் சிதைப்பித்து ஆசையுண்டாக்கிக் கொண்டு தன்னதென்றிருக்கை.

மாயையானது - வேறொருவருடைய சொத்தைத் தன்னதென்று இடையூறு விளைவிப்பதும், உபத்திரவிக்க யத்தனிப்பதுமாம்.

காமியமானது - முந்திய இரண்டு விதத்திற்கு ஒத்திருப்பதும் இதாகிதத்தினால் புண்ணிய பாவங்களை உண்டாக்குவதுமாம்.

இதன்றி மகாமாயை என்றும், திரோதான மென்றும் இரண்டுவிதமலம் உண்டாம்.

மகாமாயையானது - தனு கரண புவன போகங்களைக் கொடுத்து, ஒன்றோடு மொவ்வாமல் புசிப்புகளும் வெவ்வேறாய் அனாதியாய் ஆத்துமாவுக்கு என்ன போகந் தவிர்ந்தாலும் இந்தத் தன்மை இரண்டு காலத்திலும் ஒக்கும்.

ஆத்துமாவைத் தன்னிடத்திலும் இளைப்பாற்றிக் கிடந்த இடங்கொடுத்துப் பின்பு மக்கட்கும் பத்தியாயிருக்கும்.

திரோதானமானது - சிவசத்தியினது பத்வியைத் திரோபவித்து நின்று, ஆத்துமாக்களுக்குப் புண்ணியம் பாவங்களை மட்டும் புசிப்பித்துச் சிவசத்தியுடனே கூட்டும்.

ஈஷணை மூன்றாவன

அர்த்த ஈஷனை, புத்திரேஷணை, லோகேஷணை ஆக மூன்று.

இவை தன்னை யடைந்தா னென்பதாம்.

வியாதியாவன

வாதம், பித்தம், சிலேத்துமன் ஆக மூன்று. இவைகளில் வாதமானது, வாயுவில் உற்பத்தியாகிப் பிராணவாயு பிரசண்டமாய் அக்கினியும் அப்புங் கலக்கில் வாதமாம்.

அக்கினிதிசையில் வாயுக்களும், ஆதாரத்தைப் பற்றி மிகவும் அசரித்து இதயகமலத்தை ஊன்றில் பித்தமாம்.

அப்பு, வாயு, தேயு இம்மூன்றும் உடலில் கலவாமல் கலங்கில் சிலேத்துமமாம்.

சரீரங்களாவன

ஸ்தூலம், சூக்குமம், காரணம் ஆக மூன்று.

இவைகளில் ஸ்தூல தேகமானது, ஆதி பிருதிவியினால் சமைந்த உடல். சூக்கும தேகமானது ஞானேந்திரியம் ஐந்து, கன்மேந்திரியம் ஐந்து, அந்தக்கரணம் நான்கு, பிராண வாயு ஒன்றும் ஆக பதினைந்தும் கூடியது. இவ்விரண்டு தேகமும் பற்றற்று நிற்பது காரண தேகமாம். ஆகத் தத்துவம் தொண்ணூற்றாறும் முடிந்தமை காண்க.

ஆத்மாவுக்கு ஆதாரம்

இந்தச் சரீரத்தில் ஆத்மாவுக்கு ஆதாரமான கருவிகள் எவையெனில், வலது சரம், இடது சரம், நாபி, கண், மூக்கு, செவி, உச்சி இந்த ஏழிடங்களிலும் ஆத்மாவானது ஒன்றைவிட்டு ஒன்றில் மாறி மாறி வியாபித்திருப்பதற்குத் தூலமாகிய உடம்பினையே மார்க்கமாகக் கொண்டு உலாவி வருகின்றது.

தேவதைகள்

வலது சரத்திற்குத் தேவதை - சூரியன்
இடது சரத்திற்குத் தேவதை - சந்திரன்
உடம்பிற்குத் தேவதை - மகேசுரன்
நாபிக்குத் தேவதை - விஷ்ணு
கண்களுக்குத் தேவதை - ருத்திரன்
மூக்கிற்குத் தேவதை - பிரமன்
காதுகளுக்குத் தேவதை - சதாசிவன்
உச்சிக்குத் தேவதை - பரமசிவன்.

## உற்பத்தியின் வரலாறு

பராபரத்தில் - பரந்தோன்றி, பரத்தில் - சிவம் தோன்றி, சிவத்தில் - சத்தி தோன்றி, சத்தியில் - நாதம் தோன்றி, நாதத்தில் - விந்து தோன்றி, விந்துவில் - சதாசிவம் தோன்றி, சதாசிவத்தில் - மகேசுவரன் தோன்றி, மகேசுவரத்தில் - ருத்திரன் தோன்றி, ருத்திரனில் - விஷ்ணு தோன்றி, விஷ்ணுவில் - பிரம்மா தோன்றி, பிரம்மாவில் - ஆகாயந் தோன்றி, ஆகாயத்தில் -வாயு தோன்றி, வாயுவில் - அக்கினி தோன்றி, அக்கினியில் -அப்பு தோன்றி, அப்புவில் -பிருதிவி தோன்றி, பிருதிவியில் - அன்னந் தோன்றி, அன்னத்தின் கண்ணே - நர, மிருக, பட்சி, தாவர, சங்கமாதிகள் தோன்றின.

இவ்விதமாய்த் தோன்றிய அடைவே நர, மிருக, பட்சி, தாவர, சங்கமாதிகள், அன்ன சத்தில் ஒடுங்கி, அன்னம் - பிருதிவியில் ஒடுங்கி, பிருதிவி - அப்புவில் ஒடுங்கி, அப்பு - தேயுவில் ஒடுங்கி, தேயு - வாயுவில் ஒடுங்கி, வாயு - ஆகாசத்தில் ஒடுங்கி, ஆகாசம் பிரம்மாவில் ஒடுங்கி, பிரம்மா - விஷ்ணுவில் ஒடுங்கி, விஷ்ணு - ருத்திரனில் ஒடுங்கி, ருத்திரன் - மகேசுவத்தில் ஒடுங்கி, மகேசுவரம் - சதாசிவத்தில் ஒடுங்கி,

**மலங்களாவன**

ஆணவம், மாயை, காமியம் ஆக மூன்று.

இவைகளில் ஆணவமானது, ஆத்துமாவின் அறிவை மறந்து யான் எனதென்னும் அறியாமையெனவும் பிறப்பிப்பது. தன்னுடைமையும், புத்திர மித்திர களத்திராதிகளும், பிரியமாய் இதில் நாம் மயங்குகிறோம் என்று இவனுக்குத் தெரியாமல் சிதைப்பித்து ஆசையுண்டாக்கிக் கொண்டு தன்னதென்றிருக்கை.

மாயையானது - வேறொருவருடைய சொத்தைத் தன்னதென்று இடையூறு விளைவிப்பதும், உபத்திரவிக்க யத்தனிப்பதுமாம்.

காமியமானது - முந்திய இரண்டு விதத்திற்கு ஒத்திருப்பதும் இதாகிதத்தினால் புண்ணிய பாவங்களை உண்டாக்குவதுமாம்.

இதன்றி மகாமாயை என்றும், திரோதான மென்றும் இரண்டுவிதமலம் உண்டாம்.

மகாமாயையானது - தனு கரண புவன போகங்களைக் கொடுத்து, ஒன்றோடு மொவ்வாமல் புசிப்புகளும் வெவ்வேறாய் அனாதியாய் ஆத்துமாவுக்கு என்ன போகந் தவிர்ந்தாலும் இந்தத் தன்மை இரண்டு காலத்திலும் ஒக்கும்.

ஆத்துமாவைத் தன்னிடத்திலும் இளைப்பாற்றிக் கிடந்த இடங்கொடுத்துப் பின்பு மக்கட்கும் பத்தியாயிருக்கும்.

திரோதானமானது - சிவசத்தியினது பதவியைத் திரோபவித்து நின்று, ஆத்துமாக்களுக்குப் புண்ணியம் பாவங்களை மட்டும் புசிப்பித்துச் சிவசத்தியுடனே கூட்டும்.

**ஈஷணை மூன்றாவன**

அர்த்த ஈஷனை, புத்திரேஷணை, லோகேஷணை ஆக மூன்று.

இவை தன்னை யடைந்தா னென்பதாம்.

**வியாதியாவன**

வாதம், பித்தம், சிலேத்துமன் ஆக மூன்று. இவைகளில் வாதமானது, வாயுவில் உற்பத்தியாகிப் பிராணவாயு பிரசண்டமாய் அக்கினியும் அப்புங் கலக்கில் வாதமாம்.

அக்கினிதிசையில் வாயுக்களும், ஆதாரத்தைப் பற்றி மிகவும் அசரித்து இதயகமலத்தை ஊன்றில் பித்தமாம்.

அப்பு, வாயு, தேயு இம்மூன்றும் உடலில் கலவாமல் கலங்கில் சிலேத்துமமாம்.

சரீரங்களாவன

ஸ்தூலம், சூக்குமம், காரணம் ஆக மூன்று.

இவைகளில் ஸ்தூல தேகமானது, ஆதி பிருதிவியின்னால் சமைந்த உடல். சூக்கும தேகமானது ஞானேந்திரியம் ஐந்து, கன்மேந்திரியம் ஐந்து, அந்தக்கரணம் நான்கு, பிராண வாயு ஒன்றும் ஆக பதினைந்தும் கூடியது. இவ்விரண்டு தேகமும் பற்றற்று நிற்பது காரண தேகமாம். ஆகத் தத்துவம் தொண்ணூற்றாரும் முடிந்தமை காண்க.

## ஆத்மாவுக்கு ஆதாரம்

இந்தச் சரீரத்தில் ஆத்மாவுக்கு ஆதாரமான கருவிகள் எவையெனில், வலது சரம், இடது சரம், நாபி, கண், மூக்கு, செவி, உச்சி இந்த ஏழிடங்களிலும் ஆத்மாவானது ஒன்றைவிட்டு ஒன்றில் மாறி மாறி வியாபித்திருப்பதற்குத் தூலமாகிய உடம்பினையே மார்க்கமாகக் கொண்டு உலாவி வருகின்றது.

## தேவதைகள்

வலது சரத்திற்குத் தேவதை - சூரியன்
இடது சரத்திற்குத் தேவதை - சந்திரன்
உடம்பிற்குத் தேவதை - மகேசுரன்
நாபிக்குத் தேவதை - விஷ்ணு
கண்களுக்குத் தேவதை - ருத்திரன்
மூக்கிற்குத் தேவதை - பிரமன்
காதுகளுக்குத் தேவதை - சதாசிவன்
உச்சிக்குத் தேவதை - பரமசிவன்.

## உற்பத்தியின் வரலாறு

பராபரத்தில் - பரந்தோன்றி, பரத்தில் - சிவம் தோன்றி, சிவத்தில் - சத்தி தோன்றி, சத்தியில் - நாதம் தோன்றி, நாதத்தில் - விந்து தோன்றி, விந்துவில் - சதாசிவம் தோன்றி, சதாசிவத்தில் - மகேசுவரன் தோன்றி, மகேசுவரத்தில் - ருத்திரன் தோன்றி, ருத்திரனில் - விஷ்ணு தோன்றி, விஷ்ணுவில் - பிரம்மா தோன்றி, பிரம்மாவில் - ஆகாயந் தோன்றி, ஆகாயத்தில் -வாயு தோன்றி, வாயுவில் - அக்கினி தோன்றி, அக்கினியில் -அப்பு தோன்றி, அப்புவில் -பிருதிவி தோன்றி, பிருதிவியில் - அன்னந் தோன்றி, அன்னத்தின் கண்ணே - நர, மிருக, பட்சி, தாவர, சங்கமாதிகள் தோன்றின.

இவ்விதமாய்த் தோன்றிய அண்டவே நர, மிருக, பட்சி, தாவர, சங்கமாதிகள், அன்ன சத்தில் ஒடுங்கி, அன்னம் - பிருதிவியில் ஒடுங்கி, பிருதிவி - அப்புவில் ஒடுங்கி, அப்பு - தேயுவில் ஒடுங்கி, தேயு - வாயுவில் ஒடுங்கி, வாயு - ஆகாசத்தில் ஒடுங்கி, ஆகாசம் பிரம்மாவில் ஒடுங்கி, பிரம்மா - விஷ்ணுவில் ஒடுங்கி, விஷ்ணு - ருத்திரனில் ஒடுங்கி, ருத்திரன் - மகேசுவத்தில் ஒடுங்கி, மகேசுவரம் - சதாசிவத்தில் ஒடுங்கி,

சதாசிவம் - விந்துவில் ஒடுங்கி, விந்து-நாதத்தில் ஒடுங்கி, நாதம், சத்தியில் ஒடுங்கி, சத்தி - சிவத்தில் ஒடுங்கி, சிவம் - பரத்தில் ஒடுங்கி, பரம் - பராபரமாகிய பரமேசுவரனிடத்தில் ஒடுங்குமெனக் கொள்க.

அன்னத்தில் - ரசந்தோன்றி, ரசத்தில் - உதிரந் தோன்றி, உதிரத்தில் - மாமிசந் தோன்றி, மாமிசத்தில் - மேதை தோன்றி, மேதையில் - அஸ்தி தோன்றி, அஸ்தியில் - மச்சை தோன்றி, மச்சையில் - சுக்கிலந் தோன்றி, சுக்கிலத்தில் - சுரோணிதந் தோன்றியது.

இப்படித் தோன்றிய சுக்கில சுரோணிதங்கள் அணுப்பிரமாணம் உண்ண ஒருருவு போலப் பாய்ந்து குதித்துக் கண்டிப்பும் பேரிகையும் போலே கண்டித்து நடுவெளியில் ஒரு சுழுமுனையுண்டாய் அம்முனையில் நடுவிலே ஒரு துவாரமுண்டாய், அத் துவாரத்தின் நடுவே இரண்டெழுத்துக்களாலே அபிமந்திரித்துப் பிண்டமாகி எழுமளவில்...

சுக்கிலம் பெருகில் - ஆணாம். சுரோணிதம் பெருகில் - பெண்ணாம் இந்தச்சுக்கில சுரோணிதம் ரேசித்துப் பெருகில் இரட்டைப் பிண்டமாம். அப் பிண்டமானது நீர்வழியே பெருகில் - ஊமையாம். மலக்கிடையேயாகில் - மந்தனாம்.

இப்படிக்கு கரு உற்பத்தி கொள்ளுங் காலத்தில் இரதக்கலை என்றும், இரஸக்கலை என்றும் இரண்டு கலைகள் உண்டு. இவைகள் நூலிற் கண்டவைகளாம்.

அவற்றுள் எரிகலையிலே பிராணேந்திரயம் பாயில் இடப்பாகங் கொண்டு கிருமியென்னும் புழுச்சென்று விழுங்காமல் கன்றோடு தாய் சென்று தொடர்ந்தாற் போலே, பிராணவாயுவை ஆத்துமா முன்னிட்டுக் கொண்டு செல்லுமளவில் இதம் அகிதம் என்னும் இரண்டு எழுத்துக்களும் பின் தொடர்ந்து சென்று அச்சுக்குள் அச்சாக அவ்வென்னும் மூலவெழுத்தில் அமைத்துப் புகவிட்டுக் கிழிச்சீலை வாசல்போலே ஓடி, அங்கிஷா என்னும் மந்திரக் கயிற்றாலே சுருக்கிக்கட்டி, சிவாக்கினை என்னும் சக்கிரத்திடையிலே முத்திரையிட்டு, தான் ஒருத்தியாய் நின்று இந்தக் கருவை வளர்க்கும்படியாய்க் கெற்ப உற்பனத்தை உதானவாயு மூலவாயு வளர்க்கும்.

அது எப்படியெனில், கெற்பாகுதி என்னும் பவக்கடலில் எண்ணெய் வாயு வளர்க்கும்.

அது எப்படியெனில், எண்ணெயுந் தண்ணீரும் போல் நிற்கிற சுக்கில சுரோணிதத்தைப் பாலும் நெய்யும் போலப் பாய்ந்தவுடனே கற்பிக்குங் கற்பைச் சுருக்கினாற் போல, வாசலையடைத்துக் கருவை வெளியாக்கி, ஓராந் திங்களில் உதிரம் திரளும். இரண்டாந் திங்களில் கொழுந்துவிட்டு அச்சு அமையும். மூன்றாவதில் மாமிசம் திரண்டு மூட்டு உருவாகும். நான்காவதிலே தண்டமாய் நரம்பு நாடிகள் அமையும். ஐந்தாவதில் பஞ்சவர்ணமாய் இந்திரிய கரத்தால் அழியினும் அழியும்; செழிக்கினும் செழிக்கும். ஆறு மாதத்தில் அதிற்புகுந்து அமையின் வடிவமுற்று கால்கைகள் வகுக்கப்பட்டு நவத்துவாரங்களும்

உண்டாகும். ஏழாந்திங்களில் கெற்பத்திலிருந்து எழுந்து முழக்க முற்றுக் கெற்பத்தைச் சூழ்ந்து புரளும். ஏனெனின் எழுபத்திரண்டாயிரம் நாடி நரம்புகளும், ஆறாதாரமும், ஐந்தெழுத்தும், ஐம்பத்தோரட்சரமும், பஞ்சபூத தேவதைகளும், தூல சூக்குமத்துடனே கொழுந்துவிடப் பேதையாம். எட்டாந் திங்களில் நீட்டி முடக்கித் தாயுண்ட அன்னசாரத்தைத் தொப்புளின் வழியாக உண்டு பிள்ளையின் உடல் வளர்ந்து தாயுடனே தோன்றி உயிருடன் ஆடும். ஒன்பதாம் திங்களில் தலை காலளவும் ரோமத் துவாரம் உண்டாம். ரோமக் குருத்து அறிவுடனே உரங்கொள்ளுகையில், விசனம் பொறுக்க மாட்டாமல் ஈசுவரனை நோக்கித் தவஞ்செய்து தொழுகையுடனே பிரிந்து பிறவியை ஒழித்தருள் வேண்டுமென்று வணங்கி நிற்கும். பத்தாவது திங்களில் நிறைந்த பிண்டாய் மலைமேல் நின்று தலைகீழாய் விழுந்தவர்களைப் போல் அபான வாயுவின் பலத்தினாலே பூமியில் விழுந்ததும் முன்னுள்ள நினைவுகளை மறவாதிருக்கும். இதுவே திருமூலர் கூறிய கரு உற்பத்தி முறையாகும்.

இப்படிப் பரப்பிரம்மம் படைப்பினாலே கர்ப்பந் தரித்து வாழ்வு பெறும். பின் இறையருள் பெற விழையும்.

அத்தகைய பிராண வாயு வலப்புற மோடில் ஆண் பிள்ளையாம்; இடப்புற மோடில் பெண் பிள்ளையாம்; வாயு விரண்டும் ஒருமித்தோடில் அலியாம்; அதாவது பேடி அல்லது குறியற்றது.

அந்த வேளையிலே நடந்த வாயுபேதியாமல் ஐந்து நாழிகையளவும் நடந்து இயங்குமாகில் அந்தப் பிள்ளைக்கு வயது நூறாகும். அந்த அளவு குறையுமாகில் பிள்ளைக்கு வயதும் குறையும். வாயு நிரம்பியோடில் அவயவங்கள் உண்டாகும். அவ்வாயு சிதறியோடில் அவயவங்கள் குறையும். முதன்மையில் கற்பாந்தனத்தில் போகிக்கும்பொழுது மூன்று குணத்திலே ஒன்றாவது மாதாபிதாக்களுக்கும் உண்டானால் மக்களுக்கும் உண்டாகும். தாய் தந்தையர் தவமுதிர்ச்சி அவர் சேய்க்கும் உண்டாம்.

அந்த வேளையில் வாயு நின்றியங்குமாகில் நிலத்தின் நிறமே பிள்ளைகளுக்கு நிறமாகும். தாய் தந்தைகளினுடைய மனமும் குணமும் வாயுவும் ஒன்றாகுமாகில் அந்தப் பிள்ளைக்கு மிகவும் அறிவுண்டாகும்.

தாய் தந்தையர்கட்கு, அந்த மூன்று விதமும் சிதறில் பிள்ளை மரித்துப் போகும். கெற்பாசனத்தை விட்டு கெற்பங்கர வழியிலும் போக்கிலும் அக்கினி மிகிக்கிலும், வாயு கலங்கிலும் மலமாம். பெண் ஆண் இருவருக்கும் மூலாக்கினி யதிகரித்தால் அந்த கர்ப்பம் தவறிப்போம்.

இப்படி கன்மானுபவத்திற் கிடாக எடுக்கப்பட்ட உடம்பில் முன்சொன்னவழியே அருந்தின அன்னாகாரமானது முப்பது நாழிகையில் எங்குற்றதெனில்,

மல, சல, ரத்தமாகிய மூன்று கூறாகும். இதில் இராப்பகல் அறுபது நாழிகையில் மல, சலமென்ற இரண்டு கூறு கழிந்துபோம். மற்ற ஒரு கூறாகிய இரத்தமானது உடம்பில் தங்கும். அந்த இரத்தமானது ஏழிலொரு பங்கு இந்திரியமாம். மற்ற பங்குகளோவெனில் தோல், உரோமம், சதை, கெற்பம், மேதை, அஸ்தி, குடும்பி, மூளை, சுக்கிலம், தியம்பு, குடல், நரம்பு முதலிய இடங்களுக்கு முறையே ஏழரை நாழிகை வீதம் பரவி நிற்கும்.

இனி, இந்த உடம்பில் இருவினைக் கதவுங் கூட்டி மூலத்தண்டாகிய நெடுங்கயிற்றை முகட்டு வளைவாகச் சேர்த்து, பழுவெலும்பாகிய வரிசையிட்டு, நரம்பாகிய யாக்கையாலே கட்டி, உதிரமாகிய தண்ணீரினாலே மண்கூட்டிச் சுவரேற்றி, ரோமமாகிய கத்தையாலே மேய்ந்து எடுக்கப்பட்ட வீட்டுக்கு நவத்துவாரமென்னும் வாசலிட்டு, அச்சமாகிய ஓங்காரம் பாய்ச்சி, பண்டமாகிய பஞ்சேந்திரியங்களும் உடைத்தாய் நிற்கும்.

இந்த உடம்பில் பதினாறு கதவு பூட்டிய வீணைத்தண்டும், மொழி எனும் முச்சாண் எலும்பும், முச்சாண் சதையும், அஞ்சுருவும், ஆறு தெருவும், ஏழு கடலும், எட்டுத் தூணும், நாலு சாண் பருமனும் எட்டுச் சாண் நீளமும், முப்பத்திரண்டு முழக் குடலும் இருக்கும்.

## நரம்பு இலக்க விளக்கம்

| | | |
|---|---|---|
| 1. பெருநரம்பு | - | பதினோராயிரம் |
| 2. சிறுநரம்பு | - | பதினெண்ணாயிரம் |
| 3. பெருநரம்பு | - | ஏழாயிரம் |
| 4. சிறுநரம்பு | - | பன்னீராயிரம் |
| 5. பெருநரம்பு | - | ஆயிரம் |
| 6. சிறுநரம்பு | - | இரண்டாயிரம் |
| 7. பெருநரம்பு | - | ஆயிரத்து ஐந்நூறு |
| 8. சிறுநரம்பு | - | மூவாயிரத்து ஐந்நூறு |
| 9. பெருநரம்பு | - | மூவாயிரம் |
| 10. சிறுநரம்பு | - | ஆறாயிரம் |
| 11. சிறுநரம்பு | - | ஏழாயிரம் |

ஆக நரம்பு நாடி எழுபத்து இரண்டாயிரம்.

இனி, கால்களிலும் கைகளிலும் சந்துப் பொருத்தல் 69, கழுத்துக்குக் கீழ்ச்சந்து 86, கழுத்திற்கு மேற்சந்து 83, ஆக சந்து பொருந்தல் 238.

இனி, மூக்கில் சலம்பலம் 41, எலும்பில் சலம்பலம் 7, மாமிசத்தில் சலம்பலம் 21, ஆக சலம்பலம் 69.

காலிலும் கையிலும் எலும்புகள் 160. மூலாதாரத்தைத் தொட்டு ஆஞ்ஞையளவும், முழு எலும்பு 30, கழுத்துக்கு மேல் பொடி எலும்பு 300, இருபக்கத்திலும் எலும்பு 20, ஆக எலும்பு 510.

இனி, உடம்பில் (மூன்றரை கோடி) ரோமத் துவாரங்களும், நாளொன்றுக்கு இருபத்தோராயிரம் சுவாசமும், 96 தத்துவமும் 360 பலம் மாமிசமும், உழக்கு பித்தமும், ஆழாக்குச் சேத்துமமும், கூடி உடம்பிலே நாள் ஒன்றுக்கு நடக்கும் பிராணம் கழிந்து போய் 8 அங்குலம், உடம்பூடுருவிச் சப்த தாதுக்களை வளர்க்கும்.

## இனி, உயிர்வர்க்கங்களின் வாழ்நாளின் விபரம்

வயதளவு 100க்கு; பத்து வயதளவும் இளமை. 20 வயதினளவும் வாலிபம். 25, 30-40 இதுவரையில் யௌவனம். 45-50 இவைகளில் கௌமாரதிசை யடைந்து ஒளி மழுங்கலுற்று, பிருதிவி அப்புவை நெருக்கும். அறுபதில் அப்பு தேயுவை நெருக்கும். 70இல் தேயு வாயுவை நெருக்கும். அதனால் தாது மாயாவுணர்வு பண்டுபோலே செலுத்தும். 80வது வயதில் வாயு ஆகாசத்தை நெருக்கும். 90 வது வயதில் ஆகாசம் ஆத்மாவை நெருக்கும். அதனால் மலஜலம் இடைவிடாமற் ஒத்து நிற்கும். 100வது வயதில் ஆத்துமா வந்த வழியை நோக்கும்.

இப்படிப்பட்ட உடலானது முன்சொன்ன அறுதிகளில் முந்தாமல் சற்குருவின் திருவடியே சரணம் என்று திருக்குருந்தீசுரர் ஆதி திருமூல தேவருக்கு திருவுளம் பற்றியருளிய முறைமை கூறினோம்.

## அத்துவா தத்துவ கலைஞானம்

அட்சரம், ஆகாரம், கரணம், அவத்தை, பொறி, புலன், இளமை, வறுமை, வேதம், புராணம், சரியை, கிரியை, யோகம், மெய்ஞ்ஞான இவ்விதமென்று குருவருள் செய்யச் சீடன் கேட்டுத் தெளிந்து அருட்பிரகாசத்திலே அஞ்ஞானங்களையும் ஞானாக்கினியினாலே சுட்டுப் போட்டுக் களிப்புற்றுச் சிவத்துடனே நின்று தெளிவுறவே, எப்போதும், சிவஞானியென்று ஒட்டியாணம் பூட்டி ஆனந்தம் என்னும் ஞானாமிருதத்தை அருந்தி, ஓம்நமா என்னும் ஞானமுத்திரையிட்டு, அழியாப் பதவியாகிய மோட்ச உலகத்தை அடைபவருக்கே சீவன் முத்தர் எனப் பேராம். இதனைக் "கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர், மற்றீண்டு வாரா நெறி" என்ற குறளும் வலியுறுத்தும்.

இப்படிப்பட்ட பெருமையையுடையவர்களுக்குப் பரகதி கிடைக்காததற்குக் காரணம் ஏதோவெனில்,

## பரகதிக்கு விலகல்

காயாபுரி என்னும் பட்டணமும், சுந்திர சூத்திரமும் என்னும் உட்கோட்டையும், நவத்துவாரமாகிய வாசல்களும், இரணமென்னு முகப்பும், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அனாகதம், விசுத்தி, ஆஞ்ஞை என்னும் அரண்களும், அக்கினி மண்டலம், ஆதித்த மண்டலம், சந்திர மண்டலம் ஆகிய சொர்க்க, மத்திய, பாதாளமாகிய உலகங்களும், அங்கராசன், மூர்க்கராசன் என்னும் இரண்டு அரசர்களும், மூலப்பிரகிருதி என்னும் துன்மந்திரியும் பஞ்ச பூதங்

களென்னும், பிரதானியர்களும், அலகை என்னும் வீதிகளும், இச்சா சக்தி, கிரியா சக்தி, யோக சக்தி, ஞான சத்தி, பராசத்தி என்னும் ஊழியர்களும், அசவை என்னும் அடப்பக்காரனும், கெர்விதன் என்னும் காளாஞ்சிக்காரனும், காலகர்மனென்னும் தளவானும், மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் காணிக்காரனும், மாயாப் பிரபஞ்சமென்னும் வன்னிநாயகப் படிகளும், சத்த, பரிச, ரூப, ரச, கந்தமென்னும் கொல்நாயக்கர்களும், காம, குரோத, லோப, மோக, மத, மாற்சய, இடும்பை, அகங்காரமென்னும் கள்ளரும், இதம், அகிதம் என்னும் மல்லர்களும், ஆணவம், மாயை, காமியம் என்னும் கோட்டைக்காரரும், வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபஸ்தம் என்னும் கன்னக்காரரும், சாக்கிர, சொப்பன, சுழுத்தி, துரியம், துரியாதீதமென்னும் தலையாரிகளும், அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆனந்தமயம் என்னும் காலாட்களும், வாயு, தேயு என்னும் குதிரைகளும், மனோபதி என்னும் கருணீகனும், நவகோடி என்னும் ராவுத்தனும், இருதயபாதரென்கிற தானாதிபதிகளும், சதகோடி மகாமந்திரமென்னும் உபதளமும், வாத, பித்த, சேத்துமமென்னும், பரிவாரமும், அஷ்டமதமென்னும், யானைகளும், நாலுவேதம் என்னும் தேர்களும், அசுத்தம், சுத்தம் என்னும் தேவியரும், இருவினையென்னும் தோழிகளும், இவர்கள் யாவரும் கூட்டமாகக் கூடிக்கொண்டு, தங்களில் தாங்களே ஒருவருக்கொருவர் ஒப்புரவற்றவர்களாய், முன்னுரைத்த காயாபுரிக் கோட்டையை வளைத்துக்கொண்டு, ஒன்பது வாசலுக்கும் அஷ்டமதமென்னும் யானைகளை விடுத்து, யுத்தம் செய்யலானார்கள்.

இவ்வாறு யுத்தஞ் செய்கையில் ஒருவருக்கொருவர் தங்களால்இந்தக் கோட்டையை ஆளுகிறவற்குச் சாத்தியபடாமல், காரிய உபாதியாலும், காரண உபாதியாலும், தூல சூக்குமாதி தேகத்தினாலும், சதுர்வித உபாயத்தினாலும் ஆராய்ந்து இந்தக் கோட்டையைக் கைக்கொள்ளும்படி, பராபரமாய் இலங்குகின்ற சற்குருநாதன், மானைப் பிடிக்க மான் சட்டை உடுத்தது போலத் திருநந்தி தேவரான சற்குருநாதர், ஆதிகபிலராகிய திருவள்ளுவராய்த் திருமூலதேவருக்குத் திருவாய் மலர்ந்தருளிய வாறு இதயம் என்னும் வில்லுக்குப் புரியென்னும் நாணினைப் பூட்டி, இலக்கு நோக்கி மூலாதாரத்தின் இரண்டு நான்கு நெட்டெழுத்தின் நடுவெழுத்திலேயிருந்து வங்கென்று வளைத்து, சங்கிதனாய் அங்கிஷாவென்றியங்குவித்துச் சங்கென்று ஆஞ்ஞையா சக்கரத்திலே புகுந்து, அக்கினி மண்டலத்தில் அனைவரையும் காண்பித்துக் கொண்டு நின்றது.

மேலும் ஆயா வாளென்னும் இடை, பிங்கலை இரண்டுக்கும் படிக்கதவிட்டு, ஆதிமூலமென்னும் யானையின் மேற்கொண்டு, தண்டுக்கும் தனுவுக்கும் குரசுக் கயிற்றுக்குள்ளாக அன்னதானத்தில் உற்ற அளவில் அங்கென்று மேனோக்கி ஆதிகாலமும் அவ்வையும் பதியும் கொண்டு நடுவணையென்னும் ருத்திராக்கினியான பன்னிரு சமுத்திரத்திலே யானையை நீராட்டுவித்து, ஞான புரமென்னும் காவணமிட்டு அங்கென்று மேனோக்கி யுற்றளவில் சித்திரநாடி வழியே சென்று சந்திராபுரியென்னும் மண்டலமுங் கொண்டு, அக்கினி

மண்டலத்தில் அஞ்செழுத்திலேயும், ஆதித்த மண்டலத்தில் மூன்றெழுத்திலேயும், சந்திர மண்டலத்தில் ஒரெழுத்திலேயும் ஆசன மாயிருந்த பிறகு, திரிமண்டலாதிபன் பின்னிட்டு மந்திரி கூறியபடி வைத்துக் காயாபுரி என்னும் பட்டணத்தைக் கொள்ளாமற் கொண்டு, அதிகாயனென்னும் பிரபஞ்சங்களையெல்லாம் கருவோடறுத்துப் பின்பு சத்தியஞானம் பிரகாசமான மனத்திருத் தேரிலே எழுந்தருளிய பின்பு, அறிவு கடந்து நாகலோகங் கொண்டருளிய பின்பு, காயாபுரியை நோக்கித் திருநந்திதேவர், ஆதிகபில முனிவர், திருவள்ளுவர் சான்றாகத் திருமூல தேசிகர் நின்று நகைசெய்த அளவில், காயாபுரி பட்டணத்தில் யோகாதியுங் கெட்டு, இரவகெந் தருவபதாதி சேனைகளும் பட்டு, ஆயாக்கினி அரசனும் சிறப்புண்டு போய், காயாபுரி என்னும் பட்டணத்தில் சொர்க்க, மத்திய, பாதாள உலகமளாவகத் திருவடி வைத்துக் கொண்டு அரசாட்சி செய்தபடிக்குத் திருநந்திவேதர் திருமூல தேவருக்கு அபயக்கை கொடுத்தருளி, அபிடேகமுஞ் சூட்டி, சித்தாந்தமும், வேதாந்தமும் கடந்த நாதாந்த முடிவான அமுத பஞ்சாட்சர துருவ நிலையில் சூட்சுமம் புகட்டி, இவ்வாறு உணர்ந்தியருளிய முறைமையை உட்பட்டுந் தேடாதவன் சிவஞானியல்லவென்று இந்த முறையை உட்பட்டுத்தேடின பெரியோர்களுக்குப் பராபரத்தில் உத்திரங்களும் வெளியாயிருக்கும்.

பிண்டத்தில் கண்ட பொருள் அண்டத்திற் காணலாம். அண்டத்திற்குள்ளது பிண்டத்தும் உண்டெனக் கொள்க.

★ ★ ★

# 12. இணைப்பு

சித்தர் ஞானச் செம்மலாக விளங்கிய என் குருநாதர் கண்ணப்ப சுவாமிகளும், அவருடைய மறைவுக்குப் பிறகு என் ஞானாசிரியராகத் திகழ்ந்த சிவயோகி இரத்தினசபாபதியாரும், இருவருமே, புறச்சடங்குகளையும் அவற்றோடு இணைந்த புறப்பூனை முறைகளையும் பாராட்டிப் பேசுவதில்லை. சில சமயங்களில் இவற்றை நையாண்டி செய்வதும் உண்டு. என்றாலும் இவர்கள் இருவருமே கடவுள் உருவங்களில் பொதிந்துள்ள நுட்பங்களையும், எந்திர வழிபாட்டின் தத்துவ உயர்வுகளையும் மேன்மையாய்ப் பேசியுள்ளார்கள். இவர்கள் முக்கியமாக விநாயகர் உருவ வேறுபாடுகளையும், முருகன் திருவுருவ வகைகளையும் விரிவாக விளக்கியதுண்டு. இவ்வாறே இந்த இரண்டு மூர்த்திகளின் வழிபாட்டிலுள்ள எந்திரங்களின் விரிவுகளையும் வரைந்து கற்பித்து இருக்கின்றார்கள்.

இந்த இரண்டு குருநாதர்களின் வாயிலாய்ப் பயின்ற படங்களைப் போலவே, பல ஞானச் சுவடிகளிலும் இத்தகைய வரைவுகள் காணக் கிடைக்கின்றன.

சிவயோகியார் வெளியிட்டுள்ள நூல்களிலும் இவற்றைப் பார்க்கிறோம்.

இவை தவிர, திருவாவடுதுறை, ஆதீன நூல்களிலும், தருமை ஆதீன நூல் வெளியீடுகள் சிலவற்றிலும், வேறு சில பழைமையான (இன்ற கிடைப்பதற்கரிய, மறுபதிப்பில்லாத) சிறு சிறு புத்தங்களிலும் இந்த வரைபடங்களையும் எந்திரங்களையும் காணலாம்.

இத்தகைய வரைசான்றுகளில் முதன்மையானவற்றிலே சில வற்றை இங்கே தொகுத்துத் தருகிறேன். சித்தர் இலக்கியத்தில் இந்த உருவங்களின் உட்தத்துவங்களும், இவ்வெந்திரங்களின் பயில் முறையும் பற்பல பெருமைகளோடு விதந்து கூறப்பெற்றுள்ளன. இந்த படங்கள் பின் பக்கங்களில் வருகின்றன:

## பால விநாயகர்



# பால விநாயகர்



# பக்தி கணபதி



## சித்தி விநாயகர்



## க்ஷிப்ர கணபதி



## விக்கன விநாயகர்



# ஏகாட்சரர்



# மகா கணபதி



# வெற்றி விநாயகர்



## வர கணபதி



## திரயாட்சர கணபதி



# க்ஷிப்ர பிரசாதர்



## மஞ்சள் விநாயகர்



# ஒற்றைக் கொம்பர்



# சிருஷ்டி கணபதி



# சிருஷ்டி கணபதி



# சிருஷ்டி கணபதி



# சிருஷ்டி கணபதி



## உத்தண்ட கணபதி



# ரணமோசனர்



## புவன கணபதி



# யோகநிலை விநாயகர்



# யோகநிலை விநாயகர்



## துர்க்கா கணபதி



# தொல்லை நீக்கியார்



# மூலதாரர்



வல்லபை விநாயகர்



## வல்லபை விநாயகர்



## வக்கிர துண்டர் எந்திரம்



# உச்சிஷ்டர் எந்திரம்



# சித்தி விநாயகர் எந்திரம்



# திரைலோக்ய மோகன எந்திரம்



# மஞ்சள் விநாயகர் எந்திரம்





വശ്യം
ഹ്രീം
ണ
വ
ക്ലീം
ഐം
ര
വാ
ശ്രീം
ഗ

வஶ்யம் (வேறு)



## ஸ்தம்ஹந யந்திரம்




ஸ்ரீம்
க்லீம்
ஸ
வ
ஸௌம்
ஹ்ரீம்
வா
ண
ஸௌம்
ஹ
வௌம்

# ஆகர்ஷணயந்திரம்.



# ஆகர்ஷணம் (வேறு)



# மோஹன யந்திரம்



## மோகனம் (வேறு)



| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஸ்ரீம் | ஹம் | ஹ | ஜா | யெ | ஈ: |
| ஹம் | ஹ | ஜா | யெ | ஈ: | ஸ்ரீம் |
| ஹ | ஜா | யெ | ஈ: | ஸ்ரீம் | ஹம் |
| ஜா | யெ | ஈ: | ஸ்ரீம் | ஹம் | ஹ |
| யெ | ஈ: | ஸ்ரீம் | ஹம் | ஹ | ஜா |
| ஈ: | ஸ்ரீம் | ஹம் | ஹ | ஜா | யெ |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ശ്രീം | വം | വ | ശ്രൈ | ന | മഃ |
| വം | വ് | ശ്രൈ | ന | മഃ | ശ്രീം |
| വ | ശ്രൈ | ന | മഃ | ശ്രീം | വം |
| ശ്രൈ | ന | മഃ | ശ്രീം | വം | വ |
| ന | മഃ | ശ്രീം | വം | വ | ശ്രൈ |
| മഃ | ശ്രീം | വം | വ | ശ്രൈ | ന |


உாரணம்
க்லீம்
வ
ஹ்ரீம்
ர
ண
ஸ்ரீம்
வௌம்
வௌம்
ய
ஹ
நமஃ
வா
வௌம்

# சோமாஸ் கந்தர்



# தேவசேனாபதி



# சுப்பிரமணியர்



# கஜவாகனர்



# தாரகாரி



# பிரமசாஸ்தா



## சேனானி





## பிரமசாஸ்தா



# வள்ளி கல்யாணசுந்தரர்



# கிரவுஞ்ச பேதனர்



# இந்த ஆய்விலே ஒப்பு நோக்கிய தமிழ் நூல்கள்


1. அபிதான சிந்தாமணி - ஆ. சிங்காரவேலு முதலியார்
2. அவ்வையின் குறள் விளக்க உரை - இரத்தினசபாபதியார்
3. அவ்வையின் குறள் (விருத்தி உரை) - சுந்தரமாணிக்க யோகீசுரர்
4. அன்பு நெறியும் அருள் நெறியும் - இரெட்டியபட்டி சுவாமிகள்
5. ஆடல்வல்லான் - திருவாவடுதுறை ஆதீனம்
6. உபநிஷதப் பலகணி - ராஜாஜி
7. கணபதி - திருவாவடுதுறை ஆதீனம்
8. கம்பராமாயணம் - பி.என்.சி. வெளியீடு
9. கம்பராமாயணம் - ரசிகமணி வெளியீடு
10. கருணாமிருத சாகரம் (2 தொகுதிகள்) - எம். ஆபிரகாம் பண்டிதர்
11. கலைக்களஞ்சியத் தொகுதிகள் - தமிழ் வளர்ச்சிக் கழகம்
12. காயசித்தி - இரத்தினசபாபதியார்
13. காரியசித்தி - இரத்தினசபாபதியார்
14. குமரகுருபரர் பிரபந்தங்கள் - வி. சிதம்பர ராமலிங்க பிள்ளை கையேடு
15. கைவல்லிய நவநீதம் - தாண்டவமூர்த்தி சுவாமிகள்
16. சங்க இலக்கியம் ( 2 பகுதிகள்) - பாரி நிலைய வெளியீடு
17. சித்தர் ஞானக்கோவை - மே.வீ. வேணுகோபாலப் பிள்ளை பதிப்பு
18. சிலப்பதிகாரம் - டாக்டர்.உ.வே. சாமிநாதய்யர் பதிப்பு
19. சிவஞான சித்தியார் - திருவாவடுதுறை ஆதீனம்
20. சிவஞான போதச் சித்தாந்தக் கொத்து - திருவாவடுதுறை ஆதீனம்

21. சிவப்பிரகாசம் - திருவாவடுதுறை ஆதீனம்
22. சைவ சித்தாந்த வரலாறு - எஸ். அனவரத விநாயகம் பிள்ளை
23. தமிழ் இலக்கிய வரலாறு - டி.வி. சதாசிவப் பண்டாரத்தார் அண்ணாமலைப் பல்கலைக் கழக வெளியீடு
24. திருமந்திரம் - கயிலாயச் சித்தர் உரை
25. திருமந்திரம் - சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்
26. திருமந்திரம் - பஞ்சாக்கர தீப உரை, திருவாவடுதுறை ஆதீனம்
27. திருமந்திர சம்பிரதாயம் - இரத்தினசபாபதியார்
28. திருமுறை வெளியீடுகள் - தருமபுர ஆதீனம்
29. திருமுறை வெளியீடுகள் - திருப்பனந்தாள் காசி மடம்
30. திருவருட்பா - ஊரன் அடிகள் பதிப்பு, இராமலிங்கர் பணிமன்றம்
31. திருவாசகமும் சிவராஜயோகமும் - இரத்தினசபாபதியார்
32. தொல்காப்பியம் - சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்
33. நவமணிகள் - திருவாவடுதுறை ஆதீனம்
34. நன்னூல் - ஆறுமுக நாவலர் பதிப்பு
35. நாலடியார் - சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகம்
36. பத்துப்பாட்டு - டாக்டர். உ.வே. சாமிநாதய்யர் பதிப்பு
37. பன்னிரு திருமுறைத் திரட்டு - சைவ சித்தாந்த நூற் பதிப்பு கழகம்
38. பாரதியார் நூல்கள் - கவிதையும் உரைநடையும்
39. பிங்கள நிகண்டு - சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகம்
40. புறநானூறு - டாக்டர். உ.வே. சாமிநாதய்யர் பதிப்பு
41. மார்க்க அரேலியரின் ஆத்ம சிந்தனை - ராஜாஜி
42. முருகன் - திருவாவடுதுறை ஆதீனம்
43. மெய்கண்ட நூல்கள் - கா. சுப்பிரமணிய பிள்ளை

# BOOKS IN ENGLISH

1. Baker, Canon A.E., (Ed.) - William Temple and his Message
2. Benedict, Ruth - Patterns of Culture
3. Bhavan's Journal - Old Issues of Bhavan's Journal
4. Blavatsky, H.P. - The two paths
5. Blavatsky, H.P. - The voice of the Silence
6. Blavatsky, H.P. - The Seven Portals
7. Cadoux, C.J. - The Life of Jesus
8. Carlson, A.J. & Jehnson, V.E. - The Machinery of the Body
9. Chandrasekharan, T. (Ed.) - South Indian Temple Inscriptions
10. Guer, Joseph - How the Great Religions Began
11. Gueravd Albert - Arts and the Man
12. Hamilton, Edith - Spokesman For God
13. Hamilton, Edith - The Greek Way
14. Hamilton, Edith - The Roman Way
15. Hamilton Edith - Mythology
16. Hamilton Edith - Witness to the Truth
17. Infeld, Leopald - Albert Einstein-His Work and its influence on Our World
18. Langer, Suzanne K. - Philosophy in a New Key
19. Majumdar, R.C. - The History and Culture of the Indian People
20. Ostrander, Sheila & Schrocher, Lynon - Handbook of phsychic Discoveries
21. Ostrander, Sheila & Schrocher, Lynon - Psychic Discoveries Behind the Iron Curtain
22. Potter Simeon - Our language
23. Redman, Ben Ray - Reading At Random

24. Ritchie, A.D. - Civilisation, Science and Religion

25. Sambasivam Pillai, T.V. - Tamil English Encyclopaedic Dictionary

26. Shaw, Bernard - Works of Bernard Shaw

27. Sorokin, Pitirim A. - Reconstruction of Humanity

28. Stebbing, sussan - Phillosophy and the physicists

29. The Association of Scientific Workers, London - Science and the Nation

30. Dr. Arundale - Volumes of the Besant Spirit.

31. Wells, H.G. - Works of H.G. Wells

32. Brooke Worth, c & Enders, Rober K. - The Nature of Living Things

33. Jones, H. Spencer - Life on other worlds

